தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் : 270

# நீதித்திரட்டு

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் :
பேராசிரியர் ச. பாலசுந்தரம்,
கரந்தைத் தமிழ்ச் சங்கம்,
தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகச் சங்கம்

1988 ] [ விலை ரூ. 45-00

# வெளியிடுவோர் முகவுரை

நீதி என்பது சட்டப்படியும் தரும நியாயப்படியும் நடப்பது என்று பொருள்படும். 'உண்மையாக நடந்து கொள்வதே நீதி' என இந்து சாத்திரங்கள் இயம்புகின்றன.

தமிழ் நூல்கள், பெரும்பாலும் நீதி நூல்களாகவே உள்ளன. சமய நூல்களாகிய புராணங்களும் சமயநீதி களை வற்புறுத்தவே எழுதப்பட்டன. ஐம்பெருங்காப் பியங்களுள் ஒன்றான 'சிலப்பதிகாரம்' 'அல்லவை செய் வார்க் கறங்கூற்றம்' 'பத்தினிப் பெண்டிரை யாவரும் போற்றுவர்' 'ஊழ்வினை உறுத்து வந்தூட்டும்' என்னும் மூன்று நீதிகளைச் செவ்வனே வற்புறுத்துகிறது. நீதியை மட்டும் வற்புறுத்த எழுந்த நீதி நூல்களுள் தலையாயது திருவள்ளுவப் பெருமான் இயற்றிய திருக்குறள் ஆகும். இது இல்லறம், துறவறம் ஆகிய இரு நெறிகளிலும் பொது வாக மக்கள் நடந்துகொள்ளும் முறையைக் கூறுவதோடு அரசியல் நெறியையும் விளக்கமாகக் கூறுகிறது.

வழக்கிலுள்ள நூல்களில் குறிப்பிட்ட செய்திகளையும் பொருள்களையும் எடுத்து வகைப்படுத்தித் தொகுப் பதற்குத் தொகை அல்லது திரட்டு என்று பெயர். அவ் வகையைச்சேர்ந்ததொரு திரட்டு நூலே "நீதித்திரட்டு" என்னும் இந்நூல். இந்நூலில் 1474 பாடல்கள் தொகுக் கப்பட்டுள்ளன. இந்நூலைச் சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகத்தில் உள்ள சுவடியின் அடிப் படையில் படியெடுத்து அதன் அடிப்படையில் பல சுவடி களைக் கூர்ந்து ஆய்ந்து பேராசிரியர் ச. பாலசுந்தரம் அவர்கள் பதிப்பித்து உள்ளார். அவரது சீரிய பெரும் தொண்டிற்கு எமது பாராட்டுக்கள்.

இத்தகைய நூல்களை விரைவில் அச்சுருவாக்கிய நூலக நிர்வாக அலுவலர் திரு. **சீ. கிருஷ்ணன்** அவர்களுக்கும், வெளியீட்டு மேலாளர் மற்றும் நூலகர் திரு. **அ. பஞ்சநாதன்** அவர்களுக்கும் எனது மனமார்ந்த பாராட்டுக்கள். இந்நூலை அழகாக அச்சிட உதவிய **திருவள்ளுவர் அச்சகத்தார்** பாராட்டுக்குரியவராகிறார்கள். இதுபோன்ற அரிய நூல்களை அச்சிட்டு வெளியிட நிதியுதவி புரிந்துவரும் மைய அரசுக்கு நன்றி கூறி மகிழ்கிறேன்.

**தஞ்சாவூர்,**
**18-11-1988.**

**சு. மச்சேந்திரநாதன், இ.ஆ.ப.,**
**மாவட்டாட்சியர் மற்றும் இயக்குநர் [பொ]**
**சரசுவதி மகால் நூலகச் சங்கம்**

# பதிப்பாசிரியர் முன்னுரை

வாயானை மனத்தானை மனத்துள்நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்றன்னைத்
தூயானைத் தூவெள்ளை ஏற்றான்றன்னைச்
சுடர்த்திங்கட் சடையானை தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென் கூடல் திருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே

(திருநாவுக்கரசர்)

உலகவழக்கில் இன்றுள்ள உயர்தனிச் செம்மொழிகளுள் தமிழ் மொழியும் ஒன்று, என்றுமுள தென்றமிழ், எனக் கம்பர் உவந்துரைக்கவும் வானமளந்ததனைத்தும் அளந்ததமிழ் எனப் பாரதியார் ஓர்ந்துரைக்கவும் பெற்ற சீர்சான்றதமிழ்மொழி வரலாற்றளவைக்கு உட்படாத தொன்மையும் செம்மையும் வாய்ந்தது. அதனால் உலகப் பேரறிஞர்களால் போற்றத்தக்க இலக்கண மரபுகளையும் இலக்கியச் செல்வங்களையும் தன்பால் கொண்டு விளங்குகின்றது. தொல் காப்பியம் கூறும் பொருளிலக்கண மரபுகளை ஒட்டி அகத்திணை பற்றியும் புறத்திணைபற்றியும் எழுந்த சங்க இலக்கியங்கள் முதலாக அறம் பொருள் இன்பம் வீடு என்னும் தமிழ் நான்மறை கூறும் ஆண்மைப் பேறுகளை ஒட்டி எழுந்த திருக்குறள் முதலாய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் தொன்மையும் தோலும் விருந்தும் பற்றி எழுந்த சிலப்பதிகாரம், முதலிய காப்பியங்களும் சமயதத்துவங்களின் விளக்கமாக எழுந்த தேவாரம் முதலிய திருமுறைகளும் திவ்வப் பிரபந்தமும் இராமாயணம் முதலிய தொடர்நிலைச் செய்யுட்களும் தொண்ணூற்றாறு வகைப்படுமென்னும் சிற்றிலக்கியங்களும் தமிழ்மொழியின் சிறப்பையும் அருளற ஆற்றல் களையும் கண்கூடாகக் காட்டிநிற்கும் செல்வங்களாகும். காலந் தோறும் தோன்றிவளரும் புதிய புதிய இலக்கியக் கோட்பாடு களையும் மேற்கொண்டு சிறக்கும் திறப்பாடும் இயற்கையாகவே பெற்று விளங்குவது கன்னித் தமிழ்மொழியின் தெய்வத் தன்மை யாகும்.

அத்தகு சீர்த்திவாய்த்த தென் தமிழ் மொழிக்கண் தோன்றிய இலக்கியங்களுள் அறநெறியும் சமயநெறியும் பற்றிய நூல்களே மிகுதியாம். காரணம் வரலாற்று இலக்கியங்களைப் போலாமல்

உலகமக்கள் யாவர்க்குமுரியதாய், என்றென்றும் அறிவுகொளுத்திச் செந்நெறி காட்டுவதாய் மக்கட்குத் துணைபுரிவது அறநெறி இலக்கியங்களே என்பதைத் தேர்ந்துணர்ந்த தமிழ்ச் சான்றோர் உலக நீதிகளைத் தொகுத்து இலக்கியமாக்கியருள்வாராயினர்.

அறம் பொருள் இன்பம் என்னும் முப்பால் பற்றிய நீதிகளைத் திருவள்ளுவர் தொகுத்தளித்தார். முனிவர் பலர் செய்த நீதிச் செய்யுட்கள் நாலடியார் என்ற பெயரான் தொகுக்கப்பட்டது. அறநெறிச்சாரம், திரிகடுகம் சிறுபஞ்சமூலம் ஏலாதி, பழமொழி முதலிய நூல்கள் தனிமனித அறம்பற்றியும் சமுதாய நீதிகள் பற்றியும் ஒவ்வொரு புலவரான் செய்தளிக்கப் பெற்றனவாகும். இங்ஙனம் தனியாக நீதிகளையே கூறும் நூல்கள் தவிர, அகப் பொருள் புறப்பொருள் பற்றிய தனிப்பாக்களுள்ளும் சிந்தாமணி முதலிய காப்பியங்களுள்ளும், இராமாயணம் பாரதம் முதலிய இதிகாசங்களுள்ளும் பல்வேறு புராணங்களுள்ளும் பொதிந்துள்ள நீதிகளும் அறிநெறிக் கோட்பாடுகளும் எண்ணிறந்தனவாகும்.

**தொகை நூல்களும் திரட்டுநூல்களும் :** தெய்வங்களின் தொடர்பான புராணக் கதைகளும் இதிகாசங்களும் காப்பியங் களும் பல்வேறு கருத்துக்களை உடையனவாய் ஒவ்வோராசிரியரான் செய்யப்பட்டனவாகும். அவ்வாறன்றி அகப்பொருள் புறப் பொருள் பற்றியும் அறம் பொருள் இன்பம் வீடுபற்றியும் பல்வேறு சமுதாய நிகழ்ச்சிகள், கோட்பாடுகள் பற்றியும் தனித் தனிச் செய்யுட்கள் காலந்தோறும் அறிஞர் பெருமக்களாலும் அருளாளர் களாலும் தோன்றியுள்ளன. அங்ஙனம் தோன்றிய தனிச் செய்யுட்கள் பல பேணப்படாமல் போவதும் ஒருசில பேணப் பட்டு நிலைபெறுதலும் உண்டு. பேணப்பட்டவை சிலவும் பேணாமல் அழிந்தவை பலவுமாதல் இயல்பாகும்.

அங்ஙனம் அமைந்த தனிப் பாடல்களை ஆங்காங்கே சென்று தேடித் தொகுக்கப்பட்டவையே இற்றைக்கு நாம் பயிலும் பல இலக்கியங்களாகும். சமுதாய நோக்கும் தொண்டுள்ளமும் கொண்ட சான்றோர் பெருமக்களும் கல்வி கேள்விகளான் நிறைந்த சான்றோர் பெருமக்களும் அத் தனிப்பாக்களின் அருமை பெருமைகளை உணர்ந்து அவற்றைத் தொகுத்தளித்துள்ளனர். அவ்வகையில் தமிழ்மொழியின்கண் காலத்தால் முற்பட்ட தொகை நூல்கள் சங்க இலக்கியம் எனப் போற்றப்படும் பத்துப் பாட்டும் எட்டுத் தொகையுமாகும். காலத்தாற் பிற்பட்டவை தனிப்பாடல் திரட்டுக்களாகும்.

அங்ஙனம் பல்வேறு காலங்களில் பல்வேறு செய்திகளைப் பற்றிப் பலபுலவரான் பாடப்பெற்ற பாக்களைத் தொகுத்த தொகை நூல்களேயன்றி தொல்காப்பியம் முதலிய இலக்கண உரைகளிலும் உரையாசிரியப் பெருமக்களால் மேற்கோளாக எடுத்துக்காட்டப் பெற்ற பாக்களுள் இவை இந்த இலக்கியத்திலிருந்து எடுத்துக் காட்டப்பெற்றவை எனத் தெரிந்து கொள்ள இயலாமல் மறைந்து போன இலக்கியங்களைச் சேர்ந்த பாக்களை எடுத்துத் தொகுத்த நூல்களும் தொகைநூல்களாகும். பெருந்தொகை முதலாய தொகைநூல்கள் அவ்வகையைச் சார்ந்தனவாகும் அங்ஙனம் தொகுக்கப்பெற்றவை திரட்டு என்றும் வழங்கப்பெறும். புறத் திரட்டு முதலியவை அவ்வகையைச் சேர்ந்தனவாகும்.

இனி வழக்கில் உள்ள நூல்களிலிருந்து குறிப்பிட்ட செய்தி களையும், பொருள்களையும் எடுத்து வகைப்படுத்தித் தொகுப்பதும் தொகை அல்லது திரட்டு என்று பெயர்பெறும். அவ்வகையைச் சேர்ந்ததொரு திரட்டு நூலே நீதித்திரட்டு என்னும் இந்நூல்.

**நீதித்திரட்டு :-** நீதித்திரட்டு, அறநெறிச்சாரம் முதலாக முப்பத் திரண்டு நூல்களிலிருந்தும் உரையாசிரியன்மார் மேற்கோளி லிருந்தும் பாக்களை எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளது. நீதித்திரட் டினைத் தொகுத்த ஆசிரியர் காலத்தில் இம்முப்பத்திரண்டு நூல் களும் முழுமையாக இருந்திருத்தல்வேண்டும். இற்றைக்கு அவற்றுள் சில குறையாக உள்ளன, சில முழுதும் இல்லாதவை. வளையாபதி குண்டலகேசி, தகடூர் யாத்திரை முதலியவை இற்றைக்கு முழுதும் கிடைக்கவில்லை. சாந்திபுராணம், நாரத சரிதை, நந்தா சரிதை நளன் சரிதை முதலியவை முழுதும் கிடைக்கவிலலை. இற்றைக்கு முழுமையாகக் கிடைத்துள்ள நூல்களுள் காணப்படாத செய்யுட்கள் ஒன்றிரண்டு இந் நீதித்திரட்டுள் காணப்படுதலின் இவ்வாசிரியர் இந்நூலைத் தொகுத்த காலத்து அவை முழுமையாக இருத்திருக்க வேண்டுமென்று தெரிகின்றது. மற்றும், புறத்திரட்டு பெருந்தொகை முதலிய பிற்காலத் திரட்டு நூல்களுள் காணப்படாத செய்யுட்கள் சில நீதித் திரட்டுள் உள. அதனுன் இந்நீதித்திரட்டு ஏனைய திரட்டு நூல்களுக்கெல்லாம் காலத்தான் முற்பட்டது என்று தெரிகின்றது.

**நீதித் திரட்டு நூலமைப்பு :—** நீதித்திரட்டுள் 1474 பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றை ஆசிரியர் இரண்டு பாலாகவும் நூற்றிருபத்தெட்டு அதிகாரங்களாகவும் வகுத்து அமைத்துள்ளார் முதற்கண் தொடங்கும் அறத்துப்பால் நாற்பத்திரண்டு அதிகாரங் களையும், இரண்டாவது பொருட்பால் எண்பத்து நான்கு அதிகாரங்

களையும் கொண்டுள்ளன. அறத்துப்பால் அதிகாரங்கள் பெரும்பான்மையும் திருக்குறள் நூலை ஒட்டி அமைந்துள்ளன. பொருட்பால் திருக்குறளில் உள்ள சில அதிகாரங்களை ஒட்டியும் புறப்பொருள் வெண்பாமாலைத் துறைகளை ஒட்டியும் அமைந்துள்ளன. திருக்குறளில் அதிகாரமாக ஓதப்பட்டுள்ள சில நீதித்தலைப்புக்கள் இந்நூலுள் இரண்டு முதல் நான்கு தலைப்புக்கள் வரை விரித்து அமைக்கப்பட்டுள்ளன. வாய்மை என்ற அதிகாரம் வாய்மை, பொய்யாமை என இரண்டாகவும் நிலையாமை என்ற அதிகாரம் அதன் பிரிவாக உள்ள யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை செல்வம் நிலையாமை என்பவற்றொடு கூடி நான்காகவும் குடிமை என்பது குடிமை, குடிமரபு என இரண்டாகவும் - ஈகை என்பது, ஈகை, ஈயாமை தானம், பரிசில் என நான்காகவும் - நாடு என்பதனொடு நகர் என்பதும் சேர்ந்து இரண்டாகவும் விரித்து அமைக்கப்பட்டுள்ளன. மேலும், திருக்குறள் முதலிய நீதி நூல்களில் இல்லாத சில அதிகாரங்கள் வகுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன. அவை யாவன; இரங்கல், இகழாமை, வாழ்த்து முதலியனவாகும். பொருட்பாலில் அமர், களம், எதிருன்றல், எயில் காத்தல், எயில்கோடல், பகைவயிற் சேறல் வஞ்சினம் வென்றி முதலியவை அதிகாரங்களாக அமைக்கப்பட்டுள்ளன. இங்ஙனம் அமைப்பில் காணப்படும் புதுமைகளேயன்றி, பழமொழிநானூறு முதலியவற்றுள் அமைந்துள்ள அதிகாரங்களின்கீழ்க் காணப்படும் பாடல்களுள் பல, வேறு வேறு அதிகாரங்களின் கீழ்த் தொகுக்கப்பட்டுள்ளன. மேலும், இற்றைக்கு அச்சில் உள்ள நூல்களில் உள்ள பாடல்களில் காணப்படும் பாடங்களுள் சில பாடல்கள் பொருத்தமான பாட வேறுபாடுகளோடுள்ளன.

நீதித்திரட்டுள் காணப்படும் நூற்றிருபத்தெட்டு அதிகாரங்களுள் எண்பத்தாறு தலைப்புக்கள் திருக்குறளிற் காணப்படும் அதிகாரத் தலைப்புக்களாகும். அத்தலைப்புக்களின்கீழ் நாலடியார், நான்மணிக் கடிகை ஆசாரக்கோவை ஏலாதி பழமொழிநானூறு இன்னாநாற்பது இனியவை நாற்பது திரிகடுகம் சிறுபஞ்சமூலம் ஆகிய நூல்களிலிருந்து பல பாக்களைத் தொகுத்துள்ள ஆசிரியர் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் தலையாயதும் அறநூல் என்றும் தமிழ்மறை என்றும் சிறப்பித்துக் கூறப்படுவதுமாகிய திருக்குறள் நூலிலிருந்து ஒரு செய்யுளையேனும் எடுத்துக் கொள்ளாதது பெருவியப்பாக உள்ளது. திருக்குறட்பாக்களை இவ்வாசிரியர் இத்திரட்டினுள் எடுத்துச் சேர்க்காமைக்குரிய காரணத்தை ஊன்றி நோக்குமிடத்து திருக்குறளிடத்து இவர் வைத்துள்ள ஒப்பற்ற மதிப்புப் புலனாகின்றது. அஃதாவது திருக்குறளை ஏனை நீதி நூல்களோடு சமமாக வைத்து நோக்குதல் தகவாகாதென்பது

இவர்கருத்தாகலாம். அதனுன் திருக்குறளுக்குச் சார்பாகத் திருக்குறளின் நீதிகளை விளக்கப் பலநூல்களிலிருந்து தொகுத்து இந்நீதித்திரட்டைப் படைத்துள்ளார் எனக்கொள்ளலாம். அல்லது திருவள்ளுவர் ஓரதிகாரத்துக் கூறியுள்ளவற்றை இத்தனை ஆசிரியர்கள் இத்தனைப் பாக்களில் கூறியுள்ளார்கள் என உணர்த்துவது இவர் கருத்து எனக் கொள்ளலாம்.

திரட்டு நூல்களுள் காலத்தால் முற்பட்டதும் திருக்குறளொடு ஒப்பப் போற்றிப் பயிலத்தக்கதுமான இந்நூலைத் தொகுத்த ஆசிரியர் பெருமகனுர் பெயர் முதலிய வரலாறுகள் அறியக் கூடவில்லை. இத்தொகுப்புநூல் சோழ வளநாட்டின் தலைகராக விளங்கிய கலைநலஞ்சான்ற தஞ்சை மாநகரில் வரலாற்றுப் புகழ் பெற்று விளங்கும் சரசுவதி மகால் நூலகத்தில் பேணிக்காக்கப் பெற்றுவரும் ஓலைச் சுவடிகளுள் ஒன்ருகும்.

இந்நூலகத்தில் R. C. 14 L. 71 D. 183 எண்ணுக்குரிய சுவடியை ஆராய்ந்து பதிப்பிக்கும் பணியை இக்காலைப் பொறுப்பிவிருக்கும் சரசுவதிமகால் நூல்நிலையத்தார் எனக்களித்து அதன் கையெழுத்துப்படியையும் உதவினர். இதனை ஆராயுங் காலத்துப் பல பாக்கள் சொற்கள் சிதைந்தும் அடியும் சீரும் பிறழ்ந்தும் உள்ளமையைக் கண்டேன். ஓலைச்சுவடிகள் பெயர்த்தெழுதுந்தோறும் எழுதுவோரால் நிகழும் பிழைகளை ஓரளவு அறிவேனுதலால் அக்குறைபாடுகளைக் களைந்து செம்மை செய்தேன். அச்சில் உள்ள நூல்களோடு ஒப்பிட்டுச் சில செம்மையான பாடங்களை தெளிந்தேன். அச்சல் இல்லாத சில நூல்களிலிருந்து அமைந்த பாக்கள் பெரிதும் இடர்பாட்டையளித்தன, எனினும் யாப்பமைதியும் பொருள்நோக்கும் அவற்றைச் செம்மை செய்தற்குதவின. ஒருசில சொற்கள் பெரிதும் ஐயத்திற்கு இடமாக இருந்தன. அவற்றைக் கையெழுத்துச் சுவடியில் உள்ளவாறே அமைத்தேன். இங்ஙனம் பலவாறு முயன்று அச்சிடும்போது சில பிழைகள் நேர்ந்தன அதனுன் பிழைதிருத்தம் என ஒன்று சேர்க்கப்படவேண்டியதாயிற்று.

இந்நூலுள் தொகுக்கப் பெற்றுள்ள பாடல்கள் யாவும் இலக்கியச் செறிவுள்ளவையாகலின் பாடற்கருத்தை ஓரளவேனும் விளங்கிக் கொள்வதற்கு வாய்ப்பாக அருஞ்சொற்களுக்கு உரையும் குறிப்பும் அமையின் நலமாகும் என நூலகத்தார் விரும்பினமையான்

பாடலின் தொடக்கத்தில் அப்பாடலின் யாப்பிலக்கணப் பெயரையும் அதனடியில் இன்றியமையாத குறிப்பொடு அருஞ் சொற்களுக்குப் பொருளும் எழுதிச் சேர்த்தேன். பல பாக்கள் விரிவுரையான் விளக்கப்படவேண்டியவை. ஆயினும் இக்குறிப்புரை ஓரளவு அதன் கருத்தைப் புரிந்துகொள்ளப் பயன்படும். விரிவாகத் தெரிந்துகொள்ள விரும்பின் அவ்வந்நூல்களில் கண்டுகொள்ள வேண்டும்.

இந்நூலைச் செப்பஞ் செய்து பதிப்பிக்குப் பணியை எனக் களித்த இயக்குநர் அவர்கட்கும் அவ்வப்பொழுது ஊக்கியும் உதவியும் துணைபுரிந்துவரும் கெழுதகை நண்பர் மகாலின் நூல் வெளியீட்டு மேலாளருமான திரு. **பஞ்சநாதம்** அவர்கட்கும் நிருவாக அதிகாரி திரு. **கே. பலராமன்** அவர்கட்கும் இதனை ஆராய்ந்து செப்பம் செய்வதற்குத் துணையாகவேண்டிய நூல்களைக் கொடுத்துதவிய நண்பர் திரு. **சீராளன்** அவர்கட்கும் இயக்குநரும் தஞ்சைமாவட்ட ஆட்சித்தலைவருமான திரு. **எஸ். மச்சேந்திர நாதன்** இ. ஆ. ப. அவர்கட்கும் சிறப்பாக அச்சிட்டுக்கொடுத்த தஞ்சை திருவள்ளுவர் அச்சகத்தார்க்கும் அதன் பொறுப்பாளரான நல்லாசிரியர் திரு. **அ. கி. மூர்த்தி** அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியுரித்தாகும். இப்பணியில் என்னை ஈடுபடுத்தி நிறைவாக்கிய இறைவன் திருவருளை வந்தித்து வணங்குகின்றேன்.

தஞ்சை
1—8—1988

பேராசிரியர் **ச. பாலசுந்தரம்,**
பதிப்பாசிரியர்.



# நீதித்திரட்டுள் வந்துள்ள நூல்களும் அவைபற்றிய குறிப்புகளும்

இந்நூலுள் அறநெறிச்சாரம் முதலாக முப்பத்திரண்டு நூல்களிலிருந்து பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. அவற்றை அகர வரிசைப்படுத்திக் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன.

**1. அறநெறிச்சாரம்:** இதனை இயற்றியருளியவர் சைனசமயத்தைச் சார்ந்த சான்றோராகிய முனைப்பாடியார் என்பவராவார். இஃது இருநூற்றிருபத்தாறு வெண்பாக்களால் அமைந்துள்ளது இஃது இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் உரிய பொதுவான நீதிகளையும் சிறப்பாகச் சைனசமயத்தார்க்குரிய சில ஒழுக்கங்களையும் பற்றிக் கூறுகின்றது. இதிலிருந்து பல பாடல்களை உரையாசிரியர்கள் எடுத்தாண்டுள்ளனர். நீதிதிரட்டு ஆசிரியர் இதிலிருந்து 31 பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார். இந்நூல் இற்றைக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும்.

" அவன்கொல் இவன்கொல்என் றையப் படாதே
சிவன்கண்ணே செய்ம்மின்கள் சிந்தை—சிவன்தானும்
நின்றுகால் சீக்கும் நிழல்திகழும் பிண்டிக்கீழ்
வென்றசீர் முக்குடையான் வேந்து " [அறநெறி—235]

என்றாற் போல வரும் பாடல்களான் இவ்வாசிரியரின் சமயப் பற்றினையும் புலமைச்சிறப்பையும் அறியலாம்.

**2. ஆசாரக்கோவை:** ஆசாரம் என்னும் சொல்லுக்கு ஒழுக்கம் என்பது பொருள். அச்சமே கீழ்களது ஆசாரம்,
[திருக்குறள்—1075]

என இச்சொல் வள்ளுவரால் கையாளப்பட்டுள்ளது. நெறிமுறை என்பனவும் இச்சொல்லுக்குப் பொருளாகும். இந்நூல் நூறு வெண்பாக்களைக் கொண்டுள்ளது. இதனை இயற்றியருளியவர் பெருவாயின் முள்ளியார் என்னும் சான்றோராவார்.

இது மக்கள்வாழ்வில் நாள்தோறும் கடைபிடித்து ஒழுக வேண்டிய நெறிமுறைகளை மிகுதியாகவும் பொதுவான நீதிநெறிகளைச் சிறுபான்மையாகவும் அமைத்துக்கூறுகிறது. உடலோம்பல் முதலிய ஒழுக்கங்களை விரிவாகக்கூறுகின்றது. இந்நூலின் சிறப்புப் பாயிரத்துள் வரும்.

"ஆரிடத்துத் தானறிந்த மாத்திரையான் ஆசாரம்
யாரும் அறிய அறனாய மற்றவற்றை
ஆசாரக் கோவை எனத் தொகுத்தான்"

என்னும் தொடர்களால் இந்நூல் வடமொழி ஸ்மிருதிகளின் கருத்துக்களைப் பின்பற்றி அமைந்தது என்பார் ஆய்வாளர்கள். இந்நூலாசிரியர் சைவசமயத்தைச் சார்ந்தவர் என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும். இந்நூல் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுள்ளது. நீதித்திரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து 27 பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

3. **ஆசிரியமாலை:** அறம் முதலாய நாற்பொருளையும் பற்றி ஆசிரியப்பாக்களால் இயன்றதொருநூல். அலங்கல், கோவை, என்றாற் போலப் பாக்களை வரிசையாகக் கோத்துச் செய்யப்பெற்ற நூலுக்கு மாலை என்பது ஒரு பெயர். புறப்பொருள் வெண்பா மாலை என்னும் புறப்பொருள் நூலைப்போல் ஆசிரியப்பாவால் செய்யப்பட்டமையான் ஆசிரியமாலை என்னும் பெயர் பெற்றுள்ளது. இதனை இயற்றிய ஆசிரியர் முதலிய வரலாறுகள் காணப்படவில்லை. இந்நூலிலிருந்து பெருந்தொகை, பெருந்திரட்டு முதலிய நூல்களைத் தொகுத்த பேராசிரியர்கள் சில பாக்களை எடுத்தமைத்துள்ளார்கள். அதனான் இது பழமையானதொரு நூல் என்பது தெரிகின்றது. சங்கப்பாக்களை ஒட்டிய சிறந்த நடையில் வளமாக அமைந்துள்ளது. நீதிதிரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து பதினாறு பாக்களை எடுத்தாண்டுள்ளார்.

4. **இராமாவதாரம்:** கம்பராமாயணத்தின் பெயர்களுள் இஃதொன்று. இராமகாதை, இராமாவதாரப்போர் என்பவையும் கம்பராமாயணத்தின் பெயர்களேயாகும். வடமொழியில் அமைந்த வால்மீகி இராமாயணத்தை ஒப்பத் தமிழ் மொழியில் கவிச்சக்கரவர்த்தி கம்பர் இயற்றி அருளிய இராமகாதையைக் கம்பராமாயணம் என்றே மக்கள் வழங்கிவருவராயினர். இராமாவதாரம் என்பது கம்பர் தான் இயற்றிய இராமாயணத்திற்கு இட்ட பெயர் என்று ஆராய்ச்சியாளர் பலர் கருதுகின்றனர். அதற்கு நீதிதிரட்டாசிரியரின் இவ்வாட்சி துணையாக உள்ளது. இராமாவதாரத்தில் எல்லா நீதிகளும் நிரம்பியுள்ளமையின் இவ்வாசிரியர் தாம் அமைத்துக்கொண்ட அதிகாரங்களுக்குரிய நீதிகளைத் தக்க இடங்களிலிருந்து எடுத்துக் கோத்துள்ளார்; கம்பராமாயணம் ஏறத்தாழ பன்னீராயிரம் பாக்களைக் கொண்டதாயினும் நீதித்திரட்டாசிரியர் அதிலிருந்து இருபத்தொன்பது பாடல்களைமட்டுமே எடுத்துக் கொண்டுள்ளார்.

**5. இரும்பல் காஞ்சி:** காஞ்சி என்பது புறத்திணைகளுள் ஒன்று. அது பெருந்திணைக்குப் புறமாக அமைந்ததிணை என்று தொல்காப்பியம் கூறுகின்றது. காஞ்சி என்பதற்கு நிலையாமையை விளக்குவது என்பது பொருள். பெரிதாய பலவகை நிலையாமைகளை எடுத்து விளக்குதலின் இந்நூல் இரும்பல் காஞ்சி என்னும் பெயர் பெற்றது எனத்தெரிகின்றது. இந்நூலைப்பாடிய ஆசிரியர் பற்றியும், பிற வரலாறு பற்றியும் ஒன்றும் அறியக்கூடவில்லை. இந்நூற் பாடல்கள் பெருந்திரட்டு முதலியதிரட்டு நூல்களில் எடுத்தாளப் பட்டுள்ளன. இந்நூல் பெரும்பான்மையும் வெண்பா யாப்பினுல் அமைந்திருத்தல் புலனாகின்றது. இதிலிருந்து இந் நீதித்திரட்டு ஆசிரியர் நான்கு பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**6. இன்னா நாற்பது:** பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் நாற்பது பாக்களால் அமைந்த நூல்கள் நான்கு. அவற்றுள் அறனெறி பற்றிக் கூறுவன இன்னா நாற்பதும் இனியவை நாற்பது மாகும். கடவுள் வாழ்த்து நீங்கலாக நாற்பது பாடல்கள் இதன்கண் அமைந்துள்ளன. மக்கள் வாழ்க்கையில் மேற்கொண்டு ஒழுகும் ஒழுகலாறுகளுள் துன்பந்தரத்தக்கனவும் ஊழ் முதலிய காரணங் களான் துன்பந்தரத்தக்கனவுமாகிய பண்புசெயல்களைத் தொகுத் துக்கூறுகின்றது. ஒவ்வொரு பாடலிலும் இன்னுமை பயப்பன இவைஎன நான்கு கருத்துக்களைக் கூறுகின்றது. ஒவ்வொரு தொடரும் 'இன்னு' என முடிதலின் இஃது இன்னு நாற்பது என்னும் பெயர் பெற்றது என்பார்.

இந்நூலைப் பாடியருளியவர் கபிலதேவர் என்னும் நல்லிசைப் புலவராவார். கபிலர் என்னும் பெயருடையார் பலருளர். அவருள் இவரும் ஒருவர் என்பதன்றி இவர் வரலாற்றை விளக்கமாக அறிவதற்குரிய வேறு சான்றுகள் கிட்டவில்லை. இவ்வாசிரியர் தமது கடவுள் வாழ்த்துச் செய்யுளுள் சிவபெருமான், பலராமன், திருமால், முருகன் ஆகிய கடவுளரைக் குறித்துள்ளமையான் இவர் வைதீக நெறியைச் சார்ந்தவர் என்றும் சமயப் பொதுநோக்குடையவர் என்றும் கருதலாமென்பது ஆய்வாளர் கருத்தாகும். நீதித்திரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து ஐந்து பாடல்களை எடுத்துக் கொண் டுள்ளார்.

**7. இனியவை நாற்பது:** மக்கள் வாழ்க்கையில் இன்பம் பயப்பன இவை எனப் பலபண்புகளையும் செயல்களையும் தொகுத்துக் கூறுதலான் இஃது இனியவை நாற்பது எனப் பெயர் பெற்றது. நாற்பது என்பது பாக்களின் எண்ணிக்கையைக் குறிப்பதாகும். ஒவ்வொரு பாடலிலும் மூன்று இனிய பொருள்கள் எடுத்துக் காட்டப்

பட்டுள்ளன. நான்கு பொருள்களைச் சுட்டிக் கூறும் பாக்கள் நான்கு உள. ஒவ்வொரு தொடர் முடிவும் இனிதே என்று முடிவதனால் இப்பெயர் பெற்றது. அதனுள் இனிது நாற்பது இனிய நாற்பது என்றும் இந்நூற்பெயரைக் குறிப்பார் சிலர்.

இந்நூலைப்பாடியவர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ் சேந்தனார் என்னும் நல்லிசைப் புலவராவார். சேந்தனார் என்பது இவ்வாசிரியர் இயற்பெயர், பூதன் என்பது இவர் தந்தையின் பெயர். அவர் மதுரைத் தமிழாசிரியர் என்னும் சிறப்புப் பெற்றவர் என்பதனால் இவருடைய பெரும்புலமை விளங்கும். பூதஞ்சேந்தனாரின் கடவுள் வாழ்த்துப் பாடலுள் முதற்கண் சிவபெருமானையும், பின்னர்த் திருமாலையும், பிரமதேவனையும் குறிப்பிட்டுள்ளமையான் சைவசமயத்தில் ஈடுபாடுடையவர் என்பதும் சமயப் பொதுநோக்குடையவர் என்பதும் தெரிகின்றது. பிரமதேவனை வாழ்த்தி வணங்கும் மரபு சாளுக்கியர் காலத்தில்தான் விளக்கமாகக் காணப்படுகின்றது. ஆகலின் இவர் ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட காலத்தில் வாழ்ந்தவராவார் என்பது ஆய்வாளர் பலரின் கருத்தாகும். நீதித்திரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து இரண்டே பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**8. ஏலாதி:** ஏலாதி என்பது ஏலம் முதலிய ஆறு பொருள்களைக் கொண்டு சமைத்ததொரு சித்தமருந்தாகிய சூரணத்தின் பெயர். அவையாவன ஏலம், இலவங்கப்பட்டை, நாககேசரம், மிளகு, திப்பிலி, சுக்கு என்பவையாகும். இச்சூரணம் பலவகை நோய்களுகளைப் போக்கி உடம்புக்கு நலம்பயப்பதைப் போல அறநெறி ஒழுக்கம் உயிர்க்கு நலம் பயப்பதாகலின் ஒவ்வொரு பாடலிலும் ஆறுவகை அறநெறிக் கருத்துக்களைத் தொகுத்துக் கூறுகின்றார் இந்நூலாசிரியர். அதனான் இந்நூலுக்கு ஏலாதி எனப் பெயர் வந்தது. சிறுபஞ்சமூலம், திரிகடுகம் முதலிய நூல்களும் இவ்வாறு மருந்தின் பெயரால் அமைந்தனவேயாகும்.

இந்நூலை இயற்றியருளியவர் கணிமேதாவியார் என்னும் நல்லிசைப் புலவராவார். இவர் உடன் காலத்தவர் சிறுபஞ்சமூல ஆசிரியர் என்றும் இருவர்க்கும் 'மாக்காயனார்' என்னும் சான்றோர் ஆசிரியராவார் என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர். கணி என்பது சோதிடநூற்புலவருக்குரிய பெயராகும். இவர் பெயரைக் கொண்டு இவர் சோதிடக்கலையில் மேதையாகத் திகழ்ந்தார் என்று கொள்வாரும் உண்டு. இவர் இல்லறம் துறவறம் வீட்டு நெறி ஆகிய

நாற்பொருளையும் பற்றித் தம் நூலுட் கூறுகின்றார். இவர் அகப் பொருளையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். திணை மாலை நூற்றைம்பது என்னும் நூலைப்பாடியவரும் இவ்வாசிரியரேயாவார்.

நூல் முதற்கண் அருகக் கடவுளுக்கு இவர் வாழ்த்துக் கூறி வணங்குதலான் இவர் சமணசமயத்தில் ஈடுபாடுடையவர் என்பதும் சமணசமயத்திற்குரிய சிறப்பான அறநெறிகளைத் தம் நூலுள் விளக்கியிருப்பதனால் சமணசமயத்தவர் என்றே கருதலாமென்பதும் ஆய்வாளர்களின் கருத்தாகும்.

இந்நூலுள் கடவுள் வாழ்த்துச் செய்யுள் நீங்கலாக எண்பது பாடல்கள் உள்ளன. நீதித்திரட்டு ஆசிரியர் ஏலாதியிலிருந்து இருபது பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

9. களவழி: களவழி என்பது வாகைத்திணைக்குரிய துறைகளுள் ஒன்று. போர்க்களத்தில் வெற்றிகொண்ட வேந்தனைச் சிறப்பிக்கும் முறையில் அவன் போர்த்திறனையும் நால்வகைப் படைகளின் திறனையும் தோல்வியுற்ற பகை வேந்தர் நிலையையும் போர்களத்தில் மொய்க்கும் கழுகு முதலியவற்றின் வருணனையும் பேய்களின் களிப்பும் அவை கூழட்டு உண்ணுதலையும் வருணித்துப் பாடப்படுவது களவழியாகும்.

இந்நூல் சோழன் செங்கணானுக்கும் சேரன்கணைக்காலிரும் பொறைக்கும் போர் என்னுமிடத்து நிகழ்ந்த போரின்கண் சேரனது படையழிவையும் சோழனது வெற்றியையும் விளக்கும் வகையில் பாடப்பெற்றதாகும். இதனைப்பாடியருளியவர் பொய்கையார் என்னும் பெரும் புலவராவார். பொய்கையார் சேரனிடத்தில் அன்பு கொண்டவர் என்றும் அதனால் சோழனது வெற்றிக் களத்தைப்பாடி அவனை உவப்பித்துச் சேரனைச்சிறை வீடுகொண்டார் என்றும் கலிங்கத்துப்பரணி மூவருலா முதலிய நூல்கள் கூறுகின்றன. இவ்வரலாற்று நிகழ்ச்சிபற்றி ஆய்வறிஞர்களிடையே கருத்து வேறுபாடுண்டு.

இந்நூல் நாற்பது வெண்பாக்களைக் கொண்டது. பெரும்பாலனபாக்கள் அட்டகளத்து வென்றகளத்து என முடிவதனான் இதற்குக் களவழி நாற்பது என்பது பெயராக அமைந்ததென்று கூறுவர். இதில் அமைந்த பாடல்கள்யாவும் போர்களத்தைப் பற்றியகற்பனை நயமும் சுவையும் உடையனவாக உள்ளன. தொல்காப்பிய உரையாசிரியர்கள் இப்பாக்களை மேற்கோளாகக் காட்டி

விளக்குவர். நீதித்திரட்டு ஆசிரியர் களம் என்னும் அதிகாரத்தில் அமைந்துள்ள பதினேழு பாடல்களுள் களவழி நாற்பது பாடல்கள் பத்தாகும்.

**10. குண்டலகேசி:** தமிழ்மொழியில் அமைந்துள்ள பெருங் காப்பியம் ஐந்தனுள் குண்டலகேசி என்பதும் ஒன்றாகும். சிலப் பதிகாரம், சிந்தாமணி, மணிமேகலை ஆகிய காப்பியங்கள் முழுமை யாக நமக்குக் கிடைத்துள்ளன. வளையாபதியும் குண்டலகேசியும் முழுமையாகக் கிடைக்கவில்லை சில பாடல்களே கிடைத்துள்ளன. கிடைத்தவையாவும் இலக்கிய இலக்கண உரையாசிரியப் பெருமக் களான் மேற்கோளாகக் காட்டப் பெற்ற பாடல்களேயாகும்.

குண்டலகேசி பவுத்த மதச்சார்பினது அதன் கொள்கைகளை விளக்கமுகத்தானும் இதற்குமாருகிய ஆருகதமதக்கொள்கைகளைக் குறை கூறுமுகத்தானும் தருக்கமுறைமையான் இயற்றப்பெற்ற தொரு காப்பியமாகும் என்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும். 'குண்டலகேசி' என்பது அக்காப்பியத்தின் தலைவியின் பெயர். இவள் பவுத்த சமயக்கோட்பாடுகளை மிகத்தெளிவாகத் தேர்ந் துணர்ந்த பேராசிரியை என 'நீலகேசி' என்னும் காப்பியத்துள் வரும் குறிப்புக்களான் அறியக்கிடக்கின்றது. இந்நூலை இயற்றி யருளிய ஆசிரியர் பற்றியும் பிற வரலாறுபற்றியும் யாதொன்றும் கிட்டவில்லை. இக்காப்பியத்திலிருந்து நீதித்திரட்டாசிரியர் பதினேழு பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**11. சாந்திபுராணம்:** புராணம் என்னும் இதன் பெயரால் இஃது ஒருபெருநூலாக இருந்திருக்கவேண்டுமென்பது தெரிகிறது நீதிகளை மிகத் தெளிவாக ஆங்காங்கே விளம்பிச் செல்லும் இதன் சிறப்பினை நன்கு பயின்றுணர்ந்த இவ் ஆசிரியர் இந்நூலிலிருந்து பத்துப் பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார். இந்நூல் பற்றிய வரலாறு ஒன்றும் இன்றைக்குக் கிடைக்கவில்லை.

**12. சிறுபஞ்சமூலம்:** சிறுபஞ்சமூலம் என்பது சிறுவழுதுணை, நெருஞ்சி, சிறுமலலி, பெருமல்லி, கண்டங்கத்திரி என்னும் ஐந்து சிறு செடிகளின் வேர் என்னும் பொருளுடையது. இந்த ஐந்து வேர்களைக் கொண்டு செய்த மருந்து உடலுக்கு நலம் பயப்பதாகும். அதுபோல ஐந்து நீதிகளைத் தொகுத்து ஒவ்வொரு பாடலிலும் இந் நூல் கூறுதலான் இதற்குச் சிறுபஞ்சமூலம் என்னும் பெயர் அமைந்தது. திரிகடுகம் ஏலாதி ஆகிய நூல்களைப் போல இதுவும் மருந்தின் பெயராலமைந்ததாகும்.

இந்நூலை இயற்றி அருளியவர் காரியாசான் என்பவராவார். ஏலாதி நூலை இயற்றியருளிய கணிமேதாவியார் என்னும் புலவரொடு ஒரு சாலை மாணாக்கராகப் பயின்றவர் இவருடைய ஆசான் மாக்காயனார் என்பவராவார். இந்நூலில் வரும் கடவுள் வாழ்த்துச் செய்யுளானும் கூறப்படும் நீதிகளுள் பலவற்றானும் இவர் சைன சமயத்தைச் சார்ந்தவர் என்பது தெரிகின்றது. நூலுள் வரும் மருத்துவக் குறிப்புக்களானும், சோதிடத் குறிப்புகளானும் இவர் மருத்துவக் கலையிலும், சோதிடக் கலையிலும் நல்ல பயிற்சியுடையவர் எனத் தெரிகின்றது.

இந்நூலுள் கடவுள் வாழ்த்து நீங்கலாக நூற்றிரண்டு பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலுள்ளும் ஐந்து நீதிகள் அடங்கியுள்ளன. பாக்கள் யாவும் எளிமையும் இனிமையும் உடையன. நீதித்திரட்டு ஆசிரியர் இந்நூலிருந்து முப்பத்தைந்து பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**13. சீவகசிந்தாமணி:** தமிழில் உள்ள ஐம்பெருங் காப்பியங்களுள் இது ஒன்று. இந்நூல் பெரும்பாலும் சீவக என்னும் அடையின்றிச் சிந்தாமணி என்றே வழங்கப்படுகின்றது. இதற்கு மணநூல் என்றொரு பெயருமுண்டு. இந்நூல் ஏமாங்கத நாட்டு மன்னன் சச்சந்தனுக்கும் அவன் மனைவி விதைய தேசத்தரசன் மகளாகிய விசயைக்கும் பிறந்த சீவகன் என்னும் பெருந்திறலோனுடைய வரலாற்றைக் கூறுவதாகும். பேரழகும் பேராற்றலும் உடையனாய் எல்லாக் கலைகளிலும் தேர்ந்தவனாய்த் தெய்வப் பிறவியாய்த் தோன்றி விளங்கியவன் சீவகன். ஆருகதமதமாகிய சமண சமயத்தின் கொள்கைகளை ஒன்பான் சுவைகளொடு விளங்கச் சீவகன் வரலாறு பொருத்தமாக இருந்தமையின் அவன் வரலாறு வாயிலாக நூலாசிரியர் சமண சமயக் கொள்கைகளைக் கதைமாந்தர் பலர் வாயிலாக விளக்கிச் செல்கின்றார்.

இந்நூலை இயற்றியருளிய புலவர்பெருமான் திருத்தக்க தேவர் என்பார். இவர் சோழர் குலத்தவர் என்று கூறுவர். ஒரு காப்பியம் எவ்வாறு அமைய வேண்டுமென்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவது இச் சீவக சிந்தாமணி. இதன்கண் ஒப்பற்ற இலக்கியச் சுவையும் வன்னனைகளும், அணி நயங்களும் விளங்குவதோடு தொல்காப்பியம்கூறும் அகப்பொருள் புறப்பொருள் இலக்கண மரபையொட்டி யாப்பமைதிகள் அமைந்துள்ளன. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் ஆண்மைப் பேறுகளைக் கதையோடு ஒட்டி இவ்வாசிரியர் கூறிச் செல்லும் வித்தகம் போற்றுதற்குரியதாகும்.

இந்நூல் பதின்மூன்று இலம்பகங்களும் மூவாயிரத்து நூற்று நாற்பத்தைந்து பாடல்களும் உடையதாகும். நீதித்திரட்டு ஆசிரியர் இக்காப்பியத்திலிருந்து நூற்றுநாற்பத்தொரு செய்யுள்களை எடுத்துக்கொண்டுள்ளார்.

**14. சூளாமணி :** இதனை ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றாகக் கூறுவர். இக்காப்பிய அமைதியைப் நோக்கப் பெருங்காப்பியத்திற்குரிய தகுதிகள் யாவும் அமைந்திருப்பதைக் காணலாம். இக்காப்பியம் சுரமை நாட்டுப்பெருமகன் பயாபதி என்பவனின் மக்களாகிய விசயன் திவிட்டன் என்பவர்தம் வரலாற்றினைக் கூறுவதாகும். சொற்சுவையும் பொருட் சுவையும் மிக்க ஒன்பான் சுவைகளும் நிரம்பி நால்வகை ஆண்மைப் பேற்றினையும் விளக்குவதாக அமைந்துள்ளது. இதுவும் சைன மதக் கோட்பாடுகளை விளக்க எழுந்த காப்பியமேயாகும். இது பன்னிரண்டு சருக்கங்களையும் இரண்டாயிரத்து நூற்று முப்பத்தொரு பாடல்களையும் கொண்டது.

இந்நூலை இயற்றியருளிய நல்லிசைப் புலவர் தோலாமொழித் தேவர் என்பவராவார். இப்பெயர் இக்காப்பியங் காரணமாக அமைந்த காரணப்பெயர் என்று கூறுவர். இவர் தருமதீர்த்தங்கரரிடத்தே பெரிதும் ஈடுபாடுடையவர் என்பதும், கார்வெட்டியரசன் விசயன் என்பவன் காலத்திருந்தவர் என்பவர் என்பதும் அவன் வேண்டுகோளின்படி இந்நூலைப் படைத்தருளினர் என்றும் கூறுவர். நீதித் திரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து எழுபத்தேழு பாடல்களை எடுத்துக்கொண்டுள்ளார்.

**15. தகடூர் யாத்திரை :** தகடூர் என்பது இன்றைய தருமபுரி என வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். தகடூரை ஆண்ட குறுநில மன்னன் ஔவைக்கு நெல்லிக்கனியீந்து பெரும் புகழ் கொண்ட அதியமான் அஞ்சி என்பவன். அரசியல் பகை காரணமாக இவன் நாட்டின்மீது படையெடுத்துச் சென்று அதியமானையும் அவனுக்குத் துணையாக வந்த சோழ பாண்டியப் படைகளையும் வென்று தகடூரை அழித்தவன். பெருஞ்சொல் இரும்பொறை என்பது சங்க இலக்கியங்களாற் புலனாகின்றது. போர் மேற்கொண்டு படை எடுத்தலைச் ‘செலவு’ என்று புறத்திணை இலக்கணங் கூறும். செலவு எனினும், யாத்திரை எனினும் பொருள் ஒன்றே. அதனன் பெருஞ்சேரல் இரும்பொறை, அதியமானை வெல்லத் தகடூரின்மேற் படைஎடுத்துச் சென்ற இவ் அரிய போர் வரலாற்றினை “தகடூர் யாத்திரை” என்னும் பெருநூலாகப் பாடியுள்ளனர். இதனைப் பாடியவர்கள் பொன்முடியார் – அரிசில் கிழார் என்னும் சங்கப் புலவராக இருக்கலாம் என்று ஆய்வாளர்கள்

கருதுகின்றனர் அவர்கள் எத்தனைச் செய்யுட்களால் இந்நூலைப் பாடியமைத்தனரோ தெரியவில்லை. நூல் முழுதும் கிடைக்காமற் போனது தமிழ் இலக்கியத்திற்கும் வரலாற்றிற்கும் நேர்ந்த பெருங் குறையாகும். இப்பொழுது கிடைத்துள்ள பாடல்கள் 48. இவற்றுள் 44 பாடல்கள் புறத்திரட்டுள் தொகுக்கப்பட்டுள்ளன. புறப்பொருள் கூறும் திணை - துறைகளின் இலக்கண முறைமை பிறழாமல் இப் பாடல்கள் அமைந்துள்ளன. நீதித்திரட்டாசிரியர் இதிலிருந்து நாற்பத்தாறு செய்யுட்களை எடுத்து அமைத்துள்ளார்.

**16. திரிகடுகம் :** திரிகடுகம் என்பது சுக்கு மிளகு திப்பிலி என்னும் மூன்று பொருள்களாலான மருந்துக்குப் பெயர். திரிகடுகம் உடலுக்கு நன்மை பயப்பதைப் போன்று மக்கள் வாழ்க்கைக்கு உயிர் நலம் பயக்கும் மூன்று மூன்று நீதிகளைத் தொகுத்துக் கூறும் இந்நூல் திரிகடுகம் என்று பெயர் பெற்றது. இவ்வாறு பெயரமைந் தவையே முன்னர்க்கூறிய ஏலாதி சிறுபஞ்சமூலம் என்பவையுமாகும். கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய இதனை இயற்றியருளிய ஆசிரியர் நல்லாதனார் என்பவராவார். இவர் திருநெல்வேலியைச் சார்ந்த திருத்து என்னும் ஊரில் வாழ்ந்தவர் என்பதும் சிறந்த போர்ப் பயிற்சியுடைய வீரர் என்பதும் பாயிரக் குறிப்புக்களான் அறியலாம்.

இந்நூல் கடவுள் வாழ்த்துச் செய்யுளோடு கூட நூற்றொரு பாடல்களை உடையது ஒவ்வொரு பாடலிலும் மூன்று நீதிகள் அமைந்துள்ளன. இந்நூலிலிருந்து ஐம்பத்திரண்டு பாடல்களை நீதித்திரட்டு ஆசிரியர் எடுத்துக்கொண்டுள்ளார்.

**17. நந்தா சரிதை :** இதனை நந்தர் சரிதை என்றும் படிக்கலாம். இந்நூலைப் பற்றிய விவரம் ஒன்றும் கிடைக்கவில்லை. இந் நூலிலிருந்து நீதித்திரட்டு ஆசிரியர் ஒரு பாடலை மட்டுமே எடுத்துக் கொண்டுள்ளார்.

**18. நளன் சரிதை :** இந்நூலைப் பற்றிய விவரம் ஒன்றும் தெரியவில்லை. நிடத நாட்டு மன்னனாகிய நளச்சக்கரவர்த்தி வரலாற்றை நைடதம் என்னும் நூலும் நளவெண்பா என்னும் நூலும் கூறுகின்றன. அவற்றைப்போல இதுவும் ஓராசிரியரால் இயற்றப்பட்டிருக்கலாம். இந்நூலிலிருந்தும் ஒரே பாடலை மட்டும் நீதித்திரட்டு ஆசிரியர் எடுத்துக்கொண்டுள்ளார்.

**19. நாரதசரிதை :** நாரதருடைய வரலாற்றைக் கூறும் நூல் என்பது பெயரால் விளங்குகின்றது. பிறவிவரங்கள் ஒன்று அறியக்கூடவில்லை. இந்நூலிலிருந்து நீதித்திரட்டு ஆசிரியர் ஆறு பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**20. நாலடியார் :** திருக்குறள் நூலையடுத்துப் புலவர்களால் சிறப்பாகப் பேசப்படும் நீதிநூல் "நாலடியாராகும். நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி" என்னும் பழமொழியால் இந்நூலின் திறம் விளங்கும். இதற்கு வேளாண் வேதம் என்றொரு பெயரும் உண்டு. இந்நூல் நானூறு பாக்களையுடையதாகும். அதனால் நாலடி நானூறு என்றும் இதன் பெயர் கூறப்படும்.

இஃது ஓராசிரியரால் இயற்றப்பட்டதன்று. பலரால் இயற்றப் பெற்ற பாடல்களைத் தொகுத்துத் திருக்குறளைப்போல அதிகார மமைத்து ஒரு தொகை நூலாக ஆக்கப்பட்டதாகும். இப்பாடல்களை இயற்றியவர் பெரும்பான்மையும் சமணமுனிவர்கள் என்பது ஆய்வாளர் கருத்தாகும். இப்பாடல்களை அதிகாரமாக அடைவு செய்தவர் பதுமனார் என்னும் புலவர் என்றும் கூறுவர். இந்நூல் உரையாசிரியர் பலரான் எடுத்தாளப்பெற்ற சிறப்புடையதாகும். நீதித்திரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து இருநூற்றுப் பதினான்கு பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**21. நான்மணிக்கடிகை :** நான்மணிக்கடிகை என்பதற்கு நான்கு இரத்தினத்துண்டங்கள் என்பது பொருள் என்பார். ஒவ்வொரு செய்யுட்கண்ணும் நான்கு நீதிக்கருத்துக்களைக் கொண்டுள்ளமையின் இந்நூல் நான்மணிக்கடிகை என்று பெயர் பெற்றது. நான்குமணிகளாலாகிய கோவை எனினும் பொருந்தும்.

இந்நூலை இயற்றியருளிய புலவர் பெருமகன் விளம்பிநாகனார் என்பவராவார். விளம்பி என்பது ஊர்ப்பெயராகலாம் என்று கூறுவர். இந்நூலுக்கு இவர் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல்களால் இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவராகலாம் என்று கூறுவர். நீதித்திரட்டு ஆசிரியர் கடவுள் வாழ்த்து அதிகாரத்துள் இவர் பாடலையே முதற் பாடலாக வைத்துள்ளமையால் அதன் சிறப்புப் புலனாகும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய இதனுள் கடவுள் வாழ்த்துச் செய்யுள்களொடு நூற்றுமூன்று செய்யுட்கள் உள்ளன. இந்நூலிலிருந்து நீதித்திரட்டாசிரியர் முப்பத்து நான்கு பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**22. பதிற்றுப் பத்து :** சங்க இலக்கியங்களின் ஒரு பிரிவான எட்டுத்தொகையுள் ஒன்று. சேரமன்னர் பதின்மரைப் பற்றிப் பத்துப் பத்துப் பாக்களாலானதொரு தொகை நூல். இந்நூல் புறப் பொருள் பற்றியது. வரலாற்றுச் செய்திகள் நிறைந்தது. புறத் திரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து நான்கு பாக்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**23.** பரிபாடல் : சங்க இலக்கியங்களுள் எட்டுத்தொகை யைச் சேர்ந்ததொருநூல். பண்ணமைந்த பாடல் வகையைச் சேர்ந்தது. திருமால், முருகன், வையை, மதுரை ஆகிய பொருள் களைப்பற்றி அகப்பொருளும் புறப்பொருளும் அமையப் பாடப் பெற்றது. எழுபது பாக்களைக் கொண்டதாக இந்நூல் அமைந் திருந்தது என்பது சிலப்பதிகார உரையாலும் பிற குறிப்புக்களாலும் தெரியவருகிறது, எனினும் இப்பொழுது கிடைத்துள்ளவை இருபத் திரண்டு முழுப்பாடல்களாகும். உரையாசிரியர் உரைகளிற்கண்ட சில பாடல்கள் பரிபாடற்றிரட்டு என்னும் பெயராற் சேர்க்கப் பட்டுள்ளன. திரட்டு என்னும் பெயருக்கு எல்லாப் பாடல்களும் ஓராற்றுன் உரிமையுடையவையாதலின் நீதித்திரட்டு ஆசிரியர் பரிபாடலுறுப்பு, பரிபாடற்றிரட்டு என்று குறிப்பிட்டுள்ளார். இதிலிருந்து ஆறுபாடல்களை இத்திரட்டு ஆசிரியர் எடுத்துக் கொண்டுள்ளார்.

**24.** பழமொழி : இதற்குப் பழமொழி நானூறு என்றும் பெயருண்டு. நாலடியாரைப் போல இதுவும் நானூறு பாடல்களைக் கொண்டதாகும். ஒவ்வொரு பாடலிலும் ஒரு பழமொழியை அமைத்து அதனை விளக்குமுகத்தான் நாற்பொருள் பற்றியதொரு நீதியைக் கூறுகின்றது. பழமொழி என்பதற்கு முதுமொழி என்று பொருள் கூறுவர். அஃதாவது தொன்று தொட்டு மக்களின் துய்ப்புணர்வின் முதிர்ச்சியால் கூறப்பட்ட மொழியே பழமொழி யாகும். சுருக்கம் தெளிவு முதலியவை அமைந்து உணர்த்தக்கருதும் கருத்தினைச் செம்மையாக உணர்த்துதற்கு வாய்ப்பாக அமைந்த மையின் பழமொழியைக்கொண்டே பல அரிய நீதிகளை இந்நூல் தெரிவிக்கின்றது.

இந்நூலைச்செய்தருளிய ஆசிரியர் முன்றுரை அரையனாராவார். முன்றுறை என்பது ஓர் ஊர்ப் பெயராகலாம் என்பது ஆய்வாளர் கருத்து. முன்றுறையில் வாழ்ந்த அல்லது அதனை ஆட்சிசெய்தவர் என்பது அரையர் என்பதனுல் விளங்குகின்றது. அரசர் மரபிற் ரோன்றியவராகவும் இருக்கலாம். இவர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பது தற்சிறப்புப் பாயிரச் செய்யுளால் விளங்கு கின்றது.

இந்நூலின் சிறப்பை நோக்கிப் புறத்திரட்டு ஆசிரியர் முந்நூற் றுப்பத்தொன்பது பாடல்களை எடுத்து அமைத்துள்ளார். இந் நீதித் திரட்டு ஆசிரியர் ஒவ்வொரு அதிகாரத்துள்ளும் பெரும்பான்மை பழமொழிப் பாக்களுக்கு முன்னுரிமை தந்து கோத்துள்ளமையால் இந்நூலிடத்து அவர் கொண்டிருந்த மதிப்புப் புலனுகின்றது. இவர்

இதிலிருந்து முந்நூற்றுப் பதின்ஒன்கு பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார். இவர் மிகுதியாக மேற்கொண்ட நூல் பழமொழி. இதற்கடுத்து நாலடியார் பாக்களை எடுத்துக் கொண்டுள்ளார். இன்றைக்கு அச்சில் உள்ள புத்தகத்தில் காணப்படாத இரண்டொரு செய்யுட்கள் இந் நீதித்திரட்டுள் அமைந்துள்ளன.

**25.** பாரதம் : கௌரவர்க்கும் பாண்டவர்க்கும் நிகழ்ந்த போரைப் பற்றிக் கூறும் பாரதம் பல மொழிகளில் அமைந்துள்ளது. தமிழ் மொழியில் சங்க காலத்தில் ஒரு பாரத நூல் வழங்கி வந்துள்ளமை உரையாசிரியர் குறிப்புக்களால் தெரிகின்றது. அது வன்றிப் பெருந்தேவனார் பாரதம் – வில்லிப்புத்தூரார் பாரதம், நல்லாப் பிள்ளை பாரதம் முதலிய பாரதக் கதை நூல்கள் தமிழில் உள்ளன. இந் நீதித்திரட்டுள் அமைந்துள்ள பாரதப் பாக்கள் வெண்பா யாப்பினால் ஆகியுள்ளன. பாரத வெண்பா என்றொரு நூல் உரையாசிரியர்களால் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது. இவை அந்நூலைச் சார்ந்தவையா என்பது தெரியவில்லை. மற்று இந்நூலா சிரியரைப் பற்றியும் நூலைப் பற்றியும் வேறு விவரங்கள் அறியக் கூட வில்லை. நீதித் திரட்டு ஆசிரியர் இதிலிருந்து முப்பது பாடல்களை எடுத்துக் கோத்துள்ளார்.

**26.** புறநானூறு : இது சங்க இலக்கியங்களின் ஒரு கூறாகிய எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றாகும். புறப் பொருள் பற்றிய நானூறு பாக்களைக் கொண்டதொரு தொகையாதலின் புறநானூறு என்று பெயர் அமைந்தது. இதன்கண் சேர, சோழ பாண்டியர், குறுநில மன்னர், வேளிர், முதலானோரைப் பற்றியும் வள்ளன்மை, வீரம், பண்பாடு சான்ற பல பெருமக்களைப் பற்றியும் புலவோர் பல ரான் பாடப் பெற்ற திணைப் பாடல்கள் அமைந்துள்ளன. புறப் பாடல்களுள் மிகச் சிறந்த நூல் புறநானூறு. நீதித்திரட்டு ஆசிரியர் இத்தொகை நூலிலிருந்து நூற்றொன்பது பாடல்களை எடுத்துக் கோத்துள்ளார். புறப் பாடல்களுள் இவ்வாசிரியர் மிகுதியாக எடுத்துக் கொண்டவை புறநானூற்றுப் பாடல்களேயாகும்.

**27.** புறப்பொருள் வெண்பாமாலை : இதனை வெண்பாமாலை என்றும் வழங்குவர். இந்நூல் பன்னிரு படலம் என்னும் புறப் பொருள் இலக்கண நூலைப் பின்பற்றி அதன் வழிநூலாக எடுத்துக் காட்டுப் பாடல்களோடு அமைக்கப்பட்டதாகும். வெட்சித் திணை முதல் பொதுவியல் ஈறாக பன்னிரண்டுதிணைகளை வகுத்து அவற்றின் இலக்கணங்களைக் கொளுவாக அமைத்து அவற்றின் விளக்கமாக உதாரணப் பாக்கள் வெண்பாவில் அமைந்துள்ளமையான் வெண் பாமாலை எனச் சிறப்பித்துக் கூறப்படுகின்றது.

இந்நூலை இயற்றிய பேராசன் ஐயனாரிதனாராவார். சொற்சுவை பொருட்சுவை அணிநயம் சான்ற இந்நூலிலிருந்து நீதித்திரட்டு ஆசிரியர் எழுபத்தைந்து பாடல்களை எடுத்துக் கொண்டுள்ளார்.

**28. பெரும் பொருள் விளக்கம் :** இந்நூலைப் பற்றிய விவரம் அறியக்கூடவில்லை. இஃதொரு சிறந்த நூல் என்பது புறத்திரட்டு ஆசிரியர் இதிலிருந்து பல செய்யுட்களை எடுத்துக் கோத்துள்ளமையால் அறியலாம். நீதித் திரட்டு ஆசிரியர் இந்நூலிலிருந்து முப்பத்தாறு பாடல்களை எடுத்துக்கொண்டுள்ளார்.

**29. முத்தொள்ளாயிரம் :** மூன்று தொள்ளாயிரம் பாடல்களையுடையதொரு நூல் என்பது இதன் பெயரால் விளங்குகின்றது. தமிழகத்தை ஆண்ட புகழ்வாய்த்த வேந்தர்களான சேரர், சோழர், பாண்டியர் என்னும் மூவரையும் பற்றித் தனித்தனி தொள்ளாயிரம் பாடல்களைக் கொண்டதொரு நூல். எனினும் இப்பொழுது சில நூறு பாடல்களே கிடைத்துள்ளன. முத்தொள்ளாயிரப் பாடல்கள் அகப்பொருளும், புறப் பெபாருளும் பற்றி அம்மன்னர்தம் வீரம், செங்கோன்மை, கொடை, அணி முதலியவை விளங்கச் சொற்சுவை பொருட்சுவை கனிய அமைந்துள்ளன. இவற்றைப் பாடிய புலவர் ஒருவரா பலரா என்பதும் பிற விபரங்களும் அறியக்கூடவில்லை. யாவும் அருமையான வெண்பாக்களால் அமைந்து பயில்வோர்க்கு இன்பயப்பனவாக உள. இவற்றிலிருந்து நீதித்திரட்டு ஆசிரியர் நாற்பத்து மூன்று பாடல்களை எடுத்துக் கோத்துள்ளார்.

**30. மேருமந்தார புராணம் :** அறம் முதலிய நாற்பொருளையும் பற்றி விரிவாகக் கூறும் ஓர் அரியநூல் என்று தெரிகின்றது. கிடைத்தற்கு அரிதாக உள்ளமையின் பிறவிவரங்கள் தெரியவில்லை. இதிலிருந்து நீதித்திரட்டு ஆசிரியர் ஒரே ஒரு பாடலை எடுத்துக் கொண்டுள்ளார்.

**31. யாப்பருங்கலக் காரிகை :** யாப்பருங்கலக் காரிகை என்பது தமிழில் இடைக் காலத்துத் தோன்றிய யாப்பிலக்கண நூல்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் அமிதசாகரர் என்னும் பெரும் புலவராவார். இந்நூலுக்கு உரை எழுதிய பெரும் புலவர் குணசாகரர் என்பவராவார். நூற்கருத்தை விளக்கி அதற்கு உதாரணமாகப் பல செய்யுட்களை எடுத்துக் காட்டியுள்ளார். அவ்வுதாரணப் பாக்களிலிருந்து நீதித்திரட்டு ஆசிரியர் இரண்டு பாக்களை எடுத்துக் கொண்டுள்ளார். உதாரணப் பாக்கள் யாப்ருங்கலக் காரிகை நூலை விளக்குவதற்கே எழுதப்பட்டவை

யாதலின் அவை யாப்பருங் கலக்காரிகை என்றே குறிக்கப் பட்டுள்ளன.

**32. வளையாபதி:** ஐம்பெருங் காப்பியங்களுள் சிலப் பதிகாரம் சீவகசிந்தாமணி முதலியவற்றெடு ஒருங்கு எண்ணப் பெறும் சிறப்பினையுடைய இந்நூல் முழுதும் கிடைக்கவில்லை. இஃது ஆருகத சமயக்கொள்கைகளை உடையதொரு நூல் என்பது ஆய்வாளர்கள் கருத்து. பழைய உரையாசிரியர்களால் இந்நூற் பாடல்கள் மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ளமையால் இதன் சிறப்பு விளங்கும். இதனை இயற்றியருளிய ஆசிரியர் முதலிய விவரங்கள் தெரியவில்லை. இந்நூலிலிருந்து புறத்திரட்டாசியர் அறுபத்தாறு செய்யுட்களை எடுத்துக் கோத்துள்ளார். நீதித்திரட்டு ஆசிரியர் ஐப்பத்தைந்து பாடல்களை எடுத்துச் சேர்த்துள்ளார்.

மேற்கூறிய நூல்களன்றிநச்சினார்க்கினியர் உரையில் அவர் காட்டிய மேற்கோள் பாடல்களுள் ஒன்றும் இதன்கண் உள்ளது.

---

# நீதித் திரட்டு

## அறத்துப்பால்

### அதிகாரம்—1

### கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்தாவது படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் ஆகிய ஐந்தொழில் முதல்வனாகிய இறைவனை உருவகஞ்செய்து வணங்கி வாழ்த்துதலாம்.

#### திருமால்

[பஃறொடை வெண்பா]

1 மதிமன்னு மாயவன் வாண்முகம் ஒக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும் பூவைப்
புதுமலர் ஏய்க்கும் நிறம். 1

(நான்மணிக்கடிகை)

குறிப்புரை :

விண்ணும் மண்ணும் திருமாலின் வடிவமாக உள்ளன என்பது இதன் கருத்து.

மன்னும் = நிலைபெறும் பழனம் = மருதநிலவயல்
பூவை = காயாஞ்செடி ஏய்க்கும் = ஒக்கும்

## முப்பெருங் கடவுளர்

[இன்னிசை வெண்பா]

2 கண்மூன் றுடை யான்றாள் சேர்தல் கடிதினிதே
தொன்மாண் துழாய்மாலை யானைந் தொழலினிதே
முந்துறப் பேணி முகநான் குடையானைச்
சென்றமர்ந் தேத்த லினிது. 2

(இனியவை நாற்பது)

**குறிப்புரை :**

தொழில் காரணமாக முக்கூறாக விளங்கும் மூன்று கடவுளரை வாழ்த்தி வணங்க இருமைக்கும் இன்பம் பயக்கும் என்பது.

மாண்துழாய் = மாண்புடைய துளசி, அமர்ந்து = விரும்பி

## முருகவேள்

[நேரிசை வெண்பா]

3 நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழல்நாறிக்
காலை இருள்சீய்க்கும் காய்கதிர்போல்—கோல
மணித்தோகைமேற் றோன்றி மாத்தடிந்த வேலன்
அணிச்சே வடியெம் அரண். 3

(இரும்பலகாஞ்சி)

**குறிப்புரை :**

எழுஞாயிறு போல மயில்மீது விளங்கும் முருகக் கடவுளின் திருவடிகள் நமக்குக் காவல் என்பது.

நாறி - தோன்றி, சீய்க்கும் = விலக்கும், கோலம் = அழகு
மா = சூரபன்மன், தடிந்த = மாய்த்த அரண் = பாதுகாவல்

## சித்தசரணம்

[கலித்துறை]

4 மூவா முதலா உலகம்ஒருமூன்றும் ஏத்தத்
தாவாத இன்பம் தலையாயது தன்னினெய்தி
ஓவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வனென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்துமன்றே. 4

(சீவக சிந்தாமணி)

**குறிப்புரை :**

மூன்றுலகும் ஏத்தும் அருகதேவனை வழிபடுவோம் என்பது

தாவாத = கெடாத, ஓவாது = நீங்காமல்,
சேர்தும் = அடைவோம்

5 முன்றான் பெருமைக்கண் நின்றான்முடி வெய்து காறும்
நன்றே நினைந்தான் குணமே மொழிந்தான் றனக்கென்று
ஒன்றானு முள்ளான் பிறர்க்கே உறுதிக் குழந்தான்
அன்றே இறைவன் அவன்றாள் சரண் நாங்களன்றே. 5

(குண்டலகேசி)

**குறிப்புரை :**

உயிர்களிடத்துப் பெருங்கருணையுடையவனாகிய இறைவனை அடைக்கலமாகக் கொள்வோம் என்பது.

உள்ளான் = கருதான் உறுதி = வீடுபேறு

## நீலமணிமிடற்று வாலிழைபாகன்

[ஆசிரியப்பா]

6 கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை
ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வே றென்ப
கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே
பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுரு
தன்னுள் அடக்கிக் கரக்கினுங் கரக்கும்
பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே
எல்லா உயிர்க்கும் ஏம மாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோர்க்கே. 6

(புறநானூறு)

**குறிப்புரை :**

எல்லா உலகத்தையும் தன்னுளடக்கி மங்கைபங்கனாக வெள்விடைமேல் விளங்கும் நீலமணிமிடற் றிறைவனே எல்லா உயிர்கட்கும் இன்பத்தை அருளுபவன் என்பது.

கண்ணி = தலைமாலை, ஊர்தி = வாகனம், ஏறு = நந்தியம் பெருமான், கறைமிடறு = நீலகண்டம், கரக்கும் = மறைத்து நிற்கும், ஏமம் = பாதுகாவல், கரகம் = நீர்க் குடம்.

## உமையவள்

7 மூவிலை நெடுவேல் ஆதி வானவன்
இடமருங் கொளிக்கும் இமயக் கள்வி
தனிக்கண் விளங்கும் நுதற்பிறை மேலோர்
மிகைப்பிறை கதுப்பின் சூடி வளைக்கையின்
வாள்பிடித் தாளி ஏறித் தானவர்
மானக் கடும்போர் கடந்த குமரி
மூவா மெல்லடித் திருநிழல்
வாழி காக்கவிம் மலர்தலை யுலகே. 7

(ஆசிரிய மாலை)

**குறிப்புரை :**

தீயவர்களை அழித்து அருள்புரியும் உமையவள் திருவடி வாழ்க; உலகத்தைக் காத்தருள் செய்க என்பது.

மூவிலை நெடுவேல் = சூலம், நுதல் = நெற்றி, தானவர் = அசுரர்.

## பூவைப்பூ வண்ணன்

[நேரிசை வெண்பா]

8 கண்ணகன் ஞாலம் அளந்ததுவும் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததுவும்–நண்ணிய
மாயச் சகடம் உதைத்ததுவும் இம்மூன்றும்
பூவைப்பூ வண்ண னடி 8

(திரிகடுகம்)

**குறிப்புரை :**

திருமாலின் திருவடிகள் பேராற்றலுடையன அதனால் அவற்றை வழிபடுக என்பது.

குருந்தம் = குருந்தமரம் சகடம் = சக்கரம்.

### அதிகாரம்—௨

## அவையடக்கம்

அவையடக்கமாவது தொன்னூலாசிரியன்மார் பெருமையும் தன் சிறுமையும் கூறி எடுத்துக்கொண்ட பொருள் சிறந்ததாகலின் அது கருதி நூலைப் பேணிக்கொள்ள வேண்டுமென்று அவையோரைப் பணிந்து கோடல்.

[நேரிசை வெண்பா]

1 வியத்தக்க காணுங்கால் வெண்மையிற் றீர்ந்தார்
வியத்தக்க தாக வியப்பர்—வியத்தக்க
அல்ல வெனினும் அறியாதார் தரம்போல
எல்லாம் வியப்பர் இனிது. 9

(ததடூர் யாத்திரை)

**குறிப்புரை:**

பேரறிவாளர் பிறர் சிற்றறிவையும் மதித்துப் பாராட்டுவர் என்பது.

வெண்மை = அறியாமை வியப்பர் = பழித்துப்பாராட்டுவர்

[கலித்துறை]

2 முந்நீர்ப் பிறந்த பவளத்தொடு சங்குமுத்தும்
அந்நீர் உவர்க்கும் எனின்யாரவை நீக்குநிற்பார்
இந்நீர வென்சொற் பழுதாயினும் கொள்பவன்றே
பொய்ந்நீர வல்லாப் பொருளால் விண்புகுது
மென்பார் 10

**குறிப்புரை:**

கடல்நீர் உவர்ப்பாயினும் அதன்கண் விளைந்த சங்கினையும் முத்தினையும் ஏற்பதுபோல, பொருட் சிறப்பால் நூலை மதித்து ஏற்பார் சான்றோர் என்பது.

முந்நீர் = கடல் உவர்க்கும் = கரிக்கும்
இந்நீர = இத்தன்மைய

3 கற்பா லுமிழ்ந்த மணியுங் கழுவா து விட்டால்
நற்பா லழியும் நகைவெண் மதிபோல் நிறைந்த
சொற்பா லுமிழ்ந்த மறுவும் மதியாற் கழுவிப்
பொற்பா விழைத்துக் கொளற்பாலார் புலமை
மிக்கார் 11

(சீவக சிந்தாமணி)

குறிப்புரை:

மணிகளை மெருகிட்டுக் கொள்வதுபோல் பிறர் நூலின் சொற்பிழைகளைத் தம் அறிவால் சிறப்பித்துக் கொள்வர் நல்லிசைப் புலவோர் என்பது.

உமிழ்ந்த மணி = விளைந்த இரத்தினங்கள் மறு = குற்றம்
மதியாற்கழுவி = தமது அறிவால் தூய்மை செய்து
கொளற்பாலார் = கொள்வர்

4 நோய்க்குற்ற மாந்தர் மருந்தின் சுவைநோக்க
கில்லார்
தீக்குற்ற காதலுடையார் புகைத்தீமை யோரார்
போய்க்குற்றம் மூன்றும் அறுத்தான் புகழ்கூறு
வேற்கென்
வாய்க்குற்ற சொல்லின் வழுவும் வழுவல்லவன்றே12

(குண்டலகேசி)

குறிப்புரை:

நோயுற்றவர் மருந்தின் சுவையை நோக்கார் அதுபோல சொற்றொடர்ப் பிழை கருதாது பொருள் நோக்கி அந் நூலை ஏற்றுக்கொள்வர் என்பது.

உற்ற = அடைந்த முக்குற்றம் = ஆணவம் கன்மம் மாயை பிறவும் அவற்றுள் அடங்கும்.

அதிகாரம்—3

# நீத்தார் பெருமை

நீத்தார் பெருமையாவது; உலகத்தாரிடையே வாழினும் உள்ளத்தான் பற்றற்று முற்றுந்துறந்த அறவோரது பெருமையாகும்.

[நேரிசை வெண்பா]

1 மனத்தினும் வாயினும் மெய்யினும் செய்கை
அனைத்தினும் ஆன்றவிந்தா ராகி—நினைத்திருந்து
ஒன்றும் பரியலராய் ஓம்புவார் இல்லெனின்
சென்று படுமாம் உயிர். 13

(பழமொழி)

**குறிப்புரை:**

நீத்தாராகிய அந்தணர் உலக உயிர்களைப் பேணவிடின் யாவும் அழிந்துவிடும் என்பது.

பரியலராய் = விரும்பாதவராய் ஓம்புவார் = பாதுகாப்பவராகிய பெரியோர் உயிர் = உயிரினம்.

[கலி விருத்தம்]

2 கரிய மாலினும் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோ ரைந்தினும் மெய்யினும்
பெரியர் அந்தணர் பேணுதி யுள்ளத்தால் 14

**குறிப்புரை:**

மும்மூர்த்திகளினும் நீத்தாராகிய அந்தணர் பெருமையுடையவர் என்பது.

மெய்யினும் = மெய்யாக பேணுதி = போற்றிக்கொள்வாயாக

3 அந்த ணாளர் முனியவும் ஆங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் தேவருள்
நொந்து ளாரையும் நோவகன் றாரையும்
மைந்த ! எண்ண வரம்புண் டாகுமோ 15

குறிப்புரை:

பெரியோர்களின் வெறுப்பால் துன்புற்ற தேவரையும் அவர்தம் விருப்பால் இன்புற்ற தேவரையும் எண்ணிச் சொல்ல இயலாதென்பது.

முனிவு = வெறுப்பு. நொந்துளார் = துன்புற்றிருப்பார் நோவகன்றார் = இன்புற்றிருப்பவர். வரம்பு = அளவு

4 ஆவ தற்கும் அழிவ தற் கும்மவர்
மேவ நிற்கும் விதியுமென் றாலினி
யாவ தெப்பொருள் இம்மையு மும்மையும்
தேவ ரைப்பர வுந்துணை சீர்த்ததே. 16

(இராமாவதாரம்— இராமாயணம்)

குறிப்புரை:

விதியும் நீத்தார் ஆணைவழிநிற்கு மாதலால் கடவுளை ஒப்ப அவரை வழிபட வேண்டும் என்பது.

மேவநிற்கும் = அவர் விருப்பப்படி நிகழும். பரவும்துணை வழிபட்டு வணங்குதல் போல. சீர்த்தது = சிறந்தது

[மருட்பா]

கிழிந்த சிதாஅர் உடுத்தும் இழிந்தார்போல்
ஏற்றிரந் துண்டும் பெருக்கத்து நூற்றிதழ்த்
தாமரை அன்ன சிறப்பினர் தாமுண்ணின்
தீயூட்டி யுண்ணும் படிவத்தர் தீயவை
ஆற்றுழி ஆற்றிக் கழுவுபு தோற்றம்
அவிர் முருக்கந் தோலுரித்த கோலர் துவர்மன்னும்
ஆடையர் பாடின் அருமறையர் நீடின்
உருவந் தமக்குத்தா மாய
இருபிறப் பாளர்க் கொருஉகமா தீதே 17

(தகடூர் யாத்திரை)

குறிப்புரை:

தோற்றத்தால் எளியராகத் துவராடை பூண்டு பிறர் கொடுப்பதை உண்டு தவவேடம் பொலிய விளங்கும் அந்தணர்கட்குத் தீங்கு செய்தலை தவிர்க என்பது.

சிதார் - உடை படிவத்தர் = நோன்பினர். துவர் = காவி மண் இருபிறப்பாளர் = அந்தணர் ஒருஉக = தீங்கினைத் தவிர்ப்பாயாக.

அதிகாரம்—2

## அறன் வலியுறுத்தல்

[அறன் வலியுறுத்தலாவது : அறத்தின் சிறப்பை எடுத்துக் கூறலாம்]

[நேரிசை வெண்பா]

1 ஈனுலகத் தாயின் இசைபெறூஉம் அஃதிறந்து
ஏனுலகத் தாயின் இனிததூஉம்—தானொருவன்
நாள்வாயும் நல்லறஞ் செய்வாற் கிரண்டுலகும்
வேள்வாய்க் கவட்டை நெறி 18

குறிப்புரை :

அறம் செய்வார்க்கும் இம்மைப்புகழும் மறுமையின்பமும் ஒருசேர எய்தும் என்பது

ஈனுலகம் = இவ்வுலகம் ஏனுலகம் = ஏனையதாகிய வானுலகம்

2 பலநாளு மாற்றா ரெனினும் அறத்தைச்
சிலநாள் சிறந்தவற்றாற் செய்க — முலைநெருங்கி
நைவது போலும் நுசுப்பினாய் நல்லறம்
செய்வது செய்யாது கேள் 19

குறிப்புரை :

இயன்றவரை அறம் செய்க அறத்தின் பயன் கேளிரால் வராது என்பது

ஆற்றார் = செய்தற்கு இயலார் நுசுப்பு = இடை
கேள் = சுற்றம்

[இன்னிசை வெண்பா]

3 முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்
பிற்பெரிய செல்வம் பெறலாமோ வைப்போடு
இகலிப் பொருள்செய்ய எண்ணியக்கால் என்னாம்
முதலிலார்க் கூதியம் இல் 20

குறிப்புரை:

நல்வினையாற் செல்வம் பெருகும், முதலில்லார்க்கு வருவாய் இல்லை என்பது

முட்டின்றி = தடையில்லாமல் வைப்பு = செல்வம்
இகலி = மாறுபட்டு ஊதியம் = வருவாய்

4 தக்கமில் செய்கைப் பொருள்பெற்றால் அப்பொருள்
தொக்க வகையும் முதலுமதுவானால்
மிக்க வகையா லறஞ்செய் எனவெகுடல்
அக்காரம் பால் செருக்குமாறு 21

குறிப்புரை:

தக்க நெறியால் வந்தபொருளை அறஞ்செய்க எனச்சொல்வாரை வெகுளல் பாற்சோற்றைக் குமட்டி உமிழ்தலை ஒக்கும் என்பது

தக்கம் = மாறுபாடு தொக்க = திரண்ட வெகுடல் = ஒருவன் கூறும்போது சினத்தல் அக்காரம் = சருக்கரை செருத்தல் = குமட்டி உமிழ்தல்

5 இன்றி யமையா இருமுது மக்களும்
பொன்றினமை கண்டும் பொருள்பொருளாக் கொள்பவோ
ஒன்றும் வகையா னறஞ்செய்க ஊர்ந்துருளின்
குன்று வழியடுப்ப தில் 22

[பழமொழி]

குறிப்புரை:

தம்மை ஈன்றோர் மறைந்தமைகண்டும் பொருளை நிலையாகக் கொள்வது அறிவுடைமையாகாது. குன்று உருண்டால் தடுப்பதற்கு வழியடை இல்லை என்பது

குன்று = மலை வழியடுப்பது = நிறுத்துந்தடை

6 அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க — கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோல் போகும் உடம்பு 23

குறிப்புரை:

உடம்பு வளமாக இருக்கும் போதே நல்வினைகளைச் செய்க கரும்புச் சக்கைபோல உடம்பு பின்னர் பயனற்றுவிடும் என்பது

யாக்கை = உடம்பு சாலவும் = மிகவும் கோது = சக்கை

7 கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்கால் துயராண் டுழவார்
வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திவர் 24

குறிப்புரை :

இளமைக்காலத்து உடம்பின் பயனை எய்தியவர் அது முதிர்ந்த காலை வருந்த மாட்டார் என்பது

சிறுகாலை = பருவத்தில் துரும்பு = சக்கை
கூற்றம் = யமன் பரிவதிலர் = துன்புறுதல் இல்லை

8 மக்களா ளாய பெரும்பயனும் ஆயுங்கால்
எத்துணையும் ஆற்றப் பலவானால் தொக்க
உடம்பிற்கே ஒப்புரவு செய்தொழுகா தும்பர்க்
கிடந்துண்ணப் பண்ணப் படும் 25

**குறிப்புரை:**

உடம்பின் பயன் மறுமை இன்பம் எய்தும் நல்வினை செய்தலாம் என்பது

ஆற்ற = மிக உம்பர் = வானுலகம் உண்ண = பயன்கொள்ள

9 தான்செய் வினையல்லால் தம்மொடுசெல்வதுமற்று
யாங்கணும் தேரின் பிரிதில்லை ஆங்குத்தாம்
போற்றிப் புனைந்த உடம்பும் பயனின்றே
கூற்றங்கொண் டோடும் பொழுது 26

[நாலடியார்]

**குறிப்புரை:**

உடம்பு அழிந்துவிடுமாதலின் நம்மொடு வருவது நல்வினைப் பயன் மட்டுமேயாம் என்பது

தேரின் = ஆராய்ந்தால் போற்றிப்புனைந்த = பாதுகாத்து வளர்த்த

[நேரிசை வெண்பா]

10 நீரறம் நன்று நிழல்நன்று தன்னில்லுள்
பாரறம் நன்றுபார்த் துண்பானேல் — பேரறம்
நன்று தனிச்சாலை நாட்டல் பெரும்போகம்
இன்றுகா ரியாங்கண் டிலம் 27

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை :

நீர் வழங்குதல் நிழல் அமைத்தல் வந்தவர்க்கு உணவு அளித்தல் சாலைகள் அமைத்தல் இவையெல்லாம் பேரறமாகும் என்பது

நிழல் = மரம் வளர்த்தல் பந்தர் அமைத்தல்
நாட்டல் = அமைத்தல் பெரும் போகம் = பேரின்பம்

11 உலகெலாங் காக்கும் மொருவன் ஒருவன்
உலகெலாங் காலா ழுழன்றும்—விலையுண்டங்
காராது நல்கூரு மென்றால் அறம்பாவம்
பாராத தென்னேவிப் பார் 28

[பாரதம்]

குறிப்புரை :

ஒருவன் உலகாள்வதும் ஒருவன் இரந்துண்பதும் அறமும் பாவமுமே காரணமாம் என்பது

உழன்றும் = நடந்ததுன்புற்றும் இப்பார் = இந்த உலகினர்
காலாழஎன்பது காலாழ் என நின்றது.

12 காட்சி யொழுக்கொடு கல்வி தலைநின்று
மாட்சி மனைவாழ்தல் அன்றியும்—மீட்சியில்
வீட்டுலகம் எய்த லெனவிரண்டே நல்லறம்
கேட்டதனு லாய பயன் 29

[அறநெறிச்சாரம்]

குறிப்புரை :

நல்லறம் மனைவாழ்க்கையையும் வீட்டின்பத்தையும் பயக்கும் என்பது

காட்சி = அறிவு மீட்சியில் = இவ்வுலகினின்று நீங்கிய பின். கேட்டல் = செய்தலும் நினைத்தலுமாம்

[அறுசீர் விருத்தம்]

13 நற்ருனஞ் சீலம் நடுங்காத் தவமறிவர்
சிறப்பிந் நான்கும்
மற்ருங்குச் சொன்ன மனைவியர் இந்நால்வர்
அவர்வயிற்றிற் ருேன்றி
உற்ருன் ஒருமகனே மேற்கதிக்குக் கொண்டுபோம்
உரவோன் றன்னைப்
பெற்ருர் மகப்பெற்ருர் அல்லாதார் பிறர்மக்கள்
பிறரே கண்டீர் 30

குறிப்புரை :

இதுவும் அடுத்த பாடலும் சீவகன் கானத்து வழிச் செல்லுங்காலை அவ்வழி வந்த ஒருவனுக்குத் தானங்களைக் கொடுத்தபின் அவ்வழிப்போக்கனுக்குக் கூறிய அறிவுரைகளாகும்.

அறிவர் சிறப்பு = இறைவற்குச் செய்யும் பூசனை. தானம் முதலிய நான்கையும் மனைவியாகவும் நல்வினையைப் புதல்வனுகவும் உருவகம் செய்து கூறினுன்

14 வேற்றுவ ரில்லா நுமரூர்க்கே செல்லினும்
வெகுண்டீர் போல
ஆற்றுணைக் கொள்ளா தடிபுறத்து வைப்பீரே
அல்லீர் போலும்
கூற்றங்கொண் டோடத்தமியே தொடுநெறிக்கட்
செல்லும் போழ்தின்
ஆற்றுணைக் கொள்ளீர் அழகலால் அறிவொன்றும்
இலிரே போலும் 31

**குறிப்புரை :**

வழிச்செல்வோர் பொதி சோறு கொண்டு செல்வதுபோல மறுமை வழிக்கு நல்வினையாகிய பொதி சோறு அமைத்துக் கொள்க என்பது.

ஆற்றுணை = வழியிற்பயன்படும் கட்டுச்சோறு. போலும் என்பவை அசைகள்

[கலி விருத்தம்]

15 புள்ளி நீர் வீழ்ந்தது பெருகிப் புன்புலால்
உள்வளர்ந் தொருவழித் தோன்றிப் பேரறம்
உள்குமேல்முழும்புலால் குரம்பை யுய்ந்துபோய்
வெள்ளநீரின்பமே விளைக்கு மென்பவே 32

**குறிப்புரை:**

இது முதல் நான்கு பாடல்கள் துறவு மேற்கொள்ள இருக்கும் 'சீவகன் தன் தேவியரிடத்துக் கூறியஅறநெறி களின் பகுதியாம்

புள்ளிநீர் = சுக்கிலம் புன்புலால் = உடம்பு உள்குமேல் அறத்தைமேற்கொள்ளுமாயின் வெள்ளநீர் = கடல்

16 பாற்றுளி பவளநீர் பெருகி யூன்றிரண்
டூற்றுநீர்க் குறும்புழை உய்ந்து போந்தபின்
சேற்றுநீர்க் குழியுளே அழிந்திச் செல்கதிக்
காற்றுணைப் பெருதளிதலறி விழுமே 33

**குறிப்புரை :**

பாற்றுளி = சுக்கிலம் பவளநீர் = குருதி
ஊன் = உடம்பு சேற்று நீர்க்குழி = நரகம்
ஆற்றுணை = (ஈண்டு) நல்வினையாகியபொதி சோறு

17 மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
தேய்தலும் உடைமையைத் திங்கள் செப்புமால்
வாய்புகப் பெய்யினும் வழுக்கில் நல்லறம்
காய்வது கலதிமைப் பால தாகுமே 34

**குறிப்புரை :**

திங்கள் = திங்கள் மண்டிலம் செப்பும் = தன் செயலால் உணர்த்தும் வழுக்கின் = அறத்தைக் கேளாதும் செய்யாதும் கைவிடின் காய்வதுகலதிமை பாலரதம் = தீவினையின் கூறுகும்

18 திருத்திய நல்லறச் செம்பொற் கற்பகம்
பொருந்திய பொருளோடு யோகம் பூத்தலால்
வருந்தினும் அறத்திறம் மறத்த லோர்ப்புமின்
கரும்பெனத் திரண்டதோட் கால வேற்கணீர். 35

**குறிப்புரை :**

அறத்தைக் கற்பக மரமாக உருவகஞ்செய்து கூறுகின்றது. போகம் = வீட்டின்பம் வருந்தினும் துன்பம் வரினும் மறத்தல் ஓம்புமின் = மறத்தலை ஒழிவீராக.

[கலிவிருத்தம் - வேறு]

19 பிறந்தவர்க ளெல்லாம் அவாப்பெரிய ராகித்
துறந்துபுகழ் வேண்டாரோர் துற்றவிழு மீயார்
அறங்கரிது சேய்த்தென்ப தியாதுமறி யாரேல்
வெறும்பொருள தம்மா விடுத்திடுமி னென்றாள் 36

குறிப்புரை:

இப்பாடல் சீவகனுக்கு அவன் தாயாகிய விசயை கூறிய அறநெறிப் பகுதியாம். பிறந்த மக்கள் எல்லாம் பேராசை யுடையராய் அறத்தை அறியாராயின் பயனில்லை என்பது.
துறந்து புகழ் = புகழை வேண்டாராய்,
துற்றவிழ் = உண்ணப்படும் சோறு.

[கலிவிருத்தம் -

20. புள்ளுவர் கையினும் உய்யும் புள்ளுள
கள்ளவிழ் கோதையீர் காண்மின் நல்வினை
ஒள்ளியான் ஒருமகன் உரைத்த தென்னென்மின்
தெள்ளியீர் அறத்திறந் தெரிந்து கொண்மினே 37

[சீவக சிந்தாமணி]

குறிப்புரை:

இது சீவகன் தன் தேவியரிடம் கூறிய அறநெறிப் பகுதி யாகும். நல்வினைப் பயத்தால் கூற்றுவனையும் தப்பலாம் என்பது.
புள்ளுவர் = பறவை வேட்டுவர், ஒள்ளியான் = அறி வுடையான், தெரிந்து கொண்மின் = உலக வழக்கால் தெரிந்து கொள்ளுமின்.

[ஆசிரியப்பா]

21 செய்குவங் கொல்லோ நல்வினை எனவே
ஐயம் அருஅர் கசடீண் டுகாட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணி வில்லோரே
யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
அதனால்,
உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கின் எய்த லுண்டெனின்
தெய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்
தொய்யா உலகத்து நுகர்ச்சி இல்லெனின்
மாறிப் பிறப்பின் இன்மையுங் கூடும்
மாறிப் பிறவா ராயினும் இமயத்துக்
கோடுயர்ந் தனைதம் மிசைநட்டுத்
தீதில் யாக்கையோடு மாய்தல் தவத்தலையே 38

[புறநானூறு]

**குறிப்புரை:**

இப்பாடல் கோப்பெருஞ் சோழன் தான் வடக்கிருக்கும் பொழுது கூறியதாகும். நல்வினையைக் காலத்தொடு செய்க அது இருமையும் இன்பந்தரும்—புகழ்பட வாழ்ந்து மறைதலே தலையாயது என்பது.

கசடீண்டு காட்சி = மாசுபட்ட அறிவு.
குறும்பூழ் = காடையென்னும் சிறு பறவை.
தொய்யாவுலகம் = இன்பங் குறைபடாத மேலுலகம்,
நுகர்ச்சி = அனுபவம், இசை = புகழ்,
தவத்தலை = மிகத் தலையாது,

[ஆசிரியப்பா]

22 எளிதென இகழாது அரிதென வுரையாது
நுமக்குநீர் நல்குதி ராயின் மனத்திடை
நினைப்பினும் பிறக்கு மொழியினும் வளரும்
தொழிற்படின் சினைவிடூஉப் பயக்கும் உணர்த்தின்
இவணும் உம்பருந் துணையே யதனால்
துறைதொறும் துறைதொறும் நோக்கி
அறம்நிறுத் தாய்மின் அறிந்திசி னோரே 39

[ஆசிரிய மாலை]

**குறிப்புரை :**

அறவினையை எளிதென்றும் அரிதென்றும் கருதாமல் மன மொழிகளாற் செய்க என்பது.
சினைவிடூஉப்பயக்கும் = பிறப்பினை நீக்கும்,
உம்பர் = மேலுலகம், நிறுத்தாய்மின் = நிலைநிறுத்தி ஆய்ந்து செய்மின்.

[நேரிசை வெண்பா]

23 செல்வத்தைப் பெற்றார் சினங்கடிந்து செவ்வியராய்ப்
பல்கிளையும் வாடாமற் பாத்துண்டு—நல்லன
தான மறவாத தன்மையார்க்கஃதென்ப
யானைமேற் பெற்ற தவிசு. 40

[பழமொழி]

**குறிப்புரை:**

செல்வமுடையார் சினத்தை நீக்கிச் சுற்றம் வாடாமற் பகுத்துண்டு வாழ்க என்பது
பல்கிளை = பலவாகிய சுற்றத்தார்,
பாத்துண்டு = பகுத்துக் கொடுத்துத் தாமும் உண்டு,
தவிசு = அரியணை.

அதிகாரம்—5

## பெறுதற் கருமை

[பெறுதற்கருமையாவது : மன்பதையுள் மக்கள் யாக்கை பெறுதலும் பெற்றவழிப் புலன்களாலும் அகக்கரணங்களாலும் குறைவற அமைதலுமாகும்.]

[நேரிசை வெண்பா]

1 மக்க ளுடம்பு பெறற்கரிது பெற்றபின்
மக்க ளறியும் அறிவரிது—மக்கள்
அறிவறிந்தார் என்பார் அறத்தின் வழுவார்
நெறிதலை நின்றொழுகு வார். 41

[அறநெறிச் சாரம்]

**குறிப்புரை :**

பெறுதற்கரியது மக்களுடம்பு; அறிவு அதன்பாலது. ஆதலின் அறிவு பெற்றோர் நன்னெறி ஒழுக வேண்டும் என்பது.

வழுவார் = தவற மாட்டார்.

[கலித்துறை]

2 பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுள்
திரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி
அரச அத்துளை அகவயிற் செறிந்தென அரிதாற்
பெரிய யோனிகள் பிழைத்திவண்
மாளிடம்பெறலே. 42

**குறிப்புரை :**

இது முதல் நான்கு பாடல்களும் சீவகனுக்குச் சாரணன் உரைத்த அறவுரைகளாகும்.

தென் கடலிலிட்ட ஒரு தடி வட கடலிலிட்ட ஒரு நுகத்தின் துளையில் சென்று சேர்ந்தாலொத்தது அரிதாகிய இம் மானிடப் பிறப்பென்பது.

பரவை = கடல் நுகம் = நுகத்தடி சிவணி = பொருந்தி

3 விண்டு வேய்நரல் ஊன்விளை சானவ ரிடனும்
கொண்டு சூர்ம்பனி குலைத்திடு நிலைக்களக் குறும்பு
உண்டு நீரென உரையினும் அரியன வொருவி
மண்டுதீம் புனல் வளங்கெழு நாடெய்தல் அரிதே 43

**குறிப்புரை:**

மக்களுடம்புபெறினும் காடு மலை வனங்களிடையே பிறக்காமல் வளமிக்க நாட்டிலே பிறத்தல் அரிதாம் என்பது.
வேய் = மூங்கில், நரல் = ஒலிக்கும்,
குலைத்திடும் = வருத்தும், குறும்பு = மலைச்சாரல்,
ஒருவி = நீங்கி.

4 வில்லின் மாக்கொன்று வெள்நிணத்
தடிவிளிம் படுத்த
பல்லி ஞர்களும் படுகடற் பரதவர் முதலா
எல்லைநீங்கிய இழிதொழில் இழிகுல மொருவி
நல்ல தொல்குலம் பெறுதலும் நரபதி! அரிதே 44

**குறிப்புரை :**

மக்களுடம்பு பெறினும் விலங்குகளை வேட்டையாடி உண்ணும் வேடர், பரதவர் குலம் முதலியவற்றிற் பிறவாமல் நல்ல உயர்குலத்திற் பிறப்பதரிது என்பது.
தடி = தசை, நரபதி = அரசன்.

5 கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநாள்
அருவி போற்றொடர்ந் தருதன வரும்பிணி யழலுட்
கருவிற் காய்த்திய கட்டளைப் படிமையிற் பிழையாது
உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலுமரிதே. 45

[சீவக சிந்தாமணி]

**குறிப்புரை:**

நல்ல குலத்திற் பிறப்பினும் உறுப்புக் குறைகளும் ஓவாப் பிணிகளுமின்றி நல்லுருவத்தோடு பிறப்பது அரிதென்பது கருவி மாமழை = மின்னல், இடி முதலாய தொகுதி களொடு கூடிய முகில், கருவிற் காய்த்திய கட்டளை = இருவினையின் கட்டளையாற் கருப்பத்திற் தோன்றும் வடிவமைப்பு, படிமை = உருவம், உருவின் மிக்க தோருடம்பு = கவின்மிகு வடிவம்.

[அறுசீர் விருத்தம்]

6 வினைபல வலியி னாலே வேறுவே றியாக்கை யாகி
நனிபல பிறவி தன்னுள் துன்புறூஉம் பல்லு யிர்க்கு
மனிதரி னரிய தாகும் தோன்றுதல் தோன்றி னாலும்
இனியவை நுகர வெய்தும் செல்வமு மன்ன
தேயாம். 46

**குறிப்புரை:**

வினைவயத்தான் வேறுவேறு உடம்பினை எய்தாமல் மக்கட் பிறவி எடுத்தலரிதாகும். மக்களுடம்பு பெறினும் செல்வமும் நுகர்ச்சியும் பெறுதல் அரிதாகும் என்பது.
வேறுவேறு யாக்கை = புல்லாகிப் பூடாகிப் புழுவாகிப் பல் விருகமாகிப் பாம்பாகிப் பறவையாகிப் பிறத்தலாம்.

7 உயர்குடி நனியுட் டோன்றல்
ஊனமில் யாக்கை யாதல்
மயர்வறு கல்வி கேள்வித்
தன்மையால் வல்ல ராதல்
பெரிதுணர் அறிவே யாதல்
பேரறங் கோட லென்றுங்
கரிதிவை பெறுதல் ஏடா
பெற்றவர் மக்க ளென்பார். 47

[வளையாபதி]

**குறிப்புரை :**

உயர்குடியிற் பிறத்தல் — குறைவில்லாத நல்லுடம்பைப் பெறுதல்; கல்வி கேள்விகளாற் சிறத்தல் — அறநெறியில் நிற்றல் இவை எல்லாம் பெற்றவரே மக்களாவார் என்பது.

---

அதிகாரம்—6

## இல்வாழ்க்கை

[இன்னிசை வெண்பா]

1 மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையும்
தவமிலார் இல்வழி யில்லைத் தவமும்
அரசிலார் இல்வழி யில்லை அரசனும்
இல்வாழ்வார் இல்வழி யில். 48

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை:**

மாநிலம் நிலைபெற்று வாழ்வது இல்லறப்பயனால் என்பது.
இல்வாழ்வார் = இல்லறத்தை வழுவாமற் புரிந்து வாழ்பவர்

[நேரிசை வெண்பா]

2 மருவிய காதன் மனையாளும் தானும்
இருவராய்ப் பூண்டுய்ப்பி னல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய பொற்சகடஞ்
செல்லாது தெற்றிற்று நின்று. 49

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை:**

காதல் மனைவியும் கணவனும் இல்வாழ்க்கை என்னும் தேருக்கு இரு சக்கரம்போல்வார். ஒன்று குற்றப்படினும் தேர் நின்றுவிடும் என்பது.

உய்த்தல் = செலுத்துதல் தெற்றிற்று = தெளிவுற்று

[இன்னிசை வெண்பா]

3 வைத்ததனை வைப்பென் றுணரற்க தாமதனைத்
துய்த்து வழங்கி இருபாலும் அத்தகத்
தக்குழி நோக்கி அறஞ்செய்க அஃதன்றே
எய்ப்பினில் வைப்பென் பது. 50

**குறிப்புரை :**

கேடில்லாத செல்வம் அன்பும் அறமுமுடைய இல்வாழ்க்கையே என்பது.

வைப்பு = செல்வம் தக்குழி = தகுதியானவிடத்து
ஏய்ப்புழி = தளர்ந்த காலத்து

[நேரிசை வெண்பா]

4 மல்லற் பெருஞ்செல்வம் மாண்டவர் பெற்றக்கால்
செல்வுழியும் ஏமாப்பச் செய்வதாம் — மெல்லியல்
சென்றொசிந் தொல்கும் நுசுப்பினுய் பைங்கரும்பு
மென்றிருந்து பாகு செயல். 51

[பழமொழி]

**குறிப்புரை:**

மாட்சிமையுடையோர் தம் செல்வத்தை அறஞ்செய்து இன்புறுவார் என்பது

மல்லல் = வளம் மாண்டவர் = மாட்சிமையுடையோர்
ஒசிந்து = வளைந்து பாகு = காய்ச்சி எடுக்கும் சர்க்கரைப் பாகு

[இன்னிசை வெண்பா]

5 தான்பிறந்த இல்நினைந்து தன்னைக்கடைப்பிடித்துத்
தான்பிற ராற்கருதற் பாடுணர்ந்து — தான்பிறராற்
சாவ எனவாழான் சான்ருேராற் பல்யாண்டும்
வாழ்க எனவாழ்தல் நன்று. 52

**குறிப்புரை:**

சான்ருேரால் வெறுக்கப்படாமல் அவர் வாழ்த்த வாழ வேண்டுமென்பது

பிறந்தஇல் = பிறந்த குலம் கருதற்பாடு = உளத்தால் நினைத்தல்

6 அரம்போற்கிளை அடங்காப்பெண் அவியாத்தொண்டு
மரம்போல் மகன்மாருய் நின்று சுரம்போலக்
கள்ளநோய் காணு மயல்ஐந்தும் ஆகுமேல்
உள்ளநோய் வேண்டா உயிர்க்கு. 53

**குறிப்புரை :**

கீழறுக்கும் சுற்றம் முதலிய ஐந்தும் உயிர்க்கு நோயாகும் என்பது

கிளை = சுற்றம் அவியாத் தொண்டு = முடிவு பெருத பணி அயல் = பக்கத்தவர்

[நேரிசை வெண்பா]

7 கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சான்
இகழ்ந்தவை இன்புருன் இல்லார்—மொழிந்தவை
மென்மொழியால் உள்நெகிழ்ந்து ஈவானேல்
விண்ணோரால்
இன்மொழியால் ஏத்தப் படும். 54

**குறிப்புரை :**

கழிந்ததற்கு வருந்தாத உள்ளம் முதலியவை உடையானை தேவர் வாழ்த்துவர் என்பது

நச்சான் = விரும்பான் இல்லார் = வறுமையுற்ருேர் விண்ணோர் தேவர்

8 புண்பட்டார் போற்றுவா ரில்லாதார் போகுயிரார்
கண்கெட்டார் காலிரண்டு மில்லாதார்—கண்பட்டு
ஆழ்ந்து நெகிழ்தவர்க்கு ஈத்தார் கடைபோக
வாழ்ந்து கழிவார் மகிழ்ந்து. 55

குறிப்புரை:

புண்பட்டாரைக் காப்பாற்றுதல் முதலிய பண்புடையோர் நெடிது நாள் வாழ்வார் என்பது.

போற்றுவாரில்லார் = அனாதையார்;

கடைபோக = முழுமையாக

9 சிறைக்கிடந்தார் செத்தார்க்கு நோற்பார் பலநாள்
உறைக்கிடந்தார் ஒன்றிடையிட் டுண்பார்
—பிறைக்கிடந்து
முற்றனைத்தும் உண்ணாத் தவர்க்கீந்தார் மன்னராய்
கற்றனைத்தும் வாழ்வார் கலந்து. 56

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை:

சிறைக் கிடந்தார்க்காக நோற்பவர் முதலானோர் மன்னராய் வாழ்ந்து சிறப்பார் என்பது.

செத்தார்க்கு நோற்பார் = தென்புலத்தார் கடன் செய்வோர்; உறைக்கிடந்தார் = தவத்திலிருந்தவர்

10 துறந்தார் துறவாதார் துப்பிலார் தோன்றாது
இறந்தார் ஈடற்றார் இனையர்—சிறந்தவர்க்கும்
பண்ணாளும் சொல்லாய் பழியிலான் பாற்படுத்தான்
மண்ணாளும் மன்னனாய் மற்று. 57

குறிப்புரை :

துறந்தார் முதலானோர்க்கு உண்டி கொடுத்துப் பேணியவன் மன்னனாய் மண்ணாளுவான் என்பது.

துப்பிலார் = உண்பதற்கு இல்லாத வறுமையாளர் — ஈடற்றோர் துணையில்லாதவர்—இனையர் = துன்புறுபவர் —இத்தகையர் பாற்படுத்தான் = பகுத்தளித்தவன்.

11 நடப்பார்க்கூண் நல்ல பொறைதாங்கினார்க்கூண்
கிடப்பார்க்கூண் கேளிர்க்கூண் கேடின்
—றுடல்சார்ந்த
வானகத்தார்க் கூணே மறுதலையார்க்
கூணமைத்தான்
தானகத்தே வாழ்வான் தக. 58

[ஏலாதி]

குறிப்புரை:

நடந்து இளைத்தவர் முதலானோர்க்கு உணவளித்தவன் சிறந்து வாழ்வான் என்பது.

பொறை = பாரம் ஊண் = உணவு மறுதலையார் = பிறர்

12 அறிவ தறிந்தடங்கி அஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து —பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடையார் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்த லரிது. 59

குறிப்புரை :

அறிவது அறிந்து அடங்கி வாழும் சான்றோர் துன்புறுதல் இல்லை என்பது.

உறுவது = தன்னிடத்து வரும் பொருள் — எஞ்ஞான்றும் —எந்நாளினும் அரிது = இல்லை,

13 கருமமும் உள்படாப் போகமும் துவ்வாத்
தருமமும் தக்கார்க்கே செய்யா —ஒருநிலையே
முட்டின்றி மூன்றும் முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற கலம். 60

[நாலடியார்]

குறிப்புரை:

நல்வினை முதலிய மூன்றும் முட்டாது நிகழின் அது கப்பல் கரைசேர்ந்ததனை ஒக்கும் என்பது.

உட்படா = உட்பட்டு; துவ்வா = துய்த்து;
செய்யா = செய்து; கலம் = கப்பல்,

[இன்னிசை வெண்பா]

14 விருந்தின்றி யுண்ட பகலும் திருந்திழையார்
புல்லப்புடை பெயராக் கங்குலும் இல்லார்க்கொன்
றீயா தொழிந்தகன்ற காலையும் இம்மூன்றும்
நோயே உரனுடை யார்க்கு. 61

**குறிப்புரை :**

விருந்தின்றி உண்ட நாள் முதலியவை அறிவுடையார்க்கு உள்ளத்தை வருத்தும் நோயாகும் என்பது.

புல்ல = தழுவ கங்குல் = இரவு உரன் = அறிவு

[நேரிசை வெண்பா]

15 நேர்வஞ்சா தாரோடு நட்பும் விருந்தஞ்சும்
ஈர்வளையை இல்லத் திருத்தலும்—சீர்பயவாத்
தன்மையி லாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்த லில. 62

[திரிகடுகம்]

**குறிப்புரை:**

நேர் வஞ்சாதாரோடு நட்பு முதலிய மூன்றும் நன்மை பயவா என்பது.

ஈர்வளை = மனைவி; சீர் = சிறப்பு;
அயலிருப்பு = அடுத்த வீட்டிலிருத்தல்,

[அறுசீர் விருத்தம்]

16 கற்றவர் கடவுட்டானஞ் சேர்ந்தவர்
களைகண் இல்லார்
அற்றவர் அந்தணாளர் அன்றியும்
அவர்கள் போல்வார்க்கு
உற்றதோ ரிடுக்கண் வந்தால் உதவுதற்
குரித்தன் றாயின்
பெற்றவிவ் வுடம்பு தன்னாற் பெறும்பய
னில்லை மன்னே. 63

[சூளாமணி]

**குறிப்புரை :**

இது விசயன் திவிட்டனிடம் கூறிய அறநெறி. கற்றவர் முதலானோர்க்கு ஓரிடையூறு வரின் அவற்றைப் போக்கு தற்கு உதவாத உடம்பினாற் பயனில்லை என்பது.

கடவுட்டானஞ்சேர்ந்தவர் = கடவுட்டன்மையை எய்திய துறவியர். களைகண் = பற்றுக்கோடு

[ஆசிரியப்பா]

17 யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
யாண்கண் டனையரென் இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன்றலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே 64

[புறநானூறு]

**குறிப்புரை :**

இப்பாடல் தனது மூப்புறு நிலையைப்பற்றி வினவின சான்றோரிடம் பிசிராந்தையார் கூறியதாகும்.

நல்ல மனை வாழ்க்கையும் செங்கோலரசனும் சான்றோர் களும் அமையின் நரையும் மூப்புமின்றி வாழலாம் என்பது.

மாண்ட = மாட்சிமைப்பட்ட, இளையர் — பணியாளர்,

அதிகாரம்—7

## வாழ்க்கைத் துணை நலம்

[நேரிசை வெண்பா]

1 சொல்லாமை நோக்கிக் குறிப்பறியும் பண்பிற்றம்
இல்லாளே வந்த விருந்தோம்பிச்—செல்வத்து
இடரின்றி ஏமாந் திருந்தாரே என்றும்
கடலுள் துலாம் பண்ணினர். 65

[பழமொழி]

**குறிப்புரை:**

குறிப்பறிந்து விருந்தோம்பி இல்லாளோடு வாழ்பவர் நீங்காத இன்பமுடையார் என்பது.

இடரின்றி = துன்பமின்றி ஏமாந்திருந்தார் = இன்புற்றிருந்தார்.

கடலுள் துலாம் பண்ணினர் = கடல் நீரை இறைத்துக் கொள்வோரை ஒப்பர்.

2 கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்
உட்குடையாள் ஊராண் இயல்பினள்—உட்கி
இடனறிந் தூடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள் பெண். 66

**குறிப்புரை:**

கண்ணுக்கினிமை முதலியவை வாய்ந்தவளே பெண்ணிற் பெருமையுடையவளாவாள் என்பது.

கட்கு = கண்ணிற்கு உட்கு = அச்சம். ஊராண் = விருந்தோம்பலாகிய ஒப்புரவு உணரும் = ஊடல் நீங்கும். பெண் = மனையாளாவாள்.

3 நாலாறும் ஆறாய் நனிசிறிதாய் எப்புறனும்
மேலாறு மேலுறை சோரினும் — மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழும் மாண்கற்பின்
இல்லா ளமைந்ததே இல் 67

**குறிப்புரை :**

கற்புடையாளுடன் வாழும் இல்லமே இல்லமெனப்படும் என்பது.

நாலாறும்ஆறு = நாற்புறமும்வழியாக.
மேலுறை = கூறை. சோரினும் = பழுதுபட்டுக் கிடப்பினும்.

4 மழைதிளைக்கும் மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னும் — விழைதக்க
மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்
காண்டற் கரியதோர் காடு. 68

[நாலடியார்]

**குறிப்புரை :**

மாட்சிமைபட்ட இல்லாள் இல்லாத வீடு கரிய காடுபோல்வதாகும் என்பது.

மழை = மேகம் காப்பு = அரண் இழை = பொன்

5 கல்லெனீர் வேலிக் கணவன் கழல்வாழ்த்தி
ஒல்லும் வகையால் விருந்தோம்பிச் செல்லுந்தம்
இற்செல்வ மின்றி இரந்தவர்க் கீகல்லாப்
புற்செல்வம் பூவா புகழ். 69

**குறிப்புரை :**

இல்லாளாகிய செல்வமே செல்வம். பிற செல்வம் புகழ் தராது என்பது.

கல்லென்நீர்வேலி = கடல் சூழ்ந்த உலகம்; .
கழல் = பாதம்; புற்செல்வம் = புன்மைதரும் பிற செல்வம்; பூவா = விளைக்க மாட்டா.

6 கொய்தார மார்பிற் கொழுநன் றணந்தபின்
பெய்வளை யாட்குப் பிறிதில்லை--வெய்ய
வளிமறையு மின்றி வழக்கொழியா வாயின்
நளிமனைக்கு நற்றுணை நாண். 70

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

நல்ல மனையாளுக்குக் கணவனே காவல்; நாணமே துணையாம் என்பது.
தணந்தபின் பிரிந்துள்ளபோது வளிமறை = கதவு
நளிமனை = யாவுமமைந்த வீடு.

[இன்னிசை வெண்பா]

7 நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய்—தொல்குடியின்
மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன் 71

[திரிகடுகம்]

குறிப்புரை :

சிறந்த மனைவி நட்பினளாயும் தாயாயும் கிழத்தியாயும் விளங்குவாள் என்பது.

நட்டாள் = நண்புடையாள்; புறஞ்செய்தல் = காத்தல்

[நேரிசை வெண்பா]

8 மக்கட் பெறுதல் மடனுடைமை மாதுடமை
ஒக்க லுடனுறைதல் ஊணமைவு—தொக்க
விலைமக்க ளல்லாதாள் தகைந்தவை கண்டீர்
தலைமகனைத் தாழ்க்கும் மருந்து 72

குறிப்புரை :

மக்கட் பெறுதல் முதலாயவற்றை உடையவளே தலைவற்குப் புகழ் சேர்ப்பவளாம். இவை அல்லாதவள் தலைவனைத் தாழச் செய்யும் நச்சு மருந்தாகும் என்பது.

இதன் மூன்றாவது அடி சிதைந்து உளது.

9 எப்பணியா லின்புறுவர் காதலரக் காதலரை
அப்பணியா லப்பொழுதே இன்புறுத்தி—ஒப்ப
மனங்குழையும் வண்ணம் மகிழ்விப்ப தன்றே
கனங்குழையார் தங்கள் கடன் 73

[பாரதம்]

**குறிப்புரை:**

தலைவன் விரும்பும் பணிகளைச் செய்து மகிழ்விப்பதே மனையாளின் கடனாகும் என்பது.

கனங்குழையாரென்றது ஈண்டு மனையற மகளிரையாம்.

[இன்னிசை வெண்பா]

10 வழிபாடுடையாளாய் வாழ்க்கை நடாஅய்
முனியாது சொல்லிற்றுச் செய்தாங்—கெதிருரையா
தேற்றிப் பணியுமேல் இல்லாளை ஆண்மகனும்
போற்றிப் புரியும் புகழ்ந்து 74

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை:**

வழிபாடு முதலிய பண்பும் செயலும் உடைய மனைவியைத் தலைமகன் போற்றிப் புகழ்ந்து கொண்டாடும் என்பது.

நடாஅய் = நடத்தி ஏற்றி = கணவனைத் தெய்வமாக ஏத்தி. ஆண்மகன் என்றது கணவனை.

[கலிவிருத்தம்]

11 நாடும் ஊரும் நனிபுகழ்ந் தேத்தலும்
பீடு லாமழை பெய்கெனப் பெய்தலும்
கூட லாற்றவர் நல்லது கூறுங்காற்
பாடு சான்மிகு பத்தினி யாவதே 75

[வளையாபதி]

**குறிப்புரை:**

ஊரார் புகழ மழையைப் பெய்யெனப் பெய்விக்கும் தவம் உடையாராய் வாழும் மகளிரே பத்தினி எனப்படுவார் என்பது.

கூடலாற்றவர் = இணைந்து வாழு இல்லற வாழ்வினர்.

[அறுசீர்விருத்தம்]

12 சாவெனிற் சாதல் நோதல்
தன்னவன் தணந்த காலைப்
பூமனும் புனைதல் இன்றிப்
பொற்புடன் புலம்ப வைகிக்
காமனை யென்றுஞ் சொல்லார்
கணவற்கை தொழுது வாழ்வார்
தேமலர்த் திருவோ டொப்பார்
சேர்ந்தவன் செல்லல் தீர்ப்பார் 76

[சீவக சிந்தாமணி]

**குறிப்புரை:**

தலைவன் உணர்வோடு ஒத்துப் பிரிந்துள்ள காலத்துத் தன்னை ஒப்பனைசெய்து கொள்ளாமல் கணவனைத் தெய்வமாக வணங்கி வாழ்பவள் திருமகளோடு ஒப்பாள் என்பது.

தணந்தகாலை = பிரிந்துள்ளபொழுது புலம்பி = தனித்து வருந்தி சொல்லார் = வணங்கித் தங்குறை கூருதவராய்; செல்லல் = துன்பம்.

அதிகாரம்—8

## கற்பின் மகளிர்

[நேரிசை வெண்பா]

1 நிறையான் மிகுகலா நேரிழை யாரைச்
சிறையான் அகப்படுத்த லாகா—அறையோ
வருந்த வலிதினின் யாப்பினும் நாய்வால்
திருந்துதல் என்றுமோ வில் 77

[பழமொழி]

**குறிப்புரை :**

நிறைகாவலன்றிச் சிறை காவலான் மகளிரைக் காத்தல் பயனில்லை நாய் வாலை நிமிர்த்த இயலாதென்பது.

நிறை = கற்பு; அகப்படுத்தல் = காவல் செய்தல்; யாப்பினும் = கட்டி வைத்தாலும்.

[நேரிசைவெண்பா]

2 பேணடக்கம் பேணுப் பெருந்தகைமை பீடுடைமை
நாணொடுக்கம் என்றைந்தும் நண்ணின்று—
பூணொடுங்கும்
பொன்வரைக்கோங் கேர்முலைப் பூந்திருவே யாயினும்
தன்வரைத் தாழ்த்தல் அரிது. 78

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

அடக்க முதலிய ஐவகைப் பண்புமில்லாத மகளிர் தலைவனுக்குப் பணிந்து வாழ்தல் அரிது என்பது.

பீடு = பெருங்குணம்; பொன்வரை = மேருமலை.

[இன்னிசை வெண்பா]

3 எறியென் றெதிர்நிற்பாள் கூற்றம் சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி—அட்டதனை
உண்டி உதவாதாள் இவ்வாழ்பேய் இம்மூன்றுங்
கொண்டானைக் கொல்லும் படை 79

**குறிப்புரை :**

எறிஎன்று எதிர்நிற்பதுமுதலாய குணங்களையுடைய மகளிர் கூற்றும், பிணியும் பேயுமாவார் என்பது.

எறிதல் = ஒறுத்தல். கூற்றம் = யமன்.
அட்டில் = உணவுசமைக்குமிடம்.
உதவுதல் = காலத்தோடு பரிமாறுதல்.

4 வழுக்கெனைத்து மில்லாத வாள்வாய்க் கிடந்தும்
இழுக்கினைத் தாம்பெறுவ ராயின்—இழுக்கனைத்தும்
செய்குறுப் பாணி சிறிதேயச் சின்மொழியார்
கையுறுப் பாணி பெரிது. 80

[நாலடியார்]

5 தலைமனிற் றீர்ந்துறைதல் தான்பிறரிற் சேர்தல்
நிலைமையில் தீப்பெண்டிர்ச் சேர்தல்—கலனணிந்து
வேற்றூர் புகுதல் வீழாக்காண்டல் நோன்பெடுத்தல்
கோற்றொடியாள் கோளழியு மாறு 81

**குறிப்புரை :**

கணவனைப் பிரிந்துவாழ்தல் முதலியவை மகளிர்க்கு இழுக்குத்தருவனவாம் என்பது.

தீர்ந்துறைதல் = பிரிந்துறைதல். பிறரில் - அயலார் வீடு.
கோள் = பெண்தன்மை.

6 அயலூர் தனிச்செல்லல் அம்மஞ்ச ளாடிக்
கயலேர்கண் ஆர எழுதிப் — புயலைம் பால்
வண்டோச்சி நின்றுலாம் வாளார்தடங் கண்ணாள்.
தண்டோச்சிப் பின்செல்லுங் கூற்று. 82

]அறநெறிச்சாரம்]

குறிப்புரை :

தனியே அயலூர் செல்லுதல் முதலியவை பெண்டிர்க்கு அழிவைத்தரும் என்பது.

ஆரஎழுதி — மையிட்டு அழகுசெய்து, கூற்று — யமன்.

[அறுசீர்விருத்தம்]

7 பெண்ணெனப் படுவ கேண்மோ
பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை உடைய வல்ல
பொராயிர மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கை யிட்டால்
இந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றுற்போல்
மெலிந்துபின் நிற்கும ன்றே 83

]சீவகசிந்தாமணி[

குறிப்புரை :

மகளிர் நிலையில்லாத உள்ளத்தையுடையவர் என்பது.
பீடு = பெருமை நிறை = உறுதி
மெலிந்து = வலியிழந்து.

[கலிவிருத்தம்]

8 பள்ள முதுநீர்ப் பழகினும் மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறாஉம்
கள்ளவிழ் கோதையர் காமனோ டாயினும்
உள்ளம் பிறிதாய் உருகலும் கொண்ணீ, 84

குறிப்புரை :

மீனினம் புதுவெள்ளத்தை விரும்புவதுபோல மகளிர் உள்ளமும் புதுமையை விரும்பிவிடும் என்பது.

பள்ளம் நீர்நிலை காமனேடாயினும் மன்மதனை ஒத்த கணவனேடு இருப்பினும். கொண்ணீ - தெரிந்து கொள்வாயாக.

9 உண்டியுட் காப்புண் டுறுபொருட் காப்புண்டு
கண்ட விழுப்பொருள் கல்வியிற் காப்புண்டு
பெண்டிரைக் காப்ப திலமென்னு ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே. 85

குறிப்புரை :

உணவு முதலியவற்றைக் காக்கக் காவலுண்டு பெண்டிரைக் காப்பதற்கு காவலில்லை என்பர் அறிந்தோர் என்பது.

விழுப்பொருள் - சிறந்த பொருள். ஞாலம் - உலகம்.

10 எத்துணை யாற்று ளிடுமண ணீர்த்துளி
புற்பனி யுக்க மரத்திலை நுண்மயிர்த்
தத்துணை யும்பிறர் அஞ்சொலி னார்மனம்
புக்கன மென்று பொதியறைப் பட்டார் 86

குறிப்புரை :

எண்ணற்ற மகளிரின் உள்ளத்தால் விரும்பப்பட்டேமென்று தீவினைபுரிந்து பிறவிக்கடலுள் ஆழ்ந்தவர் பலர் என்பது.

புற்பனி = புல்லின்கண் உள்ள பனித்துளிகள்
பிறர் அஞ்சொலினார் = பிறர்குரிய மகளிர்
பொதியறை = பிறவியாகிய சிறை.

11 ததிப்பெயல் தண்டுளி தாமரை யின்மேல்
வளிப்பெறு மாத்திரை நின்றற் றொருவன்
அளிப்பவற் காணும் சிறுவரை யல்லால்
துளக்கிலர் நில்லார் துணைவளைக் கையார் 87

[வளையாபதி[

குறிப்புரை :

பொருட் பெண்டிர் உள்ளம் தாமரையிலையின் நீர்த்துளி போல ஒருவன்பால் கூடிநில்லாதென்பது.
வளிப்பெறு மாத்திரை = காற்றடிக்குமளவு.
அளிப்பவன் = மேலும் பொருள்தருபவன்
துலக்கிலர் நில்லார் = கலங்காது இரார்.

அதிகாரம்—9

## புதல்வரைப் பெறுதல்

[நன்மக்களைப் பெற்றவர் எய்தும் இருமைப்பயனும் இவை என்பதைக் கூறுகின்றது.]

]இன்னிசைவெண்பா]

1 சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகண் தோன்றின்தான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும். 88

[நலடியார்]

குறிப்புரை :

ஆலமரத்தின் விழுதுபோல, நன்மக்கள் பெற்றோர் துன்பங்களைத் தாங்கிக் காப்பர் என்பது.
சிதலை = கரையான். வீழ் = விழுது.
குதலைமை = இடையூறுகள். மறைப்ப = தாங்கிக்கொள்ள
கெடும் = நீங்கும்'

]நேரிசைவெண்பா]

2 கருங்குழல் வெண்குடைக் காவலர்க்குச் செவ்வாய்ப்
பெருங்கட் புதல்வன் பிறப்பப்—பெரும்பெயர்
விண்ணோர் மகிழ்ந்தார் வியலிடத்தார் ஏத்தினார்
எண்ணார் அவிந்தா ரிகல். 89

[புறப்பொருள் வெண்பா மாலை]

குறிப்புரை :

வேந்தனுக்கு மகன் பிறந்தான் மக்கள் வாழ்த்தினார் பகைவர் மாறுபாடுதவிர்ந்தார் என்கிறது இப்பாடல்.

வியலிடம் = பூவுலகம் எண்ணார் = பகைவர்
இகல் = மாறுபாடு.

3 எந்நெறி யாயினும் இறைவன் தன் மக்களைச்
செந்நெறிமேல் நிற்பச் செயல்வேண்டும்-அந்நெறி
மான்சேர்ந்த நோக்கினாய் ஆங்க அணங் காகும்
தான்செய்த பாவை தனக்கு. 90

[பழமொழி]

குறிப்புரை :

மக்கள்செய்த படிவம் தெய்வமாதல்போல ஒரு தந்தை தன் மக்களைச் செந்நெறியில் நிற்கச் செய்து உயர்த்தவேண்டும் என்பது.

அணங்கு = தெய்வம். பாவை = சிற்பவடிவம்.

[கலிவிருத்தம்[

4 தொக்கிள மலர்துதை விலாத சோலையும்
புக்கிளந் தாமரை யிலாத பொய்கையும்
மிக்கிளம் பிறைவிரி விலாத அந்தியும்
மக்களை இலாததோர் மனையும் ஒக்குமே 91

குறிப்புரை :

புதல்வரில்லாதவீடு மலரில்லாத சோலையையும் தாமரை யில்லாத குளத்தையும் நிலவில்லாத வானத்தையும் போல்வதாகும் என்பது.

துதைவு = நெருக்கம், பொய்கை = குளம்,
அந்தி = மாலைக் காலம்.

5 சூழிநீண் முகத்தன துளைக்கைம் மாவோடு
மாழைநீண் மணியிவை யெளிய மாட்சியால்
வாழுநீர் மக்களைப் பெறுதல் மாதரார்க்கு
ஆழிசூழ் வையகத் தரிய தாவதே 92

[சூளாமணி[

**குறிப்புரை :**

யானைமுதலிய படைகளையும் நவமணிகளாகிய செல்வம் களையும் பெறுதல் எளிது. நன்மக்களைந் பெறுதல் அரிது என்பது.

சூழி = நெற்றிப்பட்டம், கைம்மா = யானை,
மாழை = ஒளி, ஆழி = கடல்.

]கவித்துறை[

6 மன்ன ரானவர் அல்லரேல் வானவர்க் கரசாம்
பொன்னின்வார்கழற் புரந்தரன் போலிய ரல்லால்
பின்னு மாதவந் தொடங்கிநோய் பிழைத்தவரல்லால்
சொன்மருமகப் பெற்றவர் அருந்துயர் துறந்தார் 93

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

பெற்றோர் சொல்லை மறுக்காத மக்களைப் பெற்றோர் துன்பம் நீங்கினவராவார்.

புரந்தரன் = இந்திரன், நோய்பிழைத்தவர் = துன்பம் நீங்கியவர்.

[அறுசீர்விருத்தம்]

7 பொறையிலா அறிவு போகப்
புணர்விலா ளன்று மேவத்
துறையிலா வனச வாவித்
துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி
நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரம் போலும்
சேயிலாச் செல்வ மன்றே 94

[வளையாபதி]

**குறிப்புரை :**

மக்களில்லாத பிறசெல்வங்கள் பொறைஇல்லாத அறிவு முதலியவற்றைப்போல இன்பந்தரா என்பது.

பொறை = அடக்கம், நன்று = அழகு
வனசவாவி = தாமரைக்குளம், துகில் = நல்லாடை,
கோலம் = ஒப்பனை. நறை = தேன்,
நலம் = கற்பனை, நீர்ச்சிறை = நீர்த்தேக்கம்
சேய் = புதல்வர்.

[ஆசிரியப்பா]

8 படைப்புப் பலபடைத்துப் பலரோடுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கௌவியும் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்க்கும்
மயக்குறு மக்களை யில்லோர்
பயக்குறை யில்லைத்தாம் வாழும் நாளே. 95

[புறநானூறு]

**குறிப்புரை :**

பலவாறு இன்பந்தரும் மக்களைப் பெறுதார் வாழ்வு பயனற்றதாகும் என்பது.
படைப்பு = செல்வம் பொருள், பயக்குறை = பயன்.
இப்பாடல் பாண்டியன் அறிவுடைநம்பி பாடிய பொருண் மொழிக்காஞ்சி.

**அதிகாரம்—10**

## விருந்தோம்பல்

[நெரிசை வெண்பா]

1 இன்சொல் அளாவல் இடமினிதூண் யார்யார்க்கும்
வன்சொல் களைந்து வகுப்பானேல்—மென்சொல்
முருந்தேய்க்கும் முட்போல் எயிற்றினாய் நாளும்
விருந்தேற்பர் விண்ணோர் விரைந்து. 96

[ஏலாதி]

குறிப்புரை :

இன்சொல் முதலியவற்ரேடு விருந்தோம்புவானைத் தேவர்கள் விருந்தினஞக ஏற்று மகிழ்விப்பார் என்பது.

அளாவல் = கலந்துரையாடல், முருந்து = மயிலிறகின் குருத்து.

[சிந்தியல் வெண்பா]

2 முறுவ லினிதுரை கால்நீர் மணைபாய்
கிடக்கையோ டிவ்வைந்து மென்ப தலைச்சென்ருர்க்
கூஜெடு செய்யும் சிறப்பு. 97

]ஆசாரக்கோவை[

குறிப்புரை :

விருந்தினரை இன்சொல் முதலிய ஐந்தானும் பேண வேண்டுவென்பது.

முறுவல் = சிறுநகை. கால்நீர் = கால்முதலியவற்றைத் தூய்மை செய்தற்குரியநீர், கிடக்கை – படுக்கை.

[நேரிசை வெண்பா]

3 நின்ற புகழொடு நீடுவாழ் கிவ்வுலகில்
ஒன்ற உயிர்களிப்ப ஓம்பலால்—வென்றமருள்
வாள்வினை நீக்கி வருக விருந்தென்னும்
ஆள்வினை வேள்வி யவன். 98

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

விருந்தோம்புதல் ஆள்வினையாகிய வேள்வியின் பயனும் என்பது.

அமர் = போர். வாள்வினை = வாளாற்செய்யும் போர், ஆள்வினை - முயற்சி.

[இன்னிசை வெண்பா]

4 ஆறுள அடங்குங் குளமுள வீறுசால்
மன்னர் விழையுங் குடியுள தொன்மரபின்
வேத முறுவன பாட்டுள வேளாண்மை
வேள்வியோ டொப்ப உள. 99

[நான்மணிக் கடிகை]

குறிப்புரை :

விருந்தோம்புதல் வேள்வியோடு ஒக்கும் என்பது.
விழையும் விரும்பிப் போற்றும்.
வேளாண்மை = விருந்தோம்புஞ்செயல்.

[நேரிசைவெண்பா]

5 வருந்தி யொருவன்பால் மற்றொருவன் வந்தால்
பொருந்தி யகமலர்ந்து போற்றி—விருந்தென்று
தன்னை வியன்றளவும் தானுதவா னாகினவற்
கின்னா நரகே யிடம். 100

[பாரதம்]

குறிப்புரை :

தன்கண் வந்தவிருந்தினைப் பேணாதான் நரகம்புகுவான் என்பது.
இன்னாநரகு = துன்பத்திற்கிடமான நரகம்.

## அதிகாரம்—11

## இனியவைகூறல்

[இன்னிசைவெண்பா]

1 புன்சொல்லும் நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ
புன்சொல் இடர்ப்படுப்ப தல்லால் ஒருவனை
இன்சொல் இடர்ப்படுப்ப தில். 101

[பழமொழி]

குறிப்புரை :

இன்சொல் எல்லோர்க்கும் இன்பந்தரும் என்பது.
புன்சொல் = இழிந்த சொல், வன்சொல் = கடுஞ்சொல்

[நேரிசை வெண்பா]

2 இன்சொல்லான் ஆகும் கிளைமை இயல்பில்லா
வன்சொல்லான் ஆகும் பகைமை - மென்சொலான்
ஆய்வில்லா ராருளாம் அவ்வருள் நன்மனத்தான்
வீய்வில்லா வீடாய் விடும். 102

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை :

இன்சொல் சுற்றத்தைத்தரும் அருளைப் பெருக்கி வீட்டின்பத்தையும் தரும் என்பது.
வீய்வில்லா = கெடுதலில்லாத, வீடு = பேரின்பமுத்தி.

[இன்னிசை வெண்பா]

3 சிதைவுரையான் செற்ற முரையான் சீறில்லான்
இயைபுரையான் ஈன முரையான்—நசையவர்க்குக்
கூடுவ தீவானைக் கொவ்வைபோற் செவ்வாயார்
நாடுவர் விண்ணோர் நயந்து. 103

[ஏலாதி]

குறிப்புரை :

இன்சொல்லுடையவனாய் ஈனமுரையாதவனாய் இருப்பானைத் தேவர்கள் நாடிவிரும்புவர் என்பது.
நசையவர் = விரும்பினவர், நயந்து = விரும்பி.

[நேரிசை வெண்பா]

4 மலர்ந்தமுகத் தானும் மதுரவுரை யானும்
நலந்தந் திடுவர்கண் நல்லோர்—புலந்திருந்த
இன்னா முகத்தான் அருளா திடும்பொருள்
தன்னாற் பயனுண்டோ தான். 104

[பாரதம்]

குறிப்புரை :

மலர்ந்த முகத்தோடு இன்சொல் உடையான் பொருளையே நல்லோர் விரும்புவர் என்பது.

மதுரவுரை = இனிய சொற்கள்,
புலந்திருந்த = அழிவுமாறுபட.

அதிகாரம்—12

## செய்ந்நன்றியறிதல்

[இன்னிசை வெண்பா]

1 தமராலும் தம்மாலும் உற்றுலொன் றாற்றி
நிகராகச் சென்றாரு மல்லர்—இவர்தினை
நீத்தநீர்த் தண்சேர்ப்ப செய்த துதவாதார்க்
கீத்ததை யெல்லாம் இழவு 105

குறிப்புரை :

நன்றியில்லார்க்கு ஈந்தபொருள் இழந்த பொருளோடு ஒக்கும் என்பது.

நீத்தநீர் = கடல். ஈத்ததை = கொடுத்த பொருள்.

2 நன்கொன் றறிபவர் நாழி கொடுப்பவர்க்
கென்றும் உறுதியே சூழ்க எறிதிரை
சென்றுலாம் சேர்ப்ப அதுபோல நீர்போயும்
ஒன்றிரண்டாம் வாணிகம் இல். 106

குறிப்புரை:

நாழியரிசி கொடுத்தாரிடத்தும் நன்றியுடையவராய் இருத்தல் பெரும்பயனைத்தரும் என்பது.

நாழி = ஒருமுகத்தலளவை அது அவ்வளவு தானியத்தை உணர்த்தின்றது. நீர்போயும் = கடல் கடந்து சென்று புரியும். ஒன்றிரண்டு = ஒன்றற்கு இருமடங்கு.

3 தாமாற்ற கில்லாதார் தரப்சாரப் பட்டாரைத்
தீமாற்றத் தாலே பகைப்படுத்கிட்—டோபப
முன்னோட்டுக் கொண்டு முரணஞ்சிப் போவோரே
உண்ணோட் டகலஉடைப் பார். 107

குறிப்புரை :

திறனில்லாதராய்த் தம்மைப் பேணுவாரையும் தீயசொற்களாற் பகைசெய்வோர் உண்ணுங்கலத்தை உடைப்பவரொப்பார் என்பது.

ஆற்றகில்லார் = செயற்பாடியலாதவர்
தீமாற்றம் = தீயபுன் சொற்கள், முன்னோட்டு = அஞ்சி ஒடுதல், உண் ஓடு = உண்ணுங்கலம்.

4 நாடி நமரென்று நன்குபுறந் தந்தாரைக்
கேடு பிறரொடு சூழ்தல்—கிளர்மணி
நீடகல் வெற்ப நினைப்பின்றித் தாமிருந்த
கோடு குறைத்து விடல். 108

குறிப்புரை :

தம்மைப் புரப்பவர்க்குக்கேடுசூழ்தல் தான் அமர்ந்து இருக்கின்ற மரத்தின் அடியை வெட்டுதலோடு ஒக்கும் என்பது.

நமர் = நம்மவர், வெற்ப! = மலைநாட்டரசனே!
கோடு = மரக்கிளை.

5 தமனென் றிருநாழி ஈத்தவ னல்லால்
நமனென்று காயினும் தான்காயான் முன்னே
அவனிவன் என்றுரைத் தெள்ளிமற் றியாரே
நமநெய்யை நக்கு பவர் 109

[பழமொழி]

குறிப்புரை:

ஒருவன் தனக்கு உதவிசெய்தவன் சினந்தாலும் தான் சினவாதிருந்தல் வேண்டும் என்பது.

எள்ளி = பழிகூறி, நமநெய் = மந்திரங்கூறி ஓமத்தீயில் இடும் நெய்.

[நேரிசைவெண்பா]

6 தினையனைத்தே யாயினும் செய்தநன் றுண்டால்
பனையனைத்தா உள்ளுவர் சான்றோர் - பனையனைத்து
என்று செயினும் இலங்கருவி நன்னாட!
நன்றில நன்றறியார் மாட்டு.

[நாலடியார்]

குறிப்புரை :

நன்றியுடையார் செய்த உதவி தினையளவாயினும் பனையளவாகக் கொள்வார் என்பது.

தினை பனை என்பவை அளவு. அவை அவ்வளவு பொருளை உணர்த்தி நின்றன.

[ஆசிரியப்பா]

7 ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டின்றே ஆயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பால்பெய் புன்கம் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு
இரத்தி நீடிய அகன்றலை மன்றத்துக்
கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்கு
அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்
எங்கோன் வளவன் வாழ்க என்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயின்

படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன
யானோ தஞ்சம் பெருமைஇவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத் தீண்டி இன்குரல் பயிறறிக்
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல் துளியினும் வாழிய பலவே 111

[புறநானூறு]

**குறிப்புரை :**

பெற்றத்தின் பால்தரும் காம்பினை அறுத்தோர் — கருச் சிதைத்தோர்—பெற்றோருக்குத் தீங்கு செய்தோர் முதலானோர்க்குக் கழுவாய் உண்டு நன்றிகொன்றார்க்குக் கழுவாய் இல்லை என்பது.

ஆன் பசு, குரவர் = ஐம்பெருங்குரவர்—
கழுவாய் = பிராயச்சித்தம், உய்தி - நரகத்தினின்று உய்யும் வழி, அறம் = அறநூல்கள்
புறவுக்கரு = புறாவினது முட்டை'
கொழுஞ்சூடு - வெந்த இறைச்சி, கிழித்த = தின்ற
இரத்தி = இலந்தைமரம் கொழுஞ் சோறு வளமான உணவு, ஆர்ந்த உண்ட, பீடு பெருமை,
நோன்றாள் = வலிமை, படுபறியலன் = உதிக்க மாட்டான், கதிர்ச்செல்வன் = சூரியன், இப்பாடல் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடிய இயன்மொழி வாழ்த்து.

### அதிகாரம் — 13

## நடுவு நிலைமை

நடுவு நிலைமையாவது அறங்கூறவையத்து நடுவராக இருப்போர் பகைநொதுமல் நட்பு என்னும் முத்திறத்தார் மாட்டும் அறநெறி வழுவாது ஒப்பநின்று தீர்ப்பளிக்கும் தன்மையாம்.

[நேரிசை வெண்பா]

1 காய்தல் உவத்த லகற்றி யொருபொருட்கண்
ஆய்தல அறிவுடையார்க் கண்ணதே-காய்வதன்கண்
உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும் 112

[அறநெறிச்சாரம்]

குறிப்புரை

நடுவுநிலையாளர் விருப்பு வெறுப்பின்றித் தன் கடமையைச் செய்யவேண்டும் என்பது.

காய்தல் = வெறுத்தல், உவத்தல் = விரும்புதல்.
தோன்றாக்கெடும் = விளங்காமல் ஒழியும்.

[இன்னிசை வெண்பா]

2 ஒக்கு மளவையோ டுடன்பொருஞ் சூதின்கண்
பக்கத் தொருவன் ஒருவன்பாற் பட்டிருக்கும்
மிக்க சிறப்பின ராயினார் தாயர்க்கு
மக்களுள் பக்கமோ வேறு 113

[பழமொழி]

குறிப்புரை:

தாம்பெற்ற மக்கள் ஒத்த சிறப்புடையவராயினும் கல்வி அறிவு ஒழுக்கங்களான் மிக்கபுதல்வனிடத்துத் தாயும் மதிப்புடையவளாவாள் என்பது.

ஒருவன்பாற்பட்டிருக்கும் = ஒருவன் பக்கம் துணையாக இருப்பாள்

[கலிவிருத்தம்]

3 வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்
தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்
ஓரும் வையத் தியற்கையன் றோவென்
வீர வேலநெடுங் கண்ணி விளம்பினாள் 114

[சீவக சிந்தாமணி]

குறிப்புரை:

அன்பு காரணமாகத் தீயவும் நல்லவைபோலத் தோன்றும் சினங்காரணமாக நன்மையும் தீமை போலத் தோன்றும். ஆதலால் நடுவுநிலைமையைப் போற்ற வேண்டுமென்பது.

ஓரும் = ஆய்ந்துபாரும். வாரம் = அன்பு.
விளம்பினாள் = கனபதாகை சீவகனிடத்துக் கூறினாள்.

4 கோதி லாதவர் மக்கள் அம்மக்களும்
ஏதி லாரிவர் இயைந்த தின்மையார்
ஆத லாற்றமர் பிறர்கள் எனபதங்
கோதிலு லவர்க் குள்ள திலலையே 115

[சூளாமணி]

குறிப்புரை:

சுரிமைநாட்டில் தமர்என்றும் பகைவரென்றும் இலராய் மக்கள் வாழ்ந்தனர் என்பது.

கோதிலார் = குற்றமிலாதவர். இயைந்து இன்மையார் அவ்வரசன் நாட்டில் வாழாதவர்.

## அதிகாரம்—14

## அடக்கமுடைமை

அடக்கமுடைமயாவது; செயலாலும் மொழியாலும் நினைவாலும் தீயவைபாற் செல்லாது அறநெறிக்கண் அடங்கி ஒழுகுதலாம்

[நேரிசை வெண்பா]

1 அடங்கி அகப்பட ஐந்தினையுங் காத்துத்
தொடங்கிய மூன்றினால் மாண்டுண்-டுடம்பொழியச்
செல்லும்வாய்க் கேமம் சிறுகாலைச் செய்தாரே
கொல்லிமேல் கொட்டு வைத்தார் 116

குறிப்புரை:

மனமொழிமெய்கள் தீநெறிக்கண் செல்லாதவாறு அடக்கி ஒழுகவேண்டுமென்பது.

ஐந்து: பொறிவழிச் செல்லும் ஐம்புலன்கள்.

மூன்று: மனம், மொழி மெய். மாண்டு = மாட்சிமைப்பட்டு. ஏமம் = உறுதி. கொல்லி = நெருப்பு. கொட்டு = நெற்பொதி.

[இன்னிசை வெண்பா]

2 கற்றறிந்தார்கண்ட அடக்க மறியாதார்
பொச்சாந்து தம்மைப் புகழ்ந்துரைப்பார்—தெற்ற
அறைகல லருவி அணியமலை நாாட
நிறைகுடம் நீர்தளும்ப லில 117

குறிப்புரை :

அடக்கமில்லாதவர் தம்மைத்தாமே புகழ்ந்து கொள்வார் என்பது
பொச்சாந்து = மெய்மையை மறந்து.
தெற்ற = தெளிவாக.

[நேரிசை வெண்பா]

3 செம்மாந்து செல்லும் செறுநரை யட்டவர்
தம்மேற் புகழ்பிறர் பாராட்டத்—தம்மேற்றும்
வீரம்சொல் லாமையே வீழ்க, களிடபினும்
சோரம் பொதியாத வாறு. 118

குறிப்புரை :

விறுடையார் தம்மைத்தாமே புகழ்தல் தம் குற்றத்தைப் பறைசாற்றுவதாம் என்பது.
செம்மாந்து = தருக்குற்று—அட்டவர் = வென்றவர்—
வீரம் = வீரச்செய்கைகளை. வீழ்க = விரும்புக.
பொதிதல் = மறைத்தல்.

4 பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்—நல்லாய்
மணலுடன் முழுகி மறைந்து கிடக்கும்
துணலுந்தன் வாயாற் கெடும். 119

[பழமொழி]

குறிப்புரை :

பேதையர் தம் குற்றத்தைத் தாமே தூற்றிக்கொண்டு கெடுவர் என்பது.

பொல்லாத = தீயவற்றை; நுணல் = சிறுதேரை; கெடும = அழியும்

[இன்னிசை வெண்பா]

3 நளிகடற் றண்சேர்ப்ப நல்கூர்ந்த மக்கட்கு
அணிகல மாவதடக்கம் பணிவில் சீர்
மாத்திரை இன்றி நடக்குமேல் வாழுமூர்
கோத்திரம் கூறப் படும. 120

குறிப்புரை :

நல்கூர்ந்தார்க்கு அடக்கமே அணிகலனும் என்பது.

நளி = செறிவு; கோத்திரம் = குலப்பிறப்பு

4 கற்றறிந்த நாவினர் சொல்லார்தம் சோர்வஞ்சி
மற்றையர் ஆவார் பகர்வர் பனையின்மேல்
வற்றிய ஓலை கலகலக்கும் எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி. 121

[நாலடியார்]

குறிப்புரை :

கற்றறிந்தோர் தம்மைத் தாமே புகழாது அடக்கத்தோடு இருப்பார் என்பது.

சோர்வு = மறதி; மற்றையார் = கல்லாதார்;
ஓலை = பனை ஓலை

5 வாயி னடங்குதல் துப்புரவாம் மாசற்ற
செய்கை அடங்குதல் திப்பியமாம் பொய்யின்றி
நெஞ்ச மடங்குதல் வீடாகும் இம்மூன்றும்
வஞ்சத்தின் தீர்ந்த பொருள். 122

[திரிகடுகம்]

குறிப்புரை :

மனமொழிமெய்யடக்கத்தின் பயன் இவை என்கிறது.
துப்புரவு - தூய்மை; திப்பியம் - சிறப்பு, மேன்மை
தீர்ந்த - நீங்கிய; பொருள் - உறுதிப்பொருள்.

]நேரிசைவெண்பா]

6 தன்னைத்தன் நெஞ்சங் கரியாகத் தானடங்கிற்
பின்னைத்தா னெய்தாப் பயனில்லைத்—தன்னைக்
குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யின்
பிடிபடுக்கப் பட்ட களிறு. 123

குறிப்புரை :

மனவடக்கமில்லாதவர் துயரக் குழியிற்படுவார் என்பது.
கரி - சான்று (சாட்சி); குற்றேவல் - அடிமைப்பணி;
களிறு - யானை

7 நின்னை யறப்பெறு கிற்றிலேன் நன்னெஞ்சே
பின்னையா ஞரைப் பெறுகிற்பேன்—நின்னை
அறப்பெறு கிற்பனேற் பெற்றேன்மற் றீண்டுண்டே
துறக்கந் திறப்பதோர் தாழ். 124

குறிப்புரை :

நெஞ்சினையடக்கி ஆளுதல் துறக்க வீட்டிற்குத் திறவு
கோலாம் என்பது.
அறப்பெறுகிற்றிலேன் - அடிமையாக்கி ஆள இயலாத
வனாக உள்ளேன்; துறக்கம் - வீட்டின்பம்;
தாள் - திறவுகோல்

8 இந்திரியக் குஞ்சரத்தைக் ஞான இருங்கயிற்றாற்
சிந்தனைத்தூண் பூட்டித் திதிபெறப் பந்திப்பார்
இம்மைப் பயனும் இனிச்செல் கதிப்பயனும்
தம்மைத் தலைப்படுப்பார் தாம். 125

[அறநெறிச்சாரம்]

குறிப்புரை :

ஐம்புலக் களிற்றை ஞானக் கயிற்றாற் பிணிப்பவர் இருமை இன்பமும் பெறுவார் என்பது.

இந்திரியம் - பொறிகள்; திதிபெற = நிலைபெற;

[கலிவிருத்தம்[

9 ஆக்கப் படுக்கும் மருந்நினைவாய் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநகரத் தாய்ப்பிக்கும்
காக்கப் படுவன இந்திய மைந்தினுள்
நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே 126

[வளையாபதி]

குறிப்புரை :

பந்திப்பார் = கட்டுபவர்; தலைப்படுப்பார் = ஆளாக்குவர் நாவடக்கம் மிகச் சிறந்ததென்பது.

ஆக்கம் = வளம்; புலை = இழிதன்மை;
இந்தியம் (இந்திரியம்) = பொறிகள்; நனி = மிகவும்

அதிகாரம்—13

## ஒழுக்கமுடைமை

ஒழுக்கமுடைமையாவது : மேன்மக்களான் அவரவர்க்கென வகுத்தமைக்கப்பெற்ற முறைமை வழுவாது தத்தங் கடமைகளை அறநெறியினின்று ஆற்றுதலாம்.

[பஃறொடைவெண்பா]

1 நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோ
டின்னாத எவ்வுயிர்க்குஞ் செய்யாமை கல்வியோடு
ஒப்புரவு ஆற்ற அறிதல் அறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து. 127

குறிப்புரை :

நன்றியறிதல் பொறையுடைமை முதலிய எட்டும் ஒழுக்கத்திற்கு அடிப்படையாகும் என்பது

இன்னாத = தீயன ; ஆற்ற = நிறைவாக ;
நட்டல் = நட்புக்கொள்ளுதல் ; ஆசாரம் = ஒழுக்கம்

[இன்னிசைவெண்பா]

2 பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றம் கல்விநோ யின்மை
இலக்கணத்தால் இவ்வெட்டும் எய்துப என்றும்
ஒழுக்கம் பிழையா தவர். 128

குறிப்புரை :

ஒழுக்கந்தவருதவர் நற்குலப்பிறப்பு நீண்ட ஆயுள் முதலிய எட்டினையும் பெறுவர்.

வனப்பு = அழகு ; மீக்கூற்றம் = ஆணை செலுத்துதல்
இலக்கணம் = முறைமை

3 வைகறை யாமம் துயிலெழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதின்
தந்தையுந் தாயுந் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை. 129

குறிப்புரை :

விடியற்காலை துயிலெழுதல் முதல் பெற்றோரை வணங்குதல் வரை இவை சான்றோர் கண்ட ஒழுக்க முறைகளாம் என்பது.

வாய்வதின் = வாய்க்குமிடத்தான் ; முறை = ஒழுக்கம்

[சிந்தியல் வெண்பா]

4 எச்சிலார் தீண்டார்ப் பசுபார்ப்பார் தீத்தேவர்
உச்சந் தலையோ டிவையென்ப யாவரும்
திட்பத்தால் தீண்டாப் பொருள். 130

**குறிப்புரை :**

எச்சில் முதலிய ஏழுபொருள்களும் தீண்டத்தகாதவை என்கின்றது.

தீண்டார் = தாழ்ந்த செயலினர் ; திட்பம் = உறுதி

[பஃறொடை வெண்பா]

5 தேவர் வழிபாடு தீக்கனா வாலாமை
உண்டது கான்றல் மயிர்களைதல் ஊண்பொழுது
வைகு துயிலோ டிணைவிழைச்சு கீழ்மக்கள்
மெய்யுறல் ஏனை மயலுறல் ஈரைந்தும்
ஐயுறா தாடுக நீர். 131

**குறிப்புரை :**

இறைவழிபாடு முதலிய பத்துச் செயல் கட்கு நீராடுதல் வேண்டுமென்கிறது.

வாலாமை = அழுக்குற்றநிலை ; கான்றல் = வாய் குமட்டிக்கக்குதல்; வைகுதுயில் = உறங்கிஎழுந்தபோது; இணைவிழைச்சு = மெய்யுறுபுணர்ச்சி; மயல் = கள்முதலிய வற்றால் நேர்ந்த மயக்கம் ; ஆடுகநீர் = நீரில் மூழ்கி எழுக

[இன்னிசை வெண்பா]

6 அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன்
நிகரில் குரவர் இவ் ஐவர் இவரிவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக என்பதே
யாவரும் கண்ட நெறி. 132

**குறிப்புரை :**

அரசன் முதலிய ஐம்பெருங்குரவரை வணங்கி, ஒழுகுதல் நன்னெறி என்கின்றது.

தம்முன் = தனக்குமூத்தவன் ; போல = போலஎண்ணி

[சிந்தியல் வெண்பா]

7 முன்துவ்வார் முன்னெழார் மிக்குறார் ஊணின்கண்
என்பெறினும் ஆற்ற வலமிரார் தம்மின்
பெரியார்தம் பாலிருந்தக் கால். 133

குறிப்புரை :

பெரியர்களிடையே இருக்குங்கால் செய்யத் தகாதவை இவையென்கின்றது.

துவ்வார் = உண்ணார்; எழார் = எழுந்துசெல்லார்; மிக்குறூர் = மேலான இடத்தில் அமரமாட்டார்; ஊண் மிக்குறூர் என்றும் கொள்க; வலமிரார் = பெரியோர்தம் வலப்பக்கத்தில் இருக்கமாட்டார்; ஒழுக்கநெறியறிந்தோர்

[இன்னிசை வெண்பா]

8 உச்சியம் போழ்தோ டிடையாமம் ஈரந்தி
மிக்க இருதேவர் நாளோ டுவாத்திதிநாள்
அட்டமியும் ஏனைப் பிறந்தநாள் இவ்வனைத்தும்
ஒட்டார் உடனுறைவின் கண். 134

குறிப்புரை :

ஒழுக்கமுடையோர் இன்னபொழுது இன்ன நாளின்கண் புணர்ச்சி மேற்கொள்ளார் என்கின்றது.

போழ்து = காலம்; ஈரந்தி = காலை, மாலை; மிக்கஇரு தேவர் நாள் = திருவாதிரை—திருவோணம்
உவா அமாவாசை பூரணை திதி = பிறந்த திதி;
ஒட்டார் = மாதரைக்கூடார்

[சிந்தியல் வெண்பா]

9 உடைநடை சொற்செலவு வைதல் இந்நான்கும்
நிலைமைக்கும் ஆண்மைக்கும் கல்விக்கும் தத்தம்
குடிமைக்கும் தக்க செயல். 135

குறிப்புரை:

நடையுடை பாவனைகள் தம் கல்விக்கும் குடிப்பிறப்பிற்கும் தக அமைதல் வேண்டும் என்கின்றது.

சொல் செலவு = பேசும் முறைமை

[இன்னிசை வெண்பா]

10 பாழ்மனையும் தேவ குலனும் சுடுகாடும்
ஊரில் வழியெழுந்த ஒற்றை முதுமரமும்
தாமே சமியர் புகாஅர் பகல்வளரார்
நோயின்மை வேண்டு பவர். 136

குறிப்புரை:

நோயின்றி வாழ விரும்புவோர் இவற்றைக் கடைப்பிடித்தல் வேண்டு என்பது.

தேவகுலம் = கோயில்; பகல் வளரார் = பகற்போதில் நெட்டுறக்கம் கொள்ளார்.

11 பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பினுள்
போற்றி எனப்படு வார். 137

குறிப்புரை:

பார்ப்பார் முதலானோர்க்கு வழிவிட்டு விலகி நடப்பவர் வணக்கத்திற்குரியராவர் என்பது.

தவர் = தவமுனிவர்; சுமந்தார் = பெருஞ்சுமையைத் தாங்கி வருபவர்

[சிந்தியல் வெண்பா]

12 ஈன்றாள் மகள்தன் உடன்பிறந்தாள் ஆயினும்
சான்றோர் தமித்தா உறையற்க ஐப்புலனும்
தாங்கற் கரிதாக லான். 138

குறிப்புரை:

மனைவியல்லாதார் யாவராயினும் அவரொடு தனித்துறைதல் கூடாதென்பது.

தமித்தா = தனிமையாக; உறைதல் = உடனிருத்தல்
அரிது = இயலாதது

[பஃறொடை வெண்பா]

13 அறியாத தேயத்தான் ஆதுலன் மூத்தான்
இளையான் உயிரிழந்தான் அஞ்சினான் உண்பான்
அரசர் தொழில்தலை வைத்தான் மணாளனென்று
ஒன்பதின்மர் கண்டீர் உரைக்குங்கால் மெய்யான்
ஆசாரம் வீடுபெற் றார். 139

[ஆசாரக் கோவை]

குறிப்புரை :

அறியாத ஊரினன் முதல் ஒன்பதின்மரும் பேசுமிடத்து உடம்பிற்குரிய ஆசாரம் காணவேண்டா என்பது.
ஆதுலன் = நோயாளன்; உயிரிழந்தான் = உயிரிழக்கும் நிலையில் உள்ளவன்; அரசர் தொழில் தலைவைத்தான் = அரசன் பணியை மேற்கொண்டவன்; மெய்யான் = உடம்பினால்.

[நேரிசை வெண்பா]

14 நகையொடு மந்திரம் நட்டார்க்கு வாரம்
பகையொடு பாட்டுரையென் றைந்தும்
—தொகையொடு
மூத்தார் இருந்துழி வேண்டார் முதுநூலுள்
யாத்தார் அறிவினர் ஆய்ந்து. 140

குறிப்புரை :

சான்றோர் குழுவின்முன் நகைத்தல் முதலிய ஐந்தும் செய்யத்தகாதவை என்கின்றது.
மந்திரம் = மந்தணமாகப் பிறரொடு ஆராய்தல்;
வாரம் = அன்பு காட்டுதல்; பாட்டுரை = பாடுதல்;
முதுநூல் = அறநூல்;

15 தொழீஇ அடஉண்ணார் தோழரிற் றுஞ்சார்
வழீஇப் பிறர்பொருளை வௌவார்—கெழீஇக்
கலந்தபின் கீழ்காணார் காணாய் மடவாய்
புலந்தபின் போற்றார் புலை. 141

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை :

சான்றோர் இவற்றைச் செய்யார் என்பது.
தொழீஇ = அடிமைப் பெண்டு; தோழரில் = நண்பன் மனை
வௌவார் = அகப்படுத்திக் கொள்ளார்,
கெழீஇ = நட்புற்று; கீழ் = தாழ்வு.
புலை = புலைத்தன்மையுடையார்.

16 அருளுடைமை கொல்லாமை ஐந்தடக்கல் வாய்மை
இருளுடையாக் கல்வியோ டைகை—புரையில்லா
உள்ளத்திற் றீர்த்த மிவையுளவா கப்பெற்றால்
வெள்ளத்திற் றீர்த்த மிகை. 142

குறிப்புரை :

அருளுடைமை முதலியவை வாய்க்கப் பெற்றவர் தெய்வத் தீர்த்தம் சென்று ஆடல் வேண்டா என்பது.
புரையில்லா = மாசில்லாத; வெள்ளம் = நீர்.

17 தூய்மை மனத்தவர் தோழர் மனையகத்தும்
தாமே தமியர் புகல்வேண்டா—தீமையான்
ஊர்மிகின் இல்லை கரியே ஒலித்துடன்
நீர்மிகின் இல்லை சிறை. 143

[பழமொழி]

குறிப்புரை :

பெண்டிர் தனித்திருக்கும் மனையகத்துத் தமியராய்ப் புகல் பிழைக்கு ஏதுவாகும் என்பது.
ஊர்மிகின் = ஊரார் ஒருங்குசேர்ந்துவிடின்,
கரி = சாட்சி, சிறை = தடுத்து நிறுத்தும் அணை.

## அதிகாரம்—16

# பிறர்மனை நயவாமை

பிறர் மனை நயவாமையாவது பிறர்க்குரியராய் இல்லறக் கிழமை பூண்டொழுகும் பெண்டிரை மனத்தானும் விரும்பா திருத்தலாம்.

[நேரிசை வெண்பா]

1 செம்மையொன் றின்றிச் சிறியார் இனத்தராய்க்
கொம்மை வரிமுலையாள் தோள்மரீஇ—உம்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே இம்மை
அலியாகி ஆடியுண் பார். 144

**குறிப்புரை :**

வலிமை காரணமாகப் பிறர் மனைநயந்தார் அலியாகப் பிறப்பார் என்பது.
செம்மை = ஒழுக்கம், மரீஇ = அணைந்து,
உம்மை = முற்பிறப்பு, இம்மை = இப்பிறவி,
ஆடி = தெருக்கூத்தாடி, உண்பார் = வயிறு பிழைப்பார்.

2 அறம்புகழ்க் கேண்மை பெருமை இந்நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள். 145

**குறிப்புரை :**

பிறர் மனை நயப்பார்க்கு அறம் முதலியவை நீங்கிப் பகை முதலிய நான்கும் வந்துசேரும் என்கின்றது.
கேண்மை = உறவு. நச்சுவார்க்கு = விரும்புவார்க்கு

[இன்னிசை வெண்பா]

3 புக்க விடத்தச்சம் போதரும் போதச்சம்
துய்க்கும் இடத்தச்சம் தோன்றாமைக் காப்பச்சம்
எக்காலும் அச்சந் தருமால் எவன்கொலோ
உட்கான் பிறனில் புகல். 146

குறிப்புரை :

பிறர் மனை நயப்பார்க்குப் பல்வகையான அச்சம் நேரும் என்கின்றது.
போதரும்போது = மீளும் காலை, துய்த்தல் = நுகர்தல், காப்பு = காவல், உட்கான் = அஞ்சான்.

[நேரிசை வெண்பா]

4 அம்ப லயலெடுப்ப அஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பும்
நிலைமையில் நெஞ்சத்தான் துப்புரவு பாம்பின்
தலைநக்கி யன்ன துடைத்து. 147

குறிப்புரை :

அம்பல் = பழிமொழி, பரீஇ = நீங்கி,
வம்பலன் = புதிய பிறன், நம்பும் = விரும்பும்,
துப்புரவு = துய்த்தல், தலைநக்கியன்னது = தலையை நக்கிய நிலைமை போன்றதாகும்.

5 காணின் குடிப்பழியாம் கையுறின் கால்குறையும்
ஆணின்மை செய்யுங்கால் அச்சமாம் — நீணிரயத்
துன்பம் பயக்குமால் துச்சாரி நீகண்ட
இன்பம் எனக்கெனைத்தாற் கூறு. 148

[நாலாடியார்]

குறிப்புரை :

பிறர் மனை நயந்துகொள்ளுதல் இன்பம்பயவாது என்பது.
கால் குறையும் = தண்டனை நேரும், ஆணின்மை = பிறர் மனைநயத்தலாகிய செயல்; நிரயம் = நரகம்;

[அறுசீர்விருத்தம்]

6 பெரியவாய்த் தடங்கண் செவ்வாய்ப்
பிறர்மனை பிழைக்கும் மாந்தர்
மரீஇயவாய்ப் புறஞ்சொற் கூர்முள்
மத்திகைப் புடையு மன்றி
ஒருவர்வாய் உமிழப் பட்ட
தம்பலம் ஒருவர் வாய்க்கொண்டு
அரியவை செய்ப வையத்
தாண்பிறந் தார்க ளன்றே. 149

குறிப்புரை :

பிறன் மனை மருவுவோர் ஒருவர் உமிழ்த்த எச்சிலைத் தம் வாய்க் கொள்பவராவர் அவர் ஆண்மக்களும் அல்லர் என்கின்றது.

மரீஇ = தழுவி, புறஞ்சொற் கூர்முள் = பழிமொழி யாகிய கூரிய முள். மத்திகைப்புடை = கருவிகளாற் புடைத்தல்.

7 காதலான் கரிந்து நையக்
கடியவே கனைந்து கன்றி
ஏதிலான் குரம் நம்பி
எளிதென இறந்த பாவத்து
ஊதுலை உருக வெந்த
ஒள்ளழற் செப்புப் பாவை
ஆதகா தென்னப் புல்லி
அலறுமால் யானை வேந்தே. 150

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை :

தன் மனைவி வருந்தப் பிறனில்லாளை நயந்து சென்றவர் நரகத்தில் உருகிய செப்புப் பாவையை அலறித் தழுவு வாரென்பது.

கரிந்து = வருந்தி, வெந்த = காய்ச்சிய, புல்லி = தழுவி

[கலிவிருத்தம்]

8 தாரம் நல்விதந் தாங்கித் தலைநின்மின்
ஊரும் நாடும் உவத்தல் ஒருதலை
வீர வென்றி விறன்மிகு விண்ணவர்
சீருள் நந்திச் சிறப்பெதிர் கொள்பவே. 151

குறிப்புரை :

தன் இல்லாளையே நயந்து வாழ்பவர் சீரும் சிறப்பும் எய்துவர் என்பது.

ஒருதலை = உறுதி; விறல் = வீறு;
விண்ணவர் = தேவர்; நந்தி = பெருகி.

9 பெண்ணின் ஆகிய பேரஞர் பூமியுள்
எண்ண மிக்கவர் எண்ணினும் எண்ணலார்
பின்னி நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினும் ஏதில்பெண் நீக்குமின். 152

[வளையாபதி]

**குறிப்புரை :**

அயலார் பெண்டினை எண்ணுதல் பெருந் துன்பம்தரும் என்பது.

பேரஞர் = பெருந்துன்பம்; வினை = தீவினை; ஏதில்பெண் = பிறனில்லாள்.

**அதிகாரம்—17**

## பொறையுடைமை

**பொறையுடைமையாவது : காரணமாகவோ, அறியாமை யாலோ ஒருவன் செய்யுந் தீங்கினைச் செய்யப்பட்ட ஒருவன் அதனை அவன்கண் தானும் செய்யாது பொறுத்துணரச் செய்தலாம்.**

[நேரிசை வெண்பா]

1 **கறுத்தாற்றித் தம்மைக் கடியசெய் தாரைப்
பொறுத்தாற்றிச் சேறல் புகழால்—ஒறுத்தாற்றின்
வானோங் குயர்வரை வெற்ப பயமின்றே
தானோன் றிடவரும் சால்பு.** 153

**குறிப்புரை :**

தமக்குத் தீங்குசெய்தாரையும் பொறுத்தலே சால்பென்பது.

கறுத்தாற்றி = சினந்து ; ஒறுத்தாற்றின் = அவரைத் தண்டித்தமையின்; பயமின்று = நன்மையில்லை; நோன்றிட = பொறுத்தருள; சால்பு = நிறைவு.

2 தெரியா தவர்தம் திறனில்சொல் கேட்டால்
பரியாதார் போல இருக்க - பரிவில்லா
வம்பலர் வாயை அவிப்பான் புகுவாரே
அம்பலந் தாழ்க்கூட்டு வார். 154

குறிப்புரை :

அறிவிலார் கூறும் இகழ்வினை பொறுத்திராது அவர்க்கு அறிவுகூற முனைதல் பெரிய மன்றத்திற்குத் தாழிட்டு மூட எண்ணுதலை ஒக்கும் என்பது
பரியாதார் போல = துன்புறுதவர் போல;
வம்பலர் = தூற்றும் அயலார், அவிப்பான் = பொத்து தற்கு; அம்பலம் = பொதுமன்றம்.

[இன்னிசை வெண்பா]

3 நோவ வுரைத்தாரைத் தாம்பொறுக்க லாற்றுதார்
நாவின் ஒருவரை வைதால் வயவுரை
பூவிற் பொலிந்தகன்ற கண்ணாய் அதுவன்றோ
தீயில்லை ஊட்டுந் திறம். 155

குறிப்புரை :

அறியாதார் கூற்றினைப் பொருது தாமும் இகழ்ந்து கூறுதல் வீட்டினைத் தீயிட்டுக் கொளுத்துதல் போலாகும் என்பது.
வயவுரை = வைதுரைக்குஞ் சொற்கள்;
ஊட்டும் = கொளுத்தும்; திறம் = செயல்.

4 நற்பால கற்றாரும் நாடாது சொல்லுவரால்
இற்பாலர் அல்லார் இயல்பின்மை நோவதேன்
கற்பால் இலங்கருவி நாடமற் றியாரானும்
சொற்சோர் விலாதாரோ இல். 156

குறிப்புரை :

நல்லோரும் சிலபோது கடுஞ்சொல் கூறுதல் கூடும் குலத்திற் பிறந்தார் அதனைப் பொறுத்தல் வேண்டும் என்பது.
நற்பால = நன்னெறியாயவற்றை;
நாடாது = ஆராயாது;
இற்பாலார் = நற்குடிப்பிறந்தார்.

5 கையார உண்டமையாற் காய்வார் பொருட்டாகப்
பொய்யாகத் தம்மைப் பொருளல்ல கூறுபவேல்
மையார உண்டகண் மாணிழையாய் என்பரிய
செய்யாத எய்தா வெனின். 157
[பழமொழி]

குறிப்புரை :

தாம் செய்தாவை தம்மையடையாவாதலின் பிறர் பழி கூறினும் பொறுத்தல் நலம் என்பது.
கையார = கைந்நிறைய; காய்வர் = வெகுளுவார்;
பொருளல்லார் = அற்பர்கள்;
என்பரிவ = எதற்கு வருந்துவர்.

[நேரிசை வெண்பா]

6 மாற்றாய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
ஆற்றாமை யென்னார் அறிவுடையார்—ஆற்றாமை
நேர்த்தின்னா மற்றவர் செய்தக்கால் தாமவரைப்
பேர்த்தின்னா செய்யாமை நன்று. 158

குறிப்புரை :

தமக்குத் துன்பஞ்செய்தார்க்கு தாம் அங்ஙனம் செய்யாது பொறுத்தல் நல்லறமாகும் என்பது.
மாற்றார் = பகைவர்; பேர்த்து = மறித்து.

[இன்னிசை வெண்பா]

7 இளையான் அடக்கம் அடக்கம் கிளைபொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன்; எல்லாம்
ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை. 159

குறிப்புரை :

யாவரையும் வென்றொழிக்கும் ஆற்றலுடையவன் பொறுத்தலே தலையாய பொறையுடைமையாகும் என்பது.
இளையான் = பருவத்தால் இளையவன்;
கிளைபொருள் = மேன்மேலும் வருவாயாக வரும்பொருள்
மதுகை = வலிமை; உரன் = அறிவு.

[நேரிசை வெண்பா]

8 கல்லெறிந் தன்ன கயவர்வாய் இன்னாச்சொல்
எல்லாருங் காணப் பொறுத்துய்ப்பார்—ஒல்லை
இடுநீற்றாற் பையவிந்த நாகம்போல் தத்தம்
குடிமையான் வாதிக்கப் பட்டு. 160

குறிப்புரை :

கயவர் கூறிய இன்னாத சொற்களையும் தன் குடிப்பண்பு காரணமாகச் சான்றோர் பொறுத்துக் கொள்வர் என்பது. ஒல்லை = விரைந்து; பையவிந்த = படமெடுத்தலைத் தவிர்ந்த; நாகம் = நல்லபாம்பு; வாதிக்கப்பட்டு = ஆய்ந்து உணரப்பெற்று.

9 காவா தொருவன் வாய்திறந்து சொல்லுஞ்சொல்
ஓவாதே தம்மைச் சுடுதலால்—ஓவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து. 161

குறிப்புரை :

ஆராய்ந்து தேர்ந்த அறிவுடையார் வாய்காவாது ஒருவன் கூறிய கடுஞ்சொல்லை எதிர்த்துத் தாமும் கடுஞ் சொற்கூறுர் என்பது.

ஓவாது = நீங்காமல் அமைந்த = அமைந்த சொற்களை
கறுத்து = சினந்து

10 நெடுங்காலம் ஓடினும் நீசர் வெகுளி
கெடுங்கால மின்றிப் பரக்கும்—அடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம். 162

குறிப்புரை :

நீசத்தன்மையுடையாரின் வெகுளி அழியாது நிற்கும் சான்றோர் சினம் நீரில் முழ்கிய நெருப்பைப்போல் உடன் மறைந்துவிடும் என்பது.

பரக்கும் = விரிந்து நிற்கும் வெப்பம் = தீ

[இன்னிசை வெண்பா]

11 உபகாரம் செய்ததனை ஓராதே தங்கண்
அபகாரம் ஆற்றச் செயினும்—உபகாரம்
தாம்செய்வ தல்லால் தவற்றினுல் தீங்கூக்கல்
வான்ரோய் குடிப்பிறந்தார்க் கில். 163

[நாலடியார்]

குறிப்புரை :

தன்னிடத்து உபகாரம் பெற்றவரே அபகாரம் செய்யினும் உயர்குடிப்பிறந்தார் அவர்க்குத் தீங்கு செய்ய எண்ணார் என்பது,

ஓராதே = கருதாமல் ஊக்கல் = செய்யமுயலுதல்
வான்றோய்குடி = உயர்குடி

[நேரிசை வெண்பா]

12 எள்ளிப் பிறருரைக்கும் இன்னாச்சொல் தன்னெஞ்சிற்
கொள்ளிவைத் தாற்போற் கொடிதெனினும்—தெள்ளி
அறிவென்ற நீரா லவித்தடக்க லாற்றின்
பிறிதெனினும் வேண்டா தவம். 164

[அறநெறிச்சாரம்]

குறிப்புரை :

நெருப்பிட்டதுபோன்ற கொடுஞ்சொல் ஒருவர் கூறினும் அறிவாகிய நீரால் அதனை அழித்து அடக்கத்தோடிருப் பவர்க்குப் பிறதவம் வேண்டா அதுவே தவமாம் என்பது

தெள்ளி = தெளிந்து பிறிதெனினும் = வேறாயினும்.

13 அற்ற உறுப்பெல்லாம் அறுவையி னான்மறைப்ப
மற்றொருவர் காணா மறையுமால்—வெற்றி
அறையார் கழலாய் அவமாய வெல்லாம்
பொறையான் மறைக்குமேற் போம். 165

குறிப்புரை :

அற்றமாகிய உறுப்புக்களை ஆடையால் மறைக்குமாறு போலக் பிறர்கூறும் அவமொழிகளைப் பொறையால் மறைக்க அவை பயனின்றிப் போகும் என்பது.

அற்ற உறுப்பு = மறைக்கவேண்டிய உடலுறுப்புக்கள்
அறுவை = ஆடை அவமாய = பழியாயவற்றை.

## அதிகாரம் 18
# வெஃகாமை

வெஃகாமையாவது பிறர்க்குரிய பொருளையும் பொருளைப் பயக்கும் உழைப்பு முதலாய செல்வத்தையும் வஞ்சித்துக் கொள்ள விழையாதிருத்தலாம்.

[இன்னிசை வெண்பா]

1 உள்ளதொருவர் ஒருவர்கை வைத்தக்கால்
கொள்ளும்பொழுதே கொடுக்கத்தாங் கொள்ளார்
நிலைப்பொருள் என்றதனை நீட்டித்தல் வேண்டா
புலைப்பொருள் தங்கா வெளி. 166

**குறிப்புரை :**

ஒருவர் அடைக்கலமாகக் கொடுத்த பொருள்மீது அவா வுறுதல் கூடாது என்பது.

கைவைத்தல் = அடைக்கலமாகத்தருதல். கொள்ளும் பொழுது = அவர்மீட்டுக்கொள்ள எண்ணும் போது. நீட்டித்தல் = காலந்தாழ்த்தல். புலைப்பொருள் = புலா லாகிய பொருள். வெளி = வெளிப்படும்.

[நேரிசை வெண்பா]

2 அல்லது செய்வார் அரும்பொரு ளாக்கத்தை
நல்லது செய்வார் நயப்பவோ — ஒல்லொலிநீர்
பாய்வதே போலும் துறைவகேள் தீயன
ஆவதே போன்று கெடும். 167

**குறிப்புரை :**

அறமல்லாத வழியில்வரும் பொருளாக்கம் ஆவதுபோன்று அழிவைத்தரும் என்பது.

அல்லது = அறத்திற்குமாறானது. நயப்பவோ = விரும்புவாரோ (விரும்பமாட்டார்).

3 மடங்கிப் பசிப்பினும் மாண்புடை யாளர்
தொடங்கிப் பிறருடைய வேவார்—குடம்பை
மடலொடு புள்கலாம் மால்கடற் சேர்ப்ப
கடலொடு காட்டொட்டலில். 168

[பழமொழி]

குறிப்புரை :

மாட்சிமைப்பட்டவர் பசிப்பினும் பிறருடையதை விரும்ப மாட்டார் என்பது.

பிறருடைய = பிறர்பொருள். மேவார் = விரும்பிக்கொள்ளார் கடலோடு காடொட்டலில் = கடலில் தூசுசேர்ந்து நிற்பதில்லை. காடு = தூசு.

[அறுசீர் விருத்தம்]

4 தானத்திற் குரித்து மன்று
தானமித் தீயிற் சால
ஈனத்தின் நரகத் துய்க்கும்
எச்சத்தை இழக்கப் பண்ணும்
மானத்தை யழிக்குந் துய்த்தால்
மற்றவர்க் கடிமை யாக்கும்
ஊனத்து நரகத் துய்க்கும்
பிறர் பொருளுவக்கின் வேந்தே 169

]சாந்திப் புராணம்[

குறிப்புரை :

பிறருடைய பொருள் தானத்திற்குதவாது அதனை ஈதல் நரகத்திற்சேர்க்கும் பெற்றமக்களை அழியச் செய்யும் மானத்தையழிக்கும் பிறர்க்கு அடிமையாக்கும் ஆதலின் பிறர்பொருளை விரும்புதல் கூடாதென்பது.

எச்சம் = மக்கள், துய்த்தால் = அதனை நுகர்ந்தால்.

[நேரிசை வெண்பா]

5 முகம்புறத்துக் கண்டாற் பொருக்கலா தாரை
அகம்புகுதும் என்றிரக்கும் ஆசை — இருங்கடத்துத்
தக்க நெறியிடைப் பின்னும் செலப்பெறூர்
ஒக்கலை வேண்டி யழல் 170

குறிப்புரை :

முகங்கொடுத்தும் பாராதவர் நட்பை விரும்புதல் பாலை நிலத்திற் செல்ல விரும்புதலை ஒக்கும் என்பது.

அகம்புகுதும் = அவர்உள்ளத்தில் இடம்பெறுவேம்.

கடம் = பாலைநிலம். நெறி = வழி. ஒக்கல் = உறவினர் (பெற்றோர்) அழல் = அழுதல் போலாகும்.

6 யாவரே யானும் இழந்த பொருளுடையார்
தேவரே யாயினுந் தீங்கோர்ப்பர்—பாவை
படத்தோன்றும் நல்லாய் நெடுவேல் கெடுத்தான்
குடத்துள்ளும் நாடி விடும். 171

[பழமொழி]

குறிப்புரை :

பொருளை இழந்தார் வேண்டாத இடத்தெல்லாம் தேடுவர் அதுபோலத் தன்நிலையிழத்தவர் தடுமாறுவர் எள்பது கருத்து.

தீங்கு ஓர்ப்பார் = இவர் தாம் எடுத்துக்கொண்டாரோ என ஐயுற்றுநிற்பார்,
பாவை = கொல்லிப்பாவை, நாடிவிடும் = தேடிப்பார்த்து விடும்.

[இன்னிசை வெண்பா]

7 ஆகா தெனினும் அகத்துநெய் உண்டாயின்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதும்
கொடாஅர் எனினும் உடையாரைப்பற்றி
விடாஅர் உலகத் தவர். 172

குறிப்புரை :

ஈயாதவராயினும் வறியவர் அவரைச் சூழ்ந்துசெல்வார் என்பது.

ஆகாது = அடையஇயலாது. உடையார் = செல்வத் தார்.

[நேரிசை வெண்பா]

8 இன்றாதும் இந்நிலையே ஆதும் இனிச்சிறந்த
நின்றாதும் என்று நினைத்திருந்—தொன்றி
உரையின் மகிழ்ந்துதம் உள்ளம் வேறாகி
மரையிலையின் மாய்ந்தார் பலர் 173

[நாலடியார்]

குறிப்புரை :

இன்றேநாளையோ பெருஞ்செல்வராகிவிடுவோம் என்று அவாவினைப் பெருக்கி அழிவோர் பலர் என்பது.

இன்றுதும் = இன்றைக்கே செல்வராவோம். ஒன்றி = அந்நினைவாற்பொருந்தி. மரையிலை = தாமரையிலை.

[இன்னிசை வெண்பா]

9 கள்வ மென்பார்க்குந் துயிலில்லை காதலிமாட்
டுள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை ஒண்பொருள்
செய்வாமென் பார்க்குந் துயிலில்லை அப்பொருள்
காப்பார்க்கும் இல்லைத் துயில் 174

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை :

களவுசெய்ய நினைவோர் முதலிய இவர்கள் துயில் ஒழிந்து வருந்துவர் என்பது.

கள்வேம் = களவுசெய்வேம். ஒண்பொருள் = மிக்க பொருள். காப்பார் = காவல் புரிவோர்.

[நேரிசை வெண்பா]

10 உரிதினிற் றம்மோ டுழந்தமை கண்டு
பிரிவின்றிப் போற்றப் படுவார்—திரிவின்றித்
தாய்பெற் றதனால் உவவார் பெரிதகழின்
பாம்புகாண் பாரும் உடைத்து 175

[பழமொழி]

குறிப்புரை :

மனம் ஒன்றித்துணை புரிந்தவர் துணைபெற்றவர் தரும் பொருளை ஏற்றுமகிழ மேல்மேலும் விரும்புதல் புற்றினை அகழ்ந்து பாம்பினை அடைதலொக்கும் என்பது.

உழந்தமை = வருத்திஉழந்தமை. திரிவின்றி = மனந் திரியாமல். உவவார் = மகிழ்வுறுதவராய். அகழின் = மேலும் மேலும் தோண்டுவராயின் உடைத்து = இவ்வுலகம் உடைத்தாக உளது.

[இன்னிசை வெண்பா]

11 தோள்வழங்கி வாழுந் துறைபோற் கணிகையும்
நாட்கழகம் பார்க்கும் நயமிலாச் சூதனும்
வாசிகொண் டொண்பொருள் செய்வானும் இம்மூவர்
ஆசைக் கடலுளாழ் வார். 176

குறிப்புரை :

பொருளே குறிக்கோளாக எண்ணுங் பரத்தையும் சூதாடு வோனும் வட்டிக்குக் கடன்பெறுவோனும் ஆசையெனும் கடலுள் மூழ்குவோராவர்.

கணிகை = பரத்தை நாட்கழகம் = பகலிற் சூதாடுமிடம் வாசி = வட்டி நண்பொருள் செய்தல் = வாணிகம் முதலியன செய்தல். ஆழ்வார் = அமிழ்ந்தழிவார்.

12 இரந்துகொண் டொண்பொருள் செய்வலென் பானும்
பரந்தொழுகும் பெண்பாலைப் பாசமென் பானும்
விரிகட லூடுசெல் வானும்இம் மூவர்
அரிய துணிந்தொழுகு வார் 177

[திரிகடுகம்]

குறிப்புரை :

இரந்துபொருள்தேடி வாணிகம் செல்வேன் என்பவர் முதலிய இம்மூவரும் கூடாதவற்றைத் துணிந்து செய்பவராவார்,

பரந்தொழுகும் = பிறருக்கும் உரியவளாக ஒழுகும், விரி கடலூடு = பெருங்கடல் நடுவே அரிய = ஆகாதன வற்றை, துணிந்து = செய்யமுற்பட்டு.

### அதிகாரம் 19

## புறங்கூறுமை

புறங்கூறுமையாவது பிறரை அவர்காணுதவிடத்து இகழ்ந்து பேசாதிருத்தலாம்.

[நேரிசை வெண்பா]

1 முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின்
றழித்துரைக்கும் மாந்தரை யஞ்சியே தேவர்
விழித்திமையா நின்ற நிலை 178

[அறநெறிச்சாரம்]

குறிப்புரை :

கண்டபோது இனிதுபேசிக் காணாத விடத்து அவரைப் பழித்துப் பேசும் மக்களின் செயலைக்கண்டு அஞ்சியே தேவர்கள் இமையாது நிற்கின்றனரோ என்பது.

கல்நின்றுருக = கல்லும் கனியும் வண்மை—பின்னின்று அவர்க்குப்புறத்தே. தேவர் விழி இமையாருதித்தற்குக் காரணம் கூறுதல் போலப் புறங்கூறுவாரின் கொடுமையைப் புலப்படுத்துகின்றது இச்செய்யுள்.

[இன்னிசை வெண்பா]

2 தாக்குற்ற போழ்து தமரேபோல் நன்குரைத்துப்
போக்குற்ற போழ்திற் புறனழீஇ மேன்மைக்கண்
நோக்கற் றவரைப் பழித்தலென் என்னும்
மூக்கற் றதற்கில் பழி 179

குறிப்புரை :

மேன்மைக்குக்குணமில்லாதவரே புறங்கூறுவார் அவரைத் திருத்தலியலாது என்பது.

தாக்குற்ற போழ்த்து = நேரே சந்தித்தபொழுது—போக்குற்றபோது = நீங்கிச் சென்றவிடத்து, புறனழீஇ = புறம் பழித்து. நோக்கு = குறிக்கோள். மூக்கறுபட்ட வழிப்பழிப்பு இல்லை.

3 பண்டின்ன ரென்று தமரையும் தம்மையும்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்
விண்டவ ரோடொன்றிப் புறனுரைப்பின் அஃதன்றோ
உண்டவில் தீயிடு மாறு 180

[பழமொழி]

குறிப்புரை :

பயன்பெற்ற காலத்துப் போற்றியுயுரைக்கப்பட்டவரைப் பின்னர் பகைவரோடு சேர்ந்துப் புறங்கூறுதல் உண்ட வீட்டிற்குத் தீயிடுதலை ஒக்கும்.

பண்டு = முன்பு. கொண்டவகையால் = பயனடைந்த முறைமையால் விண்டவர் = பகையுற்றவர் ஒன்றி = அவரொடு கூடிக்கொண்டு ஆறு = அதுபோன்றது.

**அதிகாரம்—20**

# இகழாமை

இகழாமையாவது : ஒருவரது குறைகளைச்சுட்டி அவரை இகழ்ந்து கூறுதிருத்தலாம்.

[இன்னிசை வெண்பா]

1 **ஆவிற் கரும்பனி தாங்கிய மாலையும்**
**கோவிற்குக் கோவலன் என்றுலகங் கூறுங்கால்**
**தேவர்க்கு மக்கட் கெனவேண்டா தீங்குரைக்கும்**
**நாவிற்கு நல்குர வில்.** 181

**குறிப்புரை :**

இகழ்மொழி பேசுவார்க்கு உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனும் வேறுபாடல்லை அவர் நாவிற்கு வறுமை வாய்ப்பதில்லை என்பது.

ஆ = பசுக்கூட்டம். பனி = துன்பம் மாலையும் = திருமாலாகிய கடவுளையும், கோவலன் = இடையன்.
நல்குரவு = பேசாதிருத்தலாகிய வறுமை.

[நேரிசைவெண்பா]

2 **பல்லா ரவைநடுவண் பாற்பட்ட சான்றவர்**
**சொல்லார் ஒருவரையும் உள்ளுன்றப்—பல்லா**
**நிரைப்புறங் காத்த நெடியோனே யாயினும்**
**உரைத்தால் உரைபெறுத லுண்டு.** 182

**குறிப்புரை :**

ஒருவரை இகழ்ந்தால் அவரும் எதிரிகழ்ந்து கூறுவாராதலின் சான்றோர் யாரும் மனம் உளையும்படிப்பேசார் என்பது.

பாற்பட்ட = நன்னெறிப்பட்ட. உள்ளுன்ற = உள்ளம் வருந்த. நெடியோன் = திருமால்—உரைபெறுதல் = எதிர் மாற்றம் பெறுதல்.

[நேரிசை வெண்பா]

3 உள்ளூ ரவரால் உணர்ந்தார் முதல்எனினும்
எள்ளாமை வேண்டும் இலங்கிழாய்—தள்ளாது
அழுங்கல் முதுபதி அங்காடி மேயும்
பழங்கன்றே ருதலும் உண்டு. 183

[பழமொழி]

குறிப்புரை :

ஒருவரின் தாழ்வைக் கண்டு தெரிந்திருப்பினும் அவரை இகழ்தல் வேண்டா அவர் ஒருகால் உயர்தல் உண்டு என்பது.

உள்ளூரவர் = உள்ளூரில் வாழ்பவர் உணர்ந்தாம் = அறிந்துள்ளாம். முதுபதி = பழைய ஊர். அங்காடி = பண்டங்கள் விற்குந்தெரு. ஏருதலும் = வலிய எருதாக வளர்ந்துயருதல்.

[இன்னிசை வெண்பா]

4 கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும் மான்வயிற்று
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி. 184

குறிப்புரை :

நல்லோர் தாழ்ந்த இடத்திலும் தோன்றுவதுண்டாகலான் அவர் தாம் தொடக்கநிலை கண்டு இகழ்தல் கூடாது என்பது.

அகில் = மணக்கும்பொருள். அரிதாரம் = கத்தூரி. முத்தம் = முத்து. நல்லாள் = சிறப்புடையோர்.

5 பலகற்றேம் யாமென்று தற்புகழ வேண்டா
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல். 185

[அறநெறிச் சாரம்]

குறிப்புரை :

தம் கல்விச் செருக்குக் காரணமாகப் பிறரை இகழ்தல் பிழையாம் என்பது.

ஞாயிற்றை = சூரியனை. கைக்குடை = சிறுகுடை. அச்சாணி வண்டியைத் தாங்கும் அச்சு. கடையாணியுமாம்.

6 சிலம்பிக்குத் தன்சினை கூற்றம் நீள்கோடு
விலங்கிற்குக் கூற்றம் மயிர்தான் வலம்படா
மாவிற்குக் கூற்றமாம் ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை. 186

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை :

பிறரை இகழ்ந்துரைக்கும்நாவே அவர்க்கு யமனாகும் என்பது.

சிலம்பி = சிலந்தி சினை = முட்டை நீள்கோடு = நீண்ட கொம்பு. மா = விலங்கு. ஞெண்டு = நண்டு. பார்ப்பு = குஞ்சு. நன்றல் வசை = நன்மைபயவாத வசைச் சொற்கள்.

---

அத்தியாயம்—21

## தீவினையச்சம்

தீவினையச்சமாவது : தீமை பயக்கும் பாவச் செயல்களை செய்ய அஞ்சுதல். அஞ்சுதலாவது செய்யாதிருத்தலாம்.

[இன்னிசை வெண்பா]

1 எனக்குத் தகவல்லால் என்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த் தவற்றை
நினைக்கத்தன் னெஞ்சு குறைத்தான் றென்னவனுங்காணார்
எனச்செய்யார் மாணா வினை. 187

**குறிப்புரை :**

பிறர்காணார் எனக்கருதித் தீவினைகளைச் செய்யார் அறமுணர்ந்த சான்றோர் என்பது.

தகவு - தகுதி. கரி = சாட்சி. தென்னவன் = பொற்கைப் பாண்டியன். மாணாவினை = தீவினை.

[நேரிசை வெண்பா]

2 **அஃகுநீ செய்யல் எனஅறிந் தாராய்ந்தும்**
**வெஃகல் வெகுடலே தீக்காட்சி—வெஃகுமாண்**
**கள்ளத்த வல்ல கருதின் இவை மூன்றும்**
**உள்ளத்த வாக வுணர்.** 188

**குறிப்புரை :**

அஃகு = குறைந்த செயல்; செய்யல் = செய்யாதிரு; வெஃகல் = விரும்புதல்.

3 **நிலையளவில் நின்ற நெடியவர்தாம் நேராக்**
**கொலைகளவு காமத்தீ வாழ்க்கை—அலையளவி**
**மையென நீள்கண்ணாய் மறுதலைய விம்மூன்றும்**
**மெய்யள வாக விதி.** 189

**குறிப்புரை :**

அறத்தின்கண் உறுதியுடையார் கொலை களவு காமமாகிய வற்றை உடன்படார்.

நிலை = உறுதி. நேரா = ஒல்வாத

4 **மையேர் தடங்கண் மயிலன்ன சாயலாய்**
**மெய்யே உணர்ந்தார் மிகவுரைப்பார்—பொய்யே**
**குறளை கடுஞ்சொல் பயனில்சொல் லிந்நான்கும்**
**மறலையின் வாயினவாம் மற்று.** 190

[ஏலாதி]

**குறிப்புரை :**

மெய்ந்நூலுணர்ந்தார் பொய்குறளை கடுஞ்சொல் பயனில் சொல் ஆகிய நான்கையும் மறலையின் வாயின என்று கூறுவர்.
குறளை = புறங் கூறுதல். மறலை = யமன்

5 கோறலும் நஞ்சூனைத் துய்த்தல் கொடுநஞ்சு
வேறலும் நஞ்சுமா றல்லானைத்—தேறினல்
நீடாங்குச் செய்தலும நஞ்சால் இளங்கிளையை
நாடாதே தீதுரையும் நஞ்சு. 191

[சிறுபஞ்ச மூலம்]

**குறிப்புரை :**

கொலை முதலியவை நஞ்சுபோலக் கொடுமை செய்வனவாம் என்பது.
ஊன் = புலால். வேறல் = வேறுபடுத்தல் — மாறல்லான் நண்பன். தேறினல் நல்லவனெனத் தெரிந்தால் நீடாங் குச் செய்தல் செய்தற்குக் காலந்தாழ்த்தல் இளங்கிளை = பணிபுரியும் சுற்றத்தார்.

6 தன்னைச்சேராதானைக் காய்வான் தகர்க்கொல்வான்
பின்னைக் குரவரைப் பேணுதான்—முன்னொருவன்
இல்லாளைக் காதலித்தான் இந்நால்வர் வெந்நரகத்
தல்லா லழுந்தா தவர். 192

[பாரதம்]

**குறிப்புரை :**

இச்செயலினர் நரகத்துள் அழுந்துவர் என்கின்றது.
காய்வான் - சினந்துரைப்பான் தகர் = ஆடு. குரவர் = பெற்றவர்.

7 சுற்றங்கண் பார்த்தங் கடைத்திருந்து கொல்வானும்
குற்றம்போய்க் கோவுக் குரைப்பானும்—செற்றத்தே
நின்றானும செய்ந்தன்றி நீத்தானும் அந்தணரைக்
கொன்றாரோ டொப்பர் குறித்து. 193

குறிப்புரை :

உயிரினத்தைச் சிறையிட்டுவைத்துப் பின்னர்க் கொல்பவர் முதலானோர் அந்தணரைக் கொன்ற பாவியரோடொப்பர் என்பது.

அற்றம் = தக்கசமயம். கோ = அரசன்—செற்றம் = பகை நீத்தல் = மறத்தல்.

[கலிவிருத்தம்]

8 பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடி வல்லன சொல்லிநீ
டுய்யன் மின்னுயிர் கொண்டு வாழ்நடஞ்
செய்யன் மின்சிறி யாரோ டுதியன்மின். 194

குறிப்புரை :

பொய்கூறல் முதலிய பாவங்களைச் செய்யாதீர் என்கின்றது

வடிவமல்லன = உண்மைக்கு மாறுனவன. நீடுய்யன்மின் நெடிது செலுத்தாதீர். சிறியார் = கயவர்.

9 மன்னன் மின்கள வாயின யாவையும்
கொள்ளன் மின்கொலை கூடி வருமறம்
எள்ளல் முன்னியர் என்றெண்ணி யாரையும்
நள்ளன் மின்பிற பெண்ணொடு நண்ணன்மின் 195

[வளையாபதி]

குறிப்புரை :

களவு முதலியவற்றைச் செய்யாதீர் என்கின்றது.

கள்ளன்மின் = களவுசெய்யாதீர். களவுப்பொருளை விலைக்குக் கொள்ளாதீர் எள்ளன்மின்—இகழ்ந்துரையாதீர் பிறபெண் = அயலான் மனைவி.

[அறுசீர் விருத்தம்]

10 குழற்சிகை மாலை சூட்டிக்
கொண்டவ னிருப்ப மற்றோர்
நிழற்றிகழ் வேலி னானை
நேடிய நெடுங்கண் ணாளும்
பிழைப்பிலாட் புறந்தந் தானும்
குரவரைப் பேணல் செய்யா
திழுக்கினார் இவர்கள் கண்டாய்
இடும்பைநோய்க் கிரைகளாவார் 196

**குறிப்புரை :**

கணவனிருப்ப அயலவனை நாடிய பெண்டிர் முதலானோர் இடும்பைநோய்க்கு இரையாவார் என்கின்றது.

குழற்சிகை = கூந்தல் முடிப்பு. கொண்டவன் = கணவன் நேடிய = நெருங்கிய பிழைப்பிலாள் = குற்றமற்ற மனைவி புறந்தந்தான் = உள்ளத்தே கொள்ளாது விட்டவன் குரவர் = தாய், தந்தை, அரசன், ஆசிரியன், முத்தோன் ஆகியோர். பேணல் = காத்தல். இடும்பை நோய் = தீராத நோய்.

11 நட்பிடைக் குய்யம் வைத்தான்
பிறர்மனை நலத்தைச் சேர்ந்தான்
கட்டழற் காமத் தீயிற்
கன்னியைக் கலக்கி னானும்
மட்டுயி ருடலந் தின்றான்
அமைச்சனாய் அரசு கொன்றான்
குட்டநோய் நரகந் தம்முள்
குளிப்பவ ரிவர்கள் கண்டாய் 197

**குறிப்புரை :**

நண்பரை வஞ்சித்தவர் முதலானோர் நரகத்துள் மூழ்குவர் என்கின்றது.

குய்யம் = வஞ்சனை—நலம் = பெண்மை. கன்னி = பருவமெய்தாத இளையோள் மட்டு = தேன்—உடம்பு = புலால் கொன்றான் = வஞ்சித்து அழித்தவன்.

12 கொல்வதே கன்றி நின்றார்
கொடியவர் கடிய நீரார்
இல்லையே இம்மை யல்லால்
உம்மையும் உயிருமென்பார்
அல்லதுந் தவமு மில்லை
தானமும் இழவென் பாரும்
செல்பவந் நரகந் தன்னுள்
தீவினைத் தேர்களூர்ந்தே. 198

**குறிப்புரை :**

கொலைபுரியும் நெஞ்சினர் முதலானோர் தீவினை என்னும் தேர் ஊர்ந்து நரகஞ் சேர்வர் என்கின்றது.

கன்றி முற்றி. கடியநீரார் = கடுங்குணமுடையோர் இல்லையே உம்மையும் உயிரும் = மேலுலகமும், ஆன்மா வாகிய உயிரும் இல்லை என்பாரும். இழவு = வீண்செயல் என்பாரும்.

[கலிவிருத்தம்]

13 மல்லல் மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப் பகுத்துண்ணாப் பாவிகளும்
அல்குல் விலைபகரும் ஆய்தொடிய ராதியார்
வில்பொருதோள் மன்னா விலங்காய்ப் பிறப்பவே 199

**குறிப்புரை :**

தவஞானியரைப் பழிப்போர் முதலானோர் வரும்பிறப்பில் விலங் காகப் பிறப்பார் என்கின்றது.

மல்லல் = வளம் வைதல் = பழித்துரைத்தல். ஆய்தொடியர் ஈண்டுப் பரத்தையர்.

[அறுசீர் விருத்தம்]

14 ஒழுக்கமே யன்றித் தங்கள்
உள்ளுணர் வழிக்கும் மட்டும்
புழுப்பயில் தேனு மன்றிப்
பிறவற்றின் புண்ணும் மாந்தி

**விழுப்பயன் இழக்கும் மாந்தர்**
**வெறுவிலங் கென்று, மிக்கார்**
**பழித்தன ஒழித்தல் சீலம்**
**பார்மிசை யவர்கட் கென்றான்** 200

[சீவக சிந்தாமணி]

**குறிப்புரை :**

ஒழுக்கமில்லாதவரைச் சான்றோர் வெறும் விலங்கென்று கூறுவர் என்கின்றது.

மட்டு = கள். புழு = தேனீக்கள். புண் = புலால்.

[கொச்சகக் கலிப்பா]

15 **வாயுவினை நோக்கியுள மாண்டவய நாவாய்**
**ஆயுவினை நோக்கியுள வாழ்க்கையது வேபோல்**
**தீயவினை நோக்குமியல் சிந்தனையு மில்லாத்**
**தூயவனை நோக்கியுள துப்புரவு மெல்லாம்** 201

[குண்டலகேசி]

**குறிப்புரை :**

இன்பந்தரும் செல்வமெல்லாம் நல்லோரை நாடித்தாமேவரும் என்பது.

வாயு = காற்று நாவாய் = கப்பல் ஆயு = அகவை—ஆயுள். சிந்தனை = எண்ணுதல்.

## அதிகாரம் - 22

# தானம்

தானமாவது : அறநெறியாலீட்டிய பொருளைத் தக்கார்க்கும் பொதுநலத்திற்கும் உவந்தளித்தல்.

[நேரிசை வெண்பா]

1 அச்சமே யாயுங்கால் நன்மை யறத்தொடு
கச்சமில் கைம்மா றருளைந்தான் — மெச்சிய
தோகை மயிலன்ன சாயலாய் தூற்றுங்கால்
ஈகை வகையி னியல்பு. 202

**குறிப்புரை:**

ஒருவர் தானம் செய்வதற்குக் காரணம் ஐந்து வகையுள் அடங்கும் என்கின்றது. அவை அச்சம், நன்மை அறம் கைம்மாறு அருள்.

கச்சம் = குறை, தூற்றுங்கால் = சொல்லுமிடத்து.

2 கைம்மாறும் அச்சமும் காணின் பயமின்மை
பொய்ம்மாறு நன்மை சிறுபயம் — மெய்ம்மாறு
அருள்கூடி யாரறத்தோ டைந்தியைந் தீயின்
பொருள்கோடி எய்தல் புகன்று. 203

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

தானம் செய்தற்குரிய காரணம் ஐந்தனுள் கைம்மாறும் அச்சமும் பயனில்லாதவை. நன்மை சிறிது பயனுடையது. அறமும் அருளும் சிறப்புடையவை என்கின்றது.

மெய்ம்மாறு = உண்மையாக. புகன்று = விரும்பி.

[இன்னிசை வெண்பா]

3 பயன்நோக்கா தாற்றவும் பாத்தறி வொன்றின்றி
இசை நோக்கி யீகின்றார் ஈகை — வயமாப்போல்
ஆலித்துப் பாயும் அலைகடற் றண்சேர்ப்ப
கூலிக்குச் செய்துண்ணு மாறு. 204

[பழமொழி]

**குறிப்புரை :**

புகழ் முதலியவற்றைக் கருதிச்செய்யும் ஈகை கூலிக்குத் தொழில் செய்து உண்பதை ஒக்குமென்பது.

ஆற்றவும் = மிகவும். இசை = புகழ். ஆலித்து = ஆரவாரித்து

[நேரிசை வெண்பா]

4 இறப்பச் சிறிதென்ன தில்லென்ன தென்றும்
அறப்பயன் யார்மாட்டும் செய்க — முறைப்புதவின்
ஐயம் புகூஉந் தவசி கடிஞைபோற்
பைய நிறைந்துவிடும். 205

**குறிப்புரை :**

இறப்ப = மிக; அறப்பயன் = அறச்செயல்; புதவு = கதவு; ஐயம் = பிச்சை ஏற்றல்; புகூஉம் சென்று ஏற்கும்; கடிஞை = பாத்திரம்; பைய = மெள்ள.

5 இம்மி யரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இசைவ கொடுத்துண்மின் — நும்மை
கொடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்
தடாஅ வகுப்பி னவர். 206

**குறிப்புரை :**

இயன்றவரை இம்மியளவாயினும் ஈதலைச் செய்க என்பது.

இம்மி = சிறிய அளவு. இசைவ = பொருந்துவன

அடா அவகுப்பினவர் = அழியாத சால்புடையோர்.

6 உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்கு — அறப்பயன்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்துவிடும். 207

[நாலடியார்]

**குறிப்புரை :**

ஈயும் பொருள் சிறிதாக இருப்பினும் பெறுவோரது தகுதியால் பேரளவினதாகத் திகழும் என்பது.

இறப்ப = மிகுதியாக. ஆலம்வித்து = ஆலமரத்துவிதை வான்சிறிதா = வானமும் சிறிதென்னும்படி.

[இன்னிசை வெண்பா]

**7 இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக**
**வன்சொற் களைகட்டு வாய்மை எருவட்டி**
**அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈன்றதோர்**
**பைங்கூழ் சிறுகாலைச் செய்.** 208

**குறிப்புரை :**

ஈகையை உழவாக உருவகப்படுத்திக் கூறுகின்றது.

களைகட்டு = களையாக நீக்கி. பைங்கூழ் = உணவுப்பொருள் நெல் முதலியனவாம். சிறுகாலை = உரிய காலத்தே.

[நேரிசை வெண்பா]

**8 ஈவாரின் இல்லை யுலோபி யுலகத்துள்**
**தீயாருங் கொள்ளாத வாறெண்ணி — மேவாது**
**மற்றுடம்பு கொள்ளும் பொழுதும் தமதுடைமை**
**பற்று விடுதலிலர்.** 209

**குறிப்புரை :**

களவுபோகாமல் அடுத்த பிறவியில் நமக்கே பயன்பட வேண்டும் என்னும் கருத்தினராதலின் ஈவாரைப் போல உலோபி இல்லை எனப் பழிப்பது போல ஈகை உடையாரைப் புகழ்ந்து பேசுகிறது.

தீயார் = கள்வர் மற்றுடம்பு = மறுபிறப்பு. உடைமை = செல்வம்

[இன்னிசை வெண்பா]

9 பரப்புநீர் வையத்துப் பல்லுயிர்கட் கெல்லாம்
இரப்பவரின் வள்ளல்க ளில்லை — இரப்பவர்
இம்மைப் புகழும் இனிச்செல் கதிப்பயனும்
கொண்மின் எனக் கொடுத்தலான். 210

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

ஈவாருக்கு இம்மைப் புகழும் மறுமைப் பயனும் ஒருசேரக் கொடுத்தலான் இரப்பவரைப் போல வள்ளல்கள் வேறு யாரும் இல்லை எனக் குறிப்பால் ஈகையுடையாரைப் புகழ்கின்றது. பரப்புநீர் = கடல்; இரப்பவரின் = இரப்பவரைக் காட்டிலும் இனி செல்கதிப் பயன் = மறுமைப் பேறு.

[கலி விருத்தம்]

10 துற்றுள வாகத் தொகுத்து விரல்வைத்த
தெற்றுக்கஃ தென்னின் இதுவதன் காரணம்
அற்றமில் தானம் எனைப்பல வாயினும்
துற்றவி ழொவ்வாத் துணிவென்னு மாறே. 211

[வளையாபதி]

எல்லாத் தானத்திலும் அன்னதானம் மிகச் சிறந்தது என்பது. துற்று = சோற்றுத்திரளை. விரல் வைத்தது = கையிலேந்திப் பிறர் காண ஈவது அற்றம் = குற்றம் துற்றவிழ் = உண்ணும் சோற்றினை ஒவ்வா = பிற தானங்கள் ஒவ்வா.

[கலி விருத்தம்]

11 கடைநின் றிரந்தவர் கண்கண் டிரங்கி
உடையதம் ஆற்றலின் உண்டி கொடுத்தோர்
படைகெழு தானைய பல்களி யானைக்
குடைகெழு வேந்தர்கள் ஆகுவர் கோவே. 212

[சூளாமணி]

இப்பிறப்பில் அன்னதானம் செய்பவர் மறுப்பில்வேந்தர்களாகத் திகழ்வார் என்பது.

கடை = மனைவாயில் கண்கண்டு = துன்பத்தைப் பார்த்து
தானை = படை.

### அதிகாரம்—23

### ஈகை

ஈகையாவது கைம்மாறு கருதாது வறியவர்க்காவன வெல்லாம் வழங்குதல்.

[நேரிசை வெண்பா]

**1 இரப்பவர்க் கீயக் குறைபடு மென்றெண்ணிக்
கரப்பவர் கண்டறியார் கொல்லோ — பரப்பிற்
றுறைத்தோணி நின்றுலாந் தூங்குநீர்ச் சேர்ப்ப
இறைத்தோறு மூறுங் கிணறு. 213**

**குறிப்புரை :**

இறைக்குந்தொறும் கிணறுநீர் ஊறுவதுபோல ஈயுந்தொறும் செல்வம் குறையாது பெருகும் என்பது.

கரப்பவர் = ஈயாது மறைப்பவர் பரப்பு = கடல்
தூங்குநீர் = ஒலித்தெழும் கடல் நீர்
இறைத்தொறும் = இறைக்குந்தொறும்.

[இன்னிசை வெண்பா]

**2 கரப்புடையார் வைத்தக் கடையு முதவா
துரப்புடைய மன்னர்க்கே துப்புரவு அஃதல்லால்
நிரப்பிடும்பை மிக்கார்க் குதவாவொன் றீதல்
சுரத்திடைத் தீரப் பெயல். 214**

**குறிப்புரை :**

பொருளைப் புதைத்து வையாமல் வறியார்க்குக் கொடுத்துப் பயன் பெறுக என்பது.

வைத்த = புதைத்து வைத்த பொருள் கடையும் = தான் சாமளவும். துப்புரவதல்லால் = துப்புரவு ஆதலல்லால் = அரசனுக்குரிய பொருளாக ஆவதன்றி = சுரத்திடைச் பெய்தபெயல் வெடித்துக் காய்ந்த நிலத்தில் பெய்தமழையை ஒக்கும்.

3 **அடுத்தொன் றிரந்தார்க்கொன் றீந்தானைக் கொண்டான்**
**படுத்தேழை யாமென்று போகினும் போக**
**அடுத்தேற லைம்பாலாய் யாவர்க்கே யாயினும்**
**கொடுத்தேழை யாயினா ரில்.** 215

**குறிப்புரை :**

வறியார்க்கு வழங்கினமையால் ஏழையானார் இல்லை என்பது.

கொண்டான் = ஈயாது பொருளை வைத்திருப்பவன். ஈவானைப் பார்த்து இவன் ஏழையாவான் என்று பழித்துச் சொல்லினும் சொல்க. அடுத்து ஏறு அல் ஐம்பாலாய் = நெருங்கித் தழைத்த இருள் போலும் கூந்தலையுடையாய்.

*[நேரிசை வெண்பா]*

4 **முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்**
**தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும் — சொல்லின்**
**நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப**
**அறிமடமுஞ் சான்றோர்க் கணி.** 216

**குறிப்புரை :**

ஈதலின்கண் அறியாமையுடையராயிருத்தலும் வள்ளல்களுக்கு அணிகலன் போன்ற சிறப்பைத் தருவதாகும் என்பது.

முல்லைக்குத் தேர் அளித்தவன் பாரி. மயிலுக்குப் போர்வை வழங்கியவன் பேகன். அறிமடம் = அறிந்தும் அறியாதவரைப் போலச் செயல் புரிதல். அணி = அழகு.

5 இரவலர் தம் வரிசை என்பார் மடவார்
கரவலராய்க் கைவண்மை பூண்ட — புரவலர்
சீர்வரைய வாகுமாம் செய்கை சிறந்தனைத்தும்
நீர்வரைய வாம்நீர் மலர். 217

[பழமொழி]

**குறிப்புரை :**

இரப்போருடைய தகுதியை நோக்காமல் ஈவோர்தம் தகுதியைக் கருதி வழங்க வேண்டும் என்பது.

இரவலர் = இரப்பவர். வரிசை = தகுதி.
மடவார் = அறிவில்லாதார். புரவலர் = ஈவோர்.
சீர்வரைய = தம்முடைய சிறப்பின அளவாக.
நீர்வரை = நீரின் அளவு.

6 பெயற்பால் மழைபெய்யாக் கண்ணும் உலகம்
செயற்பால செய்யாவிடினும் — கயற்புலால்
புன்னை கடியும் பொருகடற்றண் சேர்ப்ப
என்னை உலகுய்யு மாறு. 218

**குறிப்புரை :**

உடையவர் வழங்காதுவிடின் உலகம் மடிந்துவிடும் என்பது.
பெயற்பால் மழை = பெய்யும் தன்மையுடைய மழை
உலகம் = உயர்ந்தோர் செயற்பால = செய்யத்தகும் அறச் செயல்கள் என்னை = எவ்வாறு.

7 ஏற்றகை மாற்றாமை என்னானும் தாம்வரையா
தாற்றாதார்க் கீவதாம் ஆண்கடன் — ஆற்றின்
மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல்
பொலிகடன் என்னும் பெயர்த்து. 219

**குறிப்புரை :**

கைம்மாறு செய்யும் வாய்ப்புடையவயர்க்குத் தருதல் ஈகையாகாது அது வட்டியொடு பெறும் கடனாகும் என்பது.

மாற்றாமை = மறுக்காமல் ஆற்றாதார் = திரும்பச் செய்வதற்கு இயலாதவர். மாறீவார் = கைம்மாறு செய்பவர்,

8 இல்லா விடத்தும் இயைந்த அளவினால்
உள்ள விடம்போற் பெரிதுவந்து — மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்
கடையாவாம் ஆண்டைக் கதவு. 220

**குறிப்புரை :**

பொருள் சுருங்கிய காலத்தும் மிக்கிருந்த காலத்தைப் போல உவந்து ஈதலைச் செய்வார் தேவரால் வரவேற்கப்படுவார் என்பது.

இல்லா இடம் = பொருள் சுருங்கிய காலம்
ஆண்டைக்கதவு = சுவர்க்கமாகிய வீட்டின் வாயில்
அடையா = மூடப்படாமல் திறந்திருக்கும்.

[இன்னிசை வெண்பா]

9 நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந்துடையார்
கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால். 221

**குறிப்புரை :**

வறுமையுற்றாரது துன்பத்தைத் துடைக்காமல் செல்வத்தை வலிதாகப்பற்றியிருப்பினும் நல்வினை தீர்ந்தபோது அது தானே அழிந்துவிடும் என்பது.

தற்சேர்ந்தார் = தன்னிடம் வந்து இரந்தார்.
ஈண்டுங்கால் = நல்வினையால் பொருள் பெருகுங்கால்.
ஈண்டும் = பெருகும். மிடுக்குற்று = வலிந்து.
உலந்தக்கால் = வற்றியபொழுது.

10 நடுவூருள் வேதிகை சுற்றுக்கோள் புக்க
படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்
குடிகொழுத்தக் கண்ணும் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றைப் பனை. 222

[நாலடியார்]

குறிப்புரை :

ஈவாரை உலகம் புகழ்ந்து போற்றும். கரப்பாரை இகழும் என்பது.

வேதிகை = பெருமன்றம். நச்ச = விரும்பிப் போற்ற
கொழுத்தக்கண்ணும் = வளம் முற்றிய காலத்தும்.
ஏற்றைப்பனை = காயாத ஆண் பனைமரம்,

[பஃறொடை வெண்பா]

11 நூற்றுவரிற் றோன்றும் தறுகண்ணன். ஆயிரவர்
ஆற்றுளித் தொக்க அவையகத்து மாற்றமொன்
றுற்றக் கொடுக்கும் மகன் றோன்றும், தேற்றப்
பாப்புநீர் வையகம் தேரினும் இல்லை
இரப்பாரை எள்ளா மகன். 223

[தகடூர் யாத்திரை]

குறிப்புரை :

இரப்பவரை இகழாது வழங்கும் பண்புடையோர் உலகத்து அரியராக இருப்பார் என்பது.

தறுகண்ணர் = வீரர். மாற்றம் = வினாவினர்க்கு விடை
தேற்ற = தெளிவாக. தேரினும் = ஆராய்ந்து பார்த்தாலும்.
எள்ளா மகன் = பழியாது வழங்கும் வள்ளன்மையுடையோன்.

[நேரிசை வெண்பா]

12 மின்னும் தமனியமும் வெற்றிரும்பும் ஓரினமாய்ப்
பொன்னின் பெயர் படைத்தாற் போல்வதே —
கொன்னே
ஒளிப்பாரும் மக்களாய் ஒல்லுவ தாங்கே
அளிப்பாரும் மக்களா மாறு. 224

[பெரும்பொருள் விளக்கம்]

குறிப்புரை :

ஈகையுடையோரே மக்களெனப்படுவார். அல்லாதாரையும் மக்கள் என்பது இரும்பைக் கரும்''பொன்'' என்று வழங்குதல் போல்வதாகும்.

தமனியம் = பொன். கொன்னே = வீணே.
ஒல்லுவது = இயன்ற பொருள்.

[கலிவிருத்தம்]

13 மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர் கண் மாயா
தேந்திய கைக்கொ டிருந்தவர்யாரோ
வீந்தவர் என்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தனர் யாரே. 225

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

பிறந்தவர் யாவரும் மறைபவரே யாயினும் ஈகைக் குணத் தவர்கள் மறைந்தாலும் அவர் வாழ்ந்திருப்பவரேயாவார் என்பது.

[ஆசிரியப்பா]

14 தெண் கடல் வளாகம் பொதுமையின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி உடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லாம் ஓரொக் கும்மே
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே. 226

[புறநானூறு]

**குறிப்புரை:**

எய்திய செல்வத்தின் பயன் ஈதலாம். தாமே துய்ப்போம் என எண்ணுதல் பல்வேறு இன்பங்களை இழத்தற்கு ஏதுவாகும் என்பது.

வளாகம் = உலகம். கல்லா ஒருவன் = வேடன்.
பிற — பிற பொருளும் செயலும். இது நக்கீரர் பாடிய பொருள் மொழிக் காஞ்சிப்பாடல்.

## அதிகாரம் - 24

## ஈயாமை

ஈயாமையாவது : வறுமையுற்றுத் தன்னிடத்து வந்து இரந்து நிற்பவர்க்குச் செல்வமுடையான் ஈதலைச் செய்யாது இவறுதல்.

[நேரிசை வெண்பா]

1 நாவின் இரந்தார் குறையறிந்தும் தாமுடைய
மாவினை மாணப் பொதிகிற்பார் — தீவினை
அஞ்சிலென் அஞ்சா விடிலென் குருட்டுக்கண்
துஞ்சிலென் துஞ்சாக்கா லென். 227

**குறிப்புரை :**

ஈயாதவர் கண்ணிருந்தும் குருடராயினுர் போல ஆவர் என்பது.
மாவினை - செல்வத்தை.

பொதிகிற்பார் = புதைத்து வைப்பவர்.

[இன்னிசை வெண்பா]

2 மாய்வதன் முன்னே வகைப்பட்ட வல்வினையை
ஆய்வின்றிச் செய்யாதான் பின்னை வழிநினைந்து
நோய்காண் பொழுதின் அறஞ்செய்வார் காணுமை
நாய்காணின் கற்காணு வாறு. 228

**குறிப்புரை :**

நன்னிலையிலிருக்குங்கால் அறஞ் செய்யாதவன் செயலிழந்த பின் அறஞ்செய்ய எண்ணின் பயனில்லை என்பது.

மாய்வதன்முன் = நோயால் செயலறுவதற்கு முன்பு.

வல்வினையை = தனக்கு வலிமை பயக்கும் ஈகையை.

அறஞ்செய்வார் = அறத்தைப் பெற்றுக்கொள்ளும் வறியவர்.

3 தம்மால் முடிவதனைத் தாம் ஆற்றிச் செய்கலார்
பின்னை ஒருவராற் செய்வித்தும் என்றிருத்தல்
சென்னீர் அருவி மலைநாட பாய்பவோ
வெந்நீரும் ஆடாதார் தீ. 229

**குறிப்புரை :**

வெந்நீரில் முழுகுதலை அஞ்சியவர் தீயிற் குளிப்பாரோ-குளியார் அவ்வாறே தம்மால் இயன்ற ஈகையைச் செய்யாதவர் பிறராற் செய்விப்போம் என்பதுமாம்.

செய்வித்தும் - செய்விப்போம். பாய்பவோ = மூழ்குவரோ ஆடாதார் - குளியாதவர்.

4 அடையப் பயின்றவர் சொல் ஆற்றுவராக் கேட்டால்
உடையதொன் றில்லாமை ஒட்டின் — படைவென்று
அடைய அமர்த்தகண் ஆயிழாய் அஃதால்
இடையன் எறிந்த மரம். 230

**குறிப்புரை :**

நெருங்கிப் பழகியவரிடம் இயலாத ஒன்றை செய்திடுவதாகக் கூறுதல் இடையர் தழை கொய்வதற்காக ஒடித்துவிட்ட மரம் போல்வதாகும். பட்டுப்போதலுமின்றித் தழைத்தலுமின்றி மரம் நாள்தோறும் வாடுதல் போலப் பழகியவர் பயன்பெறுதலுமின்றிப் பிறரை நாடுதலுமின்றி வருந்துவார் என்பது.

உடையதொன்று இல்லாமை இல்லாத உடைமையை.
ஒட்டின் = தருவதாகக் கூறின்.
எறிந்த = (முழுதும் வெட்டாமல்) முரித்துவிட்ட.

5 பெற்றாலும் செல்வம் பிறர்க்கீயார் தாந்துவ்வார்
கற்றாரும் பற்றி இறுகுபவால் — கற்றா
வரம்பிடைப் பூமேயும் வண்புனல் ஊர
மரங் குறைப்ப மண்ணா மயிர். 231

**குறிப்புரை :**

அறநூல்களைக் கற்றோர் ஈயாது செல்வத்தை இறுகப்பற்றி யிருத்தல் தகாதென்பது.

துவ்வார் = உண்ணார். இறுகும் = இறுகப் பற்றிக்கொள்வார். கற்று = கன்றினையுடைய பசு. வரம்பு = வயல்வரப்பு மரங்குறைப்ப = மரத்தை வெட்டிக் கழிக்கும் வாள் முதலிய கருவிகள். மயிர்மண்ணு = மயிரைக் கழிப்பதற்குதவாவாம்.

[இன்னிசை வெண்பா]

6 **இசைவ கொடுப்பதூஉம் இல்லென் பதூஉம்**
**வசையன்று வையத் திற்கைய ஃதன்றிப்**
**பசைகொண்ட வன்னிற்கப் பாத்துண்ணு னாயின்**
**நசைகொன்றான் செல்லுலகம் இல்.** 232

[பழமொழி]

**குறிப்புரை :**

பசியுடையவன் முன்னிருக்க அவனுக்குப் பகுந்து கொடாது தானே உண்பவன். பற்றற்றான் எய்தும் சுவர்க்க உலகத் திற்குச் செல்லுதலில்லை. நரகம் புகுவான் என்பது கருத்து.

இசைவ = தம்மாலியன்ற பொருள். வசை = குற்றம். பசை = விருப்பம். நசை கொன்றான் = அவாவை நீக்கிய மெய்யறிவாளன். உலகம் = சுவர்க்க உலகம்.

7 **துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்**
**வைத்துக் கழியும் மடவோனை — வைத்த**
**பொருளும் அவனை நகுமே உலகத்து**
**அருளும் அவனை நகும்.** 233

**குறிப்புரை :**

தானும் பயனுறாமல் பிறர்க்கும் ஈயாமல் உள்ளவன் தான்தேடிய பொருளும் அவனை இகழும். உலகமும் பழிக்கும் என்பது.

வைத்த = ஈட்டிப் பொதிந்துவைத்த. அருள் = அருளுடைய மேலோர். நகும் = இகழ்ந்துரைக்கும்.

8 எனதென தென்றிருக்கும் ஏழை பொருளை
எனதென தென்றிருப்பன் யானும் — தனதாயின்
தானும் அதனை வழங்கான் பயன்துவ்வான்
யானும் அதனை அது. 234

**குறிப்புரை :**

ஈயாத செல்வனும் வறியனும் ஒரு நிகரே யாவர் என்பது யானும்வறியனுகிய யானும்.

அதனை — அச் செல்வத்தை. அது = வழங்கலும் துய்தலுமாகிய அப்பயன்,

9 வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார்
இழந்தார் எனப்படுதல் உய்ந்தார் — உழந்ததனைக்
காப்புயர்ந்தார் கல்லுதலும் உய்ந்தார் கைந்நோவ
யாப்புய்ந்தார் உய்ந்த பல. 235

**குறிப்புரை :**

ஈயாத செல்வரைக் காட்டிலும் வறியர் உயர்ந்தோர் (எவ்வாறு எனின்) காத்தல் முதலிய துன்பங்களில்லையாதலான்.

நல்கூர்ந்தார் = வறியவர். உழந்து = துன்புற்று.

புதைத்ததைத் தேடித் தோண்டி வருந்துதல்.

10 இசையா ஒரு பொருள் இல்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத்தியற்கை — நசையழுங்க
நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரின் குற்றம் உடைத்து. 236

[நாலடியார்]

**குறிப்புரை :**

இரந்தவன் அவாவினல் வருந்த ஈவதாகப் பொய்கூறி இடர்ப் படுத்தல் நன்றி கொன்ற பாவத்தினை ஒக்கும் என்பது.

நின்றோடிக் = காலத்தை நீட்டித்து. பொய்த்தல் = ஈயாது விடுதல்,

[கலித்துறை]

11 மாசித் திங்கள் மாசின சின்னத் துணிமுள்ளின்
ஊசித்துன்ன மூசிய வாடை யுடையாகப்
பேசிப் பாவாய் பிச்சையெ னக்கை யகலேந்திக்
கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார். 237
[சீவக சிந்தாமணி]

**குறிப்புரை :**

முற்பிறப்பில் ஈதலைச் செய்யாதார் குளிர்காலத்தில் தைத்த அழுக்குடைய உடையை யணிந்து தெருவுதொறும் இரந்துண்டு திரிபவராவர் என்பது.

மாசித் திங்கள் = மாசி மாதம். மாசின = அழுக்குடைய.
துணி முள்ளின் = சிறிய முள்ளினால். ஊசிய = தைத்த.
அகல் = ஓட்டுப் பாத்திரம்.

**அதிகாரம்—25**

## புகழ்

புகழாவது : நற்குண நற்செயல்களான் ஒருவரை உலகத்தார் பாராட்டிட நின்று நிலவும் சீர்த்தி.

[நேரிசை வெண்பா]

1 ஏற்றூர்கட் கெல்லாம் இசைநிற்ப தாமுடைய
மாற்றூர் கொடுத்திருப்ப வள்ளன்மை — மாற்றூரை
மண்பற்றிக் கொள்கிற்கும் ஆற்றலார்க் கென்னரிதாம்
பெண்பெற்றான் அஞ்சான் இழவு. 238
[பழமொழி]

**குறிப்புரை :**

பெண்ணைப் பெற்றவன் பிறர்க்கு மணஞ்செய்து கொடுக்கும் கடமையுடையவனாதலின் அவளை இழப்பதற்கு அச்சப்படான். அவ்வாறே பகைவர் நாட்டை வென்று செல்வத்தைப்பெருக்கும் ஆற்றலுடையார் அப்பொருளை வள்ளன்மை செய்தல் அரிதாகாது ஏற்றூர்க்கெல்லாம் ஈந்து புகழடைவர் என்பது. ஆற்றலுடையார் ஈகையாற் பொருளிழப்பதற்கு அஞ்சுவதில்லை என்பது கருத்து.

கொடுத்திருப்ப = திறையாகக் கொடுத்துள்ள பொருளை.
ஆற்றலார்க்கு வள்ளன்மை என்னரிதாம் என முடித்துக்கொள்க

[இன்னிசை வெண்பா]

2 மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும் மாசில்சீர்ப்
பெண்ணினுள் கற்புடையாட் பெற்றானும் உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா உடம்பெய்தி னார். 239

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

புகழை நாட்டியவனும் கற்புடையாளை மணந்தவனும் உண்ணும் நீர்நிலைகளை அமைத்தவனும் சாவதில்லை.

நடுதல் = நிலைபெறச் செய்தல்   பெற்றான் = மணந்தவன்
கூவல் = பெருங்கிணறு   தொட்டான் = தோண்டியமைத்தவன்
சாவாவுடம்பு = புகழுடம்பு.

3 கடிப்பிகு கண்முரசங் காதத்தோர் கேட்பர்
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்
அடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படுஞ் சொல். 240

[நாலடியார்]

**குறிப்புரை :**

கொடையினால் தோன்றும் புகழ்மொழி மூன்றுலகத்திலும் பரவும் என்பது.

கடிப்பு = முரசு கொட்டும் கோல்   காதம் = காத தூரம்
யோசனை = பத்துக் காத தூரம்   அடுக்கிய = கீழ் உலகம், இடையுலகம், மேலுலகம் என அடுக்காகி நின்ற.

[அறுசீர் விருத்தம்]

4 ஒருவனை திரண்டி யாக்கை
ஊன்பொதி நரம்பு போர்த்த
உருவமும் புகழு மென்றாங்
கவற்றினுள் ஊழின் வந்து
மருவிய யாக்கை யீங்கே
மாய்ந்துபோம் மற்றை யாக்கை
திருவமர்ந் துலக மேத்தச்
சிறந்துபின் னிற்கு மன்றே. 241

[சீவக சிந்தாமணி]

குறிப்புரை :

ஊனுடம்பு அழியும் புகழுடம்பு அழியாது தேவர்கள் போற்ற நின்று நிலவும் என்கின்றது.

இரண்டு யாக்கை = ஊனுடம்பு, புகழுடம்பு ஊழ் = பழவினை

அதிகாரம்—26

## அருளுடைமை

அருளுடைமையாவது, எல்லா உயிர்களிடத்தும் கைம்மாறு கருதாது அன்பு செலுத்தி அவற்றிற்கு வரும் இடையூறுகளைக் களையும் தண்ணளியுடைமை.

[இன்னிசை வெண்பா]

1 அற்றாக நோக்கி அறத்திற் கருளுடைமை
முற்ற அறிந்தார் முதலறிந்தார்—தெற்ற
முதல்விட் டஃதொழிந்தார் ஓம்பா ஒழுக்கம்
முயல்விட்டுக் காக்கை தினல். 242

**குறிப்புரை :**

அருளொடு கூட்டிச் செய்வதே அறம்.

அற்ருக = அத்தன்மையதாக (அறமும் அருளும் ஒரு தன்மைய என்பது) முதல்— அடிப்படை முதல்விட்டஃதொழிந்தார் = அருளை விட்டுவிட்டு அறத்தின் பயனை இழந்தவர்.

ஓம்பா ஒழுக்கம் = அடிப்படையைக் காவாத அறச்செயல்கள் —ஒரு விலங்கு முயலை விட்டுவிட்டுக் காக்கையைத் தின்னல் போல்வதாகும்.

[நேரிசை வெண்பா]

2 **சிறந்து நுகர்ந்தொழுகும் செல்வம் உடையார்**
**அறஞ்செய் தருளுடையா ராதல்—பிறங்கல்**
**அமையொடு வேய்கலாம் வெற்ப அதுவே**
**சுமையொடு மேல்வைப்பா மாறு.** 243

[பழமொழி]

**குறிப்புரை:**

செல்வமுடையார் தாம் அதனை நுகர்தலோடு அறஞ்செய்து அருளும் உடையாராதல் சுமையொடு அதன்மேல் செல்வத்தை வைத்தல் போல்வதாகும்.

தலைப்பாகை சுமையாயினும் அது அணிகலனாகச் சிறப்புச் செய்யும் அதுபோல என்பது கருத்து.

3 **பொருளுடையான் கண்ணதே போகம், அறனும்**
**அருளுடையான் கண்ணதே யாகும்—அருளுடையான்**
**செய்யான் பழிபாவம் சேரான் புறமொழியும்**
**உய்யான் பிறர்செவிக் குய்த்து.** 244

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

அருளுடையான் பழிவாமும் புறங்கூறுதலும் செய்யான் என்பது உய்யான் = செலுத்தான்.

4 தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நரகத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன். 245

[நாலடியார்]

**குறிப்புரை :**

பேரருளுடையார் தமக்குத் தீங்கிழைத்தார் மாட்டும் இரக்கங் கொள்வார் என்பது.

உம்மை = மேலுலகம் பரிவதூஉம் = வருந்துவதும்.

[இன்னிசை வெண்பா]

5 வைததனான் ஆகும் வசை, வணக்கம் நன்றாகச்
செய்ததனான் ஆகும் செழுங்குலம்—முன்செய்த
பொருளினா னாகுமாம் யோகம் நெகிழ்ந்த
அருளினான் ஆகும் அறம். 246

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

அறம் அருள் காரணமாக வரும் என்பது.

வசை = தீய சொற்கள் குலம் = உயர்குலப் பிறப்பு
நெகிழ்ந்த = மனங்கசிந்த.

6 தன்னொக்கும் தெய்வம் பிறிதில்லைத் தான்றன்னைப்
பின்னை மனமறப் பெற்றானேல் - என்னை
எழுத்தெண்ணே நோக்கி இருமையுங் கண்டாங்
கருட்கண்ணே நிற்ப தறிவு. 247

[அறநெறிச் சாரம்]

குறிப்புரை :

கல்வியுடையார்க்கு அறிவு அருளுடைமை என்பதாம்.

மனம்அற மனம் முழுதும் இருமை = இம்மையும் மறுமையும்

7 மெய்தகளி யாகப் பொறையாந் திரிக்கொளீஇ
நெய்தவ மாக நிறைதரப்—பெய்தாங்
அருளாம் விளக்கேற்றி யம்மைப்பாற் செல்ல
இருள்போய் வெளியாய் விடும். 248

[பாரதம்]

குறிப்புரை :

அருளாகிய விளக்கை ஏற்றின் தீவினை இருள் நீங்கி ஞானம் ஒளிவிடும் என்கின்றது.

தகளி = அகல் கொளீஇ = கொளுவிட்டு வெளி = ஞானம்.

[அறுசீர் விருத்தம்]

8 அறவிய மனத்த ராகி
ஆருயிர்க் கருளைச் செய்யின்
பறவையும் நிழலும் போலப்
பழவினை உயிரோ டாடி
மறவியொன் றுனு மின்றி
மனத்ததே சுரக்கும் பால
கறவையிற் கறக்குந் தம்மாற்
காமுறப் பட்ட வெல்லாம் 249

குறிப்புரை :

அருளைச் செய்வார் தாம் விரும்பியவற்றையெல்லாம் அடைவார் என்பது.

அறவிய = அறத்தையுடைய மறவி = மறத்தல்
சுரக்கும்பால = தோன்றுவன கறவை = பசு
காமுறுப்பட்ட = விரும்பிய எல்லாம் = எல்லாப் பொருளும்.

[கலிவிருத்தம்]

9 தன்னுயிர் தாம்பரிந் தோம்பு மாறுபோல்
மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமேல்
இன்னுயிர் இறைவனாய் இன்ப மூர்த்தியாய்
பொன்னுயி ராப்பிறந் துயர்ந்து போகுமே. 250

[சிவக சிந்தாமணி]

**குறிப்புரை :**

தன்னுயியிர் போல மன்னுயிர்களை அருளாற் பாதுகாப்போர் பொன்னுலகத்துத் தேவராய் வாழ்வார் என்பது.

மூர்த்தி = தொழத்தக்க தெய்வம்.

10 ஆருயிர் ஆங்கொன் றிடறுறின் ஆங்கதற்
கோருயிர் போல உருகிஉயக் கொண்மின்
நேரி லதுமுடி யாதெனின் நெஞ்சகத்து
ஈர முடைமை அருளின் இயல்பே. 251

[சூளாமணி]

**குறிப்புரை :**

துன்புறும் ஒருயிரினைக் காக்க இயலாவிடினும் அதற்காக இரக்கமுற்று மனம் உருகுதலும் அருட்டன்மையே என்பது.

ஈரமுடைமை = இரக்கம் உடைமை.
அருளின் இயல்பே அருளின் இலக்கணமாகும்.

11 ஆற்று மின்னருள் ஆருயிர் மாட்டெலாம்
தூற்றும் இன்னல்தந் தோம்தனி துன்னன்மின்
மாற்று மின்சுழி மாயமும் மானமும்
போற்று மின்பொருளா விவை கொண்டுநீர். 252

குறிப்புரை :

ஆருயிர்கட்கெல்லாம் அருள் செய்விர். பாவமானவற்றைச் செய்யாதீர் என்கின்றது.

தூற்றுமின் - எடுத்துக்கூறுவீராக. தோம் = குற்றம்
துன்னன்மின் - சேராதீர். மாயம் - வஞ்சனை.

12 பொருளைப் பொருளாப் பொதிந்தோம்பல் செய்யா
தருளைப் பொருளா அறஞ்செய்தல் வேண்டும்
அருளைப் பொருளா அறஞ்செய்து வான்கண்
இருளில் இயல்பெய்தாத தென்றே நமர்காள். 253

[வளையாபதி]

குறிப்புரை :

பொருளைப் பொருளாக மதியாமல் அருளைப் பொருளாக எண்ணி அறஞ்செய்து வாழ்மின் என்கின்றது.

இருளில் இயல்பு = ஒளியுடைய தன்மை.
நமரங்காள் = சுற்றத்தீர்.

அதிகாரம் - 27

## புலான் மறுத்தல்

[நேரிசை வெண்பா]

1 கொன்றா னுகருங் கொடுமையை நெஞ்சுணர்ந்து
அன்றே யொழிய விடுவானேல் — என்றும்
இடுக்கண் எனவுண்டோ இல்வாழ்க்கை யுள்ளே
யடுத்தானுந் தன்னைத் தவம். 254

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

இல்வாழ்வென்னும் தவம் புரிவோர் ஊன் உண்ணுதலைச் செய்யார் என்பது.

நுகரும் = தின்னும். இடுக்கண் துன்பம்

2 **விடலரிய துப்புடைய வேட்கையை நீக்கிப்**
**படர்வரியநன்னெறிக்கண் நின்றார் இடருடைத்தாய்ப்**
**பெற்ற விடக்கு நுகர்தல் கடல்நீந்திக்**
**கற்றடியுள் ஆழ்ந்து விடல்.** 255

[பழமொழி]

**குறிப்புரை :**

துறவறத்தார் எக்காலத்தும் புலாலுண்ணல் ஆகாதென்பது.

துப்பு = வலிமை. வேட்கை = அவா.
நன்னெறி = துறவுநெறி. விடக்கு = புலால்.
கற்றடி = கன்றின் அடி. அது அவ்வளவுள்ள நீர்நிலையைக் குறித்து நின்றது. ஆழ்ந்து விடல் = மூழ்கிவிடுதலை ஒக்கும்.

[இன்னிசை வெண்பா]

3 **கரப்பவர்க்குச் செல்சார் கவிழ்தல் எஞ்ஞான்றும்**
**இரப்பவர்க்குச் செல்சார்ஒன் றீவோர் - பரப்பமைந்த**
**தானைக்குச் செல்சார் தறுகண்மை ஊனுண்டல்**
**செய்யாமை செல்சார் உயிர்க்கு.** 256

[நான்மணிக் கடிகை]

**குறிப்புரை :**

ஊன் உண்ணாமை நல்லுலகம் செல்லும் உயிர்க்குச் சார்பாகும் என்பது.

கரப்பவர் = ஈயாத லோபியர். பரப்பு = விரிவு.
தானை = படை. தறுகண்மை = அஞ்சாமை.

4 துக்கத்துள் தூங்கித் துறவின்கண் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலங்கெட்ட
புல்லறி வாளர் வயிறு. 257

**குறிப்புரை :**

புலால் உண்ட வயிறு விலங்கு-பறவையாகிய பிணங்களின் சுடுகாடு எனப்பழிக்கப்படும் என்பது.

பிணத்தை = பிணங்களையுடையவாகும்.
புல்லறிவாளர் = புலாலுண்ணும் தாழ்ந்த அறிவினர்.

5 அக்கே போலங்கை ஒழிய விரலழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கால்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால். 258

[நாலடியார்]

**குறிப்புரை :**

நண்டினைக் கால் முரித்துத் தின்பவர் மறுபிறப்பில் தொழுநோயராய்த் துன்புறுவர் என்கின்றது.

அக்கு = எலும்பு அலவனை = நண்டினை
பழவினை = முற்பிறப்பில் செய்த அத்தீவினை.

[நேரிசை வெண்பா]

6 வாயிற் சுவைவெஃகி மான்கொன்று மீன்கொன்று
நாயொத் துழல்வார்க்கு நாவளவே—போயொழிந்தால்
இன்னு தினிதென் றறியா ரிதற்காக
மன்னு வூன்றின்றல் வடு. 259

[பாரதம்]

**குறிப்புரை :**

நாவினதளவே சுவை அதற்காக மானையும் மீனையும் கொன்றுண்பது பெருங்குற்றமாகும் என்பது.

வெஃகி = விரும்பி. சுவை நாவளவே எனக் கூட்டிக்கொள்க. ஊன்றின்றல் = புலாலை உண்ணுதல். வடு = குற்றம்.

[கலி விருத்தம்]

7 தகாதுயிர் கொல்வானின் மிகாமை யிலைபாவம்
அவாவிலையில் உண்பான் புலால்பெருகல் வேண்டும்
புகாவலை விலங்காய்ப் பொருதுபிற ஊன்கொன்
றவாவிலையில் விற்பானும் ஆண்டதுவேவேண்டும் 260

**குறிப்புரை :**

உயிருடம்பைக் கொன்றுண்பாற்கும், விலை கொடுத்துப் பெற்று ஊன் உண்பாற்கும் பாவம் மேலும் மேலும் பெருகும் என்பது.

விலையில் = விலை கொடுத்துப் பெற்று வலை விலங்கு = வலை வீசிப் பிடித்த விலங்குகள் (மீனும் ஆம்) புகா = உணவு

8 பிறவிக் கடலகத் தாராய்ந் துணரிற்
றெறுவதிற் குற்ற மிலார்களு மில்லை
அறவகை யோரா விடக்கு மிசைவோர்
குறைவின்றித் தஞ்சுற்றந் தின்றன ராவர். 261

**குறிப்புரை :**

குற்றமில்லாதவர் உலகத்து யாருமில்லை எனினும் புலாலுண்பவர் தம் சுற்றத்தையே தின்பவராகின்றார் என்பது.

தெறுவதிற் குற்றம் = உயிரைக் கொன்ற குற்றம்
விடக்கு = புலால் மிசைவோர் = உண்போர்.

9 உயிர்க ளோம்புமின் ஊன்விழைந் துண்ணன்மின்
செயிர்கள் நீங்குமின் செற்ற மிகந்தொரீ இக்
கதிகண் நல்லுருக் கண்டனர் கைதொழு
மதிகள் போல மறுவிலர் தோன்றுவீர். 262

[வளையாபதி]

**குறிப்புரை :**

புலாலுண்ணுமல் உயிர்களை ஓம்புவார் வரும் பிறப்பின்கண் எல்லோரும் தொழ விளங்குவார் என்பது.

செற்றமிகந்தொரீ = சினத்தைக் கடிந்து நீக்கி.
செயிர் = தீயவினைகள் கதி = பிறப்பு.
மறுவிலிர் = குற்றமற்றவராவிர் தோன்றுவீர் = விளங்குவீர்

[அறுசீர் விருத்தம்]

10 ஊன்சுவைத் துடம்பு வீக்கி நரகத்தி லுறைதல் நன்றோ
ஊன்றினு துடம்பு வாட்டித் தேவராய் உறைதல் நன்றோ
ஊன் றியிவ்விரண்டி னுள்ளும் உறுதிநீ யுரைத்திடென்ன
ஊன்றினு தொழிந்து புத்தே ளாவதே யுறுதியென்ருன். 263

ஊன் தின்பார் நரகம் எய்துவர், தின்னுர் தேவராவர் என்பது.

வீக்கி = பெருக்கி உறைதல் = கிடத்தல்
புத்தேளிர் = தேவர்.

11 வெந்தடி தின்ற வெந்நோய் வேகத்தான் மீட்டுமாலைப்
பைந்தொடி மகளிராடும் பந்தென வெழுந்து பொங்கி
வந்துடைந்துருகிவீழ்ந்து மாழ்குபு கிடப்பர் கண்டாய்
கந்தடு வெகுளி வேகக் கடாமுகக் களிற்றுவேந்தே 264

[சீவகசிந்தாமணி]

ஊன் தின்பார் உடம்புருகி வீழ்ந்து மாய்வார் என்பது.

வெந்தடி = வெவ்விய புலால். மாழ்குபு = மாழ்கி
கந்து = தறி கடாம் = மதநீர்.

அதிகாரம் — 28

## தவம்

[இன்னிசை வெண்பா]

1 தத்தமக்குக் கொண்ட குறியோ தவமல்ல
செத்துக சாந்து படுக்க மனமொத்துச்
சமத்தனாய் நின்றொழுகும் சால்பு தவமே
நுகத்துப் பகலாணி போன்று. 265

[பழமொழி]

**குறிப்புரை :**

தவத்திற்குரிய வேடம் தவமாகாது. விருப்பு வெறுப்பின்றி நடுவுநிலையோடு ஒழுகும் சால்பே தவமாகும் என்பது.

குறி = வேடம் செத்துக = வாளால் வெட்டுக.

சாந்து படுக்க = சந்தனம் பூசுக

ஒத்து = இரண்டும் ஒன்றாகவே கொண்டு

சமத்தன் = சமநிலையுடையவனாய்

பகலாணி = நடுவில் அமைந்த ஆணி. சால்பு = அமைதி

[நேரிசை வெண்பா]

2 உயிர்நோய்செய் யாமை உறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கண்செய் யாமை — செயிர்நோய்
விழைவு வெகுளி இவை விடுவான் ஆயின்
இழவன் றினிது தவம். 266

[சிறுபஞ்ச மூலம்]

**குறிப்புரை :**

பிற உயிர்க்குத் தீங்கிழையாமல் தனுக்கு நேர்ந்த துன்பத்தைப் பொறுத்து அவா, வெகுளிகளை நீக்குதலே தவமாம் என்பது.

உயிர் = பிற உயிர்கள். உறுநோய் = தனக்கு உற்ற துன்பம்

செயிர் நோய் = காமமுதலிய பிணிகள். விழைவு = அவா.

[இன்னிசை வெண்பா]

3 தூய்மை யுடைமை துணிவாம் தொழிலகற்று
வாய்மை யுடைமை வனப்பாகும் தீமை
மனத்தினும் வாயினும் சொல்லாமை மூன்றும்
தவத்தின் தருக்கினர் கோள். 267

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

மனமொழி மெய்களால் தீங்கு செய்யாமையே தவமாம் என்பது

துணிவு = உறுதி. வனப்பு = அழகு.
தருக்கினர் = செம்மாந்தார். கோள் = கொள்கை.

4 ஊக்கித்தாங் கொண்ட விரதங்கள் உள்ளுடைய
தாக்கருந் துன்பங்கள் தாந்தலை வந்தக்கால்
நீக்கி நிறூஉம் உரவோரே நல்லொழுக்கம்
காக்குந் திருவத்தவர். 268

**குறிப்புரை :**

தாங்கொண்ட விரதங்களாற்றுன்பம் வரினும் அவற்றை நீக்கி நிறுத்தும் வலிமையுடையோர் தவத்திற்குரியராவார் என்பது.

ஊக்கி = மனத்தினல் எண்ணி. நிறூஉம் = தடுத்துநிறுத்தும்
உரவோரே = வலிமையுடையோரே
திருவத்தவர் = தவமாகிய திருவினை உடையார்.

5 விளக்குப் புகவிருள் மாய்ந்தாங் கொருவன்
தவத்தின்முன் நில்லாதாம் பாவம் — விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாம் தீது. 269

[நாலடியார்]

**குறிப்புரை :**

தவத்தின் முன்பாவம் கெடும். நல்வினை நீங்கின் தீமை வரும் என்பது.

தேய்விடத்து = குறைந்துபோயவிடத்து. தீது = தீமை

[நேரிசை வெண்பா]

6 **விளையாமை உண்ணாமை ஆடாமை ஆற்ற**
**உளையாமை உட்குடைத்தாவேறல் — களையாமை**
**நூற்பட்டார் பூங்கோதாய் நோக்கின் இவையாறும்**
**பாற்பட்டார் கொண்டொழுகும் பண்பு.** 270

**குறிப்புரை :**

தீங்கு விளையாமை முதலிய ஆறும் தவத்தின்பாற்பட்டவர் கொண்டொழுகும் பண்புகளாம் என்பது.

உளையாமை = மனங்கலங்காமை களையாமை = சோர்வுறாமை
பாற்பட்டார் = தவத்தின் பக்கமுற்றவர்.

7 **அழப்போகான் அஞ்சான் அலறினற் கேளான்**
**எழப் போகான் ஈடற்றார் என்றும் -தொழப்போகான்**
**என்னேஇக் காலன்நீ டோரான் தவமுயலான்**
**கொன்னே இருத்தல் குறை.** 271

[ஏலாதி]

**குறிப்புரை :**

இறத்தல் உறுதி என அறிந்தும் தவத்தின் முயலாதிருத்தல் பெருங்குறையாகும் என்பது.

எழப்போகான் = போரிட எதிர்ந்தாலும் போகமாட்டான்
ஈடற்றார் = எதிர்க்க இயலாதவர். காலன் = யமன்
ஓரான் = சிந்தியாதவனாய். கொன்னே = வீணே.

8 நீர்பலகால் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடீஇச்
சோர்சடை தாழச் சுடரோம்பி — ஊரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி. 272

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

தவம் செய்வாருக்குரிய ஒழுக்கம் இவை என்கின்றது.

நிலத்தசைஇ = நிலமே படுக்கையாகக் கிடந்து.

உடீஇ = உடுத்து சுடர் = நெருப்பு.

ஊரடையார் = ஊரின்கண் வாழார்.

கொண்டு = உணவாகக்கொண்டு.

[கலிவிருத்தம்]

9 பொருளொடு போகம் புணர்த லுறினும்
அருளுதல் சான்ற அருந்தவம் செய்ம்மின்
இருளில் கதிச் சென் றினி இவண் வாரீர்
தெருள லுறினும் தெருள்மினதுவே. 273

**குறிப்புரை :**

பெரும் செல்வமும் பேறும் இருப்பினும் அவற்றுற் பயன் நேராது அருளுக்குரிய தவத்தைச் செய்மின் அதனுற் பிறவித் துன்பங் கெடும் என்பது.

புணர்தலுறினும் = கைகூடப்பெற்றிருப்பினும்.
தெருள்மின் = தெளிவு கொள்ளுங்கள்.

[கலித்துறை]

10 தவத்தின் மேலுறை தவத்திறை தனக்கலதரிதே
மயக்குநீக்குதல் மனமொழியொடு மெயிற்செறிதல்
உவத்தல் காய்தலோடிலாதுபல்வகையுயிர்க்கருளை
நயத்து நீக்குதல் பொருள்தனை யனையது மறிநீ 274

[வளையாபதி]

**குறிப்புரை :**

தவத்தின்கண் நீங்காதுறைதல் இறைவனுக்கன்றி நமக்கரிய தாகும். நமக்குத் தவமாவது மயக்கம் நீங்குதல் மனமொழி மெய்களை அடக்கி ஆளுதலும் விருப்பு வெறுப்பின்றி எல்லா உயிர்கட்கும் அருள்செய்தலுமாகும்.

அனையதும் = அத்தகையதும் அறி நீ = தவமென அறிக நீ.

[அறுசீர்விருத்தம்]

11 பவழவாய்ச் செறுவு தன்னுள்
நித்திலம் பயில வித்திக்
குழவிநா றெழுந்து காளைக்
கொழுங்கதி ரீன்று பின்னைக்
கிழவுதான் விளிக்கும் பைங்கூழ்
கேட்டிரேல் பிணிசெய் பன்மா
உழவர்கள் மேயுஞ் சீல
வேலியுய்த் திடுமினென்றான். 275

**குறிப்புரை :**

மனிதன் என்னும் பயிரைக் காம முதலாய பிணியென்னும் விலங்குகள் மேயாமல் சீல (தவ) மாகிய வேலியை அமைத்துப் பேணிக்கொள்ளுங்கள் என்கிறது. இப்பாடல் மக்கள் உடம்பை நெற்பயிராக உருவகஞ் செய்து கூறுகின்றது.

கிழவு = முதுமை. பன்மா = பல விலங்குகள்.

[கலித்துறை]

12 ஒன்றாய வூக்கவேர்பூட்டி யாக்கைச் செறுவுழுது
நன்றாய நல்விரதச் செந்நெல்வித்தி யொழுக்கநீர்
குன்றாமற்றாங் கொடுத்தைம் பொறியின்
வேலிகாத் தோம்பின்
வென்றார்தம் வீட்டின்பம் விளைக்கும்
விண்ணோர் உலகீன்றே. 276

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

தவம் மேற்கொண்டு நோற்பார் சுவர்க்கமுற்று வீடு பெறுவார் என்கின்றது.

ஊக்க ஏர் = முயற்சியாகிய ஏர். செறு = வயல்
வென்றூர் = சித்தபரமேட்டியர்,

[ஆசிரியப்பா]

13 பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்
ஒருபகல் எழுவர் எய்தி யற்றே
வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
ஐயவி அனைத்தும் ஆற்று தாகலின்
கைவிட் டனரே காதலர் அதனல்
விட்டோரை விடாஅள் திருவே
விடாஅதோர் இவண் விடப்பட் டோரே. 277

**குறிப்புரை :**

தவத்தையும் இவ்வுலகத்தையும் சீர்தூக்கினுல் தவத்தின்முன் உலகம் ஒரு கடுகளவும் ஈடாகாது. ஆதலின் வீட்டினை விரும் பினோர் பற்றுவிட்டனர். பற்று விட்டோரைத் திருமகள் விடாள். அவளால் விடப்பட்டோர் பற்று நீங்காதவராவர்.

பயம் - பயன் தூக்கின் நிறுத்துக்காணின்
ஐயவி - சிறுகடுகு காதலர் - வீட்டினை விரும்பியோர்
திரு = வீடாகிய செல்வம்.
இச்செய்யுளைப் பாடியவர் வான்மீகியார்,

[ஆசிரியப்பா]

14 கறங்குவெள் ளருவி ஏற்றலின் நிறம்பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையொடு
அள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே. 278

[புறநானூறு]

குறிப்புரை :

தவத்தின் சிறப்பினை உணர்ந்தோன் இவன் என்கின்றது.

ஏற்றலின் = மூழ்கி ஏற்றுக் கொண்டமையான்
தில்லை = தில்ல மரத்தின் தளிர் தாளி = தாளிக்கொடி.
மடமயில் என்றது அவன் காதலியை. சொல்வலை = சொல்லாகிய வலை.

15 வரிக்கடை நெடுங்கண் விளங்க மேதக
மணித்தோடு பெய்து வாண்முகந் திருத்தி
நானிலம் விளைத்த பரவையொடு கெழீய
கான்யாற்று வருபுன லாடலும் தேமலர்
வல்லிப் பந்தர் வண்டுவாழ் ஒருசிறை
நிலமகட் புணரும் சேக்கையும் மாமுதல்
மெல்லுரி வெண்டுகி லுடையும் தொல்வகைப்
படையுழா விளையுளின் உணவும் மந்திரத்துச்
சுடர்முதற் குலமுறை வளர்த்தலும் வரையாது
வருவிருந் தோம்புஞ் செல்வமும் வரைமுதற்
காடுகைக் கொள்ளும் உறையுளு மென்றிவ்
எண்வகை மரபின் இசைந்த வாழ்க்கை
ஐம்பொறிச் சேனை காக்குமாற்ற லொடு
வென்று விளங்கு தவத்தினர் அரசியற்பெருமை
மாக்க டலுடுத்த வரைப்பின்
யார்க்கினி தென்றஃ தறியுநர்ப் பெறினே. 279

[ஆசிரிய மாலை]

குறிப்புரை :

தவமுடையோரை அரசனாக உருவகஞ் செய்து அவர்தம் பெருமையை விளக்குகின்றது.

வரி = செவ்வரி வாண்முகம் ஒளிவிளங்கும் முகம்
பரவை = கடல் வல்லிப்பந்தர் = கொடிப்பந்தர்
படைஉழா விளையுள் = ஏரின் கொழுப்படை உழாமல் விளைந்த உணவுப்பொருள் வரை = மலை உறையுள் = வாழிடம்
வரைப்பு = நிலவுலகம்.

## அதிகாரம்—29

# கூடா ஒழுக்கம்

கூடா ஒழுக்கமாவது : தவத்தினை மேற்கொண்ட பின்னர்த் துறந்த காம இன்பத்தை மனவலியின்மையான் பின்பு விழைந்து வஞ்சித்து ஒழுகும் பொருந்தாத தீய நடக்கையாம்.

[இன்னிசை வெண்பா]

1 **இம்மைத் தவமும் அறமும் என இரண்டும்**
**தம்மை யுடையார் அவற்றைச் சலமொழுகல்**
**இம்மைப் பழியேயு மன்றி மறுமையும்**
**தம்மைத் தாமார்க்குங் கயிறு.** 280

**குறிப்புரை :**

இல்லறத்திலும் துறவறத்திலும் குற்றப்பட நடப்பவர்கள் இம்மையிற் பழியையும் மறுமையில் துயரையும் எய்துவார்கள் என்பது.

சலமொழுகல் = குற்றப்பட ஒழுகுதல்
ஆர்க்குங்கயிறு = தூக்கிடும் கயிறு.

2 **துயிலும் பொழுதே தொடுவூண்மேற் கொண்டு**
**வெயில்விரி போழ்தின் வெளிப்பட்டார் ஆகி**
**அயில்போலும் கண்ணாய் அடைந்தார்போல் காட்டி**
**மயில்போலுங் கள்வர் உடைத்து.** 281

[பழமொழி]

**குறிப்புரை :**

இவ்வுலகம் வஞ்சிப்பாரையும் உடையதாகலின் விழிப்போடு இருத்தல் வேண்டும் என்பது.

தொடுவூண் — களவு கொண்டு அதனுன் உண்ணும் உணவு வெயில் விரிபோதில் அடைந்தார் போற்காட்டி - பகலில் நட்பினரைப் போலத் தோன்றி. மயில் தான் விழுங்கியதைப் புலப்படாது ஒழுகும் அதைப் போன்றவர் கள்வர் என்றவாறு.

[நேரிசை வெண்பா]

3 போர்த்தும் உரிந்திட்டும் பூசியும் நீட்டியும்
ஓர்த்தொரு பான்மறைத் துன்பான்மேய்—ஓர்த்த
அறமறமேற் சொற்பொருக்க அன்றேல் கலிக்கண்
துறவறம்பொய் இல்லறமெய் யாம். 282

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

போர்த்தும் = ஆடையணிந்தும் உரிந்திட்டு ஆடைபோர்த்தாமலும் பூசியும் = சாந்து முதலியவற்றைப் பூசியும் கலிக்கண் = கலிகாலத்தில்

4 துறந்தார் துறவார் எனவறிய லாகாத்
துறந்தவர் கொண்டொழுகும் வேடம்—துறந்தவர்
கொள்ப கொடுப்பவற்றுற் காணலாம் மற்றவர்
உள்ளங் கிடந்த வகை. 283

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

துறவறத்தினரை அவர் வேடத்தால் காணமல் அவர் கொள்வதும் கொடுப்பதுமாகிய செயல்களாற் கண்டு கொள்க என்பது.

கொள்ப = கொள்பவையாகிய பொருட்கள்.

[கலிவிருத்தம்]

5 போர்த்தலுடை நீக்குதல் பொடித்துகள் மெய்பூசல்
கூர்த்தபனி யாற்றுதல் குளித்தபுன லன்றே
சாத்தரிடு பிச்சையர் சடைத்தலையர் ஒழுகல்
வார்த்தையிவை செய்தவம் மடிந்தொழுக லென்றான்
284

[சிந்தாமணி]

**குறிப்புரை :**

துறவியரை வேடத்தால் அறியாமல் அவர் ஒழுக்கத்தாலறிக என்பது.

பொடித்துகள் = திருநீறு  வார்த்தை = அவர்கள் பேசுவன

### அதிகாரம்—30

## புணர்ச்சி விழையாமை

புணர்ச்சி விழையாமையாவது : தவ நோன்பினை மேற்கொண்டவர் உடலுறவினை விரும்பாமையாகும்.

[இன்னிசை வெண்பா]

1 **விழுமிழை நல்லார் வெருள்பிணைபோல் நோக்கம்
கெழுமிய நாணை மறைக்கும்—தொழுநையுள்
மாலையும் மாலுள் மயக்குறுத்தான் அஃதாலச்
சால்பினைச் சால்பறுக்கு மாறு.** 285

[பழமொழி]

**குறிப்புரை :**

பெண்டிரின் அழகு மயக்கஞ் செய்வதாகலின் தவமியற்றுவோர் அவரைச் சார்ந்து ஒழுகுதல் கூடாது என்பது.

பிணை = மான்  கெழுமிய = பொருந்திய
தொழுநை = யமுனை நதி  மாலையும் = திருமாலையும்
மாலை = பின்னை என்னும் பெண்  சால்பு = மிகுதி.

2 **பரவா வெளிப்படா பல்லோர்கட் டங்கா
உரவோர்கண் காமநோய் ஓஒ கொடிதே
விரவாருள் நாணுப்படலஞ்சி யாதும்
உரையாதுள் ளாறி விடும்.** 286

றிப்புரை :

மனவலி உடையார் காமத்தை வென்றொழிப்பர் என்பது.

பரவா = விரியா   உரவோர் = மனவலிமையுடையார்
விரவார் = பகைவர்   உள்ளாறிவிடும் = உள்ளத்தே அழிந்து விடும்.

[நேரிசை வெண்பா]

3 அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்—வெம்பிக்
கதற்றி மனத்தைச் சுடுதலாற் காமம்
அவற்றினும் அஞ்சப் படும். 287

[நாலடியார்]

குறிப்புரை :

தீ முதலியவை புற உடம்பைச் சுடும். காமம் அகத்தைச் சுடும் ஆதலால் காமத்தீ கொடியது என்பது.

அழல் = நெருப்பு   கவற்றி = கவலையுறச் செய்து

[அறுசீர்விருத்தம்]

4 ஆனை யூற்றின் மீன்சுவையின்
அசுண மிசையின் நளிநாற்றத்
தேனைப் பதங்க முருவங்கண்
டிடுக்க ணெய்தும் இவ்வனைத்தும்
கான மயிலஞ் சாயலர்
காட்டிக் கௌவை விளைத்தாலும்
மான மாந்தர் எவன்கொலோ
வரையா தவரை வைப்பதே. 288

[சாந்திபுராணம்]

**குறிப்புரை :**

மானமுடைய மாந்தர் மணந்து வாழ்தலன்றி மகளிரைக் காமப் பொருளாக எண்ணூர் என்பது.

யானை ஊற்றின்பத்தாலும் மீன் சுவையின்பத்தாலும் அசுணம் இசையின்பத்தாலும் இடுக்கணுறுவனவாகும்.

கௌவை = பூசல் வரையாது = மணந்து கொள்ளாமல்.

[கலித்துறை]

5 எண்ணின்றி யேதுணியும் எவ்வழி யானு மோடும்
உண்ணின் றுருக்கும் உரவோ ருரைகோட லின்றும்
நண்ணின்றி யேயும் நயவாரை நயந்து நிற்கும்
கண்ணின்று காமம் நனிகாமுறு வாரை வீழ்க்கும் 289

**குறிப்புரை :**

எண்ணின்றி = சிந்தனையின்றி உரவோர் =
அறிவுடையோர் கோடல் = கேட்டுக்கொள்ளல்
நயவார் = பகைவர் நனி = மிகவும்

6 சான்றோ ருவப்பத் தனிநின் று பழிப்ப காணூர்
ஆன்றுங் கமைந்த குரவர் மொழி கோடலீயார்
வான்றுங்கி நின்ற புகழ்மாசு படுப்பர் காமன்
தான்றுங்கி விட்ட கணைமெய்ப்படு மாயினக்கால் 290

**குறிப்புரை :**

காமத்திற்கு ஆட்பட்டவர் சான்றோர் பழிபாவத்தையுங் காணூர் ஐம்பெருங்குரவர் மொழியையும் கேளார் புகழ் மாசுற்றழிவர் என்பது.

வான் = சிறப்பு காமன் = மன்மதன் கணை = மலரம்பு

7 மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும்
பூவென் றெருக்கின் இணர்சூடுப புன்மைகொண்டே
பேயென் றெழுந்து பிறர்ஆர்ப்பவும் நிற்பர்காம
நோய்தன் கெழுந்து நனிகாழ்கொள்வ தாயினக்கால்
291

**குறிப்புரை :**

காமநோயுற்ருர் மடலேறவும் துணிவர் பிற இழிவான செயலையும் மேற்கொள்வார் என்பது.

மா = குதிரை மடல் = பனைமடல் இணர் = பூங்கொத்து
ஆர்ப்பவும் = பேசி இகழவும் காழ்கொள்வதாயின் = முற்றுவதாயின்.

8 நக்கே விலாவிறுவர் நாணுவர் நாணும் வேண்டார்
புக்கே கிடப்பர் களவும் நினைகையு மேற்பர்
துற்றூண் மறப்பர் அழிவர்நனி துஞ்ச லில்லார்
நற்ருேள் மிகைபெரிது நாடறி துன்ப மாக்கும் 292

**குறிப்புரை :**

பெண்டிர்மேல் அளவின்றிக் காமுறுவோர் பிறரால் இகழப் படுதலும் தாமே துன்புறுதலும் எய்துவர் என்பது.

நக்கே = சிரித்தே துற்றூண் = உணவுண்ணுதலை
துஞ்சலிலர் = உறங்கமாட்டார் நற்ருேள்மிகை = பெண்டிரை மிக விரும்புதல்.

[கலிவிருத்தம்]

9 அரசொடு நட்டவர் ஆள்ப விருத்தி
அரவொடு நட்டவர் ஆட்டியு முண்பர்
புரிவளை முன்கைப் புனையிழை நல்லார்
விரகிலர் என்று விடுத்தனர் முன்னே. 293

[வளையாபதி]

**குறிப்புரை :**

பாம்பொடு பழகினும் பயனெய்தல் உண்டு. காமுற்றுப் பெண் விழைவதனுற் பயனில்லை என்பது.

நட்டவர் = நட்புசெய்தவர் அரவு = பாம்பு
விரகிலர் = பெறும் பயனில்லாதவர்
விடுத்தனர் = முனிவர் துறந்தனர்.

[கலிவிருத்தம் வேறு]

10 பனிமதி பொழிகதிர் பருகு மாம்பல்போல்
முனிமதி முகத்தியார் முறுவல் நம்பினூர்
துனிவளர் கதிகளுள் தோன்றி நாடகம்
கனியநின் றுடுவர் கடையில் காலமே. 294

**குறிப்புரை :**

பெண்டிரை மிக விரும்பியுழலுவோர் துன்பப் பிறப்புக்களுள் பிறந்து பல காலம் இடர்ப்படுவர் என்பது.

முனிமதி முகத்தியர் = மதியையும் வெறுக்கச் செய்யும் அழகிய முகமுடைய மகளிர் துனி = துன்பம் கதி = பிறப்பு.

11 நிழல்நிமிர் நெடுமதி நிகரில் தீங்கதிர்ப்
பழனவெண் டாமரை பனிக்கு மாறுபோல்
குழல்நிமிர் கிளவியர் கோல மஞ்சினூர்
தொழ நிமிர்ந் தமரராய்த் துறக்க மாள்வரே. 295

**குறிப்புரை :**

காமத்தை அஞ்சி நீத்தவர் துறக்கமெய்துவர் என்பது.

நிழல் = ஒளி கதிர் = சூரியர் பழனம் = குளம்
கிளவி = சொல்.

12 காதல் மிக்குழிக் கற்றவும் கைகொடா
வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்
தாது துற்றுபு தங்கிய வண்டனூர்க்
கேத மிற்றென எண்ணுமென் நெஞ்சரோ. 296

**குறிப்புரை :**

காமம் மிக்கவிடத்துக் கல்வியறிவும் பயன்படாது என்பது.

அஞ்சனம் = மை துற்றுபு = உண்ணநெருங்கி
ஏதம் = குற்றம்.

[அறுசீர் விருத்தம்]

13 எரிதலைக் கொண்ட காமத்
தின்பநீர்ப் புள்ளி யற்றால்
பிரிவின்கண் பிறந்த துன்பம்
பெருங்கட லனைய தொன்றால்
உருகிநைந் துடம்பு நீங்கின்
இம்மையோ டும்மை யின்றி
இருதலைத் பயனு மெய்தார்
என்றுயாங் கேட்டு மன்றே. 297

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

காமத்தார் கூடுதலின்பம் சிறிது; பிரிவுத்துன்பம் பெரிதென்பது.
நீர்ப்புள்ளி = நீர்த்துளி இருதலை = இம்மை, மறுமை.

14 வகையெழிற் றோள்க ளென்றும்
மணிநிறக் குஞ்சி யென்றும்
புகழெழ விகற்பிக் கின்ற
பொருளில்கா மத்தை மற்றோர்
தொகை யெழுங்காதல் தன்னாற்
றுய்த்தியாந் துடைத்து மென்பார்
அகையழ லழுவந் தன்னை
நெய்யினால் அவிக்க லாமோ. 298

**குறிப்புரை :**

காமப் பிணியைக் கூட்டத்தால் நீக்குவோம் என்பது நெருப்பினை நெய்யால் அவிப்போம் என்பது போலாகும் என்கின்றது.

குஞ்சி = கூந்தல் துய்த்து = நுகர்ந்து
அழல் அழுவம் - எரியும் காடு.

15 அனலென நினைப்பிற் பொத்தி
அகந்தலைக் கொண்ட காமக்
கனலினை உவப்பு நீராற்
கடையற அவித்தும் என்னார்
நினைவிலாப் புணர்ச்சி தன்னால்
நீக்குதும் என்று நிற்பார்
புனலினைப் புனலி னாலே
யாவர்போ காமை வைப்பார். 299

[குண்டலகேசி]

குறிப்புரை :

காமத்தை நுகர்ந்து நீக்குவோம் என்பது வெள்ளத்தை நீரணையால் தடுப்போம் என்பது போல்வது என்கின்றது.

உவப்பு = துய்த்தல் கடையற = முழுதும் புனல் = நீர்.

[கலிவிருத்தம்]

16 வெவ்விடம் அமுதென விளங்கு கண்ணினார்க்
கெவ்விடம் உடம்பினில் இழிக்கத் தக்கன
அவ்விடம் ஆடவர்க் கமிர்த மாதலால்
உய்விடம் யாதினி உரைக்கற் பாலையே. 300

[நாரத சரிதை]

குறிப்புரை :

மகளிரின் இழிந்த உறுப்பினை ஆடவர் அமுதமென நாடுதலால் அவர் உய்வதரிது என்பது.

வெவ்விடம் = கொடிய நஞ்சு உய்தல் = தப்பிப் பிழைத்தல்.

## அதிகாரம் — 31

# கள்ளாமை

கள்ளாமையாவது: பிறர்க்குரிய பொருள் யாதாயினும் அதனை அவர் அறியாமல் வஞ்சித்துக் கொள்ளக் கருதாமையாகும்.

[கலிவிருத்தம்]

1 முளரிமுக நாகமுளை யெயிறுழுது கீற
அளவில்துயர் செய்வரிவண் மன்னராத லும்
விளைவரிய மாதுயரம் வீழ்கதியு ளுய்க்கும்
களவு கட னாகக் கழிந்திடுதல் சூதே. 301

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

கள்வரை அரசர் பாம்பினை ஏவிக் கடிக்கச் செய்வர். நரகத் துயரம் விடாது என்பது.

நாகமுளைஎயிறு = பாம்பின் பற்கள் வீழ்கதி = எடுக்கும் பிறப்பு.

2 கிளருமெரி விடமெழுதல் விழுதல்முத லாய
அளவிலரு நரகில்விடு நவைபலவு மஞ்சி
உளமொழிமெய் நெறி யொழுகி உறுபொருள் சிதைக்கும்
களவுவிழை வொழிதல் கட.......... னன்றே. 302

**குறிப்புரை :**

களவு நரகத்தில் சேர்க்குமாதலால் அதை விட்டொழித்தல் நன்மை தரும் என்பது.

எரிவிடம் = எரிக்கும் நஞ்சு நவை = துன்பம்
விழைவு = பற்று.

3 பிளவுகழு மெழுநரகம் எரிகொளுவல் ஈர்தல்
உளையவுடல் தடிவொடுறு துயரம்விளை விக்கும்
கிளையறவு தருமரிய புகழினை யழிக்கும்
களவுநனி விடுதலறம் என்றுகரு தென்றான். 303

[சாந்திபுராணம்]

**குறிப்புரை :**

களவினை விடாதோர் பெரும் நரகத்தில் ஆழ்வர் என்பது.

[கலிவிருத்தம் வேறு]

4 களவி னாகிய காரறி வெள்ளன்மின்
விளைவில் வெவ்வினை வீடில கதிகளுள்
உளைய உள்ளழித் தோன்றல் வேதனை
வளையுள் வாங்கி வருத்த முறுக்குமே. 304

[சூளாமணி]

**குறிப்புரை :**

காரறிவு = களங்கமுறுத்தும் அறிவு  வீடில = நீங்குதல் இல்லை.

5 பீடில் செய்திக ளாற்கள விற்பிறர்
வீடில் பல்பொருள் கொண்ட பயனெனக்
கூடிக் காலொடு கைகளைப்பற்றி வைத்
தோடலின்றி யுலையக் குறைக்குமே. 305

[வளையாபதி]

**குறிப்புரை :**

களவு செய்யின் கால், கை முதலிய உறுப்புக்களை இழக்கச் செய்யும் என்கின்றது.

பீடில் = பெருமையில்லாத  உலைய = துன்பமுற.

**அதிகாரம்—32**

## பொய்யாமை

பொய்யாமை : உள்ளதனை இலதென்றும் இல்லதனை உள தென்றும் தன்னெஞ்சறிந்த ஒன்றனை மறைத்துக் கூறுதலைச் செய் யாமையாகும்.

[நேரிசை வெண்பா]

1 **தான்கெடினும் தக்கார்கே டெண்ணற்க தன்னுடப்பின்**
**ஊன்கெடினும்உண்ணார்கை உண்ணற்க—வான்கவிந்த**
**வையக மெல்லாம் பெறினும் உரையற்க**
**பொய்யோ டிடைமிடைந்த சொல்.** 306

உலகத்தையே பெறுவதாயினும் பொய்ம்மொழி கூறுதல் தகா தென்பது.

ஊன்கெடினும் = உடல் இளைத்தாலும்

உண்ணார்கை = உணவு கொள்ளத்தகாதவரிடத்து.

2 **இம்மை நலனழிக்கும் எச்சங் குறை படுக்கும்**
**அம்மை அருநரகத் தாழ்விக்கும்—மெய்ம்மை**
**அறந்தேயும் பின்னும் அலர்மகளை நீக்கும்**
**......................** 307

[பாரதம்]

**குறிப்புரை :**

பொய்யுரை எல்லா நலங்களையும் இழக்கச் செய்யும் என்பது.

எச்சம் = மக்கள் அலர்மகள் = திருமகள்.

[கலிவிருத்தம்]

3 **பொய்யின் நீங்குமின் பொய்யின்மை பூண்டுகொண்**
**டைய மின்றி அறநெறி யாற்று மின்**
**வைகல் வேதனை வந்துறல் ஒன்றின்றிக்**
**கவ்வை யில்லுல கெய்தல் கண்டதே.** 308

**குறிப்புரை :**

பொய்யாமையுடையார் தேவருலகெய்தி இன்புறுவர் என்பது.
வைகல் = வாழும் நாளுள் கவ்வையில் உலகம் = சுவர்க்கம்

4 **கல்வி யின்மையும் கைப்பொருள் போகலும்**
**நல்லில் செல்லல்க ளான்நலி வுண்மையும்**
**பொய்யில் பொய்யொடு கூடுதற் காகுதல்**
**ஐய மில்லை அதுகடிந் தோம்புமின்.** 309

[வளையாபதி]

**குறிப்புரை :**

பொய்யுரைப்பார்க்குக் கல்வியும் செல்வமும் சேரா. பெருந் துன்பங்கள் சேரும் என்பது.

செல்லல் = துன்பம் கடிந்து = நீக்கி.

[கலிவிருத்தம் வேறு]

5 **மெய்யுரை விளங்குமணி மேலுலக கோபுரங்கள்**
**ஐயமிலை நின்றபுகழ் வையகத்து மன்னும்**
**மையல்விளை மாநரக கோபுரங்கள் கண்டீர்**
**பொய்யுரையும் வேண்டாபுறத்திடுமின்என்றான்** 310

**குறிப்புரை :**

மெய்யுரை வானுலக கோபுரங்களுள் வாழச் செய்யும்; பொய் யுரை நரக கோபுரங்களுள் செலுத்தும் என்கின்றது.
மன்னும் = நிலைபெறும் மையல் = துன்பம்.

6 **மலங்கிமதி யின்றியயர் வெய்தி மயல்கூர**
**நலங்கி யறியாது துயரெய்தி நனிவாடும்**
**விலங்குறு கடுந்துயிர் விலங்குதல் விரும்பின்**
**புலன்கள் வழிபொய்யுரை புறத்திடுமின் என்றான்** 311

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

அறிந்துபேசும் பொய்யுரை விலங்குகதியிற் பிறக்கச் செய்து கேடுவிளைக்கும் என்பது.

மலங்கி = கலங்கி  அயர்வு = மறதி  நலங்கி = மெலிந்து
விலங்குதல் = நீங்குதல்  புலன்கள்வழி = அறிவுவழிப்பட்ட

## அதிகாரம்—33

## வெகுளாமை

வெகுளாமையாவது : சினத்திற்குக் காரணமாயவை ஒருவர் இடத்து நிகழினும் அவரிடத்து வெகுளாதிருக்கும் தன்மையாம்.

[நேரிசை வெண்பா]

1 **ஆய்ந்த அறிவினர் அல்லாதார் புல்லுரைக்குக்**
**காய்ந்தெதிர் சொல்லுபவோ கற்றறிந்தார்—தீந்தேன்**
**முசுக்குத்தி நக்கும் மலைநாட தம்மைப்**
**பசுக்குத்தின் குத்துவா ரில்.** 312

**குறிப்புரை :**

பசு முட்டினால் தாமும் முட்டுதலில்லை அவ்வாறே அறிவிலார் புன்மொழிபேசின் அவரைச் சான்றோர் வெகுண்டுரைத்தலில்லை என்பது.

புல்லுரை = தாழ்ந்த சொல்  காய்ந்து = சினந்து
முசு = குரங்கு  குத்துதல் = முட்டுதல்.

2 **மதித் திறப்பாரும் இறக்க, மதியார்**
**மிதித் திறப்பாரும் இறக்க—மிதித்தேறி**
**ஈயுந் தலைமேல் இருத்தலால் அஃதறிவார்**
**காயுங் கதமின்மை நன்று.** 313

**குறிப்புரை :**

தலைமேல் ஈவந்து அமர்தலுக்காக வெகுள்வாரில்லை. அதுபோல மதியாமல் தம்மை மிதித்துச் செல்வாரிடத்தும் சினவாதிருத்தல் நன்மையாமென்பது.

இறப்பாரும் = செல்வோரும்  கதம் = கோபம்.

[இன்னிசை வெண்பா]

3 கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயாற்
பேர்த்துநாம் கௌவினார் ஈங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேன்மக்கள் தம்வாயால் மீட்டு. 314

**குறிப்புரை :**

கீழ்மக்கள் தகவின்றிப்பேசினும் மேல்மக்கள்சினந்துஅத்தகைய சொற்களைத் தம் வாயாற் பேசமாட்டார். நாய் கௌவினால் அதனைத் திருப்பிக் கௌவுவாரில்லை அதுபோல என்பது.

கூர்த்து = பாய்ந்து நீர்த்தன்றி = தகவின்றி

கீழாய = தாழ்ந்த சொற்களை

[நேரிசை வெண்பா]

4 நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்—ஓர்த்ததனை
உள்ளத்தான் உள்ளி உரைத்துராய் ஊர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாம் கீழ். 315

[நாலடியார்]

**குறிப்புரை :**

தமக்கு நிகரில்லாதவர் தகுதியற்ற சொற்களைக் கூறின் மேன்மக்கள் வெகுளமாட்டார் கீழ்மக்கள் சினந்து கூறி அவர்கள் மேற்பாய்ந்து முட்டுவர்

ஓர்த்து = அதனையேஎண்ணி. உராய் = நெருங்கி

முட்டும் = மோதும் கீழ் - கீழ்மக்கள்.

5 உழந்துழந்து கொண்ட உடம்பினைக் கூற்றுண்ண
இழந்திழந் தெங்கணும் தோன்றிச்—சுழன்றுழன்ற
சுற்றத்த ரல்லாதா ரில்லைக்காண் நெஞ்சே
செற்றத்தாற் செய்வ எதவன். 316

**குறிப்புரை :**

தீவினைப் பயனால் எல்லாப் பிறப்பும் நேர்ந்து பிறத்தலால் எல்லா உயிர்களும் சுற்றமாக உள்ளன. ஆதலால் வெகுளு வதனால் பயனென்ன ? இல்லை என்பது.

உழந்துழந்து கொண்ட உடம்பு = மீட்டுமீட்டுப்பிறந்த உடம்புகள்.

செற்றம் = சினம். எவன் = என்னபயன்.

6 **தன்னை யொருவன் இகழ்ந்துரைப்பின் தானவனைப்**
**பின்னை யுரையாப் பெருமையோன்—முன்னை**
**வினைப்பயனா லாயிற்றா லென்றதன்கண் மெய்ம்மை**
**நினைந் தொழிய நெஞ்சநோ யில்.** 317

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

ஒருவன் தன்னை இகழ்ந்துரைப்பின் அது தமது வினைப்பயன் என அதனை நினையாதொழியின் உளம்வருத்தும் துன்பமில்லை என்பது.

மெய்ம்மை = வினைப்பயனது உண்மையை.
நெஞ்சநோய் = மனத்துன்பம்.

[இன்னிசை வெண்பா]

7 **கற்றார்முற் றோன்றாக் கழிவிரக்கம் காதலித்தொன்**
**றுற்றார்முற் றோன்றா வுசாவுதல்—தெற்றென**
**அல்ல புரிந்தார்க் கறந்தோன்றா வெல்லாம்**
**வெகுண்டார்முற் றோன்றாக் கெடும்.** 318

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

வெகுளியானது அறிவு முதலிய யாவற்றையும் அழித்துவிடும் என்பது.

கழிவிரக்கம் = துன்பம். உசாவுதல் = ஆராய்ச்சி
அல்ல = அறமல்லாதன. எல்லாம் = நன்மையாவன வெல்லாம்.

அதிகாரம்—34

## இன்னா செய்யாமை

இன்னா செய்யாமையாவது : தனக்கு ஒரு பயனைக் கருதியோ சினம்பற்றியோ இல்லாமைபற்றியோ மறந்தோ பிறிதோருயிர்க்குத் தீங்கு செய்யாதிருத்தலாம்.

[ இன்னிசை வெண்பா ]

1 வினைப்பயன் ஒன்றின்றி வேற்றுமை கொண்டு
நினைத்துப் பிறர்பனிப்பச் செய்யாமை வேண்டும்
புனப்பொன் அவிர்சுணங்கிற் பூங்கொம்ப ரன்னாய்
தனக்கின்னா இன்னா பிறர்க்கு. 318 a.

குறிப்புரை :

வினைப்பயன் = செய்யும் வினையால் விளையும் பயன்
ஒன்றின்றி = சிறிதும் இல்லாமல். வேற்றுமை = பகைமை
நினைந்து = துன்பந்தருவனவற்றை ஆராய்ந்து.
பனிப்ப = நடுங்கத்தக்கவை. புனம் = மலைக்கொல்லை
அவிர்சுணங்கு = விளங்குகின்ற தேமல்
தனக்கின்னா = தனக்குத் துன்பந்தருபவை
பிறர்க்கு = அவ்வாறே பிறர்க்கும் துன்பந்தரும்

[ நேரிசை வெண்பா ]

2 ஆற்றா ரிவரென் றடைந்த தமரையும்
தோற்றத்தா லெள்ளி நலியற்க — போற்றான்
கடையடைத்து வைத்துப் புடைத்தக்கால் நாயும்
உடையானைக் கௌவி விடும். 318 b.

குறிப்புரை :

ஆற்றார் இவர் = நம்மை எதிர்த்துச் செயல்புரியும்
வலியில்லாதவர் இவர். அடைந்த = அடைக்கலமாகவந்த
தமர் = தம்மவர் (உறவினர்) தோற்றத்தால் = அவர்களின்
எளிய நிலையினால். எள்ளி = அவமதித்து
நலியற்க = சொல்லாலும் செயலாலும் துன்புறுத்தாதீர்.
போற்றான் = பாதுகாவானாய்
கடையடைத்து = தப்பிச்செல்லும் வாயிலை அடைத்து
புடைத்தக்கால் = துன்புறுத்தினால்
உடையானை = வளர்த்தவனை கௌவி விடும் = கடித்துவிடும்.

[ இன்னிசை வெண்பா ]

பூவுட்கும் கண்ணாய் பொறுப்பர் எனக்கருதி
யாவர்க்கே யாயினும் இன்னா செயல்வேண்டா
தேவர்க்குங் கைகூடாத் திண்ணன்பி னார்க்கேயும்
நோவச்செய் நோயின்மையில் 318 c.

[ பழமொழி ]

குறிப்புரை :

பூவுட்கும் = இவன் கண்ணழகிற்கு ஒப்பாக இல்லையே எனப் பூவானது அஞ்சும்.
பொறுப்பர் = எதிர்ப்பதற்கு அஞ்சிப் பொறுத்துக்கொள்வார்.
எனக்கருதி = என்று நினைத்து யாவர் = எவரேயாயினும்.
தேவர்க்கும் = தெய்வங்கட்கும் கைகூடா = நேராத
திண்ணன்பு = முதிர்ந்த அன்பு.
நோவச்செய் = நோகும்படியான செயகளைச் செய்தால்
நோயின்மையில் = நோவு இல்லாமில்லை. நோவுறுவார் என்பதாம்.

[ நேரிசை வெண்பா ]

இறப்பது நுமக்கடுத்த தெவ்வநோய் யாவும்
பிறர்க்குமஃ தாமென்று கொணமின் — உறக்கருதி
எவ்வாறு மக் குறுதி எண்ணுதிர் நீர் எல்லார்க்கும்
அவ்வாறே எண்ண லறம். 318 d.

[ பாரதம் ]

குறிப்புலர :

இறப்ப = மிகுதியாக நமக்கடுத்து நம்மை வந்தடைந்தது. எவ்வம் = துன்பம் பிறாக்கும் அஃது
ஆம் = மற்றவர்க்கும் அந்நோய் துன்பந்தருவதாகும்.
கொண்மின் = எண்ணுவீர்களாக எவ்வாறுமக்குறுதி
எண்ணுதிர்நீர் = துன்பம் வந்தடைக்கூடாது என்று உமக்கு எவ்வாறு உறுதி எண்ணுகின்றீர்.
அவ்வாறே = அப்படியே எண்ணலறம் = பிறர்க்கும் துன்பம் நேரக்கூடாது என்று எண்ணுவதே அறமாகும்.

அதிகாரம்—33

## கொல்லாமை

கொல்லாமையாவது : உடம்போடு கூடி வாழும் உயிர்களை அவ்வுயிர் கழியுமாறு அவற்றின் உடம்பினை அழிக்காமல் பேணுதலாகும்.

[நேரிசை வெண்பா]

1 கொன்றான் கொலையை உடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்கால்
—கொன்றதனை
அட்டான் இடஉண்டான் ஐவரினும் ஆகுமெனக்
கட்டெறிந்த பாவம் கருது. 319

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

கொலைக்குக் காரணமாக இருத்தலும் கொலைப் பாவமேயாகும் என்கின்றது.

கோடாது = தளராமல். அட்டான் = சமைத்தவன்
எறிந்த = கொன்ற.

2 நசை கொல்லார் நச்சியார்க் கொன்றுங் கிளைஞர்
மிசைகொல்லார் வேளாண்மை கொல்லார்
—இசைகொல்லார்
பொன்பெறும் பூஞ்சுணங்கின் மென்முலையாய்
நன்குணர்ந்தார்
என்பெறினும் கொல்லா ரியைந்து. 320

**குறிப்புரை :**

ஒருவர் தம் விருப்பத்தை அழித்தல் முதலியனவும் கொலைப் பாவமேயாம் என்பது.

நசை = விரும்பிய பொருள். ஒன்றும் = பொருந்தும்
கிளைஞர் = சுற்றத்தார். மிசை = மேன்மை
வேளாண்மை = முயற்சி. இசை = புகழ்

3 இன்று எமக்குமுண் டென்னலா ரெவ்வுயிரும்
முன்னேவக் கொல்லும் முழுமக்கள்—எந்நோயும்
பண்ணப் படுநரகிற் பாவியரிற் பாவியரென்
றெண்ணப் படுவ ரிகழ்ந்து. 321

**குறிப்புரை :**

இவற்றால் இடர்வருமோ என்றஞ்சி உயிர்கள் வருந்த அவற்றைக் கொல்பவர் பாவியருள் பாவியராய் நரகத்திற் சேர்வார் என்கின்றது.

முழுமக்கள் = அறிவிலாதார். படுநரகு = பெரிய நரகம்.

4 ஆனை யடியுள் அடங்கா தனவில்லை
ஏனையவற் றடிகள் யாவையும் –ஊனுயிர்க்
கொல்லா வறத்தின் கொழுநிழ லுட்பட்டாங்
கெல்லா வறனு மியைந்து. 322

[பாரதம்]

**குறிப்புரை :**

எல்லா அறங்களும் கொல்லாமை என்னும் அறத்தினுள் அடங்கிவிடும் என்பது.

ஆனையடி = யானையின் பாதத்தின் பரப்பளவு.

[இன்னிசை வெண்பா]

5 அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலும் குற்றம்
சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்
கொலைப் பாலுங் குற்றமே யாம். 323

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

பின்னர்க் கொன்றுண்பதற்காக ஒரு உயிரை வளர்த்தலும் விலை கொடுத்துப் பெற்று ஊன் உண்ணுதலும், சொல்லத் தகாதன சொல்லலும், பிறவாறு உயிர்களைக் கொல்லுதலும் குற்றமேயாம்.

அலைப்பான் = கொல்லுதற் பொருட்டு. ஆக்கல் = வளர்த்தல்

[கலிவிருத்தம்]

6 கொன்றவன் குறைத்தவன் கொணர்ந்து விற்றவன்
ஒன்றிய பொருள் கொடுத் துவந்து கொண்டவன்
நன்றிது வென்றவன் விருப்பிற் பெய்தவன்
என்றிவ ரறுவரும் நரக மெய்துவார். 324

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

ஒரு உயிரைக் கொன்றவன் முதலாய இவ் அறுவரும் நரகம் எய்துவர் என்கின்றது.

பெய்தவன் = அதனைத் தந்தவன்

[கலிவிருத்தம் வேறு]

7 அறம்பெரிய கூறின் னலங்கலணி வேலோய்
மறம்புரிகொள் நெஞ்சம் வழி யாப்புகுதந் தீண்டிச்
செறும்பெரிய தீவினைகள் சென்றுகடி தோடி
உறும்பெரிய துன்பம் உயிர்க்கொலையும் வேண்டா.
325

**குறிப்புரை :**

உயிர்க்கொலை எல்லாப் பாவங்களிலும் பெரியது என்பது

புகுதந்து = புகுந்து   செறும் = அழிக்கும்
உறும் = அடையும்

[கலிவிருத்தம் வேறு]

8 மங்கை மஞ்வனைய மென்சூல் மடவுடம்பு
செக்கண் வரிவரால் செந்நீ ரிளவாளை
வெங்கருனை புல்லுதற்கு வேறுவேருக் குறைப்ப
அங்காந் தழுகின்ற தார்கண்ணே நோக்குமே. 326

**குறிப்புரை :**

உயிர்களைச் சமைத்துண்பதற்காக அவற்றைக் குறைக்குங்கால் அவை அழுதல் உண்பவர் சமைப்பவரையும் நோக்கும் ஆதலால் கொலைப்பாவம் அவரையும் சூழும் என்பது.

மஞ = வயிறு.   கருனை = உண்ணும் கறி
குறைப்ப = வெட்டுமிடத்து   அழுகின்ற தீவினை என்க.

[அறுசீர் விருத்தம்]

9 வயிரமுள் நிரைத்து நீண்ட
வார்சினை இலவ மேற்றிச்
செயிரிற்றீ மடுப்பர் கீழாற்
சென்னுனைக் கழுவி லேற்றி
மயிருக்கொன் ருக வாங்கி
யகைத் தகைத்திடுவர் மன்னு
உயிரைப்பே துறுத்தும் மாந்தர்
உயிரைப்பே துறுக்கு மாறே. 327

**குறிப்புரை :**

உயிரைக் கொன்று வருத்தியவரை நரகத்தில் வயிரமுள்ளாற் குத்தி இலவத்தில் ஏற்றிச் சுற்றிலும் நெருப்பிட்டுக் கொளுத்திக் கொன்ற விலங்கின் ஒரு மயிருக்கு ஒரு தசைக் கூருக அறுத் தறுத்துப் போடுவர் என்கின்றது.

தகைத்திடுவர் = அறுத்துப் போடுவர்.

10 சிலையினல் மாக்கள் கொன்று
செழுங்கடல் வேட்ட மாடி
வலையினன் மீன்கள் வாரி
வாழுயிர்க் கூற்ற மான
கொலைநரைக் கும்பிதன் னுட்
கொந்தழல் அழுத்தி யிட்டு
நலிகுவர் நாளும் நாளும்
நரகரை நாம வேலோய். 328

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

வில்லாலும் வலையாலும் வேட்டையாடி உயிர்களைக் கொன்ற பாவியரை நரகத்திலிட்டுக் கொளுத்துவர் என்கின்றது.

சிலை = வில். மாக்கள் = விலங்குகள்

கும்பி = நரகம். நலிகுவர் = துன்புறுத்துவர்

[கலிவிருத்தம்]

11 உலகுடன் விளங்கஉயர் சீர்த்திநிலை கொள்ளின்
நிலையில்கதி நான்கிடை நின்றுதடு மாறும்
அலகில்துயர் அஞ்சினுயிர் அஞ்சவரும் வஞ்சக்
கொலை யொழிமின் என்றுநனி கூறினர்அறிந்தார். 329

[வளையாபதி]

**குறிப்புரை :**

பிறவித் துன்பத்தை நீக்கி நிலைபெற விரும்புவோர் கொலைப் பாவத்தைச் செய்யாதொழிக என்கின்றது.

கீர்த்தி = புகழ். கதி = பிறப்பு

அஞ்சின் = அஞ்சுவாராயின்.

[அறுசீர்விருத்தம்]

12 கொன்றுயிர் நடுங்கச் சென்று
கொலைத்தொழிற் கருவி யேந்தி
நின்றெரி தொடங்கு கண்ணுற்
பாவமே நினைந்து செத்தார்
சென்றெரி நரகில் வீழ்வார்
செய்வன துன்ப மஞ்சி
நன்றியில் கொலையின் நீங்கி
நற்றவம் புரிமின் என்றான். 330

**குறிப்புரை :**

கொலைத் தொழிற் கருவி ஏந்துயவர் பாவமே நினைந்து செத்தாராவார் அதனை நீக்கித் தவம் புரிக என்கின்றது.

[கலிவிருத்தம்]

13 கொலையின் நீங்குமின் கொண்மி னுலகினுட்
டலைவன் நல்லறம் தக்க தெனவுவந் (து)
அலையின் நீங்கிய அவ்வுல கெய்துதல்
முனிவர் சொன்ன முடிவது வாகுமே. 331

[சூளாமணி]

**குறிப்புரை :**

சுவர்க்கம் எய்துதல் வேண்டின் கொலையைத் தவிருங்கள் என்பது முனிவர் கூறிய முடிபாகும்.

தலைவன் = இறைவன். அலை = துன்பம்
அவ்வுலகு = சுவர்க்கம்.

### அதிகாரம்—36

## செல்வம் நிலையாமை

செல்வம் நிலையாமையாவது : பொன் முதலாய பல்வேறு வகைப்பட்ட செல்வங்கள் யாவும் ஒருவர்மாட்டு நிலைபெற நில்லாது மாறும் இயல்பின என்பதாகும்.

[நேரிசை வெண்பா]

1 **யானை யெருத்தம் பொலியக் குடை நிழற்கீழ்ச்**
**சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை**
**வினையுலப்ப வேறுகி வீழ்வர்தாங் கொண்ட**
**மனையாளை மாற்றார் கொள.** 332

**குறிப்புரை :**

பேரரசர்களும் வினைவேறுகின் செல்வத்தை இழந்து மடிவர் என்பது.

எருத்தம் = பிடர். வினைஉலப்ப = நல்வினை நீங்கின்
மாற்றார் = பகைவர்.

[இன்னிசை வெண்பா]

2 **உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்**
**துன்னருங் கேளிர் துயர்துடையான்—கொன்னே**
**வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ**
**இழந்தானென் றெண்ணப் படும்.** 333

**குறிப்புரை :**

பொருளைப் பெற்றவன் தானும் உண்ணாது புகழுக்குரியவற்றையும் செய்யாதிருப்பின் அவற்றை இழந்தவனாவான் என்பது.

ஒளி = வாழுங்காலத்து உண்டாகும் பெருமை.
கேளிர் = சுற்றம்.

[நேரிசை வெண்பா]

3 **உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றும்**
**கொடாஅதும் நல்லறமும் செய்யார்—கொடாஅது**
**வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட**
**உய்த்தீட்டுந் தேனீக் கரி.** 334

**குறிப்புரை :**

உடுக்காமலும் உண்ணாமலும் அறஞ் செய்யாமலும் பொருளை ஈட்டிக் காப்பவர் இழப்பர். அதற்குத் தேனீக்களே சான்றாகும் என்கின்றது.

செற்றும் = வருந்தியும். கரி = சான்று.

4 **செல்வர்யா மென்றுதாம் செல்வுழி எண்ணாத**
**புல்லறி வாளர் பெருஞ்செல்வம்—எல்லிற்**
**கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற் றோன்றி**
**மருங்கறக் கெட்டு விடும்.** 335

[நாலடியார்]

**குறிப்புரை :**

புல்லறிவாளர் செல்வம் மின்னலைப் போல விரைந்து அழிந்து விடும்.

எல்லிற் = பகலில். கருங்கொண்மூ = கரியமேகம்
மருங்கற = சிறிதுமின்றி.

[கலிவிருத்தம்]

5 புண்ணிய முலர்ந்தபின் பொருளி லார்களைக்
கண்ணிலர் துறந்திடுங் கணிகை மார்கள்போல்
எண்ணிலன் இகழ்ந்திடும் யாவர் தம்மொடும்
நண்ணிய நண்பிலன் நங்கை வண்ணமே. 336

**குறிப்புரை :**

புண்ணியம் தீர்ந்தால் திருமகள் நீங்கிவிடுவாள் அதனாற் செல்வம் நிலையாதது என்பது.

உலர்ந்தபின் = வற்றினால். கண்ணிலர் = கருதமாட்டார்
கணிகைமார் = பரத்தையர். நங்கை = திருமகள்.

6 அடிமிசை யரசர்கள் வணங்க ஆண்டவன்
பொடிமிசை யப்புறம் புரள விப்புறம்
இடிமுர சதிரவோர் இளவல் தன்னொடும்
கடிபுகும் அவளது கற்பின் வண்ணமே. 337

**குறிப்புரை :**

புவியெலாம் ஆண்டஅரசன் புழுதியிற் புரள செல்வமகள் பிறனொருவன் மாட்டுசென்று சேர்வாள். இஃது அவள் இயல்பு என்கின்றது.

பொடி = மண்புழுதி. இளவல் = அரசன்
கடிபுகும் = மணங்கொள்ளும். வண்ணம் = தன்மை

[கலிவிருத்தம் வேறு]

7 ஆனை துரப்ப அரவுறை யாழ்குழி
நான விலைபற்றி நாலு மொருவனோர்
தேனை யிழிதுளி நக்கி யனையது
மானுயி ரின்பம் மதித்தனை கொண்ணீ. 338

**குறிப்புரை :**

யானைக்கு அஞ்சிப் பாம்புறையும் குழியிலே நாணலைப் பிடித்துத் தொங்குபவன் சொட்டும் தேன் துளியைச் சுவைப்பதை ஒத்தது செல்வத்தால் வரும் இன்பம் என்பது.

துரப்ப = துரத்திவர. அரவுறைகுழி = பாம்பு இருக்கும் பாழ்ங்கிணறு. நாலும் ஒருவன் = தொங்கிக்கொண்டிருக்கும் ஒருவன். மானுயிரின்பம் = மானிட இன்பம். மதித்தனைகொண்ணீ = நீ அறிந்து கொள்வாயாக

8 **வெற்றிவேன் மணிமுடி வேந்தர் தம்மொடும்**
**உற்றதோ ருரிமைகள் இல்லள் யாரொடும்**
**பற்றிலள் பற்றினர் பாலள் அன்னதால்**
**முற்றுநீர்த் துகிலுடை முதுபெண் நீர்மையே.** 339

[சூளாமணி]

**குறிப்புரை :**

பரத்தையர் யாரிடமும் பற்றிலள். அதுபோலச் செல்வமும் யாரிடத்தும் பற்றி நிற்பதில்லை என்பது

உரிமை = வரைந்துகொண்ட மனையாள்.
இல்லள் = இல்லாத பரத்தை. முதுபெண் = நிலமகளாகிய பெண்.

[அறுசீர்விருத்தம்]

9 முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய
பாலடிசில் மடவா ரேந்த

நல்ல கருனையா னள்வாயும் பொற்கலத்து
நயந்துண் டார்கள்

அல்ல லடைய அடகிடுமின் ஓட்டகத்தென்
றயிலவார் கண்டும்.

செல்வம் நமரங்காள் நினையன்மின்
செய்தவமே நினைமின் கண்டீர். 340

குறிப்புரை :

மடவர் ஏந்தியளிக்கப் பாலடிசில் உண்டோர் தீவினைவர ஓடேந்தி இரந்துண்பதைக் கண்டும் செல்வத்தை நினைப்பது ஏன், செய்தவமே நினைக என்கின்றது

கருனை = கறி. நாள்வாயும் = நாள்தோறும்
அடகு = கீரை உணவு, அயில்வார் = உண்பார்

10 வண்ணத் துகிலுடுப்பின் வாய்விட் டழுவதுபோல்
வருந்து மல்குல்
நண்ணுச்சிறு கூறை பாகமோர் கைபாகம்
உடுத்து நாளும்
அண்ணுந் தடகுரீஇ அந்தோ வினையேயென்
றழுவாட் கண்டும்
நண்ணன்மின் செல்வம் நமரங்காள் நல்லறமே
நினைமின் கண்டீர். 341

குறிப்புரை :

பட்டாடை உடுப்பினும் இடை வருந்துமென வாழ்ந்தவள் ஒருகைபாகம் உடுத்து அடகு உண்டு வருந்துவதைக் கண்டும் செல்வத்தில் பற்றுவைப்பது ஏன் நல்லறமே நினைக என்கின்றது

கூறை = ஆடை. நண்ணல்மின் = நாடாதீர்

[அறுசீர்விருத்தம் வேறு]

11 நல்வினை என்னும் நன்பொற்
கற்பக மகளி ரென்னும்
பல்பழ மணிக்கொம் பீன்று
பரிசில்வண் டுண்ணப் பூத்துச்
செல்வப்பொற் சிறுவ ரென்னும்
தாமங்கள் தாழ்ந்து நின்றது
ஒல்கிப்போம் பாவக் காற்றின்
ஒழிகவிப் புணர்ச்சி யென்றான். 342

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

நல்வினை உள்ளவரை நிற்கும் செல்வம் தீவினைவர ஒழிந்து போகும் அதனால் செல்வம் நிலையாதென்பது

கற்பகம் = கற்பகத்தரு பரிசில்வண்டு = பரிசிலராகியவண்டு தாமம் = மாலை. ஒல்கி = அசைந்து

[கலிவிருத்தம்]

12 வெள்ள மறவி விறல்வேந்தா தீத்தாயம்
கள்வரென் றிவ்வாற்றிற கைகரப்பத் தீர்ந்தகலும்
உள்ளின் உறுபொருளை ஒட்டா தொழிந்தவர்
எள்ளும் பெருந்துயர்நோய் எவ்வம் இகப்பவே. 343

**குறிப்புரை :**

செல்வத்தைக் காத்திருப்பவர்க்குப் பல்வேறு துன்பங்கள் சூழ்ந்து நிற்கும். அதனைத் துறந்தவர்க்கு அத்துன்பங்களில்லை என்கின்றது

வெள்ளம் = நீர்ப்பெருக்கும், தீத்தாயம் = தீய சுற்றத்தார் ஒட்டாதொழிந்தவர் = பற்றுது நீங்கியவர் இகப்ப = நீங்குப

13 ஒழிந்த பிறவறம் உண்டென்பா ருட்க
வழிந்து பிறரவாம் வப்பப் பொருளை
இழந்து சிறிதானும் எய்தா தொழிந்தார்
அழிந்து பெருந்துயர்நோய்க் கல்லாப் பவரே. 344

**குறிப்புரை :**

பொருளை ஈட்டியவர் சிறிது இழப்பு நேரினும் பெருநோய்க்கு ஆளாகித் துன்புறுவர் என்பது

அல்லாப்பவரே = அலமந்து வருந்துவராவர்

14 இன்மை இழிவாம் உடைமை யுயிர்க்கச்சம்
மன்னல் சிறிதாய் மயக்கம் பெரிதாகில்
புன்மை யுறுக்கும் புரையி லரும்பொருளைத்
துன்னு தொழிந்தார் துறவோ விழுமிதே. 345

**குறிப்புரை :**

பொருளின்மை இழிவாகும்—பெரும்பொருளுடைமை உயிர்க்கு அச்சமாம். அதனாற் புன்மையுடைய பொருளைத் துறப்பதே சிறந்தது என்பது

மன்னல் = நிலைபெறுதல் புரையில் = சிறப்பில்லாத
துன்னது = நெருங்காமல் ஒழிந்தார் = நீங்கினர்

15 ஈண்ட லரிதாய்க் கெடுத லெளிதாகி
நாண்டல் சிறிதாய் நடுக்கம் பலதரூஉம்
மாண்பி லியற்கை மருவிலரும் பொருளை
வேண்டா தொழிந்தார் விறலோ விழுமிதே. 346

**குறிப்புரை :**

ஈட்டுதற்கரிதாய் கெடுதற்கு எளிதாய்த் துன்பம் பலவுந்தரும் செல்வத்தைத் துறத்தலே சிறந்ததென்கின்றது
ஈண்டல் = ஈட்டுதல் நாண்டல் = நிலைத்தல்

16 இல்லெனின் வாழ்க்கையும் இல்லையுண் டாய்விடின்
கொல்வர் கயவர் கொலப்பட்டும் வீடுவர்
இல்லையுண் டாய்விடின் இம்மை மறுமைக்கும்
புல்லென்று காட்டும் புணர்வது மன்றே. 347

[வளையாபதி]

**குறிப்புரை :**

பொருளில்லையாயின் வாழ்க்கையில்லை. உண்டாயின் கயவர் துன்புறுத்துவர். தாம் விரும்பியபோது கைகூடுவதுமில்லை. ஆதலின் அதன்கண் பற்றுவையாதிருத்தலே நன்று என்பது
இல்லையுண்டாய்விடின் = வறுமையுறின்

17 பெற்றவை பெற்றுழி யருந்திப் பின்னரும்
மற்றுமோ ரிடவயின் வயிறு தானிறைத
திற்றைநாள் கழிந்தனம் என்று கண்படும்
ஒற்றைமா மதிக்குடை யரசு முண்டரோ. 348

[நந்தா சரிதை]

**குறிப்புரை :**

அரசாண்டவர் அதனை இழந்து இரந்து வயிறு நிறைத்து இன்றைப்பொழுது கழிந்தது எனப் போயினரும் உண்டு என்கின்றது

பெற்றவை = பெற்ற உணவை. கண்படும் = சோர்ந்துறங்கும்

[ஆசிரியப்பா]

18 அரையது துகிலே மார்பின தாரம்
முடியது முருகு நாறுந் தொடையல்
புடையன பால்வெண் கவரியின் கற்றை
மேலது, மாலை தாழ்ந்த மணிக்காற்றனிக் குடை
முன்னது முரசு முழங்குந் தானை
இந்நிலை இனைய செல்வத் தீங்கிவர்
யாவ ரேயோ தேவ ரல்லர்
இமைப்பதுஞ் செய்தனர் மாந்த ரேயென
மயக்கம் நீங்கக் களிற்று மிசைவந்தனர்
நெருந லின்றிவர் பசிப்பிணி காய்தலின்
உணங்கிய துணியு முடுத்து
மாசுமீப் போர்த்த யாக்கையொடு
தாமே யொருசிறை யிருந்தனர் மன்னே. 349

[ஆசிரிய மாலை]

**குறிப்புரை :**

இவர் தேவரோ அரசரோ என நேற்றுத்தானையொடு யானைமீது வந்தவர் இன்று பசிப்பிணி வருத்தநைந்த ஆடையை உடுத்திப் புழுதி நிறைந்த உடம்போடு முடங்குகின்ற நிலை இரங்கத்தக்கது என்கின்றது

அரை = இடை ஆரம் = மாலை தொடையல் = மாலை
புடை = பக்கம் இனைய = இத்தகைய இமைப்பதும் செய்தனர் = கண்ணிமைத்தலைச் செய்தனர் அதனால்
மாந்தரே = மானிடரே நெருநல் = நேற்று மாசு = அழுக்கு
ஒருசிறை = ஒருபக்கம்

**அதிகாரம்—37**

# இளமை நிலையாமை

இளமை நிலையாமையாவது : மக்கள் யாக்கையின் ஏழில் இளமை அவ்வாறே நீடியாது மாறி முதுமை எய்தும் என்பதாகும்.

[நேரிசை வெண்பா]

**1 நரைவருமென் றெண்ணி நல்லறி வாளர்**
**குழவி யிடத்தே துறந்தார் — புரைதீர்ந்த**
**மன்னா இளமை மகிழ்ந்தாரே கோலூன்றி**
**இன்னாங் கெழுந்திருப் பார். 350**

**குறிப்புரை :**

உடல் முதிர்ந்து கோலூன்றித் துன்புறுதலை வெறுப்போர் இளமைக் காலத்தே துறந்து நலமுறுவார் என்பது
குழவி = இளமைப் பருவம் மன்னா = நிலையில்லாத

[இன்னிசை வெண்பா]

**2 வெறியயர் வெங்களத்து வேல்மகன் பாணி**
**முறியார் நறுங்கண்ணி முன்னர் தயங்க**
**மறிகுள குண்டன்ன மன்னா மகிழ்ச்சி**
**அறிவுடை யாளர்கண் இல். 351**

**குறிப்புரை :**

தன்னைப் பலியிடுதற்கு முழங்கும் பறையென அறியாத ஆடு அதனை மகிழ்ந்து தழையைத் தின்பதுபோல அறிவிலார் இளமைப் பருவத்தை மிகிழ்வர் அறிவுடையார் மகிழார் என்பது
வெறி = வெறியாடல் வேல்மகன் = வெறியாடும் வேலன்
பாணி = பறை முறி = இலை கண்ணி = மாலை
மறி = ஆடு குளகு = தழை உணவு

**3 தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்று**
**விழாவிறக்கும் இவள் மாட்டும் — காழிலா**
**மம்மர்கொள் மாந்தர்க் கணங்காகும் தன்கைக்கோல்**
**அம்மனைக்கோ லாகிய ஞான்று. 352**

**[நாலடியார்]**

[கலிவிருத்தம்]

4 கடிமாலை சூடிக் கருப்பூர முக்கித்
தொடைமாலை மென்முலையார் தோள்தோய்ந்த மைந்தர்
கடைமாலை மற்றவரே கண்புதைப்பச் செல்லும்
நடைமாலைத் திவ்வுலகம் நன்றரோ நெஞ்சே. 353

**குறிப்புரை :**

மணமாலை சூடி இளமைக்கண் மாதரொடு மகிழ்ந்தவர் அவர் கண்புதைத்து அழப் பிணமாலைச்சூடிச் செல்வதைக் கண்டும் இவ்வுலகம் இளமை நிலையாதது என்பதை அறியவில்லையே என்பது

கடிமாலை = மணமாலை கடைமாலை = பிணமாலை
நடைமாலை = நடைபெறுந் தன்மை

5 முருந்தனைய தூமுறுவல் முற்றிழையார் சேரி
இருந்திளமைக் கள்ளுண் டிடைதெரித லின்றிக்
கருந்தலைகள் வெண்டலைக ளாய்க்கழியு முன்னே
அருந்தவமும் தானமும் ஆற்றுமினோ கண்டீர். 354

**குறிப்புரை :**

இளமை கழிவதன்முன் தானமும் தவமும் புரிந்து பயன் பெறுதல் வேண்டுமென்பது.

முருந்து = மயிலிறகின்அடி முறுவல் = பற்கள்
இடைதெரிதல் = வேறுபாடுணர்தல்.
வெண்டலை = மண்டைஓடு.

[அறுசீர்விருத்தம்]

6 மைதிரண்ட வார்குழல்மேல் வண்டார்ப்ப
மல்லிகைமென் மாலை சூடிக்
கைதிரண்ட வேலேந்திக் காமன்போற்
காரிகையார் மருளச் சென்றார்

ஐதிரண்டு கண்டங்கு ரைப்பவோர்
தண்டுன்றி யறிவிற் றள்ளி
நெய்திரண்டாற் போலுமிழ்ந்து நிற்கும்
நிலைமையோ நிலையா தேகாண். 355

**குறிப்புரை :**

மகளிர் விரும்புமாறு காமனைப்போல இருந்தவர் முதிர்ந்து இருமிக் கோழையை உமிழ்ந்து நடுங்கி நிற்பதைக் காணு கின்றோ மாதலின் இளமைநிலையாமையை அறிகஎன்பது.

மைதிரண்ட = கார்மேகம் போலத் திரண்ட குழல் = கூந்தல் மருள = மனம்மயங்க. ஐ சிலேட்டுமம் (கோழை) தள்ளி = கெட்டு

[கலிவிருத்தம்]

7 இன்புகை யார்ந்த விழுதார்மென் பள்ளிமேல்
அன்புருகு நல்லார்வர் தோன்மேற் றுஞ்சிலுர்
தம்புலன்கள் குன்றித் தளரத்தங் காதலார்
அன்புருகு கண்புதைத்தாங் ககல்வர் நெஞ்சே. 356

**குறிப்புரை :**

நறுமணப் புகைசூழப் பள்ளியிற் கிடந்து இன்பந்துய்தவரும் இளமை நீங்கி மற்றவர் அழ இறந்துபடுதல் இயற்கை என்பது.

இழுது = வெண்ணை பள்ளி கட்டில். காதலார் = மனைவி முதலானோர். அகல்வர் = வெறுத்து நீங்குவர்.

[அறுசீர் விருத்தம்]

8 நீனிலங்கொண்ட டைம்பால் நிழல்மணியுருவ நீங்கிப்
பானிறங் கொண்டுவெய்ய படாமுலை பையிற் றூங்கி
வேனிறமழைக் கண் தாழும் இமைகுறைந் தழுகிமேனி
தானிறங்கரக்குங் காலந்தையலீர்மெய்ய தன்றே 357

**குறிப்புரை :**

கூந்தல் நரைத்து மேனி தளர்வதன்முன் துறந்துபயன் கொள்க என்பது

நீல்நிறம் = நீலமணிபோலும் நிறம் பால்நிறம் = பால் போல வெளுத்த நிறம். தூங்கி = தளர்ந்து தொங்கி. கரக்கும் = கெட்டு நீங்கும்.

[கலிவிருத்தம்]

9 **ஊன்சே ருடம்பென்னும் ஓங்கன்மாச் சோலை**
**தான்சேர் பிணியென்னும் செந்தீக் கொடிதங்கிக்**
**கான்சேர் கவினென்னும் காமர் மலர்வாடத்**
**தேன்சேர் மலர் மார்பதீத்திட்டி றக்குமே.** 358

*[சீவகசிந்தாமணி]*

**குறிப்புரை :**

உடம்பென்னும் சோலை பிணி என்னும் கொடிய தீயானதைப் பற்றி அழகை வாட்ட இறந்துவிடும் என்பது

ஊன் = தசை ஓங்கல் = மலை கான் = நறுமணம்

[வேறு]

10 **வேற்கண் மடவார் விழைவொழிய யாம்விழையக்**
**கோற்கண் நெறிகாட்டக் கொலகூற் றுண்டிழயதா**
**நாற்ப திகந்தால் நரைத்தூது வந்ததினி**
**நீத்தல் துணிவாம் நிலையா திளமையே.** 359

*[வளையாபதி]*

**குறிப்புரை**

நாற்பது வயதுவர நரையாகிய தூதுவரும். கோல்கண்ணாக நடக்க இளமை நீங்கும் அது நிலையாது என்பது

விழைவு = விருப்பம் நெறி = வழி கூற்று = யமன்
நீத்தல் = இறத்தல் துணிவு = உறுதி

[ஆசிரியப்பா]

11 இனிநினைந் திரக்க மாகின்று திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇ
தண்கய மாடும் மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமில் ஆயமொடு
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிக
கரையவர் மருள திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்று
இரும் இடைமிடைந்த சில சொற்
பெரு மூதாளரே மாகிய வெமக்கே.

[புறநானூறு]

**குறிப்புரை :**

மகளிரொடு கைப்பிணைத்து நீராடி நீந்தி மணலெடுத்து விளையாடிய இளமை நீங்கித் தண்டூன்றி இருமலுக்கு இடையே சில சில பேசி நடுங்கும் முதுமை வந்துற்றது. அந்தோ அந்த இளமை எங்குச் சென்றது. அது இரங்கத்தக்கது என நரை மூதாளர் ஒருவர் கூற்றாக அமைந்த பாடல் இது.

தைஇ = சூட்டி கயம் = நீர்நிலை மாயமில் ஆயம் = வஞ்சனை இல்லாத தோழியர் படிகோடு = படிந்த மரக் கிளைகள் குட்டம் = ஆழம் தண்டு = கைக்கோல் இருமிடைமிடைந்த = இருமலோடு கூடிய சொல் = பேச்சு.

12 யாணர் வரவின் மேனாள் ஈங்கிவன்
இளமைச் செவ்வி நயந்த பேதையர்
காத லுண்கண் வருபனி நீங்கி
இன்னுந் துயில்கொண் டிலவே இன்றிவன்
போர்வை பசையற வுணங்கிப் பாணர்
பழந்தலைச் சீறியாழ் போலக் குரலழிந்து
நரம்பு மடித்தியாத்த யாக்கை மூப்புறப்
பதிகெழு மூதூர் மன்றத்துப்
பொதியிற் புறஞ்சிறைச் சார்ந்தனள் மன்னே. 361

[ஆசிரிய மாலை]

**குறிப்புரை :**

இவனுடைய இளமைக் காலத்து இவன் வரவுநோக்கிக் காதலால் உறங்காத மகளிரொடு கிடந்தவன் இந்நாள் தோல் திரைந்து குரலழிந்து மூப்புற்று ஊர்மன்றத்து மரத்தின் ஒரு பக்கத்தே கிடக்கின்றான் என்னேஎன இரங்கிக் கூறியது.

யாணர் = புதுமை செவ்வி = பருவம் பனி = உவகைக் கண்ணீர் போர்வை = உடம்பின் தோல் உணங்கி = வற்றி பொதியில் = மரத்தின் கீழமைந்த மேடை சிறை = பக்கம் சார்ந்தனன் = சார்ந்து கிடக்கின்றனன்.

அதிகாரம்—38

## யாக்கை நிலையாமை

யாக்கை நிலையாமையாவது : என்பு தோல் நரம்பு முதலிய வற்றான் யாப்புற்று அமைந்த உடம்பு நிலைபேறுடையதன்று என்பதாகும்.

[நேரிசை வெண்பா]

1 மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்
எஞ்சினார் இவ்வுலகத் தில். 362

**குறிப்புரை :**

குடை நிழலமர்ந்து உலகை யாண்டவரும் இறந்தார் என்ப தன்றி இறவாதுள்ளோர் என்பது இவ்வுலகத்தில் எங்குமில்லை. ஆதலால் யாக்கை நிலையாமை உணரப்படும்

துஞ்சினூர் = இறந்தார் எஞ்சினூர் = இறவாது வாழ்ந்தார்.

2 மன்றங் கறங்க மணப் பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலும் உண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமாம் மாண்டார் மனம். 363

**குறிப்புரை :**

மன்றத்தில் ஒலிக்கும் மணப்பறையே பின்னர்ப் பிணப்பறை யாக ஒலித்தலும் உண்டாம் என மாட்சிமையுடையார் எண்ணி வருந்துவர் என்பது

கறங்க = ஒலிக்க வலிக்கும் = உடம்பின்கண் பற்று நீங்கு தலை உறுதி செய்யும்

3 புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினி யேசெய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றான் எனப்படுத லால். 364

**குறிப்புரை :**

இருந்தான் இடந்தான் இறந்தான் எனப்படுதலான் புல் நுனியின்கண் உள்ள நீர்போல யாக்கை நிலையாமையுடையது என்பதை உணர்ந்து இப்பொழுதே அறவினைகளைச் செய்து பயன் பெறுக என்பது

கேள் அலற = சுற்றத்தார் வருந்தி அழ
சென்றான் = இறந்தான்

4 கேளாதே வந்து கிளைகளாய் இற்றோன் றி
வாளேதே போவரால் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து. 365

[நாலடியார்]

குறிப்புரை :

மரத்தின்கண் உள்ள பறவைகள் அதனைவிட்டு நீங்கிச் செல்லுதல் போலக் கிளைஞரிடத்து உடம்பை விடுத்து உயிர் நீங்கி விடும் என்பது

புள் = பறவை யாக்கை - உடம்பு நீத்து = விட்டுநீங்கி

5 ஆயா தறிவறிந் தல்லா லகலிடத்து
மாயா நிதியம் மனைச்செறீஇ—ஈயா
திறுகப் பொதியன்மின் இன்றொடு நாளை
குறுகப் படுமரோ கூற்று. 366

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

யமன் இன்றோநாளையோ என நெருங்கி நிற்கின்றான் ஆதலின் செல்வத்தை ஈயாமல் இறுகப் புதைத்து வையாதீர் என்பது

அகலிடத்து = உலகத்து செறீஇ = செறித்து
பொதியன்மின் = புதைத்து வையாதீர் குறுகப்படும் = நெருங்கிவரும் கூற்று = யமன்

6 சென்றநா ளெல்லாம் சிறுவிரல்வைத் தெண்ணலாம்
நின்றநாள் யார்க்கும் உணர்வரிது — என்றொருவன்
நன்மை புரியாது நாளுலக்க விட்டிருக்கும்
புன்மை பெரிது புறம். 367

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

இனிவாழும் நாள் இந்துணை எனயாரும் அறிந்து கொள்ளுதல் அரிதாகலான் அறத்தைப் புரியாமல் நாளை வீணுக்காதீர் என்பது

நின்றநாள் = இனி வாழ்வதற்கு எஞ்சி நின்ற காலம்.
உலக்க = வீணேகழிய புன்மை = இழிவு

[கலித்துறை]

7 தேங்கொள்பூங் கண்ணித் திருமுடித்த திலகவெண்
குடையோய்
ஈங்கி தன்றியும் இமையவர் அமையலர்க் கடந்த
தாங்குமா வண்கைச் சக்கரம் மிக்குயர் பிறரும்
யாங்கணூரவர் ஊரொடு பேரெமக் குரையாய். 368

**குறிப்புரை :**

சக்கரத்தைச் செலுத்தித் தேவரை வென்ற வேந்தரும் இறந்து பட்டனர் ஆதலால் யாக்கை நிலையாது என்பது

இமையவர் = தேவர் அமையலர் = பகைவர் பிறர் = பிறவேந்தர் யாங்கணூர் = எவ்விடத்துள்ளார்

8 இன்ன தன்மையி னருமையின் எய்திய பொழுதே
பொன்னும் வெள்ளியும் புணர்ந்தெனயிற்றவர் பொருந்தி
மின்னும் மொக்குளும் என தனி வீயினும் வீயும்
பின்னை வெண்ணெயிற் றிரண்டபின் பிழைக்கவும்
பெறுமே. 369

**குறிப்புரை :**

பொன்னும் வெள்ளியும் சுரோணிதம் சுக்கிலமாகிய உடம்பின் கருப்பொருளை உணர்த்தி நின்றன
மொக்குள் = நீர்க்குமிழி வீயினும் = அழியினும்

9 வெண்ணெ யாயது வீங்குபு கூன்புற யாமை
வண்ண மெய்தலும் வழுக்கவும் பெருமது வழுக்கா
தொண்மைவான் மதியுருவொடு திருவெனத் தோன்றிக்
கண்ண னூழக் கவிழினும் கவிழுமற் றறிக. 370

**குறிப்புரை :**

கரு, யாமை வண்ணமெய்தலும்—ஆமையின் தன்மையைப் பெற்ற அளவிலே அது கெடினும் கெடும். இன்றேல் பெற்றோர் வருந்தியழமாயினும் மாயும் என்பது.

10 அழிதலின்றியங் கருநிதி யிரவலர்க கார்த்தி
முழுதும் பேர்பெறு மெல்லையுள் முரியினும் முரியும்
வழுவில் பொய்கையுள் மலரென வளர்ந்து மையாடிக்
கெழீஇயி னொரொடும் கிளையழக் கெடுதலும் கெடுமே.
371

**குறிப்புரை :**

பின்னர் இரவலர்க்குக் கொடுத்துப் புகழ் எய்துங்கால் அழியினும் அழியும் அன்றி மனைவியும் சுற்றமும் அழப்பின்னர்க்கெடினும் கெடும் என்பது

11 கெடுதலவ்வழி யில்லெனிற் கேள்விகள் துறையோய்
வடிகொள் கண்ணியர் மனங்குழைந்த
நங்கனென் றிரங்கக்
கொடையுங் கோலமுங்குழகுந்தம் மழகுங்கொண்டேத்த
விடையிற் செல்வுழி விளியினும் விளியுமற்றறிநீ
372

**குறிப்புரை :**

அன்றிக் கல்வியிற் சிறந்து மகளிரைத்துய்த்தும் கொடையும் கோலமும் எய்தி ஊர்தியில் உலாவரும் காலத்திற் கழியினும் கழியும் என்பது

12 எரிபொன் மேகலை இலங்கரிச் சிலம்பொடு சிலம்பும்
அரிபொற்கிண்கிணியணியிழையரிவையர்ப்புணர்ந்து
தெரிவில் போகத்துக் கூற்றுவன் செகுத்திடச் சிதைந்து
முரியும் பல்சன முகம்புடைத் தகங்குழைந் தழவே.
373

**குறிப்புரை :**

அன்றி அரிவையரைக் கூடிக்களித்து வாழுங்காலத்துச் சுற்றத்தார் வருந்தியழக் கூற்றுவன் சிதைக்க அழியினும் அழியும் என்பது.

13 கோதைமங்கையர் குவிமுலைத்தடத்திடைக்குளித்துக்
சாதன் மக்களைக் கண்டு வந்தினிதினிற் கழிப்பப்
பேது செய்பிணிப் பெரும்புலி பாய்ந்திடப் பிணமாம்
ஓதமாக்கட லுடைகலத் தவருற்ற துறவே. 374

**குறிப்புரை :**

அன்றேல் மனைவி மக்களொடு உவந்துவாழுங்கால் பிணிகள் வந்து நலியப் பிணமாக ஒழியினும் ஒழியும் என்பது.

14 காமம் பைப்பயக் கழியத்தங் கடைப்பிடி சுருங்கி
ஊமர் போலத்தம் உரையவிந்துறுப்பிணி லுரையாத்
தூய்மையில் குளந்தூர்ப்பு விட்டார்பொருளுணர்த்தி
ஈமமேறுதல் ஒருதலை இகலமர் கடந்தோய். 375

**குறிப்புரை :**

எவ்வாறுயினும் உடம்பு முதிர்ந்து பிணி வருத்திட இறுதியில் சுடுகாடு செல்லுதல் உறுதி என்பது.

[அறுசீர்விருத்தம்]

15 பேதைமை என்னும் வித்திற்
பிறந்துபின் வினைக ளென்னும்
வேதனை மரங்கள் நாறி
வேட்கைவேர் வீழ்ந்து முற்றிக்
காதலுங் களிப்பு மென்னும்
கவடுவிட் டவலம் பூத்து
மாதுய ரிடும்பை காத்து
மரணமே கனிந்து நிற்கும். 376

**குறிப்புரை :**

உடம்பினை ஒரு மரமாக உருவகஞ்செய்து கூறுகின்றது இப் பாடல்.

பேதைமை = அறியாமை நாறி = மணம் வீசி
வேட்கைவேர் = விருப்பமென்னும் வேர் கவடு = கிளை

16 **பிறந்துநாம் பெற்ற வாளுள்**
**இத்துணை என்ப தொன்றும்**
**அறிந்திலம் வாழ்தும் என்னும்**
**அவாவினுள் அழுந்து கின்றோம்**
**கறந்துகூற் றுண்ணும் ஞான்று**
**கண்புதைத் திரங்கி னல்லால்**
**இறந்தநாள் யாவர் மீட்பார்**
**இற்றெனப் பெயர்க்க லாமோ.** 377

**குறிப்புரை :**

வாழ்நாள் அளவு அறிய இயலாதது என்கின்றது.
உண்ணும்ஞான்று = அகப்படுத்துங் காலத்து இற்று = இவ்வளவினது பெயர்க்கலாமோ = மீட்க இயலுமோ.

[கலிவிருத்தம்]

17 **உடற்றும் பிணித்தீ உடம்பின் உயிர்பெய்திட்டு**
**அடுத்துணர்வு நெய்யாக ஆற்றறுவை யாகக்**
**குடித்துண்ணுங் கூற்றங் குடில்பிரியா முன்னே**
**கொடுத்துண்மின் கண்டீர் குணபுரிமின் கண்டீர்.**
378

**குறிப்புரை :**

கூற்றுவன் உயிரைப் பிரித்துக்கொண்டு செல்வதற்கு முன் பகுத்துண்டு நல்லன செய்மின் என்கின்றது

உடற்றும் = துன்புறுத்தும் குடில் = உடம்பு

18 உழந்தாலும் புத்தச் சொன்றிட் டூர்தல்தேற்றது
இழந்தார் பலரால் இடும்பைநீர் யாற்றுடன்
அழுந்துமா லப்பண்டி யச்சிறு முன்னே
கொளுஞ்சீலம் கூலியாக் கொண்டூர்மின் பாகீர். 379

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை :

உடம்பினைச் சகடமாக உருவகம் செய்து கூறுகின்றது
புத்தச்சு = புதிய அச்சாணி பண்டி = சகடம்
சீலம் = நற்பண்பு

[அறுசீர்விருத்தம்]

19 போதர உயிர்த்த வாவி
புகவுயிர்க் கின்ற தேனும்
ஊதிய மென்று கொள்வர்
உணர்வினன் மிக்க நீரார்
ஆதலால் அழிதன் மாலைப்
பொருள்களுக் கழிதல் வேண்டா
காதலான் அழுது மென்பார்
கண்ணணி களைய லுற்றார். 380

குறிப்புரை :

அழியும் உடம்பு முதலாய பொருள்களுக்காக அழுதல் பயனில்லை என்கின்றது
ஆவி = உயிர் அழிதன்மாலை = அழியும் தன்மையுடைய

20 அரவின மரக்க ராளி
யவைகளும் சிறிது தம்மை
மருவினாற் றீய வாகா
வரம்பில் காலத்துள் என்றும்
பிரிவில மாகித் தன்சொல்
பேணியே ஒழுகும் நங்கட்
கொருபொழு திரங்க மாட்டாக்
கூற்றின்யார் உய்து மென்பார். 381

**குறிப்புரை :**

அரவு முதலாயின அணுகினும் பிழைத்தல் கூடும் கூற்றுவன் வரின் உய்ய இயலாது என்கின்றது

அரவு = பாம்பு ஆளி = அரிமா உய்து = பிழைப்போம்

21 **பாளையாந் தன்மை செத்தும்**
**பாலனாந் தன்மை செத்தும்**
**காளையாந் தன்மை செத்தும்**
**காமுறு மிளமை செத்தும்**
**மீளுமிவ் வியல்பும் இன்னே**
**மேல்வரும் மூப்பு மாகி**
**நாளும்நாட் சாகின் றாமால்**
**நமக்குநாம் அழாத தென்னே.** 382

**குறிப்புரை :**

குழவிப்பருவம் முதலாய ஒவ்வொரு பருவமும் செத்துப்போதலை அறிந்தும் அவற்றிற்கு அழாமல் இறப்புக்கு அழுதல் என்னே! என்கின்றது

பாளையாம்பருவம் = குழவிப்பருவம் நாளும்நாள் = நாள் தோறும் சாகின்றாமால் = செத்துக்கொண்டுள்ளோம்

22 **கோள்வலைப் பட்டுஞ் சாவாம்**
**கொலைக்களங் குறித்துச் சென்றே**
**மீளினும் மீளக்காண் டும்**
**மீட்சியொன் றானு மில்லா**
**நாளடி யிடுதல் தோன்றும்**
**நம்முயிர் பருகுங் கூற்றின்**
**வாளின்வாய்த் தலைவைப் பாக்குச்**
**செல்கின் றேம் வாழ்கின் றேமோ.** 383

[குண்டலகேசி]

**குறிப்புரை :**

நடந்து செல்லும் வாழ்க்கை என்பது கூற்றுவன் வாளை நோக்கித் தலை வைப்பதாகும் என்கின்றது

நாளடியிடுதல் = வாழ்க்கை நடத்துதல் வைப்பாக்கு = வைக்கும் பொருட்டு.

[ஆசிரியப்பா]

23 உள்ளது காக்குமிக் கள்ள யாக்கை
மேம்படு குற்றம் மூன்றொடு வழங்கலின்
உண்டிநல் லரசு தண்டத்தின் வருத்த
தோன்பிணி யகப்பட் டிருப்பினும்
தோன்றுவது பின்னர்க் காப்பது முன்னே. 384

[ஆசிரிய மாலை]

**குறிப்புரை :**

மூவகைப்பிணிக்குரிய இவ்யாக்கை அழிதல் உறுதி என்கின்றது
குற்றம் மூன்று = ஐ. வளி-பித்து (சிலேஷ்மம், வாதம்-பித்தம்)

**அதிகாரம்—39**

## பல்வகை நிலையாமை

இளமையும் செல்வமும் யாக்கையுமேயன்றி ஆற்றலும் அறிவும் பதவியும் பிறவுமாகிய யாவும் நிலைபேறுடையனவல்ல என்பதாகும்.

[இன்னிசை வெண்பா]

1 சாவாத வில்லைப் பிறந்த வுயிரெல்லாம்
தாவாத வில்லை வலிகளும் —மூவா
இளமை இயைந்தாரு மில்லை வளமையிற்
கேடின்றிச் சென்றாரு மில். 385

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

யாக்கை, செல்வம், இளமை இவை நிலையா என்கின்றது
தாவாதவில்லை = கெடாதன இல்லை மூவா = மூப்புறாத
வளமை = செல்வம்

[நேரிசை வெண்பா]

2 பல்திரண்டு செல்வத்தைப் பார்க்கின் கனவாம்
மலர்திரண் டாற்போலிளமை வாடும்—சிலநிகழ்ந்த
மின்னொக்கு வாழ்நா ளினவற்றை மெய்யென்றிட்
டுன்னாக் களிப்பா ருளர். 386

[பாரதம்]

**குறிப்புரை**

செல்வம் கனவுபோல அழிந்துவிடும் இளமை மலர்போல வாடி விடும். யாக்கை மின்னலைப்போல அழிந்துவிடும் என்கின்றது
மின்னொக்கும் = மின்னுதலை ஒக்கும் உன்னா = உணராமல்
களிப்பார் = மகிழ்வார்

3 இன்றுளா ரின்றேயும் மாய்வர் உடையதும்
இன்றே பிறருடைய தாயிருக்கும்—நின்ற
கருமத்தா லல்லாத கூற்றின்கீழ் வாழாத
தருமந் தலைநிற்றல் சால்பு. 387

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

செல்வமும் உடம்பும் அழிதல் உறுதியாகலின் தருமத்தின் கண்ணே நின்று நன்றாற்றல் அறிவுடைமையாம் என்பது
உடையதும் = செல்வமும் தருமம் = அறநெறி
சால்பு = அறிவுடைமை

[கலிவிருத்தம்]

4 இளமையும் நிலையாவால் இன்பமும் நின்றவல்ல
வளமையும் அஃதேயால் வைகலும் துன்பவெள்ளம்
உளவென நினையாதே செல்கெதிக் கென்றென்றும்
விளைநிலமுழுவார்போல்வித்துநீர்செய்துகொண்மின்
388

[வளையாபதி]

**குறிப்புரை :**

செல்வமுதலாயின் அழியும் இயல்புடையனவாதலின் செல்லுங் கதிக்குரிய அறங்களைச் செய்ம்மின என்கின்றது

வித்துநீர் செய்துகொள்மின் = விளைவித்துக்கொள்ளுவீர்

[அறுசீர் விருத்தம்]

5 இளமையும் எழிலும் வானத்
திடுவிலின் ஈண்டு மாயும்
வளமையும் கிளையும் வாரி
புதியதன் வரவு போலும்
வெளியிடை மின்போல் வீயும்
ஆயுவும் என்று வீட்டுக்
குளபல வூக்கம் செய்வர்
உணர்விறை பெரிய நீரார். 389

[மேருமந்தரபுராணம்]

**குறிப்புரை :**

இளமையும் எழிலும் வானவில்லைப்போல மறைந்துவிடும் செல்வம் புதுவெள்ளம் போல வடிந்துவிடும் உடம்பு மின்னலைப் போல வீழ்ந்துவிடும் ஆதலின் பேருணர்வுடையார் வீட்டு நெறிக்குரியவற்றைச் செய்வார் என்கின்றது

திருவில் = வானவில் வாரி = வெள்ளம் ஆயுவும் = ஆயுளும்

[கலிவிருத்தம்]

6 பண்ணார் களிறேபோல் பா போங் துயர்நாவாய்
கண்ணார் கடல்மண்டிக் காற்றிரக் கவிழுங்காண்
மண்ணார் மணிப்பூணோய் மக்க ளுறுதுன்பம்
நண்ணு நரகத்தின் நான்கா மடியின்றே. 390

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

கடலிலே படகு கவிழ்ந்தால் உறுந்துன்பம் போல் நான்கு மடங்கு நரகத்துன்பமாம் என்கின்றது

பண் = அலங்கரித்தல் நாவாய் = படகு காற்றீர = காற்றுனது வீசாமல் நின்றுபோக

[வேறு]

7 கொலையானை மேலோர் குளிர்வெண் குடைக்கீழ்ப்
பலயானை மன்னர் பலர்போற்ற வந்தான்
மலையாகம் போழாக மற்றவனே சாய்ந்தான்
நிலையாமை சால நிலைபெற்ற தன்றே. 391

**குறிப்புரை :**

செல்வமும் பதவியும் நிலையா என்கின்றது

மலையாகம் = மலைபோன்ற உடம்பு போழாக = பிளவுபட

[அறுசீர்விருத்தம்]

8 எரிபுரை எழிலதாய இளந்தளிர் இரண்டுநாளில்
மரகத வுருவமெய்தி மற்றது பசலைகொண்டு
கருகிலையாகி வீழ்ந்து கரிந்துமண் ணுதல்கண்டும்
வெருவிலர் வாழ்துமென்பார் வெளிற்றினை விலக்லாமே
392

[சூளாமணி]

**குறிப்புரை :**

இளந்தளிர் பின்னர்முற்றிச் சருகாதல் போல இளமை கழிந்து விடும் என்பது

எழில் = அழகு வெருவிலர் = அஞ்சுதலில்லர்
வெளிற்றினை விலக்கலாமோ = அவர் அறியாமையை விலக்க இயலுமோ

[ஆசிரியப்பா]

9 மயங்கிருங் கருவிய விசும்பு முகனாக
இயங்கிய இருசுடர்க் கண்ணெனப் பெயரிய
வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் குறட்டின் வயங்குமணி யாரத்துப்
பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணாச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவும் செல்லா தின்னும்
விலைநலப் பெண்டிரின் பலர்மீக் கூற
உள்ளேன் வாழியர் யானெனப் பன்மாண்
நிலமகள் அழுத காஞ்சியும்
உண்டென உரைப்பரால் உணர்ந்திசி னோரே. 393

[புறநானூறு]

**குறிப்புரை :**

உலகில் தோன்றிய பெரும் பெரும் வேந்தரும் மறைந்துபோவார் என்பதனைத் தன்கண் தோன்றியவரெல்லாம் அழிந்துபடுதலைக் கண்டு நிலமகள் அழுவதாக நயம்படக் கூறுகின்றது இப்பாடல்

கருவி = மழை, இடி, மின்னல் முதலிய தொகுதி. விசும்பு = ஆகாயம் இருசுடர் = ஞாயிறு, திங்கள் நீத்தம் = ஊழிவெள்ளம். முன்சமத்து = போர்க்களத்தின்கண் பொருநர் = போர்செய்யவரும் வீரர் முன்பு = வலிமை விலைநலப் பெண்டிர் = பரத்தையர் பல்மாண் = பலவாறாக காஞ்சி = நிலையாமைநிலை

10 நெருந லென்பது சென்றது நின்ற
இன்றுஞ் செல்லா நின்றமுன் சென்று
ஒருநாள் கண்டவர் யாரே அதனால்
ஒருநா ளகப்படுத் துடையோ ரின்மையின்
இல்லது நாடுமின் உள்ளது கொடுமின்
வாழ்வி லின்பமும் புணர்மின் அஃதான்று
கீழது நீரகம் புகினும் மேலது
விசும்பின் பிடர்த்தலை ஏறினும் புடையது
நேமி மால்வரைக் கப்புறம் புகினும்
கோள்வாய்த்துக் கொட்குங் கூற்றத்து
வீளிக் கொடுநா விலக்குநற் கரிதே. 394

[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

கூற்றுவனை விலக்குதல் அரிதாகலான். அறம்புரிந்து இன்புற்று வாழ்வாங்குவாழ்மின் என்கின்றது

நேமிமால்வரை = சக்கரம்போல உலகைச் சுற்றியுள்ள மலை

கோள் = கொள்ளுதற்கு கொட்கும் = சுழன்று திரியும்

**அதிகாரம்—40**

## தூய்தன்மை

**தூய்தன்மையாவது :** தூய்மை அல்லாமையாகும்.

[இன்னிசை வெண்பா]

1 **மாக்கேழ் மடநல்லரய் என்றரற்றும் சான்றவர்**
**நோக்கார்கொல் நொய்யதோர் துச்சிலை-யாக்கைக்கோர்**
**ஈச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே**
**காக்கை கடிவதோர் கோல்.** 395

**குறிப்புரை :**

உடம்பு அருவருக்கத்தக்க தன்மையுடையது என்கின்றது.

மாக்கேழ் = அழகுபொருந்திய துச்சில் உடம்பு

தோலறினும் = தோல் நீங்கிப் புண்ணாக நிற்பின்

2 **முல்லை முகைமுறுவல் முத்தென் றிவைபிதற்றும்**
**கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவெனோ**
**எல்லாருங் காணப் புறங்காட் டுகுந்துக்க**
**பல்லென்பு கண்டொழுகு வேன்** 396

**குறிப்புரை :**

சுடுகாட்டில் எரிந்து எலும்பாகப்போகும் உடம்பினை மெய்யறிவாளர் பாராட்டமாட்டார் என்பது

கவற்ற = கவலையுற புறங்காடு = சுடுகாடு

3 குடருங் கொழுவும் குருதியும் என்பும்
தொடரும் நரம்பொடு தோலும் — இடையிடையே
வைத்த தடியும் வழும்புமரம் மற்றிவற்றுள்
எத்திறத்தான் ஈர்ங்கோதை யாள் 397

[நாலடியார்]

**குறிப்புரை :**

குளிர்ந்த கூந்தலையுடைய அழகிய பெண் என்பவர் குடர் கொழுப்பு,குருதி,என்பு, நரம்பு, தசையாகிய இவற்றுள் எதைக் கூறுகின்றார் என உடம்பின் இழிதகவைக் கூறுகின்றது.

தடி = தசை  வழும்பு = ஊனீர்.

[அறுசீர்விருத்தம்]

4 என்பினை நரம்பிற் பின்னி
உதிரந்தோய்த் திறைச்சி மெத்திப்
புன்புறந் தோலைப் போர்த்து
மயிர்புறம் பொலிய வேய்ந்திட்
டொன்பது வாயி லாக்கி
ஊன்பயில் குரம்பை செய்தான்
மன்பெருந் தச்சன் நல்லன்
மயங்கினார் மருள வென்றான் 398

**குறிப்புரை :**

என்பு நரம்பு இறைச்சி முதலியவற்றால் ஒன்பது வாயிலை உடையதாக இந்த உடம்பைத் தெய்வத்தச்சன் செய்து மருள வைத்துள்ளான் என்கின்றது

மெத்தி = பூசி, வேய்ந்து = போர்த்து குரம்பை = குடில்
தச்சன் = பிரமன்

5 உருவமென் றுரைத்தி யாயின்
திறைந்ததோல் துருத்தி தன்னை
புருவமும் கண்ணும் மூக்கும்
புலப்பட எழுதி வைத்தாற்

கருதுவ தங்கொன் றுண்டோ
காப்பியக் கவிகள் காம
எரியெழ விகற்பித் திட்டார்
இறைச்சிப்போர் இதனை யென்முன் 399

**குறிப்புரை :**

தோல் துருத்தியாகிய இவ்வுடம்பைக் கவிகள் காமத்தீ எழுமாறு வருணிப்பதல்லால் இறைச்சிக் குவியலாகிய இதன்கண் நன்று என்று கருதுவதற்கொன்றுமில்லை என்பது

எரி – காமத்தீ விகற்பித்திட்டார் – வருணித்தார்

6 மெய்ப்படு சாந்தும் பூவும்
மிகநனி கமழு மேனும்
கைப்படு சாந்தும் பூவும்
கொண்டலாற் கலக்க வாகா
வைப்படு பித்து நெய்த்தோர்
அசும்புசோர் அழுகற் புன்றோல்
பொய்ப்பட உரைத்த துண்டோ
பொன்னனீர் நம்முன் நாமால் 400

**குறிப்புரை :**

ஐயும் பித்தும் குருதியும் தோலுமாகிய உடம்பினைச் சாந்து முதலிய பூசி மணப்படுப்பதல்லால் உடம்பு இழிவுடையதேயாம் என்பது

நெய்த்தோர் – குருதி அசும்பு – ஊன்நீர்

*[கலிவிருத்தம்]*

7 மந்திரம் மருந்திவை யில்லை யாய்விடின்
நந்தலை யரவினை யாவர் தீண்டுவர்
சுந்தரச் சுரும்புசூழ் மாலையில்லை யேல்
மைந்தரும் மகளிரை மருங்கு சேர்கிலார் 401

*[சீவகசிந்தாமணி]*

**குறிப்புரை :**

மந்திரமும் மருந்தும் இல்லையேல் பாம்பினையாரும் தீண்ட மாட்டார் அதுபோல மாலை முதலாய அணிகலன்களால் அழகு செய்துகொள்ள வில்லையாயின் மகளிரை மைந்தர் தீண்ட மாட்டார் என்கின்றது.

சுரும்பு = வண்டு

[அறுசீர்விருத்தம்]

8 நன்கென நாறுமி தென்றிவ்
வுடம்பு நயக்கின்ற தாயின்
ஒன்பது வாயில்கள் தோறும்
உண்ணின் றழுக்குச் சொரியத்
தின்பதோர் நாயு மிழுப்பத்
திசைதொறும் சீப்பில்கு போழ்தின்
இன்பநன் ஞற்ற மிதன்கண்
எவ்வகை யாற்கொள லாமே 402

**குறிப்புரை :**

உயிர்நீத்த உடம்பு வாயில்கள்தோறும் அழுக்குச் சொரியும் தீநாற்றமுடையது என்பது

நயக்கின்ற = விரும்புகின்ற சீப்பில்கு போழ்தின் = சீழ் வடியு நிலைமைக்கண் நாற்றம் = மணம்

9 உறுப்புகள் தாமுடன் கூடி
ஒன்ருய் இருந்த பெரும்பை
மறைப்பில் விழவிற்குச் சார்வாய்
ம[illegible]வ தேலிவ் உறுப்புக்
குறைந்தன [illegible]ல அழுகிக்
கு[illegible]து குறைந்து சொரிய
வெறுப்பிற் கிடந்த பொழுதின்
வேண்டப் படுவது முண்டோ 403

**குறிப்புரை :**

உடம்பு உறுப்புக்கள் கூடியதொரு பையாகும். உறுப்புக்கள் அழுகிக் குறையும் நிலையில் வெறுக்கத்தக்கதாகும் என்கின்றது

மக்குவதேல் = சுருங்கினால் சொரிய = ஊனீர் ஒழுக

10 மாறுகொள் மந்தர மென்றும்
மரகத வீங்கெழு வென்றும்
தேறிடத் தோள்க டிறத்தே
திறத்துளிக் காமுற்ற தாயின்
பாறொடு நாய்க ளசிப்பப்
பறிப்பறிப் பற்றிய போழ்தின்
ஏறிய வித்தசை தன்மாட்
டின்புற லாவதிங் கென்னோ 404

**குறிப்புரை :**

ஆடவர் தோள்களை மலைபோன்றவை தூண் போன்றவை எனக்கூறிக் காமுறுவார் உயிர் நீங்கிய அவ்வுடம்பைப் பருந்துங் கழுகும் பற்றிப் பறிவதைக் காண்பதனால் இன்புறுதல் எவ்வாறு என்கின்றது

மந்தரம் = மந்தரமலை வீங்கெழு = பருத்ததூண் பாறு = கழுகு அசிப்ப = உண்ண தசை = உடம்பு

11 எனதெனச் சிந்தித்த லான்மற்
றிவ்வுடம் பின்பத்துக் காமேற்
றினைப்பெய்த புன்கத்தைப் போலச்
சிறியவு மூத்தவு மாகி
நுனைய புழுக்குலந் தம்மால்
நுகரவும் வாழவும் பட்ட
இனைய உடம்பினைப் பாவி
யானென தென்னலு மாமே. 405

[குண்டலகேசி]

**குறிப்புரை :**

தினைச்சோறு போலப் புழுக்கள் தோன்றுதற்கிடமாகிய உடம்பு தூய்மை யில்லாதது என்பது

புன்கம் = சோறு   நுனைய — நுனிமையுடைய

12 புழுமலக் குடருண் மூழ்கிப்
புலால்கமழ் வாயிற் றேய்த்து
விழுமை குழலை யென்றும்
விளங்கிய காளை யென்றும்
பழுநிய பிறவு மாகிப்
பலபெயர் தரித்த வெல்லாக்
குழுவினை இன்ப மாகக்
கொள்வரோ குருடு தீர்ந்தார் 406

[நாரத சரித்திரம்]

**குறிப்புரை :**

மலக்குடருள் மூழ்கி வெளிப்படும் குழவி காளை முதலிய பருவப் பெயர்களைத் தாங்கியழிதலின் அறிவுக் கண்ணுடையார் அதனை இன்பப் பொருளாகக் கருதார் என்பது

பழுநிய — பழுத்து முதிர்ந்த   வெல்லாக்குழு = நிலைபேறில்லாத தொகுதி

**அதிகாரம் — 41**

## துறவு

துறவாவது: யான் எனது என்னும் பற்றுக்களை நீக்கி ஒழுகுதலாகும்.

[நேரிசை வெண்பா]

1 சிறந்ததும் சுற்றமும் செய்பொருளும் நீக்கித்
துறந்தார் தொடர்ப்பாடு கோடல் — கறங்கருவி
ஏனல்வாய் வீழும் மலைநாட அஃதன்றோ
யானைபோய் வால்போகா வாறு 407

**குறிப்புரை :**

சுற்றம் முதலியவற்றைத் துறந்தபின்னும் சிறிய பொருள்கள்மீது அவாவுறுதல் யானையின் உடம்பு சென்ற வாயிலில் அதன்வால் செல்லாதிருத்தல் போன்றதாகும்

தொடர்ப்பாடு = பிணைப்பு ஏனல் = மலைமூங்கில்நெல்
யானை என்றது அதன் உடம்பைச்சுட்டி நின்றது.

2 இல்ல மிளமை எழில்வனப்பு மீக்கூற்றம்
செல்வம் வலியென் றிவையெல்லாம் — மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு 408

**குறிப்புரை :**

மனை இளமை முதலாய வெல்லாம் நிலையாதவை என்பதை உணர்ந்தோர் அவற்றின்பால் பற்று வையாமல் துறப்பார் என்பது

இல்லம் = மனை முதலிய பொருள்கள் மீக்கூற்றம் = ஆணை செலுத்துதல் நெடியார் = அறிவின்மிக்கார்

[இன்னிசை வெண்பா]

3 கொன்னே கழிந்தன் றிளமையும் இன்னே
பிணியொடு மூப்பும் வருமால் — துணிவொன்றி
என்னொடு சூழா தெழுநெஞ்சே போதியோ
நன்னெறி சேரா நமக்கு 409

[நாலடியார்]

**குறிப்புரை :**

இளமை கழித்து மூப்பும் பிணியும் வருமென்பது திண்ணமாத லால் துறவினை மேற்கொள்க என்கின்றது.

கொன்னே = பயனின்றி துணிவு = உறுதி

[நேரிசை வெண்பா]

4 வாளஞ்சான் வன்கண்மை யஞ்சான் வனப்பஞ்சான்
ஆளஞ்சான் அய்பொருளஞ்சான் — நாளெஞ்சாக்
காலன் வரவொழிதல் காணின்வீ டெய்திய
பாலின் நூல் எய்தப் படும் 410

[ஏலாதி]

**குறிப்புரை :**

எதற்கும் அஞ்சாதவனுயினும் யமனுல் கொள்ளப் படுவான்.

வாள் = வாட்போர் வன்கண்மை = போரின்கண் நிகழும் எதிர்ப்பு வனப்பு = மகளிரின் அழகு — ஆள் — அரசனது ஆளுமை காலன் = யமன் பால் = வீதி

5 இளமை நிலைதளர மூப்போ டிறைஞ்சி
உளமை உணரா தொடுங்கி — வளமை
வியப்போவ லில்லா வியலிடத்து வெஃகா
துயப்போக லெண்ணி னுறும் 411

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

இளமை முதலியவை நிலையாமையான் உய்யும் நெறியை ஆராய்ந்து கொள்ளுதல் உறுதியுடைத்து என்பது

ஓவலில்லா = நீங்காத வியலிடம் மண்ணுலகம்
எண்ணின் = ஆராயின் உறும் = உறுதியுடைத்தாகும்.

[கலிவிருத்தம்]

6 மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகையவை யுள்வழிப்
பற்று வினையாய்ப் பலப்பல யோனிகள்
அற்று யுழலும் அறுத்தற் கரிதே 412

**குறிப்புரை :**

பிறப்பறுதல் வேண்டின் பற்றுதல் வேண்டுமென்பது
தொடர்ப்பாடு = உலகியற் பொருள்களின்பால் கொள்ளும் பற்று. யோனிகள் = பிறப்புக்கள்

7 உற்றவுதிர மொழிப்பாள் கலிங்கத்தை
மற்றது தோய்த்துக் கழுவுதல் என்ஞெக்கும்
பற்றிஞ ஞகிய பாவத்தை மீட்டும்
பற்ஞெடு நின்று பறைக்குறு மாறே 413

**குறிப்புரை :**

குருதிக்கறையை நீக்கக் குருதியுள்ள ஆடையைத்தோய்த்தலை ஒக்கும் பற்று நீக்கவேண்டிப் பொருளைப் பற்றிக்கொள்ளுதல் என்கின்றது.

உதிரம் = குருதி கலிங்கம் = ஆடை

8 தானஞ் செய்திலம் தவமு மன்னதே
கானந் தோய்நில விற்கழி வெய்தின
நானந் தோய்குழல் நமக்குய்த லுண்டோ
மானந் தீர்ந்தவர் மாற்றம்பொய் யல்லவால் 414

[வளையாபதி]

**குறிப்புரை :**

தானம் முதலியவற்றைச் செய்துதுறவாதவர்க்கு உய்தி இல்லை என்பது.

கானந்தோய் நிலவின் = காட்டில் எரித்த நிலா ஒளி போல்
நானம் = கத்தூரி மானம் = குற்றம் மாற்றம் = நன் மொழிகள்.

[அறுசீர்விருத்தம்]

9 அருந்திய குறையிற் றுன்பம்
ஆங்கவை நிறையிற் றுன்பம்
பொருந்துநோய் பொறுத்தல் துன்பம்
பொருந்தியே போகத் தக்க

மருந்தினுக் குளுற்றல் துன்பம்
மற்றவை யறுத்தல் துன்பம்
இருந்தவா றிருத்தல் துன்பம்
யார்கொலோ துன்ப மில்லார் 415

குறிப்புரை :

உண்ணுதல் முதலாக உடல்பற்றிய செயல்கள் யாவும் துன்பமானவையே உலகில் துன்பின்றி வாழ்பவர் யாரும் இல்லை என்கின்றது.

அருந்திய = உண்ட பொருள்கள் உளுற்றல் = முயலுதல்.

[கலிவிருத்தம்]

10 வாழ்கின்றும் மக்களு நம் வழிநின்றார் எனவுள்ளம்
தாழ்கின்றார் தாழ்கில்லார் தமரில்லா வானக்கால்
ஆழ்கின்ற குழிநோக்கி யாதார மொன்றின்றி
வீழ்கின்றார் மெய்யாதா மெய்தாங்க வல்லரோ 416

[நாரத சரித்திரம்]

குறிப்புரை :

சுற்றம் முதலியவை நீங்கி யாவரும் மாள்பவரேயாவர் என்கின்றது.

தமர் = சுற்றம் ஆதாரம் = பற்றுக்கோடு

[ஆசிரியப்பா]

11 அதளெறிந்தன்ன நெடுவெண் களரின்
ஒருவன் ஆட்டும் புல்வாய் போல
ஓடி உய்தலும் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே 417

[புறநானூறு]

குறிப்புரை :

சுற்றத்தொடுகூடிய மனைவாழ்க்கைத்துறவுக்கு இடையூறுகும் என்பது

அதள் = தோல் எறிந்தன்ன = புடைத்துவைத்தாற்போல
புல்வாய் = மான் ஒக்கல் = சுற்றம் தட்கும் = தளைப்படுத்தும்.

**அதிகாரம் — 42**

# மெய்யுணர்தல்

மெய்யுணர்தலாவது : உயிர்களின் பிறத்தலும் பிறவி நீங்கி வீடுபெறுதலும் அவற்றின் காரணங்களும் ஆகியவற்றை ஐயமின்றித் திரிபின்றி உள்ளவாறு உணரும் அறிவுணர்வாகும்.

[நேரிசை வெண்பா]

1 **திரியும் இடிஞ்சிலும் நெய்யும்சார் வாக
எரியும் சுடரோ ரனைத்தால்—தெரியுங்கால்
சார்வற ஓடிப் பிறப்பறுக்கும் அஃதேபோல்
நீர்அற நீர்ச்சார் வறும்.** 418

[பழமொழி]

**குறிப்புரை :**

நீர்வற்றிப்போயின் அதன்கண் வாழ்ந்த உயிர்கள் அற்றுப் போதல்போல வினைநீங்கப் பிறப்பும் நீங்கும் என்பது.

இடிஞ்சில் = அகல் சார்வு = பற்று. பற்று இருவினையும் தருவது ஆகலின் பற்றற எனப்பட்டது.

2 **இளமை கழியும் பிணிமூப் பியையும்
வளமை வலியிவை வாடும்—உளநாளால்
பாடே புரியாது பால்போலும் சொல்லினய்
வீடே புரிதல் விதி.** 419

**குறிப்புரை :**

இளமை செல்வம் முதலிய யாவும் நிலையாமையான் வாழும் நாளில் ஒருவன் வீடெய்துதற்குரியவற்றைச் செய்தல்வேண்டும் என்பது

இயையும் = தாமேவந்துகூடும் பாடு = துன்பத்திற்குரிய செயல் விதி = முறைமை

3 பிணிபிறப்பு மூப்பொடு சாக்காடு துன்பம்
தணிவில் நிரப்பிவை தாழா—அணியின்
அரங்கின்மே லாடுநர்போல் ஆகாமல் நன்றும்
நிரம்புமேல் வீட்டு நெறி. 420

[ஏலாதி]

**குறிப்புரை :**

பிணி பிறப்பு முதலியவை தடையின்றி வருவன ஆதலால் வீட்டுநெறி நிரம்பச் செயல்புரிகஎன்பது

அரங்கு = நாடகமேடை வீட்டுநெறி நிரம்புமேல் நன்றும் எனக் கூட்டிக்கொள்க.

4 பொய்யில் புலவர் புரிந்துறையும் மேலுலகம்
ஐயமொன் றின்றி அறிந்துரைப்பின்—வெய்ய
பகலின் றிரவின்று பற்றின்று துற்றின்
றிகலின் றிளிவரவு மின்று. 421

**குறிப்புரை :**

மெய்ஞ்ஞானியர் உறையும் விண்ணுலகத்தை ஐயமின்றி உணர்ந்து சொல்லின் அது பகலிரவு இன்பதுன்பம் ஒன்றும் இல்லாத ஆனந்த நிலையாகும் என்பது

பொய்யில்புலவர் = மெய்யுணர்ந்த ஞானியர் வெய்ய = கொடிய துற்று = உணவு இகல் = மாறுபாடு (பகை)

5 ஆமினி மூப்பும் அகன்ற இளமையும்
தாமினி நோயுந் தலைப்படும்—யாமினி
மெய்யைந்தும் மீதூர வெஃகாது மேல்வந்த
ஐயைந்தும் ஆய்வ தறிவு. 422

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

இனிமூப்பும் பிணியுமாகியவை இவ்வுடம்பினை வந்தடையுமாத லான் வருவதற்குள் மெய்யறிவினை பெறுதல் அறிவன் பயனாகும் என்பது

மெய்யைந்து = மெய்வாய் கண் மூக்கு செவியாகிய பொறிகள் மீதூர = அவை நலியுமாறு வருவனவர ஐயைந்து = இரு பத்தைந்து அவையாவன : மெய்வாய் கண் மூக்கு செவி ஆகிய பொறிகள் ஐந்து. நிலம் நீர் தீவளி வான் என்னும் பூதங்கள் ஐந்து. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய புலன்கள் (தன்மாத்திரைகள்) ஐந்து. வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் ஆகிய செயற்கருவிகள் ஐந்தும் ஆகிய இருபத்தைந்து. இவற்றின் செயல்களையும் பயன்களையும் ஆராய மெய்யறிவு பிறக்குமாதலின் ஆய்வது அறிவு என்றார்.

[பஃறொடை வெண்பா]

6 **இருளே உலகத்தியற்கை இருளகற்றும்**
**கைவிளக்கே கற்ற அறிவுடைமை கைவிளக்கின்**
**நெய்யே தன்நெஞ்சத் தருளுடைமை நெய்யமைந்த**
**பால்போல் ஒழுகத்தவரே பரிவில்லா**
**மேலுலகம் எய்து பவர்.** 423

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

உலகியல்பு கல்வியறிவு முதலியவற்றை இருள் முதலாக உருவகஞ்செய்து தவ ஒழுக்கமுடையாரே வீடுபேறு எய்துவார் என்பது

பால்போல் ஒழுக்கம் பற்றற்ற தூய ஒழுகலாறு பரிவு = துன்பம் மேலுலகம் = வீடுபேறு

[நேரிசை வெண்பா]

7 **இல்லியலார் நல்லறமும் ஏனைத் துறவறமும்**
**நல்லியலான் நாடி உரைக்குங்கால் — நல்லியல்**
**தானத்தான் போகம் தவத்தான் சுவர்க்கமாம்**
**ஞானத்தான் வீடாகும் நாட்டு.** 424

[சிறுபஞ்ச மூலம்]

குறிப்புரை :

இல்லறம் துறவறம் ஆகியவற்றின் பயன் இவை என விளக்கங் கூறுகின்றது.

இல்லியல் = இல்லற ஒழுக்கம் நல்லியல் = நடுவுநிலை தானம் = தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான் என்னும் ஐம்புலத்தாரை ஓம்பும் செயல் = போகம் = செல் வளத்தால் வரும் இன்பம் சுவர்க்கம் = தேவராக வாழும் வாழ்வு இவை இரண்டும் வீடுபேறுதரமாட்டா = மெய் யுணர்தலாகிய தத்துவ ஞானமே வீடுபேறு தரும் என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

8 ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு. 425

[நாலடியார்]

குறிப்புரை :

சமயங்கள் வேறுபட்டாலும் தத்துவ ஞானம் ஒன்றே என்பது.

ஆ = பால் தரும் ஆனினம் உரு = வடிவம், நிறம் அல்ல - பால் யாவும் வெண்மை நிறமாகிய ஒரே நிறமாவ தல்லது வேறுவேறு அல்ல. அறநெறி = வீட்டு நெறி உருவுபலகொளல் = வடிவ வேற்றுமை கொள்ள வேண்டா, என்பதாம்.

[நேரிசை வெண்பா]

9 பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்
மற்றரு தோடும் அவரத்தேரும்—தெற்றெனப்
பொய்த்துரை யென்னும் புகையிருளும் இம்மூன்றும்
வித்தற வீடும் பிறப்பு. 426

குறிப்புரை :

பாசமும் பேரவாவும் பொய்யும் ஆகியவை அறப் பிறப்புநீங்கும் வீடுவரும் என்பது.

பாசத்தளை = கட்டு அவாத்தேர் = பேராசைஎன்னும் தேர் = பொய்த்துரை என்னும் புகைநிறைந்த இருள் வித்தற = மூலமின்றி ஒழிய வீடும் = நீங்கும்

[இன்னிசை வெண்பா]

10 முந்நீர்த் திரையின் எழுந்தியங்கா மேதையும்
நுண்ணூற் பெருங்கேள்வி நூற்கரை கண்டானும்
மைந்நீர்மை யின்றி மயலறுப்பான் இம்மூவர்
மெய்ந்நீர்மை மேல் நிற்பவர். 427

[திரிகடுகம்]

குறிப்புரை :

அடக்கமுடையாரும் மெய்ந்நூல்களைப் பயின்றவரும் மாயை யாகிய மயக்கமில்லாதவரும் மெய்ஞ்ஞானமுற்று வீடுபெறுவார் என்பது

முந்நீர்த்திரை = கடல்அலை அலையின் = அலைகளைப்போல மேதை = பேரறிவாளன் மைந்நீர்மை = மயக்கத்தன்மை மயல் = ஆசை முதலிய மயக்கம் மெய்ந்நீர்மை = மெய்ஞ் ஞானம்

[கலிவிருத்தம்]

11 பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி
ஒருவந்த முள்ளத் துவங்குதல் ஒழிமின்
வெருவந்த துன்பம் விடுக்குந் திறலோன்
ஒருவன் உலகிற் குளனென்னு மாறே. 428

[வளையாபதி]

குறிப்புரை :

உலகத்து மக்களாகிய பலரே நமது இன்பத் துன்பங்களுக்குக் காரணம் என எண்ணி மயங்கவேண்டா துன்பத்தை நீக்கும் ஆற்றல் உடையவன் ஒருவனே அவனே இறைவன் என நினைத்து உய்க என்பது

பருவந்து = துன்புற்று சால = மிக ஒருவந்தம் = உறுதி வெருவந்த = அச்சந்தரத்தக்க விடுக்கும் = நீங்கும் என்னு மாறுஎன்னும் நெறியினை உணருங்கள்.

[அறுசீர்விருத்தம்]

12 பெரிய வின்பத் திந்திரனும்
பெட்ட செய்கைச் சிறுகுரங்கும்
உரியசெய்கை வினைப் பயத்தை
உண்ணு மெனவே யுணர்ந்தவனை
அரிய ரென்ன மகிழாதும்
எளிய ரென்ன இகழாதும்
இருசார் வினையுந் தெளிந்தாரே
இறைவன் நூலுந் தெரிந்தாரே. 429

குறிப்புரை :

இந்திரனேயாயினும் ஒரு குரங்கேயாயினும் தாம் நுகரும் இன்பத்துன்பத்திற்குக் காரணம் வினைப்பயன்களே என்று உணர்ந்து மகிழ்வதும் இகழ்வதும் செய்யாதவரே இறைவன் நூலாகிய ஆகமங்களைத் தெளிந்தவராவார் என்பது
பெட்ட = விரும்பிய உண்ணும் = நுகரும் இருசார்வினை = நல்வினை தீவினை இறைவன் நூல் நாற்பத்திரண்டு பரமாகமம் என்பார் நச்சினார்க்கினியர்

13 மெய்வகை தெரிதல் ஞானம்
விளங்கிய பொருள்கள் தம்மைப்
பொய்வகை யின்றித் தேறல்
காட்சியைம் பொறியும் வாட்டி

உய்வகை உயிரைத் தேயாது
ஒழுகுதல் ஒழுக்கம் மூன்றும்
இவ்வகை நிறைந்த போழ்தே
இருவினை கழியு மென்றான். 430

குறிப்புரை :

ஞானம், காட்சி, ஒழுக்கம் இவற்றிற்குரிய விளக்கமும் இம் மூன்றானும் நிறைந்தவரே வினையினின்று நீங்குவர் என்றும் கூறுகின்றது.

மெய்வகை = உண்மையின் கூறுபாடுகள் தேறல் = தெளிதல்
தேயாது = கெடாது

14 வேட்டன பெறாமை துன்பம்
விழைநரைப் பிரிதல் துன்பம்
மோட்டெழில் இளமை நீங்க
மூப்புவந் தடைதல் துன்பம்
ஏட்டெழுத் தறித லின்றி
எள்ளற்பா டுள்ளிற் றெல்லாம்
சூட்டணிந் திலங்கும் வேலோய்
துன்பமே மாந்தர்க் கென்றான். 431

[ சீவகசிந்தாமணி ]

குறிப்புரை :

துன்பங்கள் இவை இவை எனத்தேர்ந்து கூறி அவை மாந் தரைப்பற்றி நிற்பன என்றும் அவை நீங்க மெய்யுணர்தல் வேண்டும் என்பதைக் குறிப்பாலும் கூறுகின்றது.

வேட்டன = விரும்பியவை விழைவர் = விருப்பமுடையவர்
மோட்டெழில் = பேரழகு ஏட்டெழுத்து = நூலறிவு
சூட்டணிந்து = மாலையணிந்து

[ கலிவிருத்தம் ]

15 விண்ணி லின்பமும் வீதல் கேட்டுமால்
மண்ணி லின்பமும் மாய்தல் காண்டுமால்
எண்ணி லின்பமாம் ஈறி லாததே
நண்ணி நாமினி நயக்கற் பாலதே. 432

[சாந்திபுராணம்]

குறிப்புரை :

இருமை இன்பமும் நிறையில்லாதன ஆதலால் கெடாத இன்பத்தை விரும்பி அடைதலே செய்யவேண்டியது என்பது.

வீதல் = அழிதல் ஈறு = முடிவு
நயக்கற்பாலது = விரும்பத்தக்கது.

[ ஆசிரியப்பா ]

16 ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப
புணர்ந்தோர் பூவணி யணியப் புரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றப் பண்பி லாளன்
இன்னா தம்மவிவ் வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே. 433

குறிப்புரை :

உலகில் இன்பமும் துன்பமும் அவரவர் ஊழ்வினைக்கேற்ப நிகழ்தலின் உலக வாழ்க்கைத் துன்பமுடையதே எனினும் மெய்யறிவால் அவற்றின் இயல்பை அறிதல்வேண்டும் என்பது

ஓரில் = ஒரு வீட்டின்கண் நெய்தல் = சாப்பறை
முழவின்பாணி = மங்கல வாத்தியம் ததும்ப = முழங்க
புணர்ந்தோர் = இணைபிரியாது உடன்வாழ்பவர்
பைதல் = துன்பம் உறைப்ப = வெளிப்பட
இன்னாது = துயரமுடையது.

17 யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொரு திரங்கும் மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தன மாகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினு மிலமே. 434

[புறநானூறு]

குறிப்புரை :

மெய்யறிவாளர் பரந்த உள்ளத்தால் எல்லா உயிர்களையும் பேணி ஒழுகுவர். உலக நிகழ்ச்சிகள் யாவும் ஊழ்வழியே நிகழும் என்று தெரிந்து செயலாற்றுவர் மெய்யறிவுடையோர். செல்வம், தவம் முதலியவற்றால் சிறந்தாரைப் புகழ்தலும் அவையில்லாதாரை இகழ்தலும் இல்லை என்கின்றது.

கேளிர் = சுற்றத்தார் தணிதல் = வருத்தமின்றியிருத்தல்
மகிழ்ந்தன்றுமிலம் = மகிழ்ந்து இருக்கிலம் முனிவின் = வெறுப்பால் தண்துளி = குளிர்ந்தமழைநீர் தலைஇ = பெய்து
கல்பொருது = கரையை மோதி இரங்கும் = வழிந்து செல்லும்
மல்லற்பேர்யாறு = வளமான பெரும் நதி புணை = ஓடம்
முறை = ஊழ் (விதி) திறவோர் = ஞானியர்
காட்சி = மெய்யறிவு மாட்சி = பெருமை
வியத்தல் = புகழ்தல்

அதிகாரம்—43

## அவா அறுத்தல்

அவா அறுத்தலாவது, மெய்யுணர்ந்து தவ முதலியவற்ருன் பற்றறத் துறந்தவிடத்தும் உடம்பு காரணமாகப் பயிற்சி வயத்தான் பொருள்கள்மீது ஒரொருபொழுது உள்ளம் செல்லுமாதலின் அந்நினைவினை எழவொட்டாது நீக்குதலாம்.

[ நேரிசை வெண்பா ]

1 அவாவறுக்க லுற்ருன் தளரான் அவ்வைந்தின்
அவாவறுப்பின் ஆற்ற அமையும் — அவாஅருன்
ஆகும் அவனயின் ஐங்களிற்றி னூட்டுண்டு
போகும் புழையுள் புலந்து. 435

[ஏலாதி]

குறிப்புரை :

ஐம்பொறிகளின் வாயிலாக வரும் அவாவினை அறுத்தலான் நிறைவாகிய வீட்டினைப் பெறுவான். அவாவினை அருதவன் ஐம்புலனுகிய களிறுகளான் அலைப்புண்டு நரகமாகிய புழையுள் புக்குத் துன்புறுவான் என்பது.

ஐந்து = மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய பொறிகள் அவை வாயிலாக வேட்கை தோன்றுதலின் அவா ஐந்தாயின

[ இன்னிசை வெண்பா ]

2 எண்ணக் குறைபடாச் செல்வமும் இற்பிறப்பும்
மன்னருடைய உடைமையும் மன்னரால்
இன்னர் எனல்வேண்டா இம்மைக்கும் உம்மைக்கும்
தம்மை யுடைமை தலை. 436

[பழமொழி]

குறிப்புரை :

அரசரை ஒப்பப் பெருஞ் செல்வமும் அவர் சார்பும் பெறினும் பயனில்லை. அவா நீங்கித் தம்மைத் தான் உணர்தலே தலையாய நிலை என்பது.

இற்பிறப்பு = பெருங்குலத்தில் பிறந்த சிறப்பு
இன்னர் = இத்தகையவர் தலை = தலையாய நிலை

[நேரிசை வெண்பா]

3 மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவினைக்—கைவாய்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும். 437

[நாலடியார்]

குறிப்புரை :

ஐம்பொறி வாயிலாக வரும் அவாவினை உள்ளம்பற்றுமல் காப்பவனே தவறுமல் வீடுபெறுவான் என்கின்றது.

ஐவாய = ஐந்தின் வாயிலாக வருவனவாகிய விலங்காது = நீங்காமல்

[அறுசீர்விருத்தம்]

4 களிந்தநெய்க் கவளங் கையில்
வைத்துடன் கழறு வாரை
முனிந்திடு களிறு போல்வார்
முத்தியை விலக்கும் நீரார்
மனங்கொளத் துணிந்தி டாதே
வால்குழைத் தெச்சிற் கோடும்
சுணங்கனைப் போலும் நீரார்
பற்றிடைச் சுழலும் நீரார். 438

[சாந்திபுராணம்]

குறிப்புரை :

ஆணவமுடையார் முத்தியைஎய்தார் — அவாவுடையார் உலகத்துன்பத்தில் உழல்வார் என்பது

கவளம் = உணவுத்திரள் கழறுவார் = இடித்துரைப்பவர் முனிந்திடும்களிறு = வெகுண்டுகொல்லும் யானை நீரார் = தன்மையினர் சுணங்கன் = நாய் பற்று = அவா

அதனுல் வரும் துன்பங்களை உணர்த்திநின்றது

## அதிகாரம்—44

# பழவினை

பழவினையாவது: முன்னைப் பிறப்புக்களில் செய்த இருவினை களாம் அவை செய்தாரை விடாது பற்றிப் பயன் விளைக்கும் என அதன் வலிமை கூறுதலாகும்.

[நேரிசை வெண்பா]

1 பண்டுறுத்தச் செய்த பழவினை வந்தெம்மை
இன்றொறுக் கின்றதென நினையார்—துன்புறுக்கும்
மேவலரை நோவதேன் மின்னேர் மருங்குலாய்
ஏவலாள் ஊரும் சுடும். 439

குறிப்புரை:

அரசன் ஏவ ஏவலர் ஊரைத்தீக்கொளுவுவர் அது போல ஊழ் வினை காரணமாக மற்றவர் நமக்குத் துன்பம் செய்கின்றார் அதனை உணராமல் பிறரை நொந்துகொள்வதாற் பயனென்ன என ஊழ்வினையின் தன்மையைக் கூறுகின்றது.

உறுத்துச்செய்த = ஊன்றிப்புரிந்த ஒறுக்கின்றது = துன்புறுத்துகின்றது. மேவலர் = மாற்றார் மருங்குல் = இடை ஏவலாள் = பணியாளர் சுடும் = தீயாற் சுடும்.

[இன்னிசை வெண்பா]

2 உரைசான்ற சான்றோர் ஒடுங்கி யுறைய
நிறையுள்ளர் அல்லார் நிமிர்ந்து பெருமல்
வரைதாழ் இலங்கருவி வெற்ப! அதுவே
சுரையாழ அம்மி மிதப்பு. 440

குறிப்புரை:

மேன்மக்கள் வறுமையால் ஒடுங்கி இருப்பதும் கீழ்மக்கள் செல்வத்தால் நிமிர்ந்து இருப்பதும் சுரைஆழ அம்மிமிதப்பது போன்ற செயல் எனினும் அவை ஊழால் நிகழ்வனதாம் என்பது

உரை = புகழ் உறைய = வாழ சுரை = சுரைக்குடுக்கை.

[நேரிசை வெண்பா]

3 இதுமன்னுந் தீதென் றியைந்ததூ மாவார்க்
கதுமன்னும் நல்லதே யாகும்—மதுநெய்தல்
வீநாறு கானல் விரிதிரைத் தண்சேர்ப்ப
தீநாள் திருவுடையார்க் கில். 441

**குறிப்புரை :**

தீதென்று கருதப்படும் ஒன்று ஆகூழுடையார்க்கு நல்லதே யாகும். செல்வமுடையார்க்கு நாளும் கோளும் இல்லை என்று ஊழின் சிறப்புக் கூறுகின்றது

மன்னும் = உறுதியாக ஆவார்க்கு = ஊழால் நலம் பெறுவார்க்கு வீ நாறும் = மலர்கள் மணம் பரப்பும் கானல் = கடற்கரையூர் விரிதிரை = அலைபரவும் கடல் சேர்ப்ப = நெய்தல் நிலத்தலைவனே திருவுடையார் = (நல்லூழால்) செல்வமுடையவராயவர்

[இன்னிசை வெண்பா]

4 பன்னாளும் நின்ற விடத்தும் கனிவேங்கை
நன்னாளே நாடி மலர்தலால்—மன்னர்
உவப்ப வழிபட் டொழுகினும் செல்வம்
தொகற்பால போழ்தே தொகும் 442

**குறிப்புரை :**

நல்லூழ் வரும்போதுதான் நன்மை பெருகும் என்கிறது

கனிவேங்கை = கனியாகிய வேங்கைமரம் தொகற்பால போழ்த்து = வந்து நிறையும் காலத்தே தொகும் = வந்து சேரும்

5 ஆகுஞ் சமயத்தார்க் காள்வினையும் வேண்டாவாம்
போகும் பொறியார் புரியும் பயமின்றே
ஏகல் மலைநாட என்செய்தாங் கென்பெறினும்
ஆகாதார்க் காகுவ தில். 443

**குறிப்புரை :**

ஆகூழ் உடையார்க்கு எம் முயற்சியுவேண்டா போகூழ் உடையார்க்கு எல்லா முயற்சியும் பயன்படா என்பது

ஆகும் சமயம் = நன்மை கூடிவரும் காலம் ஆள்வினை = செயல் முயற்சி பொறி = விதி புரிவு = செயற்பாடு ஏகல் = பெரியமலை ஆகுவது = நன்மை விளைவது இல் = இல்லை

[நேரிசை வெண்பா]

6 **நெடியது காண்கிலாய் நீயளியை நெஞ்சே**
**கொடியது கூறினாய் மன்ற—அடியுளே**
**முற்பகல் கண்டோன் பிறன்கேடு தன்கேடு**
**பிற்பகல் கண்டு விடும்.** 444

**குறிப்புரை :**

பின்விளைவு நோக்காமல் இப்பொழுது கொடியது செய்ய நினைக்கும் நெஞ்சே, நீ இரங்கத்தக்காய். ஏனெனில் முற்பகல் ஒருவற்குக் கேடு செய்யின் அக்கேடு பிற்பகல் தனக்கே வரும் என்பதனை அறியாய் எனவிதியின் தன்மையை நெஞ்சுக்குக் கூறுவதுபோல் கூறுகின்றது

நெடியது = பின்னர் விளைவது அளி = இரக்கம் கொடியது = கொடுஞ்செயல் அடியுளே = கதிரவன் நடக்கும் ஒருநாள் நடையுள் முற்பகல் = முற்பகுதி பிற்பகல் = பிற்பகுதி கண்டுவிடும் = கொடுக்கும் ஏன்பது கருத்து

7 **சுட்டிச் சொலப்படும் பேரறிவி னார்கண்ணும்**
**பட்ட இழுக்கம் பலவானால்—பட்ட**
**பொறியின் வகைய கருமம் அதனால்**
**அறிவினை ஊழே அடும்.** 445

**குறிப்புரை :**

அல்லூழ் அறிவையும் திரிபுறுத்தும் என்கின்றது

சுட்டிச் சொல்லப்படும் = வியந்து பேசப்படும் இழுக்கம் = குறைபாடுபட்ட அமைந்த பொறி = ஊழ் (விதி) அடும் = கெடச் செய்யும்

[இன்னிசை வெண்பா]

8 எவ்வந் துணையாப் பொருண் முடிக்குந் தாளாண்மை
தெய்வம் முடிப்புழி என்செய்யும்—மொய்கொண்டு
பூப்புக்கு வண்டார்க்கும் ஊர குறும்பியங்கும்
கோப்புக் குழிசெய்வ தில். 446

**குறிப்புரை :**

மெய்வருத்தம் துணையாக முயலினும் ஊழ்பிறவாறுமுழப்பின் என் செய்வது. பெருவேந்தன் படை எடுத்து வந்தவிடத்து குறுநில மன்னன் என் செய்ய இயலும் அதுபோல என ஆள் வினையை ஊழ்வினைமாற்றும் என அதன் வலிமை கூறு கின்றது.

எவ்வம் = வருத்தம் தாளாண்மை = முயற்சி தெய்வம் = விதி. மொய்கொண்டு = மொய்த்தலைச்செய்து குறும்பு = குறுநிலமன்னன் கோ = பெருவேந்தன் புக்குழி = படையொடு புகுந்தபொழுது

[நேரிசை வெண்பா]

9 கழுமலத் தியாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற்சென் றதனால்—விழுமிய
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுத லரிது. 447

**குறிப்புரை :**

ஊழால் ஒருவற்கு வருவது வந்தேநிற்கும் என்கின்றது இச் செய்யுள் கரிகால்வளவனை கழுமலத்திலிருந்து வந்த யானை அரசனைத் தேர்ந்து மாலை சூட்டிய வரலாற்றைக் கூறுகின்றது.

கழுமலம் = சீர்காழி கருவூர் = கருவூரின்கண்
விழுமியோன் = கரிகால்வளவன் விழுமிய = மேலான செல்வம் உற்றபால = அடையத்தக்கவை தீண்டா விடுதலரிது = வந்துசேராமல் நீங்குவது இல்லை

[இன்னிசை வெண்பா]

10 வழங்கார் வலியிலார் வாய்ச்சொல்லும் பொல்லார்
உழந்தொருவர்க் குற்றால் உதவலும் செய்கலார்
இழந்ததில் செல்வம் பெறுதல் அதுவே
பழஞ்செய் போர் பீன்று விடல். 448

[பழமொழி]

**குறிப்புரை :**

ஈதல் முதலிய நற்குணங்கள் இல்லாதவரிடத்துச் செல்வம் நிறைந்திருத்தல் பழையவயல் விளைத்தளித்தலைப் போன்றதாகும் அஃதாவது முன்பு இட்ட எருமுதலிய வளத்தால் பின்னர் விளைவதுபோல அவர் தம் பழவினை காரணமாகச் செல்வராயுள்ளார் என்றவாறு

உழந்து = முயன்று. புறஞ்செய் = முன்பு எருவிட்டுப் பண்பட்ட வயல் போர்பு ஈன்றுவிடல் = மிகவிளைந்து விடுதல்

[நேரிசை வெண்பா]

11 இறந்த பிறப்பிற்றான் செய்த வினையைப்
பிறந்த பிறப்பா லறிக—பிறந்திருந்து
செய்யும் வினையா லறிக இனிப்பிறந்
தெய்தும் வினையின் பயன். 449

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

முற்பிறப்பின் செய்தவினையை இப்பிறப்பின் எய்தும் பயன்களால் அறியலாம் என்கிறது.

இறந்தபிறப்பு = முற்பிறப்பு. இப்பிறவியில் செய்யும் வினைகளுக்கு ஏற்ப வரும் பிறவியில் பயன் விளையும் என்பது

12 அங்கண் விசும்பினகனிலாப் பாரிக்கும்
திங்களுந் தீங்குறுதல் காண்டுமால்—பொங்கி
அறைபாயருவி அணிமலை நாட
உறற்பால யார்க்கும் உறும். 450

**குறிப்புரை :**

விண்ணில் இருக்கும் திங்களும் பாம்புக்கோளினுல் தீங்குறுதல் காணுதலான் வரும் விளைவுகள் வந்தேதீரும் என்றுணர்க என்கின்றது

அங்கண் = இடமகன்ற விசும்பு = ஆகாயம் பாரிக்கும் பரப்பும். காண்டும் = காண்கின்றோம் உற்றபால = வந்து சேர்வதற்குரியவை உறும் = வந்தடையும்

13 **பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று**
**வல்லதாம் தாய்நாடிக் கோடலை—தொல்லைப்**
**பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த**
**கிழவனை நாடிக் கொளற்கு.** 451

**குறிப்புரை :**

கூட்டமாக உள்ள ஆனிரைகளுள் ஒரு கன்று தன் தாயினைத் தெரிந்து அடைவதுபோல ஊழ்வினையும் செய்தாரைத் தெரிந்து வந்தடையும் என்கின்றது

பல்லா = பசுக்கூட்டம் குழக்கன்று = இளையகன்று
தற்செய்த = தன்னைச்செய்த கிழவனை = உரியவனை
கொளற்குவல்லதாம் என்க.

[இன்னிசை வெண்பா]

14 **வளம்பட வேண்டாதார் யார் யாருமில்லை**
**அளந்தன போகம் அவரவ ராற்றுன்**
**விளங்காய் திரட்டினுர் இல்லைக் களங்கனியைக்**
**காரெனச் செய்தாரு மில்.** 452

**குறிப்புரை**

யாவரும் இன்பத்தையே விரும்புவர் எனினும் அவரவரின் இருவினைக்கேற்பவே பயன்கள்வரும். விளங்காய் திரட்சியா இருப்பதும் களங்கனி கருப்பாக இருப்பதும். அதன் இயற்கை யாதல்போல என்கின்றது.

போகம் = துய்க்கும் நலம் அவரவராற்றுன் = அவரவர் செய்த வினைவழியாக.

15 சிறுகாப் பெருகா முறைபிறழ்ந்து வாரா
உறுகாலத் தூற்ருகா ஆமிடத்தே யாகும்
சிறுகாலைப் பட்ட பொறியும் அதனல்
இறுகாலத் தென்னை பரிவு. 453

**குறிப்புரை :**

செய்தவினைக்கேற்ப ஒருவற்கு நன்மை தீமைகள் வருவ தல்லது முறைபிறழ்ந்து வாரா என்கின்றது.

உறுகாலத்து = வந்து சேருங்காலத்து  பொறி = தீயபொறி
இறுகாலத்து = அழியுங்காலத்து  பரிவு = துன்பம்

16 ஈண்டுநீர் வையத்துள் எல்லாரும் எட்டுணையும்
வேண்டார்மன் தீய விழைபமன் நல்லவை
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுதல ரிது. 454

**குறிப்புரை :**

உலகத்துள் யாவரும் துன்பத்தை வேண்டார் இன்பத்தையே வேண்டுவர். வேண்டினுலும் வேண்டாவிட்டாலும் ஒருவற்கு வருவது வராமலிராது என்பது

விழைப = விரும்புவர்  தீண்டாவிடுதல் = வந்துசேராமல் இருத்தல்  அரிது = இல்லை.

[நேரிசை வெண்பா]

17 நல்லார் நயவர் இருப்ப நயமிலாக்
கல்லார்க் கொன்ருகிய காரணம்—தொல்லை
வினைப்பய னல்லது வேல்நெடுங் கண்ணாய்
நினைப்ப வருவதொன் றில். 455

[நாலடியார்]

**குறிப்புரை :**

நல்லவர் வறியராய் இருக்கக் கல்லாதவர்க்கு நலம் வந்து விளைதற்குக் காரணம் பழவினைப்பயனே. அது நினைப்பதனல் மட்டும் வருவதில்லை என்கின்றது.

தொல்லைவினை = பழவினை

[அறுசீர்விருத்தம்]

18 ஆடகச் செம்பொற் கிண்ணத்
தேந்திய அலங்கற் றெண்ணீர்
கூடகங் கொண்ட வாழ்நாள்
உலந்ததேற் கொல்லும் பௌவத்
தூடகம் புக்கு முந்நீர்
அழுந்தினும் உய்வர் நல்லார்
பாடகம் போலச் சூழ்ந்த
பழவினைப் பயத்தின் என்றான். 456

**குறிப்புரை :**

பொற் கிண்ணத்தில் நிறைந்த நன்னீரும் ஒருவர்க்கு வாழ்நாள் முடியுமாயின் கொன்றுவிடும். கடலில் விழுந்து நீரில் மூழ்கி விடினும் வாழுநாள்நிறைவுடையார் அதனின்றும் பிழைத்துக் கொள்வர். பழவினையின் பயனால் என்கின்றது.

ஆடகச்செம்பொன் = மாற்றுயர்ந்தபொன் தெண்ணீர் = தூய நன்நீர் உலந்ததேல் = வற்றிவிடுமானால் பௌவம் = கடல் முந்நீர் = கடல்நீர் நல்லார் = வாழ்நாள் நிறைய வுள்ளவர் பாடகம் = காற்சதங்கை யணி பயத்தின் = பயனால்

[கலிவிருத்தம்]

19 ஆம்பொருள்கள் ஆகுமது யார்க்குமழிக் கொணாப்
போம்பொருள்கள் போகுமவை பொறியின்வகை வண்ணம்
தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்றுதர லின்றே
வீங்குபுனல் யாறுமழை வேண்டியறி யாதே. 457

**குறிப்புரை :**

பொருள் ஆகுங்காலத்து மிகும் போகுங்காலத்து வற்றிவிடும் கடல் ஆறுகளுக்கு நீரைச் சென்று கொடுத்தல் இல்லை. ஆறு கள் மழையை வேண்டி நிற்பதுமில்லை. எனினும் கடல் நீரை முகந்து மழை ஆறுகளுக்கு அளிப்பதுபோல வினைப்பயன் தானே நல்லவற்றைச் செய்யுமென்பது கருத்து
பொறியின் வகை = ஊழின் செயல்

[அறுசீர்விருத்தம்]

20 அல்லித்தாள் அற்ற போதும்
அறுதநூ லதனைப் போல
தொல்லைத்தம் உடம்பு நீங்கத்
தீவினை தொடர்ந்து நீங்காப்
புல்லிக்கொண் டுயிரைச் சூழ்ந்து
புக்குழிப் புக்குப் பின்னின்று
எல்லையில் துன்ப வெந்தீச்
சுட்டெரித் திடுங்க ளன்றே. 458

குறிப்புரை :

அல்லித்தண்டு முறியினும் நூல் அறுததுபோலப் பிறந்த உடம்பு அழிந்தாலும் வினைகள் அழியாது உயிரைப்பற்றி மறுபிறப்பில் பயனைத்தரும் என்பது.

புல்லிக்கொண்டு = பற்றிக்கொண்டு புக்குழிப்புக்கு = புகுந்த இடந்தொறும் புகுந்து எல்லையில் = அளவில்லாத

[கலிவிருத்தம்]

21 பெருமுழங்கு திரைவரைகள் நீந்திப்பிணி யுறினும்
திருமுயங்க லில்லையெனின் இல்லைபொரு ளீட்டம்
ஒருமுழமும் சேறலில ரேனும் பொருளூர்க்கே
வரும்வழி வினையுழந்து வாழ்கதவ மாதோ. 459

குறிப்புரை :

கடல்கடந்து சென்று முயலினும் ஊழ்வினை கூடினாலன்றிச் செல்வம் பெருகுதல் இல்லை. ஒருமுழ அளவும் செல்லாதிருப் பினும் வழியை வினவிக்கொண்டு அவரிடம் பொருள்வந்து சேரும் காரணம் தவம் என்பது

திரைவரைகள் = கடல், மலைகள் நீந்தி = கடந்து

பிணியுறினும் = வருந்திப் பணியாற்றினாலும் திரு = நல் வினை சேறல் = செல்லுதல்

[அறுசீர்விருத்தம்]

22 அகப்படு பொறியி னாரை
ஆக்குவார் யாவ ரம்மா
மிகப்படு பொறியி னாரை
வெறியராச் செய்ய லாமோ
நகைக்கதிர் மதியம் வெய்தா
நடுங்கச்சுட்டிடுத லுண்டே
பகைக்கதிர்ப் பருதி சந்து
மாலியும் பயந்த துண்டே. 460

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

அழியும் விதியுடையாரை ஆக்குவார் யார், வெல்லும் விதியினாரை வெறுவியராக்க இயலுமோ எனக் கட்டியங்காரன் சீவகனை நோக்கிக் கூறினான். ஊழ்வலியால் நிலாத்திங்கள் நடுங்கச்சுடுதலும் கதிரவன் தண்மை பயத்தலும் உண்டு என்றான்.

பொறி = விதி ஆக்குவார் = பிழைக்கச் செய்பவர் யார் = யாரும் இல்லை என்பது கருத்து வெறியர் = வெறுமையாளர் வெய்தா வெப்பமுடையதாக பருதி = சூரியன் சந்தும் = சந்தனமும் ஆலியும் = மழைக்கட்டியும்

23 முரிமுத்த மாலை போல
விளக்கினுட் பெய்த நெய்யும்
திரியுஞ்சென் றற்ற போழ்தின்
திருச்சுடர்த் தேம்பி னல்லால்
எரிமொய்த்துப் பெருக லுண்டோ
இருவினை சென்று தேய்ந்தாற்
பரிவுற்றுங் கொடாமை செல்வம்
பற்றியா ரதனை வைப்பார். 461

**குறிப்புரை :**

நெய்யும் திரியும் அற்றபோது விளக்குச் சுடர் அவியும் இரு வினை நீங்கியபோது யாவும் நீங்கும் என்பது

தேம்புதல் = அவிதல்    பற்றி = அகப்படுந்தி

[கலிவிருத்தம்]

24 உய்த்தொன்றி ஏர்தந் துழவுழு தாற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளைக்குற லென்னொக்கும்
மெய்த்தவ மில்லான் பொருளொடு போகங்கட்கு
எய்த்துழந் தேதான் இடர்ப்படு மாறே. 462

[வளையாபதி]

**குறிப்புரை :**

விதைக்காமல் உழுதுபயிர் விளைக்க எண்ணுதல் ஒக்கும் மெய்த்தவம் இல்லான் பொருளொடு போகம் துய்க்க எண்ணி வருந்துதல் என்கின்றது

பைங்கூழ் = பயிர்    எய்த்து = வருந்தி இளைத்து

**அறத்துப்பால் முற்றும்.**

---

# II. பொருட்பால்

---

### அதிகாரம்—1

## இறை மாட்சி

இறை மாட்சியாவது: நாடாளும் மன்னவனுக்குரிய நற்குணங்களும் நற்செயல்களுமாம்.

[நேரிசை வெண்பா]

1 பத்திமை சான்ற படையும் பலர்தொகினும்
எத்திசையும் அஞ்சா எயிலரணும்—வைத்தமைந்த
எண்ணின் உலவா இருநிதியும் இம்மூன்றும்
மண்ணாளும் வேந்தர்க் குறுப்பு. 463

**குறிப்புரை :**

படையும், எயிலரணும் இருநிதியும் மண்ணாளும் வேந்தற்கு உறுப்பு என்கின்றது

பத்திமை = பேரன்பு  படை = காலாள், குதிரை யானைப் படைகள்  எயில் = மதில்  உலவா = அழியாத
உறுப்பு = அங்கம்

2 கோலஞ்சி வாழுங் குடியும் குடிதழீஇ
ஆலம்வீழ் போலும் அமைச்சனும்—வேலின்
கடைமணிபோல் திண்ணியான் காட்புமிம் மூன்றும்
படைவேந்தன் பற்று விடல். 464

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

நல்லகுடி மக்கள், ஆலம் விழுதுபோன்ற அமைச்சர், திண்ணிய வீரர் இம்மூவரை நாடாளும் மன்னன்பற்றி கொள்ளல்வேண்டும் என்றது

3 அங்கோ லவிர்தொடி! ஆழியா ளுயினும்
செங்கோல னல்லாக்கால் சேர்ந்தாரும் எள்ளுவர்
வெங்கோன்மை வேந்தர்கண் வேண்டும் சிறிதெனினும்
தண்கோ லெடுப்புமாம் மொய். 465

[பழமொழி]

**குறிப்புரை :**

கொடியாரைக் களைய வெங்கோன்மை சிறிது வேண்டியதாயினும் தண்ணளியே வேந்தர்க்கு வலிமை பயக்கும். சக்கரவர்த்தியாயினும் செங்கோன்மை புரியாத மன்னனைச் சுற்றத்தாரும் இகழ்ந்து வெறுப்பார் என்பது

ஆழி = ஆணைச்சக்கரம் மொய் = வலிமை

[நேரிசை வெண்பா]

4 வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலும்
நீர்சான் றுயரவே நெல்லுயரும்—சீர்சான்ற
தாவாக் குடிஉயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயர்தல்
ஓவா துரைக்கும் உலகு. 466

**குறிப்புரை :**

வரப்புயர நீர்உயர்ந்து நெல்லுயர்தல்போலச் சீர்மிக்ககுடிமக்கள் உயர அரசன் புகழால் ஓங்கிஉயர்வான் எனச் சான்றோர் உரைப்பர்

வரம்பு = வரப்பு வைகலும் = நாள்தொறும் தாவா = கெடாத கோ = அரசன் ஓவாது = நீங்காது
உரைக்கும் = பாராட்டும்

5 கண்வனப்புக் கண்ணோட்டம் கால்வனப்பு செல்லாமை
எண்வனப் பித்துணையாம் என் றுரைத்தல்—
பண்வனப்புக்
கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் தன்னாடு
வாட்டான்நன் றென்றல் வனப்பு. 467

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

கண்ணுக்கு அழகு கண்ணோட்டம் காலுக்கு அழகு இரந்து செல்லாமை எண்ணுக்கு அழகு இத்துணை எனல். பண்ணுக் கழகு கேட்டார் நன்று எனல் அவ்வாறே மன்னனுக்கழகு தன் நாட்டை வாடாமல் காப்பவன் என்பதாம்

வாட்டல் = வருத்துதல்.

6 பெரும்பூட் சிறுதகைப் பெய்ம்மலர்ப் பைந்தார்க்
கருங்கழல் வெண்குடையான் காவல்—விரும்பான்
ஒருநாள் மடியின் உலகில்லைமல் நில்லா
திருநால் வகையா ரியல்பு. 468

**குறிப்புரை :**

அரசன் தன் காவற் கடமையை ஒரு நாள் மறந்துவிடின் எண்வகை இயல்புடைய சான்றோரின் தன்மை உலகிற்றங்காது நீங்கும் என்கின்றது.

இருநால்வகையாரியல்பாவன = குடிப்பிறப்பு, கல்வி குணம் வாய்மை, தூய்மை நடுச்சொல், அழுக்காறின்மை, அவா வின்மை என்பவையாம்

7 ஒள்வா ளமருள் உயிரோம்பான் தானீயக்
கொன்வார் நடுவட் கொடையோம்பான்—வெள்வான்
கழியாமே மன்னர் கதங்காற்றும் வேலான்
ஒழியாமே யோம்பு முலகு. 469

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

போர்க்களத்து உயிருக்கு அஞ்சாமை கொடைப்பண்பு பெரு வீரம் உடையவனே அரசன் அவன் மக்களைப் பாதுகாக்க வல்லவன் என்கின்றது.

ஓம்புதல் = பாதுகாத்தல் கதம் = சினம் காற்றும் = வெளிப்படுக்கச் செய்யும்

[அறுசீர் விருத்தம்]

8 கண்ணெனப் படுவ மூன்று காவலன் கல்வி காமர்
விண்ணிளைச் சுழலஒடும் வெய்யவன் என்னும்பேரார்
எண்ணினுட் டலைக் கண் வைத்த கண்ணஃதில்லை
யாயின்
மண்ணினுக்கிருளை நீக்கும் வகைபிறி தில்லைமன்ற. 470

**குறிப்புரை :**

காவல்வேந்தன் கல்வி கதிரவன் இம்மூன்றும் உலக மக்கள் வாழ்விற்கு மூன்று கண்களாம். அவற்றுள் முதற் கண்ணாகிய காவலன் இல்லையாயின் மண்ணகத்து இருளை நீக்கும் வகை வேறொன்றுமில்லை என அரசனின் காவற் சிறப்பினைக் கூறு கின்றது.

காமர் = விருப்பம் வெய்யவன் = கதிரவன். பேரார் = பெருமையுடைய மூவர்

9 ஆற்றல்மூன் றுளதப்பட்ட அரசர்க் கவற்றின் மிக்க
ஆற்றல்தான் சூழ்ச்சி என்பதாதலால் அதனை யாயும்
ஆற்றலார் அமைச்சராக அமைச்சரோ
டமர்ந்துசெல்லும்
ஆற்றலான் அரசனுகின் அரியதொன் றில்லை யன்றே. 471

**குறிப்புரை :**

பெருமை அறிவுச்சூழ்ச்சி முயற்சி என்னும் மூவகையாற்றலுள் சூழ்ச்சி மிகச்சிறந்தது. அதனை ஆற்றும் அமைச்சரோடு பொருந்தியாளும் அரசற்கு அரியது ஒன்றுமில்லை என மத்திரச் சுற்றத்தினை அரசன் பேணும் கடமை கூறுகின்றது

ஆற்றலார் = திறனுடையவர் அரியது = செய்தற்கியலாதது இல்லை = உலகத்தில் இல்லை.

[கலிவிருத்தம்]

10 எண்ணினர் எண்ணகப் படாத செய்கையான்
அண்ணியர் அகன்றவர் திறத்து மாணையான்
நண்ணுநர் பகைவ ரென்றிவர்க்கு நாளினும்
தண்ணியன் வெய்யனந் தானே மன்னனே. 472

**குறிப்புரை :**

எண்ணிப்பார்ப்பவர் அறிவுக்கு அகப்படாத திறலுடையவன் நெருங்கியவர் நெருக்கமில்லாதவர் யாவரிடத்தும் ஒப்ப ஆணை செலுத்துபவன் நட்பானவர்க்குத் தண்ணளியன் பகையான வர்க்கு வெம்மையன் எவனோ அவனே சிறந்த மன்னன் என்கின்றது.

எண் = எண்ணும் அண்ணியர் = நெருங்கியசுற்றத்தார்
அகன்றவர் = நொதுமலர் ஆணை = செங்கோன்மை
நண்ணுநர் = நட்பானவர்

11 வைய மின்புறின் மன்னன் இன்புறும்
வெய்ய தொன்றுறின் ருனும் வெய்துறும்
செய்ய கோலினர் செப்ப லாவதென்
றைய தாரினன் அருளின் வண்ணமே. 473

**குறிப்புரை :**

தனது குடிமக்கள் இன்புறின் தான் இன்புறுதலும் துன்புறின் தான் துன்புறுதலும் ஆகிய பண்பாளனே சிறந்த அரசன் என்கின்றது

வையம் = வையத்து மக்கள் வெய்யது = கொடியது
செப்பலாவது = எடுத்துச் சொல்வது

12 வீவில்வீங்குநீர் வேலி வாழ்பவர்க்
காவி யாபவர் அரசர் ஆதலாற்
கரவ லோவுங் கொல்என்று கண்படான்
மாவல் தானையம் மன்னர் மன்னனே. 474

**குறிப்புரை :**

கடல்சூழ்ந்த உலகத்து வாழும் மக்களுக்கு அரசன் உயிர்போல்வான் ஆதலின் காவற்கடமை தவறுமோ எனக் கண்ணுறங்காமல் பேணுவான் என அவன் செயற் சிறப்புக் கூறியது.

வீவில் = வீழ்தலில்லாத நீர்வேலி - நீரே வேலியாக அமைந்த உலகம் ஒவுங்கொல் = தடையுறுமோ ! கண்படான் = உறங்கான் மாவல்தானை = யானையும், குதிரையுமாகிய வலியபடை.

[அறுசீர்விருத்தம்]

13 தண்சுடர்க் கடவுள் போலத்
தாரகைக் குழாங்கள் தாமே
விண்சுடர் விளக்க மாக
விளங்கல வேந்தர் போல
மண்சுடர் வரைப்பின் மிக்க
மக்களு மிலலை கண்டாய்
கண்சுடர் காலச் சீறும்
கமழ்கடாக் களிற்று வேந்தே. 475

**குறிப்புரை:**

விண்மீன்கள் ஒன்றுதிரளினும் ஒருதிங்களை ஒப்ப ஒளி வீசாது அதுபோல மக்கள் பலராயினும் ஆற்றல்மிக்க அரசனுக்கு ஒப்பாகார் என அரசன் சிறப்புக்கூறியவாறு

தண்சுடர்க்கடவுள் = திங்கள் தாரகை = விண்மீன் குழாம் = கூட்டம் விளங்கல விளங்கமாட்டா கால = நெருப்பெழ சீறும் = பகையை அழிக்கப்பாயும் களிறு = யானைப்படை

14 ஒருமையாற் றுன்பம் எய்தும்
ஒருவனை யுண்மை யாலே
திருமையான் முயங்கு கூந்த செல்வச்
செருக்கொடு கிளைப்ப நோக்கி
இருமையும் ஒருமை யாலே
இயற்றிடின் இறைவன் போலப்
பெருமையை உடைய தெய்வம்
பிறிதினி யில்லை யன்றே. 476

**குறிப்புரை :**

இம்மையின்பமும் மறுமையின்பமும் தன் செங்கோல் மாட்சியால் மக்களுக்கு எய்தும்வண்ணம் ஆளும் அரசன் தெய்வத்திற் கொப்பாவான் என்கின்றது.

ஒருமை = ஒரு பிறப்பு  உம்மை = கழிந்தபிறப்பு
திருமை = செல்வநன்மை  இருமை = இம்மைமறுமை
இறைவன் = அரசன்  தெய்வம் = தெய்வக்கூறுகள்

[கலிவிருத்தம்]

15 அடிநிழ லரசரை அளிக்கும் ஆய்கதிர்
முடிநிழல் முனிவரர் சரணம் மூழ்குமே
வடிநிழல் வளைகதிர் எஃகின் மன்னவன்
குடைநிழல் உலகெலாங் குளிர நின்றதே. 477

**குறிப்புரை :**

குறுநில மன்னர்களைத் தன்னடிக்கீழ் வைத்தலும் முனிவர் முதலிய சான்றோர்களின அடிக்கீழ் தானமர்ந்து ஆளுதலும் பெருவேந்தனது பண்பாகும் என்கின்றது

[அறுசீர்விருத்தம்]

16 மரந்தலைப் பிணங்கி வான்றோய் மணிவளர்
வயிரக் குன்றம்
உரந்தனக் குயர வேந்தி யுய்த்திடும் ஒருவற்கேனும்
அருந்தவம் அரைச பாரம் அவைபொறை
யரிது கண்டாய்
இரந்தவர்க் கீட்டப் பட்ட இருநிதிக் கிழவ என்றான்.
478

[சூளாமணி]

குறிப்புரை.

வளம்சான்ற மலையைக் குடையாக ஏந்திய ஆற்றலுடைய திருமாலைப் போன்ற ஆற்றலுடையவராயினும் தவமும் அரச பாரமும் தாங்குதல் அரிதாம் என ஆட்சிப்பொறுப்பின் பெருமை கூறுகின்றது.

மணிவரை = நவமணிகள் நிறைந்த வயிரக்குன்றம் = திண்ணியமலை உரந்தனக்குயர் = தனக்கு ஆற்றல் உயரும் பொருட்டு ஒருவன் = (கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்த) திருமாலாகிய கண்ணன் அரசபாரம் = ஆட்சிப் பொறுப்பு பொறை - தாங்குதல் இரந்தவர் = இரவலர்

[கலிவிருத்தம்]

17 எரியு மாணை யாற் குளிரு மீகையாற்
பெரியன் மாண்பினாற் சிறிய னண்பினால்
அரியன்வேந் தர்கட் கெளியன் மாந்தர்கட்
குரியன் ஒங்குதற் கோடை யானையான் 479

[சூளாமணி]

குறிப்புரை :

ஒளிவீசும் ஆணையும் தண்ணிய கொடையும். பெருந்தன்மையும் நண்பிற்கெளிமையும், பகைவேந்தர்க்கு வெல்லற் கருமையும் ஆளப்படும் மக்களிடத்து எளிமையும் உடையவன் சிறந்த அரசன் அவன் மேலும் மேலும் உயர்ந்து புகழ்பெறுதற்குரியவன்

ஆணை = கட்டளை பெற்றி = தன்மை ஓடை = நெற்றிப் பட்டம் யானையான் என்றது அரசனை.

18 தருமன் றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை ஐந்துணைத்
திருமகன் றிரு மா நில மன்ன னே. 480

குறிப்புரை :

தண்ணளியால் தருமன் ஈகையால் வருணன் பகைவரை வெல்லுதலாற் கூற்றுவன் கலைவளர்த்தலால் வாமன் வனப்பான் மன் எனத்தக்கவனே சிறந்த அரசன் என்கின்றது.

மன் = அறக்கடவுள் கணைஐந்துடைத் திருமகன் =

19 தன்னை வென்றதண் டார்வய வேந்தனைப்
பின்னை வென்றி பெறற்கரி தாகலான்
மன்னி மற்றிலன் ஆண்டிடும் வையகம்
பொன்னின் மாரி பொழிந்திடு கின்றதே. 481

**குறிப்புரை :**

உட்பகையாகிய அறுவகைக் குற்றங்களையும் வென்ற வேந்தனை பிறபகைவர் வெல்லுதல் அரிதாம் ஆதலின் அவன் ஆளும் நாடு பொன்மாரி பொழியும் என்பது.

மன்னி = நிலைபெற்று மாரி = மழை

20 கோதை நித்திலஞ் சூழ்குளிர் வெண் குடை
ஓத நீருல கொப்ப நிழற்றலால்
தாதை யேயவன் தாள்நிழற் றங்கிய
காதலாற்களிக் கின்றதிவ் வையமே. 482

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

தண்ணளியாகிய கொற்றக்குடை நிழற்றும் வேந்தனின் ஆட்சியின் கீழ்மக்கள் இன்புற்று அன்புடன் வாழ்வார்கள் என்பது கருத்து

21 இறந்த நற்குணம் எய்தற் கரியவாய்
உறைந்த தம்மையெல் லாமுட ணக்குவான்
பிறந்த மூர்த்தியொத் தான்றிங்கள் வெண்குடை
அறங்கொள் கோலண்ணல் மும்மத யானையான் 483

**குறிப்புரை :**

அறநெறியாற் கோலோச்சும் இம் மன்னன் பகைவராற் கழிந்த எய்தற்கரிய பண்புநலங்களை மீண்டும் உண்டாக்கத் தோன்றிய புத்தபெருமானை ஒத்தவனாக உள்ளான் என அரசன் திறங் கூறுகின்றது.

மூர்த்தி = புத்தர்பிரான்.

22 சீற்றஞ் செற்றுப்பொய் நீக்கிச்செங் கோலினுற்
கூற்றங் காய்ந்து கொடுக்க வெனுந்துணை
மாற்ற மேவிநவின் றுன்றடு மாற்றத்துத்
தோற்றந்தன்னையும் காமுறத் தோன்றினுன். 484

[குண்டலகேசி]

**குறிப்புரை :**

தன்கீழ் வாழும் உயிரினங்களின் சினப் பகையை மாற்றிப் பொய்ம்மையை நீக்கிக் கூற்றுவன் தன் மக்களை அணுகாத வண்ணம் அரசன் காத்தலால் மக்கள் வீடுபேறும் வேண்டாத வரானுர் என அவ்வரசனின் மாண்பினை விளக்கியவாறு.

சீற்றம் = சினம் செற்று = அழித்து கூற்றம் = யமன்
காய்ந்து = அவனை வெகுண்டு தடுத்து தோற்றம் = பிறப்பு
காமுற = விரும்ப.

[கலித்துறை]

23 வல்லென்ற சொல்லும் புகழ்வாய்மை
வழீஇய சொல்லும்
இல்லென்ற சொல்லும் இலனுகலின் யாவர் மாட்டும்
சொல்லுங் குறையின்மையின் சோரரும்
இன்மை யாலே
கல்லென்ற சொல்லும் உரைகற்றிலன்
கொற்ற வேலான். 485

[நாரத சரித்திரம்]

**குறிப்புரை :**

கடுஞ்சொல்லும், பொய்யும் இல்லை என்னும் சொல்லும் இல்லா தவனுதலால் அவ்வரசன் நாட்டு மக்கள் குறையிரந்து சொல்லு வாரில்லை. களவு இன்மையால் அறிவுரை கூறும் சொல்லைக் கற்றிலன் என ஓர் அரசனின் பண்பு கூறியவாறு.

சோரர் = கள்வர் கற்றிலன் = தெரிந்திலன்

[ஆசிரியப்பா]

24 நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனுன், யானுயிர் என்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே. 486

**குறிப்புரை :**

நாட்டிற்கு உயிர் நெல்லும் அன்று நீரும் அன்று. மன்னனே எனத் தெளிந்து மக்களுக்கு உயிராக விளங்க வேண்டுமென் பதை மன்னன் அறிக என்கின்றது.
உயிர்த்து = உயிராகவுடையது கடன் = கடமை.

25 கால்பார் கோத்து ஞாலத் தியக்கும்
காவற் சாகா டுகைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினி து படுமே
உய்த்தல் தேற்றானாயின் வைகலும்
பகைக்கூ ழள்ளற் பட்டு
மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே. 487

**குறிப்புரை :**

ஆட்சி என்னும் தேரினைச் செலுத்தும் அரசன் மாண்புடைய வனாயின் செல்லும் வழி இன்புடையதாக அமையும். ஆட்சி முறை தெரியாதவனாயின் ஆட்சித் தேர் பகை என்னும் சேற்றில் சிக்கிப் பெருந் துன்பத்தை நாளும் தரும் என்றவாறு.
கால் = ஆரைக்கால் சாகாடு = வண்டி
உகைப்போன் = செலுத்துவோன் மாணின் = மாட்சிமை யுடையனாயின் ஊறு = துன்பம் ஆறு = ஆளும்நெறி
தேற்றானாயின் = தெளியாதவனாயின் அள்ளல் = சேறு
தலைத்தலை = இடந்தொறும் தரும் = உண்டாக்கும்.

26 மூத்தோர் மூத்தோர் கூற்றம் உய்த்தெனப்
பால்தர வந்த பழவிறல் தாயம்
எய்தின மாயின் எய்தினஞ் சிறப் பெனக்
குடிபுர விரக்கும் கூரில் லாண்மைச்
சிறியோன் பெறினது சிறந்தன் று மன்னே
மண்டமர்ப் பரிக்கும் மதனுடை நோன்றாள்
விழுமியோன் பெறுகு வனாயின் தாழ்நீர்
அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை
என்றூழ் வாடு வறல்போல நன் றும்
நொய்தா லம்ம தானே மையற்று
விசும்புற ஓங்கிய வெண் குடை
முரசுகெழு வேந்தர் அரசுகெழு திருவே. 488

[புறநானூறு]

**குறிப்புரை :**

ஆட்சி செய்யும் உரிமை பகைவரை வெல்லும் பெருவலியுடைய பண்புடைய ஒருவன்பெறின் அது அவனுக்கு ஒரு நெட்டியைப் போல எளிதானதாக அமையும். குடிமக்களை வருத்தி வாரி பெறும் வழிவழியாக வந்த அரச உரிமையை ஏற்று இது பெரும் பேறு எனக்கருதும் ஆண்மையில்லாத சிற்றறிவுடையோன் அதனைப் பெறின் அது அவனுக்கு பெருஞ்சுமையாக அமையும் என்றவாறு.

பால்தர = விதிவழியாக வந்த = வந்தடைந்த
பழவிறல் தாயம் = பழமையான வெற்றி பொருந்திய அரச
உரிமை கூரில் ஆண்மை = பேராண்மை இல்லாத
சிறியோன் = ஆற்றலில்லாதவன் சிறந்தன்று = சிறந்தது
(அவன் சிறப்புடையதாகக் கருதிக் கொள்வான் என்றபடி)
பரிக்கும் = தாங்கும் மதனுடை நோன்றாள் = வலிமைமிக்க
தாளாண்மை நீர்அறுகயம் = வற்றிய குளம்
வெண்கிடை = வெண்மைபொருந்திய நெட்டி
என்றூழ் = சூரியன் வறல் = வற்றல் நொய்து = (கன
மில்லாதது) லேசானது மையுற்று = குற்றமற்று
அரசுகெழுதிரு = அரசாட்சியாகிய பேறு.

## அதிகாரம்—2

## கல்வி

கல்வியாவது : கற்றற்குரிய நூல்களைப் பயின்றுணர்தலும் கலை முதலியவற்றைப் பயிலுதலும் போர் முறைகளைப் பயிலுதலுமாம்.

[இன்னிசை வெண்பா]

1 ஆற்றவுங் கற்றார் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில். 489

குறிப்புரை :

நிறைந்த கல்வியறிவுடையார்க்கு எல்லா நாடும் தம் நாடே. யாவரும் அவரை வரவேற்றுத் தமராகப் போற்றுவர் என்பது.

ஆற்றவும் = நிறைய  தம = தம்முடையன
ஆயினல் = அவ்வாருனமையால்  ஆற்றுணா = உடன் கொண்டு செல்லும் உணவு (கட்டுச்சோறு என்பது உலக வழக்கு).

2 சொற்ருறும் சோர்வு படுதலாற் சோர்வின்றிக்
கற்ருறும் கல்லாதேன் என்று வழியிரங்கி
உற்ருென்று சிந்தித்து உழந்தொன் றறியுமேல்
கற்ருறுந்தான் கல்லாத வாறு. 490

குறிப்புரை :

ஆர்வமுடையோர் கற்கக்கற்க நிறைவுருது மேலும்மேலும் கற்பர் என்பது கருந்து.

சோர்வு = மறதி  வழியிரங்கி = நெறியாகச் சென்று
உழந்து = வருந்தி.

[நேரிசை வெண்பா]

3 ஆற்றும் இளமைக்கண் கல்லாதான் மூப்பின்கண்
போற்றும் எனவும் புணருமோ—ஆற்றச்
சுரம்போக்கி உல்குகொண்டார் இல்லைமற் றில்லை
மரம்போக்கிக் கூலிகொண் டார். 491

[பழமொழி]

குறிப்புரை :

கற்றற்குரிய இளமைக் காலத்தில் கல்லாமல் முதுமைக்கண் கற்றல் இயலாது. வழியில் போகவிட்டுப் பின்னர் தீர்வை கொள்ளல் இயலுமோ இயலாது. ஓடத்தைச் செலுத்திவிட்டுக் கூலி கொள்வார் இல்லை அல்லவா ?

புணருமோ = கைகூடுமோ  சுரம் = வழி  உல்கு = சுங்கப் பொருள்  மரம் = ஓடம்  போக்கி = செலுத்திக் கரையேற விட்டு.

[இன்னிசை வெண்பா]

4 விளக்கு விலைகொடுத்துக் கோடல் விளக்குத்
துளக்கமின் றென்றனைத்துந் தூக்கி—விளக்கு
மருள்படுவ தாயின் மலைநாட என்னை
பொருள்கொடுத்துக் கொள்ளார் இருள். 492

**குறிப்புரை :**

ஒளிவேண்டி விளக்கைப் பொருள் கொடுத்துப் பெறுவர் விளக்கே இருளைச் செய்யின் அவ்விளக்கைப் பொருள் கொடுத்துப் பெறலாமோ என்பது இதன் குறிப்பு, அறியாமை நீங்க வேண்டி நூல்களைப் பயில வேண்டும். அறியாமையைத் தரும் நூல்களைப் பயிலக் கூடாது என்பது. அஃதாவது ஞான நூல்களைப் பயில்க என்றவாறு.

துளக்கம் = ஒளி தூக்கி = ஆராய்ந்து.

5 திரியழல் காணின் தொழுப விறகின்
எரியழல் காணின் இகழ்ப—ஒருகுடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்
இளமைபா ராட்டும் உலகு. 493

**குறிப்புரை :**

விளக்கொளியை வழிபடுவர் விறகெரியும் ஒளியை வழிபடார். அதுபோலக் கல்லாது மூத்தோனைப் பாராட்டாது கல்வியுடைய இளையோனையே போற்றுவர் என்பது.

திரியழல் = நெய்விளக்கு விறகு = அடுப்பு விறகு
பாராட்டும் = புகழும்.

[பஃறொடை வெண்பா]

6 கற்பக் கழிமட மஃகும் மடமஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணரும்
கோளுணர்ந்தால்
தத்துவ மான நெறிபடரும் அந்நெறியே
இப்பால் உலகத் திசைநிறீஇ உப்பால்
உயர்ந்த உலகம் புகும். 494

**குறிப்புரை :**

கல்வியறிவு அறியாமையை நீக்கி உலகியலை உணரச் செய்து இறுதியில் வீட்டின்பத்தையும் தரும் என்பது.

கழிமடம் = மிக்க அறியாமை அஃகும் = குறைந்து நீங்கும்
புற்கம் = புல்லறிவு கோள் = கொள்கை
தத்துவம் = மெய்ம்மை இசை புகழ் நிறீஇ = நிறுவி
உப்பால் = பின்னர், உயர்ந்த உலகம் = முத்திவீடு.

[இன்னிசை வெண்பா]

7 **கடற்குட்டம் போழ்வர் கலவர் படைக்குட்டம்**
**பாய்மா உடையான் உடைக்கிற்கும் தோமில்**
**தவக்குட்டம் தன்னுடையான் நீந்தும் அவைக்குட்டம்**
**கற்றான் கடந்து விடும்.** 495

**குறிப்புரை :**

கடல் வெள்ளத்தைக் கலம் செலுத்துவோர் கடந்து விடுவர்; படை வெள்ளத்தை மாவீரன் கடந்து விடுவான்; தன்னை உணர்ந்தோன் தவக்கடலைக் கடந்துவிடுவான். அவ்வாறே கற்றவன் அவை வெள்ளத்தைக் கடந்துவிடுவான் என்பது.

குட்டம் நீர்நிலை = (ஆழம் நிறைந்த பெருங்குளம்) கலவர் = மரக்கலம் உடையவர் பாய்மா = குதிரை தோமில் = குற்றமில்லாத தன்னுடையான் = தன்னை உணர்ந்த ஞானி
அவை - நூலோர் அவைக்களம்.

8 **வாலிழையார் முன்னர் வனப்பிலான் பாடிலன்**
**சாலும் அவைப்படின் கல்லாதான் பாடிலன்**
**கற்றான் ஒருவனும் பாடிலனே கல்லாதார்**
**பேதையார் முன்னர்ப் படின்.** 496

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

அழகில்லாதவன் மகளிரிடத்தே பெருமையுறுன் நூலோர் அவையிற் கல்லாதவன் பெருமையுறுன் அவ்வாறே கல்லாதார், பேதைமையுடையார்முன் கல்வியாற் சிறந்தவன் பெருமை யுறுன். அஃதாவது கற்றவன் சிறப்பினைக் கல்லாதார் தெரியார் என்றவாறு.

பாடு = பெருமை — சிறப்பு

[நேரிசை வெண்பா]

9 பொன்பெறும் கற்றுன் பொருள்பெறும் நற்கவி
என்பெறும் வாதிஇசை பெறும்—முன்பெறக்
கல்லார், கற்றுரினத்தார் அல்லார் பெறுபவோ
நல்லா ரினத்து நகை. 497

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

கல்லாதவர் நல்லோரின் உவப்பினைப் பெருர் என்பது
வாதி = தருக்கநூற்புலவர் நகை மகிழ்ச்சியைக் குறித்து நின்றது

10 அறுவர்தம் நூலும் அறிந்துணர்வு பற்றி
மறுவரவு மாருய நீக்கி—மறுவரவின்
மாசாரியனு மறுதலைச்சொல் மாற்றுதலே
ஆசா ரியன தமைவு. 498

[ஏலாதி]

**குறிப்புரை :**

அறுவர் = பாசற்ற சான்றோர்; மறுவரவு = குற்றங்களின் வருகை; மாருய = அறத்திற்கு மாறுபட்டவை; மறுதலைச் சொல் = வினுவாக வரும் சொற்கள் அமைவு = இலக்கணம்.

11 கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து. 499

[நாலடியார்]

**குறிப்புரை :**

கல்விக்கு எல்லையில்லையாதலின் சில வாணுளே உடைய மக்கள் கற்க வேண்டிய நல்ல நூல்களைத் தேர்ந்து கற்றல் வேண்டுமென்பது.

கரை = எல்லை நாள் = வாழ்நாள் அமைவுடைய = இருமைக்கும் நலம்பயப்பனவாகிய நூல்கள் குருகு = அன்னப்பறவை

12 கண்ணுங்காற் கண்ணும் கணிதமே, யாழினே
டெண்ணுங் கால் சாந்தே இலைநறுக்கு
இட்டயிவ் வைந்தும் அறிவான் இடையாய
சிட்டனென் றெண்ணப் படும். 500

**குறிப்புரை :**

கண்ணுங்கால் = கருதும்பொழுது; கணிதம் = கணித நூல்; சிட்டன் = மாணக்கன்.

13 சந்தம் மெய்ஞ்ஞானம் தருக்கம் சமயமே
வித்தகர் கண்ட வீடுள்ளிட்டாங்—கத்தகத்
தந்தவிவ் வைந்தும் அறிவான் தலையாய
சிந்திப்பின் சிட்டன் சிறந்து. 501

[ஏலாதி]

**குறிப்புரை :**

சந்தநூல் மெய்யறிவுநூல தருக்கநூல், சமயநூல் வீட்டுநூல் ஆய ஐந்துவகை நூல்களைக் கற்றவனே தலைமாணாக்கனாவான்.

சிட்டன் = மாணாக்கன்

[அறுசீர் விருத்தம்]

14 கைப்பொருள் கொடுத்துங் கற்றல்
கற்றபின் கண்ணு மாகும்
மெய்ப்பொருள் விளக்கும் நெஞ்சின்
மெலிவிற்கோர் துணையு மாகும்
பொய்ப்பொருள் பிறகள் பொன்னும்
புகழுமாம் துணைவி யாக்கும்
இப்பொருள் எய்தி நின்றீர்
இரங்குவ தென்னை யென்றான். 502

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

தனதுபொருள் எல்லாவற்றையுமாயினும் கொடுத்துக் கல்வியைக் கற்றல்வேண்டும். அங்ஙனம் கற்றால் அது கண்ணுக்கு ஒப்பாகும் மேலும் அது மெய்ப்பொருளை விளக்கும். மெலிந்த விடத்துத் துணையாகும். பொருளையும் புகழையும் நல்ல துணை வியையும் ஆக்கித்தரும்.

பிறகள் — பிறபொருள் எல்லாம்

[ஆசிரியப்பா]

15 உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலைமுனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன் வயிற்றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயும்மனம் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னா தவருள்

அறிவுடையோ னாறு அரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே. 503

[புறநானூறு]

**குறிப்புரை :**

கல்வியறிவுடையவனையே தாயும் போற்றுவாள். அரசன் அவன் வழிச் செல்வான் பிறப்பால் கீழ்ப்பட்டவனாயினும் மேல் வகுப்பினரால் பாராட்டப்பெறுவான் என்பது.

உறுபொருள் = பெரும்பொருள் முனியாது = வெறுப்புறுது. அறிவு = கல்வியறிவு நாற்பால் = குலவகையானமைந்த நாற்பகுப்பு கீழ்ப்பால் = வேளாண்குலம் மேற்பால் = அந்தணர்க்குலம்

**அதிகாரம்—3**

## கல்லாமை

கல்லாமையாவது :- கற்க வேண்டிய காலத்துக் கற்க வேண்டியவற்றைக் கல்லாதிருக்கும் நிலைமை. அதனான் எய்தும் இழிவினை இவ்வதிகாரம் உணர்த்துகின்றது.

[இன்னிசை வெண்பா]

1 சுற்றுனும் கற்றார்வாய்க் கேட்டானு மல்லாதான்
தெற்ற உணரான் பொருள்களை—எற்றே
அறிவிலான் மெய்த்தலைப் பாடு பிறிதில்லை
நாவற்கீழ்ப் பெற்ற கனி. 504

**குறிப்புரை :**

கல்லாதவர் பொருள்களின் மெய்த்தன்மை உணரார் கல்வியறிவில்லாதார் ஒருகால் உண்மைப்பொருளைத் தெரிந்துகொள்ளுதல் நாவற்பழம் தானே விழ அதனைப் பெற்றதனோடு ஒக்கும் என்பது

மெய்த்தலைப்பாடு = உண்மை அறிந்துகொள்ளல் நாவல் = நாவல் மரம்

[நேரிசை வெண்பா]

2 கல்லாவான் கண்ட கழிநுட்பம் கற்றார்முன்
சொல்லுங்கால் சோர்வு படுதலால்—நல்லாய்
வினாமுந் துறாத உரையில்லை யில்லை
கனாமுந் துறாத வினை. 505

[பழமொழி]

**குறிப்புரை :**

நூற்கல்வி இல்லாதவன்தான் நுட்பமெனக்கருதி ஒன்றைக் கற்றார்முன் கூறுங்கால் அது தாழ்வுபடும். வினாவின்றி விடையும் நினைவின்றிச் செயலும் இல்லாமைபோலக் கல்வியறிவின்றி நுண்பொருள் தோன்றாது என்பது

சோர்வு = ஈண்டுஇழிவுகுறித்து நின்றது கனாஎன்றது = நினைவினை

[இன்னிசை வெண்பா]

3 கல்லாதா னூருங் கலிமாப் பரிப்பின்னா
வல்லாதான் சொல்லும் உரையின் பயனின்னா
இல்லார்வாய்ச் சொல்லின் நயமின்னா இன்னா
இளமையுள் மூப்புப் புகல். 506

[இன்னாநாற்பது]

**குறிப்புரை :**

கல்வியறிவில்லாதான் கூறும் உரையின் பயன் இனிமை பயவாது என்பது

கலிமா = குதிரை பரிப்பு = தாங்குதல் இல்லாதார் = பொருளின்றி வறுமையுற்றவர். நயம் = அறவுரை

[நேரிசை வெண்பா]

4 கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு மெல்ல
இருப்பினும் நாயிருந்தற்றே இராஅது
உரைப்பினும் நாய்குரைத் தற்று. 507

**குறிப்புரை :**

கல்லாதவன் கற்ருேரவையில் இருப்பது நாய் கிடப்பதையும் பேசுவது குரைப்பதையும் ஒக்கும் என அவன் இழிவைக் கூறியவாறு

5 பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்
கல்லாதார் வாழ்வ தறிதிரேல்—கல்லாதார்
சேதனம் என்னுமச் சேறகத் தின்மையால்
கோதென்று கொள்ளாதாங் கூற்று. 508

[நாலடியார்]

**குறிப்புரை :**

கற்றவர் பலரினும் கல்லாதவர் நெடிதுநாள் வீாழ்வதற்குக் காரணம் கூறுவதுபோலக் கல்லாதவர் இழிவைக் கூறுகின்றது கற்றவர் சாறுள்ள கரும்புபோல்வார் கல்லாதவர் சாறுநீங்கிய சக்கைபோல்வார் ஆதலின் சாறுள்ள கரும்பைக் கூற்றுவன் சுவைப்பதற்காகக் கொண்டு செல்கிருன் என்கிறது.

சேறு = அமிழ்தம் கோது = சக்கை கூற்று = கூற்றுவன்

**அதிகாரம் — 4**

## கேள்வி

கேள்வியாவது : கற்றறிந்த சான்ருேரும் ஒழுக்கத்தான் நிறைந்தோரும் கூறும் நெறிமுறைகளையும் நூல்களையும் செவி வழி யாகக் கேட்டுணர்தலாம்.

[நேரிசை வெண்பா]

1 உணற்கினிய இன்நீர் பிறிதுழி இல்லென்னும்
கிணற்றகத்துத் தேரைபோ லாகார்—கணக்கினை
முற்றப் பகலும் முனியா தினிதோதிக்
கற்றலின் கேட்டலே நன்று. 509

**குறிப்புரை :**

கிணற்றுத் தவளைபோல இராமல் நாள்முழுதும் வருந்திக் கற்றலைக் காட்டினும் கற்றார்பாற்சென்று பொருளைக் கேட்டறிதல் கற்றலைவிட நன்மைதரும் என்பது.

இன்நீர் = இனியநீர் கணக்கினை = நூல்களை
முனியாது = வெறுப்பில்லாது

**2** **கள்ளி யகிலுங் கருங்காக்கைச் சொல்லும்போல்**
**எள்ளற்க யார்வாயும் நல்லுரை—தெள்ளிதின்**
**ஆர்க்கும் அருவி மலைநாட நாய்கொண்டால்**
**பார்ப்பாரும் தின்பர் உடும்பு.** 510

[பழமொழி]

**குறிப்புரை :**

நல்லுரையை யார் கூறினும் இகழாமல் கொள்ளவேண்டும் என்பது. கள்ளியினிடத்து அகிலும் கருங்காக்கையிடத்து நன்னிமித்தமும் பெறப்படும் ஆலின் நாயாற் கௌவப்பட்ட போது நன்மைபயக்குமெனப்பார்ப்பாரும் உடும்பினைந் தின்பர் அதுபோலக் கீழாயினோர் சொல்லும் பயனுடையதாயின் கொள்ள வேண்டுமென்பது.

**3** **தண்ணுமை யாழ்குழல் கீதமென் றின்னன**
**நண்ணி நயப்ப செவியல்ல—திண்ணிதின்**
**வெட்டென்ற சொல்நீக்கி விண்ணொடு வீட்டின்பக்**
**கட்டுரைக் கேட்ப செவி.** 511

**குறிப்புரை :**

இனிய இசைகளைக் கேட்பதினும் சுவர்க்கமும் வீடும் பயக்கும் கட்டுரைகளைக் கேட்பது செவியின் நற்பயனாகும் என்பது

தண்ணுமை = மத்தளம் நண்ணி = அணுகி செவியல்ல = செவியின் நற்பயன் அல்ல விண் = சுவர்க்கம் கட்டுரை = கழறியுரைக்கும் அறவுரைகள்

4 கல்லாரே யாகினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. 512

[நாலடியார்]

குறிப்புரை :

கற்க இயலாதுபோயினும் கற்றாரைச் சேர்ந்து ஒழுகுதல் நல்லறிவைப் பயக்கும் என்பது.

தலைப்படுவர் = எய்துவர்

[இன்னிசை வெண்பா]

5 தேவ ரனையர் புலவருந் தேவர்
தமரனையர் ஓரூர் உறைவார்—தமருள்ளும்
பெற்றன்னர் பேணி வழிபடுவார் கற்றன்னர்
கற்றாரைக் காத லவர். 513

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை :

புலவோர் தேவரை ஒப்பார் அவரோடு உடன்உறைதல் நன்று கற்றாரிடத்து அன்புடையவர் கற்றாரோடு ஒப்பர் என்பது

அனையர் = ஒப்பர் கற்றன்னர் = கற்றாரை ஒப்பர்

[நேரிசை வெண்பா]

6 புண்ணாகப் போழ்ந்து புலால்குளிப்பத் தாழ்வளர்ந்து
வண்ணப்பொன் செய்வ செவியல்ல—நுண்ணூல்
அறவுரை கேட்டுணர்ந் தஞ்ஞானம் நீக்கித்
துறவுரை கேட்ப செவி. 514

குறிப்புரை :

பொன்னணிகளை அணிவது செவிப்பயன் இல்லை. நுண்ணிய நூல்கூறும் அறவுரைகளைக் கேட்டு அஞ்ஞானம் நீங்கித் துறவுரை கேட்பதே செவியின் பயனாகும் என்பது.

7 மறவுரையுங் காமத் துரையும் மயங்கிப்
பிறவுரையும் மல்கிய ஞாலத்—தறவுரையைக்
கேட்குந் திருவுடை யாரே பிறவியை
மீட்குந் திருவுடை யார். 515

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

மறம்பயக்கும் உரைகளும் காமம் செய்யும் உரைகளுமே மலிந்த இந்த உலகத்தில் சான்றோர் கூறும் அறவுரைகளைக் கேட்கும் வாய்ப்புடையவர் பிறவித் துன்பத்தை நீக்கும் திருவினை உடையராவர்.

மல்கிய = நிறைந்த திரு = தகவு

**அதிகாரம்—5**

## அறிவுடைமை

அறிவுடைமையாவது : பொறிவழிச் செல்லும் மனத்தைத் தீநெறிக்கண் செல்லாது தடுத்து நன்னெறிக்குச் செலுத்தும் தெரிந்துணர்வாகும். அது கல்வி கேள்விகளான் விரிந்து வருவதொரு செல்வமாகும்.

[நேரிசை வெண்பா]

1 அறிவினான் மாட்சியொன் றில்லா வொருவன்
பிறிதினான் மாண்ட தெவனும்—பொறியின
மணிபொன்னுஞ் சாந்தமும் மாலையும் மற்றன்ன
அணியெல்லாம் ஆடையின் பின். 516

**குறிப்புரை :**

அறிவினால் எய்தும் சிறப்பே உயர்ந்தது பிறவகையான் வருவது சிறப்பாகாது. பொன்னும் மணியும் மாலையுமாகிய அணிகள் யாவும் ஆடையின் சிறப்பிற்குப் பின்னிற்பவையே அதுபோல என்பது.

மாண்டது = சிறப்பெய்துவது எவனும் = எவ்வாறு ஆகும் பொறி = உறுப்பு.

2 புலமிக்க வரை புலமை தெரிதல்
புலமிக் கவர்க்கே புலனாம் — நலமிக்க
பூம்புன லூர பொதுமக்கட் காகாதே
பாம்பறியும் பாம்பின கால். 517

**குறிப்புரை :**

அறிவுடையாரை அறிவுடையவரே அறிய இயலும். பாம்பின் கால் பாம்பு அறிவதுபோல என்பது.

புலம் = அறிவு   புலனும் = தெரியும்.

3 செல்லற்க சேர்ந்தார் புலம்புற செல்லாது
நில்லற்க நீத்தார் நெறியொரீஇ—பல்காலும்
நாடுக தான்செய்த நுட்பத்தை கேளாதே
ஓடுக ஊரோடு மாறு. 518

[பழமொழி]

**குறிப்புரை :**

தன்னைச் சார்ந்தவர் தனிமையுற்று வருந்துமாறு அவரை நீங்கிச் செல்லற்க. நீத்தாரின் அறநெறிக்கண் செல்லாமல் நில்லற்க. நாள்தோறும் நுட்பமானவற்றை ஆராய்ந்துணர்க. ஊராரோடு ஒத்துச் செல்க. இவ்வயாவும் அறிவுடைமையாகும் என்றவாறு.

புலம்புற = தனிமைகொள்ள   ஒரீஇ = நீங்கி   ஆறு = வழி.

[இன்னிசை வெண்பா]

4 பெண்விழைந்து பின்செலினும் தன்செலவிற்
குன்றாமை
கண்விழைந்து கைகிறினும் காதல் பொருட்புன்மை
மண்விழைந்து வாழ்நாள் மதியாமை இம்மூன்று
நுண்விழைந்த நூலவர் நோக்கு. 519

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

பெண் ஒருத்தி வலிய விரும்பினும் தன் மனந்திரியாமையும், பிறர்பொருளை விரும்பாமையும், உலக வாழ்வை மதியாமையும் நுண்பொருளைத் தேர்ந்தவர் குறிக்கோளாகும்.

தன்செலவு = உறுதிப்பாடு   கையுறினும் = கையகப்பட்டினும்   மண் = உலகம்   நுண் = நுண்பொருள் (வீடுபேறு)   நோக்கு = குறிக்கோள்

[நேரிசை வெண்பா]

5 **ஓதநீர் வேலி உலகத்தார் இந்நெறி**
**காதலர் என்பதறிந் தல்லால்—யாதொன்றும்**
**கானக நாட பயிலார் பயின்றதூஉம்**
**வானக மாகி விடும்.** 520

**குறிப்புரை :**

பழக்கம் இன்பம்போலக் காட்டி நீங்குவது ஆதலால் அறிவுடையோர் சான்றோர் விரும்பும் நெறியறிந்து அதனை மேற்கொள்வார் என்பது கருத்து.

ஓதநீர் = கடல்   காதலர் = விருப்பமுடையர்   பயின்றது = பழகியநெறி   வானகம் = சுவர்கம் அது இன்பத்தைக் குறித்து நின்றது.

[இன்னிசை வெண்பா]

6 மனங்கொண்டக் கண்ணும் மருவில செய்யார்
கனங்கொண் டுரைத்தவை காக்கவே வேண்டும்
சனங்கள் உவப்பன செய்யாவும் செய்க
இனங்கழு வேற்றினா ரில். 521

**குறிப்புரை :**

சான்றோர் மதித்துரைத்தவற்றைக் காத்தொழுகுதல் வேண்டும். உள்ளம் விரும்பினுலும், மரபாகாதவற்றைச் செய்யற்க. நூல் நெறியில்லையாயினும் மக்கள் உவப்பனவற்றைச் செய்க. இவை யாவும் அறிவுடைமை என்றவாறு.

மருவில = மரபில்லாதன கனம் = பெருமை செய்யாவும் = செய்யவேண்டாதனவாயினும், உலகநடையறிந்து செய்யின் அது நூல்நெறியன்று என்று நல்லோர் கூறமாட்டார் என்பதை விளக்க இனங்கழு வேற்றினுர் இல் என்று கூறப்பட்டது.

[நேரிசை வெண்பா]

7 **இணரோங்கி வந்தாரை என்னுற்றக் கண்ணும்**
**உணர்பவர் அஃதே உணர்ப—உணர்வார்க்கு**
**அணிமலை நாட அளறுடிக் கண்ணும்**
**மணிமணி யாகி விடும்.** 522

**குறிப்புரை :**

சேற்றில் கிடப்பினும் மணியின் தன்மையறிந்தார்க்கு மணியின் உயர்வு புலப்படும். ஒரு குழுவின்கண் வந்தார் என் நிலையி லிருப்பினும் அறிவுடையோர் அவர் உயர்வை அறிவர் என்பது.

இணர் = கொத்து, ஈண்டுக் குழுவை உணர்த்திற்று அஃதே = அவ் உயர்வையே அளறு = சேறு ஆடிக்கண்ணும் = முழுகிக்கிடக்குமிடத்தும் மணி = வைர முதலியகற்கள்.

8 **கற்றதொன் றின்றி விடினும் கருமத்தை**
**அற்றம் முடிப்பான் அறிவுடையான்—உற்றியம்பும்**
**நீத்தநீர்ச் சேர்ப்ப இளையானே யாயினும்**
**மூத்தானே யாடு மகன்.** 523

[பழமொழி]

**குறிப்புரை :**

ஒன்றைக் கல்லாதவனுயினும் எடுத்த செயலை முற்றமுடிப்பவன் அறிவுடையனேயாவன் இளையவனுயினும் வெற்றிகொண்டவனே மூத்தவனுவான் என்பது.

கருமம் = மேற்கொண்ட செயல் அற்றம் = முழுமை இயம்பும் = ஆரவாரிக்கும் நீத்தம் = கடல். ஆடுமகன் = வெற்றியுடையவன்

[இன்னிசை வெண்பா]

9 நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும் நிலையினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான். 524

**குறிப்புரை :**

உயர்வுக்கும் தாழ்வுக்கும் தானே காரணம் என்பது. அதனால் அறிவுடையனாக வேண்டுமென்பது கருத்து.

நிறுப்பான் = நிலைக்கச் செய்பவன்.

[நேரிசை வெண்பா]

10 கரும வரிசையாற் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாரும் சேறல்—அருமரபின்
ஓதம் அரற்றும் ஒலிகடற் றண்சேர்ப்ப
பேதைமை யன்ற தறிவு. 525

**குறிப்புரை :**

செயலாற்றுங்கால் கல்லாதவர் பின் கற்றவர் சேறல் பேதைமை யன்று அறிவுடைமையேயாகும்.

கருமம் = பொதுப்பணி பெருமையுடையார் = கற்றோர்.

[இன்னிசை வெண்பா]

11 வேம்பின் இலையுட் கனியினும் வாழைதன்
தீஞ்சுவை யானுந் திரியாதாம்—ஆங்கே
இனந்தீ தெனினும் இயல்புடையார் கேண்மை
மனந்தீதாம் பக்க மரிது. 526

**குறிப்புரை :**

அறிவிலார் கூட்டத்திலிருப்பினும் சால்புடையவர் மனம் தீமையின் பக்கம் செல்லாது. வேம்பின் இலைக்குள் இருப்பினும் வாழைப்பழம் தன்சுவை திரியாமைபோல என்பது.

கேண்மை = உறவு அரிது = இல்லை.

12 கடல்சார்ந்தும் இன்னீர்ப் பிறக்கும் மலைசார்ந்தும்
உப்பீண் டுவரிபிறத் தலாற்—றத்தம்
இனத்தனையர் அல்லர் எறிகடற் றண்சேர்ப்ப
மனத்தனையார் மக்களென் பார். 527

குறிப்புரை :

கடற்கரையில் நன்நீரும் மலைப்பக்கத்தில் உப்புநீரும் பிறத்தல் உண்டு ஆதலால் மனத்திண்மையேயன்றி இனத்தால் திரிபுறுதல் பெரிதும் இல்லை என்பது கருத்து.
உவரி = உவர்நீர்.

13 மெல்லியல் நல்லாருள் மென்மை அதுவிறந்து
ஒன்னாருள் கூற்றுட்கும் உட்குடைமை யெல்லாம்
சலவருட் சாலச் சலமே நலவருள்
நன்மை வரம்பாய் விடல். 528

[நாலடியார்]

குறிப்புரை :

அறிவுடையோர் தம் சூழலுக்கு ஏற்ப ஒழுகவேண்டும் என்கின்றது. மகளிரிடத்தில் இருக்கும்போது மென்மையாளனாகவும் பகைவரிடத்து கூற்றுவனும் அஞ்சும்படியாகவும் பொய்யரிடத்துப் பொய்யனாகவும் நல்லவரிடத்துச் சால்புடையனாகவும் அமைந்து ஒழுகல்வேண்டும் என்பது.
ஒன்னார் = பகைவர் உட்கும் = அஞ்சும் சலவர் = குறையுடையார் நலவர் = சான்றோர் வரம்பு = எல்லை

[நேரிசை வெண்பா]

14 இம்மூ வுலகில் இருள்கடியும் ஆய்கதிர்போல்
அம்மூன் றும் முற்ற வுணர்தலால்—தம்முன்
உறழா மயங்கி உறழினும் என்றும்
பிறழா பெரியோர் வாய்ச் சொல். 529

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

மூவுலகினும் இருளைப்போக்கும் கதிரவனைப்போல முக்காலமும் அறிதலால் நிலைமாறுதவை நிலைமாறினும் பெரியோர் வாய்ச் சொல் பிறழா என்கின்றது.

மூவுலகம் = நாகலோகம், பூலோகம், சொர்க்கலோகம் அம் மூன்று. இறப்பு நிகழ்வு எதிர்வென்னும் காலங்கள் உறழாதன உறழ்தலாவது. பால் புளித்தலும் பகல் இருளுதலும் சந்தனம் சுடுதலும் போல்வன,

15 **இளையர் முதியர் எனவிருபால் பற்றி**
**விளையும் அறிவென்னல் வேண்டா—இளையனுய்த்**
**தன்ருதை காம நுகர்தற்குத் தான்காமம்**
**ஒன்ருது நீத்தானுங் காண்.** 530

[பெரும்பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

அறிவு இளமை மூப்பு என்னும் அகவைபற்றி நிற்பதில்லை. எடுத்துக்காட்டு : யயாதி என்னும் மன்னன் காமநுகர விரும் பியதற்காக அவன் மகன் தன் இளமையை அவனுக்குத் தந்து தான் முதுமையைப் பெற்றுக்கொண்டு காமம் நீத்திருந்த வரலாறு காண்க என்கின்றது.

**அதிகாரம் — 6**

## குற்றங்கடிதல்

குற்றங்கடிதலாவது: அரசு முதலாய கடமைகளை ஏற்று ஆளும் பொறுப்புடையார் மானம் வெகுளி கடும் பற்றுள்ளம் இவறுதல் காமம் முதலிய குற்றங்கள் தம்பால் நிகழாமல் நீக்கிவிடுதலாகும்.

[நேரிசை வெண்பா]

1 **போகம் பொருள்வேட்கை மான்வேட்டம் பொல்லா கள்**
**சோகம் படும்சூதே சொல்வன்மை—சோகக்**
**கடுங்கதத்துத் தண்டம் அடங்காமை காப்பின்**
**அடுங்கதமில் ஏனை யரசு.** 531

**குறிப்புரை :**

நல்லசரன் என்பவன் இவன் என்கின்றது.
போகம் = காமவேட்கை வேட்டம் = கொலை
சொல்லன்மை = வன்சொற்கூறுதல் கதம் = மிக்கசினம்
அடைக்கலப்பட்டாரைக் கொல்லும் சினம்.

2 **ஆர்வமே செற்றம் கதமே அறையுங்கால்**
**ஓர்வமே செய்யும் உலோபமே —சீர்சாலா**
**மானமே மாய உயிர்க்கூனம் என்னுமே**
**ஊனமே தீர்ந்தவர் ஒத்து.** 532
[ஏலாதி]

**குறிப்புரை :**

குற்றமில்லாத சான்றோர் நூல்கள் கூறும் குற்றங்கள் இவை என்கின்றது.
ஆர்வம் = பேரவா செற்றம் = கொலை கதம் = சினம்
ஓர்வம் = ஓரஞ்செய்தல் உலோபம் = இவறுதல் தன்மை
மானம் = குற்றம் ஊனம் = குறைப்படுத்தல்.

[இன்னிசை வெண்பா]

3 **அச்சம் அலைகடலிற் றோன்றலும் ஆர்வுற்ற**
**விட்டகல கில்லாத வேட்கையும் கட்டிய**
**மெய்த்நிலை காணு வெகுளியும் இம்மூன்றும்**
**தந்நெய்யில் தாம்பொரியு மாறு.** 533

**குறிப்புரை :**

இதுவும் அது :
கடல்போன்ற அச்சம், பேராசை, வெகுளி இம்மூன்றும்தான் வார்த்த நெய்யில் தானே விழுந்து பொரிதலை ஒக்கும் என்றவாறு.

[நேரிசை வெண்பா]

4 தன்னை வியந்து தருக்கலும் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும் — முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. 534

**குறிப்புரை :**

இதுவும் அது :
தன்னைப் பெரியோனாக எண்ணிச் செருக்கடைதலும் வீணாகச் சினத்தலும், எல்லாப்பொருள்மேலும் பெருவேட்கையுறுதலும் செல்வத்தை அழிக்கும் கருவிகளாகும்.

[இன்னிசை வெண்பா]

5 அற்புப் பெருந்தளை யாப்பு நெகிழ்ந் தொழிதல்
கற்புப் பெரும்புணை காதலின் கைவிடுதல்
நட்பின் நயநீர்மை நீங்கல் இவைமூன்றும்
குற்றந் தரூஉம் பகை. 535

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

இதுவும் அது :
அன்பு என்னும் கட்டினை நெகிழ்ந்துவிடுதல் கற்பாகிய புணையைக் கைவிட்டுவிடுதல் நண்பரிடத்து நீதியின்றிச் செய்தல் ஆகிய மூன்றும் தன்னை அழிக்கும் பகையாகும்.

[நேரிசை வெண்பா]

6 கெடுவல் எனப்பட்ட கண்ணும் தனக்கோர்
வடுவல்ல செய்தலே வேண்டும் — நெடுவரை
முற்றுநீ ராழி வரையகத் தீண்டிய
கற்றேயுந் தேயாது சொல், 536

**குறிப்புரை :**

கல்தேயும் சொல் தேயாது ஆதலால் தனக்குக் கேடுவரினும் பழிவராத செயலையே செய்தல்வேண்டும் என்பது.

வடு = பழிபடு குற்றம்.

7 பொருந்தாப் பழியென்னும் பொல்லாப் பிணிக்கு
மருந்தாகி நிற்பதாம் மாட்சி—மருந்தின்
தணியாது விட்டக்கால் தண்கடல் சேர்ப்ப
பிணியீ டழித்து விடும். 537

[பழமொழி]

**குறிப்புரை :**

பழி என்பது பொல்லாத பிணி. மாட்சி என்பது அதனை நீக்கும் மருந்து. மருந்தால் அதனை நீக்காதுவிடின் பிணி தன்னையே அழித்துவிடும் என்கின்றது.

மாட்சி = மாண்புடைய செயல் தணித்தல்-நீக்குதல்.

8 காதல் கவருடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதல்மறுத்தல் இவைகண்டாய்—போதிற்
சினையாமை வைகுந் திருநாட விம்மை
நினையாமை பூண்டார் நெறி. 538

[நளன் சரிதம்]

**குறிப்புரை :**

காதல் = காமம் கவறு = சூது. இவை இவ்வுலகத்தில் புகழால் நிலைப்பதை வேண்டாதார்க்குரிய வழியாகும் இவை யாவும் குற்றமாம் என்றவாறு.

[அறுசீர்விருத்தம்]

9 மண்ணுளார் தம்மைப் போல்வார்
மாட்டதே யனறு வாய்மை
நண்ணினுர் திறத்துங் குற்றங்
குற்றமே நல்ல வாகா

விண்ணுளார் புகழ்தற் கொத்த
விழுமியோன் நெற்றி போழ்ந்த
கண்ணுளான் கண்டந் தன்மேற்
கறையையார் கறையன் றென்பார். 539

[குண்டலகேசி]

**குறிப்புரை :**

பெருமையுடையோராயினும் குற்றம் புரியின் அது குற்றமே யாகும். சிவபெருமான் கண்டத்தில் இருப்பதனால் கறையை கறையன்று எனலாமோ. அதுபோல என்றவாறு.

நெற்றிபோழ்ந்த கண்ணுளான் = சிவபெருமான்.

**அதிகாரம்—7**

# பெரியாரைத் துணைக்கோடல்

பெரியாரைத் துணைக்கோடலாவது : கல்வி கேள்விகளான் நிறைந்து ஒழுக்கத்தானும் சால்பானும் நிறைந்து தவம் முதலிய வற்றான் ஓங்கிப் பிறர்க்கென வாழும் பெற்றியோரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதலாம்.

[இன்னிசை வெண்பா]

1 செயல் வேண்டா நல்லவை செய்விக்குந் தீய
செயல்வேண்டி நிற்பின் விலக்கும் — இகல்வேந்தன்
தன்னை நலிந்து தனக்குறுதி கூறலால்
முன்னின்னா மூத்தார்வாய்ச் சொல். 540

**குறிப்புரை :**

மூத்தோர் வாய்மொழிகள் முதற்கண் துன்பமாகத் தோன்றினும் பின்னர் நன்மை பயக்கும் என்பதாம்.

நலிந்து = வருத்தி இன்னா = துன்பம்

2 கற்றார் பலரைத்தன் கண்ணாக இல்லாதான்
உற்றிடர்ப் பட்ட பொழுதின்—தேற்றம்
மரையா துணை பயிரும் மாமலை நாட
சுரையாழ் நரம்பறுத் தற்று. 541

**குறிப்புரை :**

பெரியோரைத் துணையாகப் பெறாதவன் இடர்வந்த காலத்து சுரையாழின் நரம்பு அறுத்த நிலையை எய்துவான் என்பது.
சுரையாழ் = ஒரு நரம்புள்ள யாழ்.

[நேரிசை வெண்பா]

3 சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்
பிடர்த்தலைப் பேரானைப் பெற்றுக்—கடைக்கால்
செயிரறு செங்கோல் செலீஇயினான், இல்லை
உயிருடையார் எய்தா வினை. 542

**குறிப்புரை :**

பெரியாரின் துணையால் எய்தும் சிறப்பினைக் கரிகால் வளவன் வரலாற்றால் மெய்ப்பிக்கின்றது.

சோழன் மகன் என்றது கரிகால்வளவனை. பிடர்த்தலைப்பேரான் என்றது இரும்பிடர்த்தலையார் என்னும் புலவரை. கடைக் கால் = இறுதியில் உயிருடையார் என்றது பெரியோரை உயிராக உடையார் என்றவாறு.

[நேரிசை வெண்பா]

4 பொலந்தார் இராமன் துணையாகப் போதந்து
இலங்கைக் கிழவற் கிளையான்—இலங்கைக்கே
பேர்ந்திறை யாயதும் பெற்றான் பெரியாரைச்
சார்ந்து கெழீஇயிலார் இல். 543

[பழமொழி]

**குறிப்புரை :**

இதுவும் பெரியாரைத் துணைக்கொண்டதனால் எய்திய சிறப்பை விபீடணன் வரலாற்றை வைத்துக் கூறுகின்றது.

இலங்கைக்கிழவன் = இராவணன் இளையோன் = வீடணன்
இறையாயதும் = அரசனானதும்

5 **இரும்பின் இரும்பிடை போழ்ப பெருஞ்சிறப்பின்**
**நீருண்டார் நீரான்வாய் பூசுப—தேரின்**
**அரிய அரியவற்றால் கொள்ப பெரிய**
**பெரியரான் எய்தப் படும்.** 544

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

இரும்பினால் இரும்பை அறுப்பர் நீரால் நீரைக்கழுவுவர் அரிய வற்றை அரியவற்றாற்கொள்வர் அவ்வாறே பெருமையுடைய வற்றைப் பெரியாரால் கொள்வர் என்பது.

எய்தப்படும் = அடையப்படும்

6 **ஊரங்கண நீர் உரவுநீர்ச் சேர்ந்தக் கால்**
**பேரும்பிறிதாகித் தீர்த்தமாம்—ஓரும்**
**குலமாட்சி இல்லோரும் குன்றுபோல் நிற்பர்**
**நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.** 545

**குறிப்புரை :**

நல்லோரைச் சார்ந்த கீழோரும் உயர்வடைவர். அங்கணநீர் பேராற்றில் கலந்து தானும் தீர்த்தமாவதுபோல என்றவாறு.

அங்கணநீர் = கழிவுநீர் உரவுநீர் = புண்ணியநதி நீர்

[இன்னிசை வெண்பா]

7 **ஒண்கதிர் வாள்மதியஞ் சேர்தலால் ஓங்கிய**
**அங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉம்**
**குன்றிய சீர்மைய ராயினும் சீர்பெறுவர்**
**குன்றன்னார் கேண்மை கொளின்.** 546

**குறிப்புரை :**

திங்களின்கண் சேர்ந்தமையான் முயலும் (களங்கம்) தொழப் படும் அதுபோல் குறையாடையார் சான்றோரைச் சேர்ந்த விடத்துப் பெருமையுறுவார் என்பது

வாள் = ஒளி சீர்மை = புகழ் கேண்மை = உறவு

8 பாலோ டளாயநீர் பாலாகும் அல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம் —தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து 547

**குறிப்புரை :**

பாலொடு கலந்த நீரும் பாலாகிவிடுதல்போலப் பெரியோரைச் சார்ந்த சிறியவரும் பெரியராக உயர்வுறுவார் என்பது

அளாய் = கலந்த தேரின் = ஆராயின்

9 கொல்லை இரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
ஒல்காவே யாகும் உழவர் உழுபடைக்கு
மெல்லியரே யாயினும் நற்சார்வு சார்ந்தார்மேல்
செல்லாவாம் செற்றார் சினம். 548

[நாலடியார்]

**குறிப்புரை:**

பெருமரத்தைச் சூழ்ந்து முளைத்த புல் ஏரால் சிதைவுறாது அதுபோல புன்மையுடையாரும் வன்மையுடைய பெரியாரைச் சார்ந்திருப்பின் உய்வார் என்பது.

இரும்புனம் = புன்செய்நிலம் குற்றி = மரம் நற்சார்வு = பெரியார் துணை செற்றார் = பகைவர்

அதிகாரம்—8

## நன்கறிவுறுத்தல்

நன்கு அறிவுறுத்தலாவது: நல்லனவற்றைத் தேர்ந்து அவற்றை மேற்கொண்டு ஒழுகுமாறு வலியுறுத்திக் கூறுதல்.

[இன்னிசை வெண்பா]

1 அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொல் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மைஎஞ் ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல். 549

[நாலடியார்]

**குறிப்புரை :**

இவற்றை வேண்டுக இவற்றை நீக்குக என்கின்றது.

கூற்றம் = யமன் பொறுமின் = பொறுத்துக்கொள்ளுங்கள் போற்றுமின் = வராமல் காத்துக்கொள்ளுங்கள் கேண்மை = நட்பு வாய்ச்சொல் மெய்ப்பொருள் உரை.

[நேரிசை வெண்பா]

2 அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதாய் என்றிவர்க்குத் தார்வேந்தே — முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டல் முறை. 550

**குறிப்புரை :**

இவரை வழிபட்டு உரைகேட்டு நலம்பெறுக என்கின்றது.

முந்தை = முன்பாக வயங்குநீர் வேலிமொழி = உலகத்தார் கூறும் பிற மொழிகள் முறை = நீதி

3 ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
வென்று களங்கொண்ட வேல்வேந்தே-சென்றுலாம்
ஆழ்கடல்சூழ் வையகத்துள் ஐந்துவென் றாறகற்றி
ஏழ்கடிந் தின்புற் றிரு. 551

**குறிப்புரை :**

இன்புற்றிருத்தற்குரிய நெறி கூறுகின்றது.

ஒன்று = ஞானம் இரண்டு = செய்வனவும் தவிர்வனவும் மூன்று = நட்பு, பகை, நொதுமல் நான்கு = யானை. தேர் குதிரை, காலாள் என்னும் படைகள் ஐந்துவென்று = கண், வாய். மூக்கு, செவி, வாய் என்னும் பொறிகள் வாயிலாக வரும் ஐம்புலன்களை அடக்கி ஆறுகற்றி = நட்பு, பகை, செலவு, நல்லிருக்கை, கூடினரைப் பிரித்தல்,கூட்டல் என்னும் ஆறு தந்திரங்களை விரித்து. ஏழ்கடிந்து = கொலை, கடுஞ் சொல், மிக்க தண்டனை, சூது, பொருள்வேட்கை, கள்ளுண் ணல் இவற்றை நீக்கி இரு = வாழ்க.

இனி இவ் எண்களுக்கு வேறு பொருளும் பொருந்தும்
ஒன்று = ஆன்மா இரண்டு = புண்ணியம், பாவம், மூன்று = உச்சாசத்தி பிரபுசத்தி, மந்திரசத்தி நான்கு = சாமபேததானதண்டம், ஐந்து = சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆறு = படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் இவை புறப்பொருள் வெண்மாலை உரையாசிரியர் கருத்து.

4 முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
இரவாம லீந்த இறைவர்போல் நீயும்
கரவாம லீகை கடன். 552

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

கரவின்றிக் கொடைபுரிக என்று கூறிச் சில எடுத்துக்காட்டும் கூறுகிறது.

முல்லைக்குத் தேரீந்தவன் = பறம்பு மன்னன் பாரி. மயிலுக்குப் போர்வையளித்தவன் பேகன் இசை = புகழ் தொல்லை = முன்பு இறைவர் = அரசர்

[இன்னிசை வெண்பா]

5 தன்னடை நோக்கார் நமர்வந்த வாறறியார்
சென்னடை சேராச் சிறியார்போ லாகாது
நன்னடை யானே நடவந்தால் நன்னடை
நின்னின நீக்கிற்பா ரில். 553

**குறிப்புரை :**

நன்னெறி ஒழுகுவோரை நீக்குவாரில்லை என்கின்றது.
நடை ஒழுக்கம் நின்னினம் உன் சுற்றம்
நீக்கிற்பார் - நீக்கி ஒதுக்குபவர் இல்லை இலர்.

[அறுசீர்விருத்தம்]

6 உறுவர்ப் பேணல் உவர்ப்பின்மை
உலையா இன்பந் தலைநிற்றல்
அறிவர் சிறப்பிற் கெதிர்விரும்பல்
அழிந்தோர் நிறுத்தல் அறம்பகர்தல்
சிறியா ரினத்துச் சேர்வின்மை
சினங்கை விடுதல் செருக்கவித்தல்
இறைவன் அறத்து ளார்க்கெல்லாம்
இனிய ராதல் இதுதெளிவே. 554

**குறிப்புரை :**

ஒழுகவேண்டிய செயலும் கொள்ளவேண்டிய பண்பும் இவை என்கின்றது.

உறுவர் - துன்புற்றவர் பேணல் = காத்தல் உளையா = தீமையில்லாத அறிவர் = ஞானியர் நிறுத்தல் - நிமிர்ந்து வாழச்செய்தல் பகர்தல் - கூறுதல் இறைவன் அறம் - அரசநீதி, சமயநீதி என்பதும் பொருந்தும் தெளிவு = தெளிதல் என்னும் கொள்கை.

[வேறு]

7 பால்வளை பரந்து மேயும்
படுகடல் வளாக மெல்லாம்
கோள்வளை யாமற் காத்துன்
குடைநிழற் றுஞ்ச நோக்கி
நூல்விளைந் தனைய நுண்சொற்
புலவரோ டறத்தை யோம்பின்
மேல்விளை யாத இன்பம்
வேந்தமற் றில்லை கண்டாய். 555

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

இன்பம் மேன்மேலும் விளைதற்குரிய நெறிமுறைகள் இவை என்கின்றது.

பால்வளை = வெண்சங்கு வளாகம் = உலகம் கோல் = ஆட்சிமுறை துஞ்சல் = அமைந்து வாழ்தல்

[ஆசிரியப்பா]

8 பல்சான் றீரே பல்சான் றீரே
கயல்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுள்
பயனில் மூப்பிற் பல்சான் றீரே!
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர் மாதோ
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லா ரும் உவப்ப தன்றியும்
நல்லாற் றுப் படூஉம் நெறியுமா ரதுவே. 556

**குறிப்புரை :**

நல்வழிபடுதற்குரிய நெறியாமாறு கூறுகின்றது

திரைகவுள் = சுருங்கிய மோவாய் ஒருவன் = யமன்
நல்லது = அறம் அல்லது = பாவம்

9 எருமை யன்ன கருங்கல் இடைதோறு
ஆனிற் பரக்கும் யானைய, முன்பின்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலின் நின்னொன்று மொழிவல்
அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொடு ஒன்றாது காவல்
குழவிகொள் பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே. 557

குறிப்புரை :

இதுவும் அது :

இடைதோறு = இடங்கள் தொறும் ஆனிற்பரக்கும் = பசுக் கூட்டங்கள் போலப் பரவலாகப் பெருகிநிற்கும் யானைய = களிறுகளையுடைய ஓராகலின் = ஒப்பற்றவனாதலால் நிரயம் = நரகம் குழவிகொள்பவரின் = குழந்தையைக் காக்கும் தாயார் போல. அப்பண்பு பெறுதல் அரிது ஆதலின் அந்நிலை இரங்கத்தக்கது என்றவாறு.

10 சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
நூற்றிதழ் அலரின் நிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணை பிறந்து
வீற்றிருந் தோரை எண்ணுங் காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான வூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்தெனக்
கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி
தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்

திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி அருளிலர்
கொடாஅமை வல்ல ராகுக
கெடாஅத துப்பினின் பகை எதிர்ந்தோரே. 558

**குறிப்புரை :**

நாடாளும் வேந்தர்க்குரிய சிறந்த பண்புகளை எடுத்துக் கூறுகின்றது.

பயந்த = விளைவுசெய்த அலரின் = மலர்களின். நிரை = வரிசை விழுத்திணை = உயர்ந்தகுலம் உரையும் பாட்டும் = புகழ்மொழிகள் மரையிலை = தாமரையிலை வலவன் = செலுத்தும் சாரதி வானவூர்தி = விண்ணிற் பறந்துசெல்லும் தேர் திங்கட்புத்தேள் = நிலவாகிய தெய்வம் ஆகுமதி = ஆவாயாக நின்பகை எதிர்ந்தோர் = உனது பகையை ஏற்றவர்.

11 ஒருதிசை ஒருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசில் மாக்கள்
வரிசை அறிதலோ அரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் டோன்றல்
அதுநற் கறிந்தனை யாயின்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே. 559

**குறிப்புரை :**

அரசன் கற்றோரின் சிறப்பறிந்து போற்றவேண்டுமென்கின்றது.

பரிசில்மாக்கள் = பாணர் புலவர் முதலியவர்கள் மாவண் டோன்றல் = பெரியவள்ளன்மை பொருந்தியவனே பொது நோக்கு = சமமாகக் கருதுதல்

12 நீயே, பிறர்ஓம்புறு மறமன் னெயில்
ஓம்பாது கடந்தட்டு அவர்
முடிபுனைந்த பசும்பொன் நின்
அடிபொலியக் கழல் தைஇய

வல்லாளனை வய வேந்தே!
யாமே
நின்னிகழ் பாடுவோர் எருத்தடங்கப்
புகழ்பாடுவோர் பொலிவு தோன்ற
இன்றுகண் டாங்குக் காண்குவம் என்றும்
இன்சொல் எண்பதத்தை யாகுமதி பெரும
ஒருபிடி படியும் சீறிடம்
எழுகளிறு புரக்கும் நாடுகிழவோயே. 560

[புறநானூறு]

குறிப்புரை :

அரசன் பெருவீரனுகவும் வள்ளலாகவும் இருத்தல் வேண்டு மென்பது.

ஓம்புறும் = காவல் செய்யும் எயில் = மதில் கடந்தட்டு = நேர்நின்று போரிட்டு அழித்து கழல் = வீரக்கழல் தைஇய = அமைத்துக்கொண்ட வயவேந்தே - வெற்றிவேந்தே எடுத்து - நிமிர்ந்த நோக்கு எண்பதம் = எளியநிலைமை பிடி = பெண் யானை சீறிடம் = சிறிய இடம் புரக்கும் = நெல் விளைந்து புரக்கும்

அதிகாரம்—9

## சிற்றினஞ்சேராமை

சிற்றினஞ் சேராமையாவது: அறிவைத் திரித்து இருமையுங் கெடுக்கும் இயல்பும், நல்லதன் நலமும் தீயதன் தீமையும் இல்லை என்னும் கயமையுமுடைய விடரும், தூர்த்தரும், நடருமுள்ளிட்ட சிறுமைத் தன்மை பொருந்திய மக்களைச் சாராதிருத்தலாம்.

[இன்னிசை வெண்பா]

1 மொய்சிதைக்கும் ஒற்றுமை யின்மை ஒருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலும் மேனியைப் பெய்த
கலன்சிதைக்கும் பாலின்சுவையைக்குலஞ்சிதைக்கும்
கூடார்கண் கூடிவி டின். 561

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

ஒற்றுமையின்மை ஒருவன் வலிமையை அழிக்கும், பொய் ஒருவன் மேனியை அழிக்கும் பெய்தபுன்கலம்பாலின் சுவையை அழிக்கும்அவ்வாறே சிற்றினத்தார் நட்பு ஒருவன் குலச்சிறப்பை அழித்துவிடும்.

மொய் = வலிமை கலன் = பாத்திரம் கூடார் = பகைவர்

2 முயறலே வேண்டா முனிவரை யானும்
இயல்பின்னர் என்ப தினத்தா அறிக
கயலிகல் உண்கண்ணாய் கரியவரோ வேண்டா
அயலறியா அட்டூணோ இல். 562

[பழமொழி]

**குறிப்புரை :**

ஒருவரது தன்மையை அவர் சார்ந்துள்ள இனத்தால் அறியலாம் என்பது.

கயலிகல் உண்கண் - மீன்போலும் உண்கண் கரியவர் = சான்று கூறுவோர் அட்டூண் - சமைக்கும் உணவு

3 இழுக்க லியல்பிற் றிளமை பழித்தவை
சொல்லுதல் வற்றாகும் பேதைமை யாண்டும்
செறுவோடு நிற்கும் சிறுமை இம்மூன்றும்
குறுகார் அறிவுடை யார். 563

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

இளமை இழுக்கும் இயல்பினது பேதைமை பழியாயவற்றைச் சொல்லச்செய்யும் சிறுமை செறுவோடு நிற்கும் அதனால் அறிவுடையோர் இத்தகையாரைச் சேரமாட்டார் என்பது

செறு = இகல்செய்தல்.

[நேரிசை வெண்பா]

4 நெருப்பழல் சேர்ந்தக்கால் நெய்போல் வதூஉம்
எரிப்பச்சுட் டெவ்வநோய் ஆக்கும்—பரப்பக்
கொடுவிளைய ராகுவர் கோடாரும் கோடிக்
கடுவினையர் ஆகியார்ச் சார்ந்து. 654

**குறிப்புரை :**

நெய் நெருப்பைச் சார்ந்தால் உருகிச்சுடும் அவ்வாறே நல்லோரும் தீயோரைச்சார்ந்தால் தீமை செய்வார் என்பது

எவ்வநோய் - துன்புதரும்பிணி கோடார் = நடுவுநிலை தவறாத நல்லோர் கோடி - நிலையழிந்து

5 இசைந்த சிறுமை இயல்பிலா தார்கண்
பசைந்த துணையும் பரிவாம்—அசைந்த
நகையேயும் வேண்டா நல்லறி வினார்கண்
பகையேயும் பாடு பெறும். 565

**குறிப்புரை :**

சிற்றினத்தார் துணை அன்புடையதாயினும் வேண்டா நல்லறிவினர் பகையாயினும் அது பெருமைதரும் என்பது

பசைந்த = அன்புற்ற துணை = அளவு நகை = நகைப்பதற்காக பாடு = பெருமை

6 ஆன்படு நெய்பெய் கலனுள் அதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறி வினாரொடு நட்பு. 566

**குறிப்புரை :**

ஆன்நெய் இருந்தகலத்தில் வேம்பின் நெய்யைப் பெய்து வைப்பது ஒக்கும். நல்லவர் நட்டைவிட்டுப் புல்லறிவினாரொடு இயைதல் என்பது

கலன் = பாத்திரம் அனைத்து = அத்தன்மையுடையது அரோ என்பது அசை நயம் = நீதி ஓரிஇ = நீங்கி,

7 மனத்தான் மறுவில ரேனும் தாம்சேர்ந்த
இனத்தா லிகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனந் தீப்பட்டக் கால். 567

**குறிப்புரை :**

வேங்கை மரத்திற்குத் தீயிட்டு எரியின் சார்ந்துள்ள சந்தன மரமும் எரிந்துபடும். அதுபோலத் தான் நல்லவராயினும் தீயாரோடு சார்ந்திருப்பின் உலகத்தார் இகழ்வர் என்பது.

மறு = குற்றம் புனம் = காடு வெறி = நறுமணம்
எறிபுனம் = வெட்டப்பட்ட காடு.

8 அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வும்—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயில்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு. 568

**குறிப்புரை :**

அறியாப் பருவத்துச் சிற்றினத்தோடு சேர்ந்திருந்து பின்னர் நல்லோரிடத்துச் சார்ந்திருப்பின் பழைய தீங்குகள் மறைந்து விடும். வெயில் ஏற ஏறப் புல்லில் இருக்கும் பனி நீங்கிவிடுதல் போல என்கின்றது.

அடங்கார் = சிற்றினம் நற்சார்வு = நல்லோரினத்தொடு தொடர்பு சார = கொள்ள முறுக = வெப்பம் ஏற ஏற
புற்பனி = புல்லின்கண் நிறைந்த பனிநீர்.

9 இறப்ப நினையுங்கால் இன்னா தெனினும்
பிறப்பினை யாரும் முனியார்—பிறப்பினுள்
பண்பாற்றும் நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்றும்
நண்பாற்றி நட்கப் பெறின். 569

குறிப்புரை :

பிறப்புத் துன்பமுடையதெனினும் நல்லவர்களோடு நட்புற்று வாழப்பெறின் அதனை வெறுப்பாரில்லை என்பது.

இறப்ப = ஆழமாக முனியார் = வெறுக்கமாட்டார்
நெஞ்சத்தவர் = சான்றோர் நட்க = நட்புற்றிருக்க
பெறின் = பெறுவார்களாயின்.

10 உணர வுணரும் உணர்வுடை யாரைப்
புணரப் புணருமாம் இன்பம்—புணரின்
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய். 570

[நாலடியார்]

குறிப்புரை :

நல்லறிவுடையாரைச் சார்ந்து நெருங்க நெருங்க இன்பம் பெருகும். கீழாயினாரை விட்டு விலகிப் பிரியப் பிரிய துன்பம் நீங்கும் என்பது.

உணர்வுடையார் = நல்லறிவாளர் புணர = நட்புக்கொள்ள
தெரிவிலாதார் = கீழோர் நோய் = துன்பம்.

அதிகாரம்—10

## தெரிந்து செயல் வகை

தெரிந்து செயல் வகையாவது : ஆளும் பொறுப்பினையுடையோர் தாம்செய்யும் வினைகளை நூலறிவானும் பெரியோர் துணையானும் ஆராய்ந்து செய்யுந் திறப்பாடாகும்.

[நேரிசை வெண்பா]

1 தற்றூக்கித் தன்றுணையுந் தூக்கிப் பயன்தூக்கி
மற்றது கொள்ப மதிவல்லார்—அற்றன்றி
யரதானும் ஒன்றுகொண் டியாதானும் செய்தக்கால்
யாதானும் ஆகி விடும். 571

குறிப்புரை :

தன் வலியும் துணை வலியும் ஆராய்ந்து பயனையும் தேர்ந்து செயலாற்ற வேண்டும். யாதானும் ஒன்றைக் கொண்டு செயல் புரியின் அது எண்ணிய பயனைத் தராது என்பது.

தூக்கி = ஆராய்ந்து அற்றன்றி = அவ்வாறல்லாமல்.

[இன்னிசை வெண்பா]

2 ஆஅம் எனக்கெளி தென்றுலகம் ஆண்டவன்
மேஎந்துணையறியான் மிக்குநீர்ப் பெய்திழந்தான்
தோஒம் உடைய தொடங்குவோர்க் கில்லையே
தாஅம் தரவாரா நோய். 572

குறிப்புரை :

எளிதென்று கருதித் துணையானவன் கூறியதும் கேளாமல் மூன்றடி மண் தர இசைந்து நீர்வார்த்துக் கொடுத்து அழிந் தான். பிழையான செயலைத் தொடங்குவார்க்கு துன்பங்கள் தம்மாலேயே வரும் என்பது.

இது மாவலிச் சக்ரவர்த்தி சுக்கிரன் தடுப்பவும் கேளாமல் வாமனனாய் வந்த திருமாலுக்கு மூன்றடி மண் கொடுத்து அழிந்த புராண வரலாற்றை வைத்துத் தெரிந்து செயல்படாத வழிவந்த துன்பத்தைக் கூறியுள்ளது.

ஆஅம் = ஆகும் உலகம் ஆண்டவன் = மாவலி
மேஎந்துணை = பொருந்திய குருவாகிய சுக்கிரன்
தோஒம் = குற்றம் நோய் = துன்பம்.

3 நயவர நட்டொழுகு வாரும்தாம் கேட்டது
உயவா தொழிவார் ஒருவரு மில்லை
புயலமை கூந்தல் பொலந்தொடீஇ சான்றோர்
கயவர்க் குரையார் மறை. 573

**குறிப்புரை :**

அன்பு பொருந்திய நண்பராயினும் மறை (இரகசியம்) யை ஆராயாது கூறுர். சான்ருேர்கள் மறைபொருளைக் கீழாயினு ரிடத்துக் கூறுர் என்கின்றது.

நயவர = விருப்பம் மிக உயவாது = ஆராயாது
கயவர் = கீழோர் மறை = இரகசியம்.

[நேரிசை வெண்பா]

4 **அன்பறிந்த பின்னல்லால் யார்யார்க்கும் தம்மறையை**
**முன்பிறர்க் கோடி மொழியற்க—தின்குறுவான்**
**கொல்வாங்குக் கொன்றபின் அல்ல துயக்கொண்டு**
**புல்வாய் வழிப்படுவார் இல்.** 574

**குறிப்புரை :**

வேறுபடாத அன்புடைமையைத் தெரிந்த பின்னர்த் தான் மறைபொருளைக் கூறுவர் தெரிந்தோர். தானே வலிந்து சென்று கூறுர். மானைக் கொன்றபின் அதனைச் சமைத்த லின்றி ஓடவிட்டுச் சமைப்பாருண்டோ? இல்லை; அதுபோல என்பது.

உயக்கொண்டு = பிழைத்துப் போக விட்டுவிட்டு
புல்வாய் = மான்.

[இன்னிசை வெண்பா]

5 **உவப்ப உடன்படுதற் கேய கருமம்**
**அவற்றவற் ருந்துணைய வாகிப் பயத்தான்**
**வினைமுதிரின் செய்வான்மேல் ஏறும்—பனைமுதிரின்**
**தாய்தாள்மேல் வீழ்ந்து விடும்.** 575

[பழமொழி]

**குறிப்புரை :**

ஒருவன் ஏவ ஒருவன் செய்த கருமம் பயன்தரும்போது ஏவிய வனையே வந்துசேரும். பனை முற்றி வீழ்ந்த பழம் அதனடியிற் சேர்தலைப் போல என்பது.

ஏய = பொருந்திய ஏறும் = சென்று முடியும்
பனை = பனம் பழம் தாள் = அடி.

6 பந்தமிலாத மனையின் வனப் பின்னு
தந்தை இலாத புதல்வன் அழகின்னு
அந்தணர் இல்லிருந்து ஊன்இன்னு ஆங்கின்னு
மந்திரம் வாயா விடின். 576

[இன்னுநாற்பது]

குறிப்புரை :

அரசனுக்கு நல்ல சூழ்ச்சிகளைக் கூறும் அமைச்சர் வாயாது விடின் துன்பமாம் என்பது.

பந்தம் = அன்பு ஊன் = புலால் உணவு மந்திரம் = அமைச்சர் சுற்றம் இன்னு = துன்பம்.

[கலிவிருத்தம்]

7 அந்தணர் ஒழுக்கமும் அரசர் வாழ்க்கையும்
மந்திர மில்லையேல் மலரு மாண்பில
இந்திர னிறைமையும் ஈரைஞ் ஞூற்றுவர்
தந்திரக் கிழவர்கள் தாங்கச் செல்லுமே. 577

குறிப்புரை :

இந்திரன் தலைமை ஆயிரம் அமைச்சர்களை உடைமையினுற் சிறப்புறுகின்றது. ஆதலின் நல்லமைச்சர்கள் இல்லையேல் அந்தணர் ஒழுக்கமும் அரசர் வெற்றியும் ஒளிபெறத் துலங்க மாட்டா என்பது.

இறைமை = ஆட்சித் தலைமை. தந்திரக்கிழவர் = நூலறிந்த அமைச்சர்கள்.

[அறுசீர்விருத்தம்]

8 வால்வலித் தடக்கை மன்னர்
வையகம் வணக்கும் வாயில்
தோள்வலி சூழ்ச்சி என்றாங்
கிருவகைத் தொகையிற் றாகும்
ஆள்வலித் தானை யார்கட்
காதிய தழகி தேனும்
கோள்வலிச் சீயமொப் பீர்!
சூழ்ச்சியே குணம தென்றான் 578

குறிப்புரை :

ஆளும் அரசர்க்குப் பகையை வெல்லும் படையும் வருபொருளுரைக்கும் அமைச்சும் என்னும் இரு வகையுள் அமைச்சரின் சூழ்வினையே சிறப்புடையதாகும் என்பது.

தோள்வலி = படைவலி சூழ்ச்சி = மந்திரம்
சீயம் = அரிமா.

9 உரிதினின் ஒருவன் செய்த
ஊழ்வினை உதயஞ் செய்து
விரிதலின் அதன துண்மை
விளங்கினாற் போல வேந்தர்
கருதிய கருமச் சூழ்ச்சிப்
பயத்தினாற் கருதும் வண்ணம்
எரிதவழ்ந் திலங்கும் வேலோய்
எண்ணுவ தெண்ண மென்றான். 579

குறிப்புரை :

ஒருவனது நன்மை தீமை ஊழ்வலி வெளிப்பட்டு அதனால் விளங்குதல் போல அமைச்சர் சூழ்ச்சியான் ஒரு அரசு விளக்கம் பெறும் என்பது.

உதயஞ்செய்து = தோன்றி கருமச் சூழ்ச்சி = ஆராய்ந்து அமைச்சர் கூறும் செயல் ஆலோசனை.

[கலிவிருத்தம்]

10 ஒன்றுநன் றெனவுணர்ந் தொருவன் கொள்ளுமேல்
அன்றனன் றொருவனுக் கறிவு தோன்றுமே.
நின்றதொன் றுண்டினி நீதி நூலினோ
டொன்றிநின் றவருரை யுலக மொட்டுமே. 580

குறிப்புரை :

ஒருவன் நன்று என்று கூறியதனை வேறொருவன் தீது என்று கூறுவான். உண்மை காண வேண்டின் நீதி நூலுடையார் உரையைக் கொள்ள வேண்டும். அதனையே உலகம் ஒப்பும் என்றவாறு.

உலகம் = உலக மக்கள் ஒட்டும் = ஒப்புவர்.

[அறுசீர்விருத்தம்]

11 மண்ணியல் வளாகங் காக்கும்
மன்னவர் வணக்க லாகாப்
புண்ணிய நீர ரேனும்
புலவராற் புகலப் பட்ட
நுண்ணிய நூலி னன்றி
நுழைபொருள் உணர்தல் தேற்ரு
ரெண்ணிய துணிந்து செய்யும்
சூழ்ச்சியு மிலலை யன்றே. 581

**குறிப்புரை :**

அரசனுல் வளைத்தற்கியலாத பெரியவர்களானுலும் பேரறிஞர் களால் ஆக்கப்பட்ட நூல் நெறியானல்லாது செய்தற்குரிய வற்றைத் தெரிந்து செய்ய இயலாது என்பது.

புண்ணிய நீரர் = பெருமையுடையவர்கள்
புலவர் = அரசியல் நீதிநூற் புலவர்
நுழைபொருள் = புக்கு ஆற்ற வேண்டிய செய்திகள்
சூழ்ச்சி = ஆலோசனை

[கலிவிருத்தம்]

12 பகைய லாதவ ரைப்பகை யாக்கலும்
நகையில் தீமனத் தாரைநண் பெண்ணலும்
முகையின் வேய்ந்தமென் மொய்ம்மலர்க் கண்ணியாய்
மிகையின் மற்றவை பின்னை வெதுப்புமே. 582

**குறிப்புரை :**

நல்லோரைப் பகைத்தலும் தீயோரை நட்டலும் குற்றமாதலின் அவை பின்னர்த் துன்பத்தைத் தரும் என்பது.

மிகை = குற்றம் வெதுப்பும் = துன்பந்தரும்.

13 உள்ளுணின் றொலிபுறப் படாத தொண்சிறைப்
புள்ளுமல் லாதவும் புகாத நீரது
வெள்ளிவெண் விளிப்பிளுல் விளங்கு வேதிகை
வுள்ளல்தன் மந்திரச் சாலை வண்ணமே. 583

**குறிப்புரை :**

மந்திராலோசனை மண்டபம் இவ்வாறு அமைதல் வேண்டும் என்பது.

உள்ளுணின்று = உள்ளகத்தேயிருந்து
ஒலி = உரையாடும் சொற்கள்
புறப்படாதது = வெளிப்படாதது
ஒண்சிறைப்புள் = ஒளி பொருந்திய சிறகுடைய பறவைகள்
அல்லாத = பிற சிற்றுயிர்கள் நீரது = தன்மையது
வேதிகை = மண்டபம் மந்திரச்சாலை = ஆலோசனை மண்டபம்

[அறுசீர்விருத்தம்]

14 பஞ்சிநின் றூற்றப் பட்ட மாதுளம் பருவ வித்து
மஞ்சிநின் றகன்ற சாகை மலரிடை வடிவு காட்டும்
அஞ்சிநின் றனலும்வேலோய் சூழ்ச்சியுமன்ன தேயால்
வெஞ்சொலொன் றுரைக்க மாட்டா விடுசுடர்
விளங்கு பூணோய். 584

[சூளாமணி]

**குறிப்புரை :**

மாதுளம் வித்திற் பூசப்பட்ட அரக்கின் நிறத்திற்கேற்பப் பூக்கள் மலர்வது போல மந்திராலோசனையும் அமைந்து விரிதல் வேண்டுமென்பது.

பஞ்சி = அரக்குக் குழம்பு ஊட்டப்பட்ட = பூசப்பட்ட
மஞ்சு = மேகம் (மழையை உணர்த்தி நின்றது)
சாகை = கிளை சூழ்ச்சி = ஆலோசனை.

[அறுசீர்விருத்தம்]

15 காய்ந்தெறி கடுங்கற் றன்னைக்
கவுட்கொண்ட களிறு போல
வாய்ந்தறி வுடைய ராகி
அருளொடு, வெகுளி மாற்றி

வேந்தர்தாம் விழைப வெல்லாம்
வெளிப்படார் மறைத்தல் கண்டாய்
நாந்தக உழவ ரேறே
நன்பொரு ளாவ தென்ருன். 585

[சீவக சிந்தாமணி]

**குறிப்புரை :**

பகைவர் தம் தீமையைக் காலம் வருந்துணையும் மறைத்துக் காலம் நேர்ந்தவிடத்து வெளிப்படுத்திப் பகையை அழிக்க வேண்டுமென்பது.

காய்ந்து - சினந்து கவுள் = (தாடை) கன்னம்
நாந்தகம் = வாள் நன்பொருள் = வெற்றிச் செயல்.

**அதிகாரம்—11**

## வலியறிதல்

வலியறிதலாவது : ஆளும் பொறுப்பேற்றவர் தமது படை வலிமையையும், செல்வ வலிமையையும், துணை வலிமையையும், தமக்குமாறு பட்டாரது வலிமையையும் ஆராய்ந்து அதற்கேற்ப வினையாற்றலை மேற்கொள்ளுதலாம்.

[நேரிசை வெண்பா]

1 இகலின் வலியாரை எள்ளி எளியார்
இகலின் எதிர்நிற்றல் ஏதம்—அகலப்போய்
என்செய்தே யாயினும் உய்ந்தீக சாவா தான்
முன்கை வளையுந் தொடும். 586

**குறிப்புரை :**

போரில் வலியாரை எளியார் எதிர்கொள்ளல் தீங்கு பயக்கும் அதனால் பின்வாங்கிச் சென்று பிழைத்தல் வேண்டும். ஏனெனின் ஒரு காலத்து அவர் மெலியராவழி வென்று வாகை சூடுதலும் வாய்க்கலாம் என்றவாறு.

இகல் - மாறுபாடு எள்ளி = இகழ்ந்து
அகலப்போய் நெடுந் தொலைவிற் சென்று
முன்கைவளை என்றது வெற்றி கொண்டு அணியும் வாகு வளையை. தொடும் = அணியும்,

[இன்னிசை வெண்பா]

2 ஆமாலோ வென்று பெரியாரை முன்னின்று
தாமாச் சிறியார் தறுகண்மை செய்தொழுகல்
போமா றறியாம் புலன்மயங்கி ஊர்புக்குச்
சாமாகண் காணாத வாறு. 587

குறிப்புரை :

தம்மினும் ஆற்றலுடையார் முன்னின்று செருக்குச் செய்து ஒழுகுதல், வழியறியாது மயங்கிக் கண்கெட்ட மான் ஊர்க்குள் புக்குத் துன்புறுதல் போல்வதாகும்.

ஆமால் = தன்னால் ஆகுமாம் தறுகண்மை = அஞ்சாமை
புலன் = இடம் சாமா — சாம் + மா = சாவப் போகும் மான்.

3 நூக்கி யவர்வெலினும் தாம்வெலினும் வெஞ்சமத்துத்
தாக்கி எதிர்படுவர் தக்கவர் அஃதன்றிக்
காப்பி னகத்திருந்து காய்வார் மிகஉரைத்தல்
யாப்பினுள் அட்டிய நீர். 588

[பழமொழி]

குறிப்புரை :

வீரர்கள் வெற்றி தோல்வியைக் கருதாமல் ஆண்மையொடு போரிடுவர். அவ்வாறின்றி மதிலகத்து இருந்து கொண்டு பகைவரைச் சினமூட்டுதல் அவரை வெகுண்டெழச் செய்வதாகும். அது விளைநிலத்தில் நீர்ப் பெய்தது போல ஆகும் என்கின்றது.

நூக்கி = எடுத்தெறிந்து சமம் = போர்க்களம்
தக்கவர் = நல்ல வீரர்கள் காப்பு = மதில்
காய்வார் மிக உரைத்தல் = சினந்தவராகப் பேசுதல்
யாப்பினுள் = வரம்பினுள் அட்டிய = பாய்ச்சிய
நீர் = நீரை ஒக்கும்.

4 ஆர்கலி ஞாலத் தறங்காவ லாற்சிறந்த
பேரருளி னாரும் பெறலருமை, யாதரோ
வார்திரைய மாமகர வெள்ளத்து நாப்பண்ணும்
போர்மலைந்து வெல்லும் புகழ். 589

[இரும்பல்காஞ்சி]

**குறிப்புரை :**

அரசன் அறநெறிக் காவலால் எய்தும் புகழைக் காட்டிலும் கடலிடைப் பகைவரை வென்று கொள்ளும் புகழ் பெறுதற் கரிது என்பதாம்.

ஆர்கலி = கடல் ஞாலம் = உலகம் யாது = யாதெனின் அரோ என்பது அசை. மகர வெள்ளம் = கடல். நாப்பண் நடுவே. போர் மலைந்து = போரிட்டு.

[நேரிசை வெண்பா]

5 அரிய வரைகீண்டு காட்டுவார் யாரோ
பெரிய வரைவயிரங் கொண்டு—தெரியின்
கரியவரை நிலையார் காய்ந்தாலென் செய்வார்
பெரிய வரைவயிரங் கொண்டு 590

[ய. வி. மேற்கோள்]

**குறிப்புரை :**

அரியவரை = பெரிய மலை கீண்டு = பிளந்து
வரைவயிரம் = மூங்கில் வரைநிலையார் = மலைபோலுந் திண்மையுடையார். காய்ந்தால் = வெகுண்டு மலைத்தால்.

[அறுசீர்விருத்தம்]

6 உறுபடை மன்னர் தம்மை
உடற்றி யொன்றானுமின்றிச்
சிறுபடை யவர்கள் வென்று
செகுப்பவோ என்ன வேண்டா
செறியெயிற் றாளி வேழப்
பேரினஞ் செகுத்த தன்றே
உறுபுலி ஒன்று தானே
கலையின முடற்றிற் றன்றே. 591

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

சிறுபடையார் பெருவலியுடையாரை வேறல் இயலாதென்பது.
உறுபடை = மிக்க வலிய படை  உடற்றி = போரிட்டு
செகுப்பவோ = அழிப்பார்களோ ? ஆளி = அரிமா (சிங்கம்)
பேரினம் = கூட்டம்  உறுபுலி  வலிய வேங்கை
கலையினம் = மான் கூட்டம்.

**அதிகாரம்—12**

## காலமறிதல்

காலமறிதலாவது : வினையை மேற்கொள்வார் அது இடையூறின்றி நிகழவும் இனிது முடியவுமான பருவத்தையும் பொழுதையும் அறிந்து கொள்ளுதலாம்.

[இன்னிசை வெண்பா]

1 **அன்பின் நெகிழ வழிப்பட்டுக் கொள்ளாது**
**நின்ற பொழுதின் முடிவித் துக்கொள் வதே ?**
**கன்றுவிட் டாக்கறக்கும் போழ்திற் கறவாது**
**அம்புவிட் டாக்கறக்கு மாறு.** 592

**குறிப்புரை :**

அன்பினால் நெகிழ்ந்த நிலையில் ஒருவன் ஒருவனிடத்தில் வினையை முடித்துக் கொள்ளல் வேண்டும். அன்பு கழிந்த வழி இயலுமோ ? கன்றினை விட்டுப் பால் கறக்கும் நிலையை விட்டு அம்புவிட்டுக் கறக்கலாகுமோ ? என்கின்றது.

2 **புரையக் கலந்தவர்க் கண்ணும் கருமம்**
**உரையின் வழுவா துவப்பவே கொள்க**
**வரையக நாட விரையின் கருமம்**
**சிதையும் இடராய் விடும்.** 593

[பழமொழி]

குறிப்புரை :

உயர்ந்த நண்பரிடத்தும் செய்யும் செயலை வழுவின்றி உவக்கு மாறு கொள்க. விரைவுபடின் சிதைந்து துன்பத்திற்கிடமாகி விடும் என்பது.

புரைய = உயர்வாக கருமம் = செயல்
விரையின் = விரைவுற்றால் சிதையும் = அழியும்
இடராய் விடும் = துன்பமாகி விடும்.

[நேரிசை வெண்பா]

3 **ஆற்றுந் துணையும் அறவினை உள்ளடக்கி**
**ஊற்றம் உரையார் உணர்வுடையார்—ஊற்றம்**
**உறுப்பினா லாராயும் ஒண்மை யுடையார்**
**குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு.** 594

[நாலடியார்]

குறிப்புரை :

செயல் முடியுமளவும் அதனைப் பற்றி வெளிப்படுத்த மாட்டார் நல்லறிவாளர். செயல் நிலையைக் குறிப்பினால் அறிவார் ஒள்ளிய அறிவுடையார்.

ஆற்றும் துணையும் = செய்து முடிக்கும் வரை
ஊற்றம் = உற்றுச்செய்யும் முறைமை
உறுப்பு = துணைப் பொருள்கள் ஒண்மை = அறிவுடைமை

4 **வெள்ளம்போல் தானை வியந்து விரவாரை**
**எள்ளி உணர்தல் இயல்பன்று—தெள்ளியார்**
**ஆறுமேல் ஆறியபின் னன்றித்தம் கைக்கொள்ளார்**
**நீறுமேற் பூத்த நெருப்பு.** 595

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

தனது படையைப் பெரிதாக மதித்துப் பகைவரை இகழ்ந்து நிற்றல் நலமாகாது. நீறுபூத்த நெருப்பினை நன்கு ஆறிய பின்னரே தெளிவுடையோர் கைக்கொள்வர். எனவே காலம் பார்த்துச் செய்ய வேண்டுமென்பது.

தானை = படை வியந்து = மதித்து விரவார் = பகைவர்
தெள்ளியார் = தெளிந்த அறிவினர் நீறு = சாம்பல்.

5 நாள்கூட்டம் மூழ்த்தம் இவற்றொடு நன்றாய
கோள்கூட்டம் யோகம் குணனுணர்ந்து—
தோள்கூட்டல்
உற்றானும் அல்லானும் ஐந்தும் உணர்வான் நாள
பெற்றானேல் கொள்க பெரிது. 596

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

நாள் முதலாய காலங்களை உணர்ந்து பொருந்தச் செய்தல் வேண்டுமென்பது.

நாள் கூட்டம் = விண்மீன் தொகுதி மூழ்த்தம் = ஓரை
கோள் = நவகோள்கள். யோகம் = அமிர்தம் சித்தி முதலாய யோகம். குணம் = அவற்றின் நிலையும் பயனும்
உற்றானும் = ஒன்றை மேற்கொண்டவனும் கொள்ளாதவனும்
ஐந்தும் = நாள் கோள் முதலிய ஐந்து வகைக் காலநிலைகளும்.

[அறுசீர்விருத்தம்]

6 இடத்தொரு பொழுது நாடி
எவ்வினைக் கண்ணு மஞ்சார்
மடப்பட லின்றிச் சூழும்
மதிவல்லார்க் கரிய துண்டோ
கடத்திடைக் காக்கை யொன்றே
ஆயிரங் கோடி கூகை
இடத்திடை அழுங்கச் சென்றாங்
கின்னுயிர் செகுத்த தன்றே. 597

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

பகற்போதின்கண் ஒரு காக்கை பல கூகைகளை வெல்லும் அது போலக் காலமும் இடமும் அறிந்து வினைசெய்க என்கின்றது.

மடப்படல் = அறியாமையொடு நிற்றல் கடம் = கானம்
அழுங்க = வருந்த செகுத்தது = அழித்தது.

[கலிவிருத்தம்]

7 சீல மல்லன நீக்கிச்செம் பொற்றுலைத்
தால மன்ன தனிநிலை தாங்கிய
ஞால மன்னர்க்கு நல்லவாம் நோக்கிய
கால மல்லது கண்ணுமுண் டாகுமோ. 598

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

உலகங் காவல் பூண்ட மன்னர்க்குக் காலமறிதல் என்பது; கண் பார்வையை ஒக்கும் என்பது.

சீலம் = நற்செயல் துலை = தராசு தாலம் = தட்டு

**அதிகாரம்—13**

## இடனறிதல்

இடனறிதலாவது: வினைமேற்கொள்வார் அவ்வினை நிகழ்வதற்கேற்ற இடத்தினை அதன் சூழலோடு ஆராய்ந்தறிந்து கொள்ளுதல்.

[நேரிசை வெண்பா]

1 பெரியாரைச் சார்ந்தார்மேல் பேதைமை கந்தா
சிறியார் முரண்கொண் டொழுகல்—வெறிஒலிக் (கு)
ஓநாய் இனம் வெறூஉம் வெற்ப புலம்புகின்
தீநாய் எடுப்புமாம் எண்கு. 599

**குறிப்புரை :**

வலியாரைச் சார்ந்து நிற்பவரைச் சிறியார் அறிவின்மையாற் பகைகொண்டு ஒழுகுதல் குரைக்கும் நாய் காட்டின்கண் புகின் கரடியை எழுப்புவதை ஒக்கும்.

முரண் = பகை வெறி = வெறியாட்டு தீநாய் என்றது குரைக்கும் நாயை எண்கு = கரடி.

நாய் இடம் அறியாது குரைத்துத் தனக்குத் தீங்கு செய்து கொள்ளும் என்றவாறு.

2 இறப்ப எமக்கீ திளிவர வென்றெண்ணார்
பிறப்பிற் சிறியாரைச் சென்று—பிறப்பினால்
சாலவும் மிக்கவர் சார்ந்தடைந்து வாழ்பவே
தால அடைக்கலமே போன்று. 600

[பழமொழி]

**குறிப்புரை :**

பிறப்பினால் உயர்ந்தவர் பிறப்பினால் தாழ்ந்தவரிடத்துச் சென்று பாதுகாவலைக் கருதி வாழ்வர். அஃதாவது மழைக்குப் பனைஓலையை அடைக்கலமாகக் கொள்வது போலாகும்.

தாலம் = பனைஓலை (ஈண்டுக் குடிசையை உணர்த்தியது)
அடைக்கலம் = பாதுகாப்பு.

3 வான்சேரின் புள்ளஞ்சா வல்லரில் சுற்றிய
கான்சேரின் மானின் கணமஞ்சா—வான்சேர்
சிகர வரைசேரின் தேனஞ்சா அஞ்சா
மிகுநீர்க் கயஞ்சேரின் மீன். 601

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

இடமறிந்துறையின் துன்பமில்லை என்பது.
வான் = ஆகாயம் புள் = பறவை
அரில் = கொடி பிணங்கிய புதர் கான் = காடு
வரை = மலை தேன் = தேனீக்கள் கயம் = குளம்.

4 உளையச் சிலைக்கும் உழுவையுந் தான்றன்
அளையிற்றீர்ந் தாரடைந் தாக—விளிவந்
துயிரிழப்ப தென்றால் உறுமிட நீத் தென்கொல்
செயிருழக்குந் தீங்கு செயல். 602

[பாரதம்]

**குறிப்புரை :**

வலிய புலியும் தன் குகையை விட்டு வெறும் வெளியிற் போந்திடின் உயிரிழப்பதற்கு ஏதுவாகும். அஃதாவது தமக்குரிய இடத்தினின்று நீங்கினால் பாதுகாவல் இல்லை என இடச் சிறப்புக் கூறியவாறு.

உளைய = பிற விலங்குகள் வருந்த சிலைக்கும் = பேரொலி எழுப்பும். உழுவை = புலி அளை = உறையும் இடம்
ஆர் = வழியிடம் விளி = இறுதி நீத்து = நீங்கி
செயிர் = துன்பம்.

[அறுசீர்விருத்தம்]

5 இழைபொறை யாற்ற கில்லாது
இட்டிடை தளர நின்ற
குழைநிறை முகத்தினார் போல்
குறித்ததே துணிந்து செய்யார்
முழையுறை சிங்கம் பொங்கி
முழங்கிமேற் பாய்ந்து மைதோய்
வழையுரை வனத்து வன்கண்
நரிவலைப் பட்ட தன்றே. 603

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

குகையில் வாழும் சிங்கம் சீறிப்பாய்ந்து சென்று நரி வலையிற் சிக்கி இறந்தது அல்லவோ. யாம் வீரமுடையேம் என்று மகளிரைப் போன்று தாம் நினைத்ததே துணிந்து செய்யாராய் அறிவர் என்றவாறு.

இழை = நூல், அணிகலங்களுமாம் இட்டிடை = சிறிய இடை முழை குகை மை = மேகம் வழை புன்னை
பட்டது = பட்டு இறந்தது இது ஒரு கதை.

### அதிகாரம்—14

# தெரிந்து தெளிதல்

தெரிந்து தெளிதலாவது: ஆளும் பொறுப்பினை உடையார் தமக்குத் துணையாகவும், சுற்றமாகவும் அங்கமாகவும் அமைத்துக் கொள்ளுங்கால் அவரது அறிவாற்றல்களையும் பிறப்பையும் குணத்தையும் ஒழுக்கம் முதலியவற்றையும் காட்சி, கருத்து, நூல் என்னும் அளவைகளான் ஆராய்ந்து தக்காரைத் தெளிந்து கொள்ளுதலாம்.

[நேரிசை வெண்பா]

1 சுற்றத்தார் நட்டார் எனச்சென் றொருவரை
அற்றத்தால் தேறார் அறிவுடையார்—கொற்றப்புள்
ஊர்ந்துலகந் தாவிய அண்ணலே ஆயினும்
சீர்த்தது செய்யாதா ரில். 604

**குறிப்புரை :**

மந்தணமாக மறைத்துச் செய்ய வேண்டிய செயலாயின் அறிவுடையோர் சுற்றத்தார் நட்பினர் என்று ஒருவரைத் தெளிய மாட்டார் சீர்த்தது எதுவோ அதைச் செய்வர்.

அற்றம் = இரகசியம் தேறார் = நம்பமாட்டார்
புள் = கருடன் அண்ணல் = திருமால்

[இன்னிசை வெண்பா]

2 மறந்தானும் தாமுடைய தாம்போற்றி னல்லால்
சிறந்தார் தமர்என்று தேற்றார்கை வையார்
கறங்குநீர் கல்லலைக்கும் கானலஞ் சேர்ப்ப
இறந்தது பேர்த்தறிவார் இல். 605

**குறிப்புரை :**

தமக்குரிய உயர்ந்த பொருளை தாமே காத்தலின்றிச் சிறந்தார், சுற்றத்தார் என்று அவர்பால் விடமாட்டார்; ஏனெனில், இழந்த பொருளை மீட்பவர் இல்லையாதலால் என்பது.

தாமுடைய = தமக்குரிய பொருளை போற்றின் = பாதுகாப்பின்
கைவையார் = அவர் கையில் கொடுக்க மாட்டார்
இறந்தது = கழிந்து சென்ற பொருளை
பேர்த்தறிவார் = மீட்டும் பெற்றவர்.

[தேறிசைவெண்பா]

3 தெற்ற ஒருவரைத் தீதுரை கண்டக்கால்
இற்றே அவரைத் தெளியற்க—மற்றவர்
யாவரே வேண்டினும் நன்கொழுகார் கைக்குமே
தேவரே தின்னினும் வேப்பு. 606

**குறிப்புரை :**

தெளிந்த ஒருவரைத் தீதுரை ஒருவன் கூறக் கண்டால் இவ்வாறே நம்மையும் கூறுவான் என்று உணர்ந்து அவனைத் தெளியாது விடுக தேவர் உண்டாலும் வேம்பு கைப்பதுபோல அவன் யார் வேண்டினும் நன்மையொடு ஒழுகமாட்டான் என்பது.

இற்றே = இவ்வாறே கைக்கும் = கசக்கும்.

[இன்னிசை வெண்பா]

4 விளிந்தாரே போலப் பிறராகி நிற்கும்
முளிந்தாரைத் தஞ்சம் மொழியவோ வேண்டா
அளிந்தார்கண் ஆயினும் ஆராயா னாகித்
தெளிந்தான் விரைந்து கெடும். 607

[பழமொழி]

**குறிப்புரை :**

நம்மைவிட்டுப் பிரிந்தவரைப் போல வேறுபட்டு நிற்கும் ஈர மற்றவரைத் தெளிய வேண்டா எனக் கூற வேண்டியதில்லை. ஏனெனின் அன்புடையாராயினும் ஆராயாது அவரைத் தெளிந்து செயல்புரிபவன் விரைந்து கெடுதலைக் காணுதலான் என்க.

விளிந்தார் = இறந்தவர் முளிந்தார் = நெஞ்சிரக்கமில்லாதவர்
அளிந்தார் = அன்புடையார்.

5 பொருள்போகம் அஞ்சாமைபொன்றுங்கால்போர்த்த
அருள்போகா ஆறமென் றைந்தும்இருள் தீரக்
கூறப்படுங் குணத்தான் கூர்வேல் வல்வேந்தனால்
தேறப் படுங்குணத்தி னன், 608

குறிப்புரை :

பொருள் போகம் முதலிய ஐந்து வகையாலும் மயக்கமற நிற்கும் குணமுடையவனே மன்னனால் தேறப்படுபவன் ஆவான் என்பது.

பொன்றுங்கால் = இறப்பு வருங்காலத்து ஆரறம் – நிறைந்த அறம்.

[நேரிசைவெண்பா]

6 ஒருவ னறிவானும் எல்லாம் யாதொன்றும்
ஒருவன் அறியா தவனும்—ஒருவன்
குணனடங்கக் குற்றம் இலானும் ஒருவன்
கணனடங்கக் கற்றானு மில். 609

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை :

எல்லாமறிந்தவனும், ஒன்றுமறியாதவனும், நிறைகுணமே உடையவனும், குற்றமே உடையவனும், எல்லாவற்றையும் கற்றவனுமாக ஒருவனும் இல்லை. எனவே குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்கனவற்றை நோக்கித் தேற வேண்டும் என்றவாறு.

கணன் = கூட்டம் ஈண்டு நிறைவை உணர்த்தி நின்றது.

[இன்னிசை வெண்பா]

7 மக்களும் மக்களல் லாரும் எனவிரண்டு
குப்பைத்தே குண்டுநீர் வையகம்—மக்கள்
அளக்குங் கருவிமற் றெண்பொருளொன்றோ
துளக்கறு வெள்வளையார் தோள். 6[illegible]

[அ[illegible]நெறிச்சா[illegible]]

குறிப்புரை :

மக்கள் மக்களல்லாதவரென இருகூட்டத்[illegible]தயுடை[illegible]யதுஉலக இவரைப் பொருளாலும், பெண்ணாலும் அளர[illegible] காணல என்றபடி. பொருளுக்கும் பெண்ணுக்கும் [illegible]மயங்குபவ தேறற்குரிய மக்களாகார் என்பது கருத்து.

குப்பை = கூட்டம் குண்டுநீர் = ஆழ்ந்த நீ[illegible] கடல்).

[அறுசீர்விருத்தம்]

8 அங்கொளி விசும்பிற் றோன்றும்
அந்திவான் முகட்டுக் கொண்ட
திங்களங் குழவிப்பால் வாய்த்
தீங்கதி ரமுத மாந்தித்
தங்கொளி விரிந்த ஆம்பல்
தாமரை குவிந்த வாங்கே.
எங்குளர் உலகில் யார்க்கும்
ஒருவராய் இனிய நீரார். 611

**குறிப்புரை :**

திங்களின் ஒளியை மாந்தி ஆம்பல் மலர்கின்றது; தாமரை குவிகின்றது. எனவே, எல்லோர்க்கும் இனியராவது உலகில் யார்க்கும் இயலாதென்பது.

திங்களங்குழவி = நிலவாகிய குழந்தை மாந்தி = உண்டு
ஒருவராய் = ஒத்தவராய் நீரார் = தன்மையுடையோர்.

அதிகாரம்—15

## தெரிந்து வினையாடல்

[தெரிந்துவினையாடுதலாவது : மூவகை அளவைகளானும் பிறவாற்றானும் தெரிந்து தெளியப்பட்டவரை அவர் செய்யவல்ல வினைகளை அறிந்து அளித்துச் செயற்படுத்தும் திறமையாம்.]

[நேரிசை வெண்பா]

உற்றான் உறாஅன் எனல்வேண்டா ஒண்பொருளைக்
கற்றானை நோக்கியே கைவிடுக—கற்றான்
இறவ னுரைகேட்கும் கேளான் எனினும்
இழவன்று எருதுண்ட உப்பு. 612

குறிப்புரை :

உறவினன் உறவல்லாதவன் எனக் கருதாது அச்செயல்முறை கற்றவன்பால் வினையைத் தருக. அவன் தலைவன் உரை கேட்டு நடத்துவான். கேளான் எனினும் அவன் செயல் பயன்படும். எருது உண்ட உணவு இழப்பாகாமை போல என்க. எருது வலிமையுறின் அதன் உழைப்புப் பயன்படு மாகாலின்.

உறுஅன் = உறவில்லாதவன் கைவிடுக = செயலை ஒப்படைக்க கிழவன் = தலைவன் இழவு = நாட்டம் உப்பு = உணவு.

[இன்னிசை வெண்பா]

2 விட்டுக் கருமம் செயவைத்த மன்னரும்
முட்டா தவரை வியங்கொள வேண்டுமால்
தொட்டக்கால் மாழ்கும் தளிர்மேலே நிற்பினும்
கொட்டாமல் செல்லா துளி. 613

குறிப்புரை :

ஒருவனிடத்து வினையைக் கொடுத்தபின் அதனைச் செய்யத் தூண்டுதல் தலைவன் பொறுப்பாகும் என்பது. தளிர்இலையா யினும் உளி தானே அறுக்காது தட்ட வேண்டும் அதுபோல.

விட்டு = கொடுத்து முட்டாது = முட்டுப்படாமல் வியங் கொளல் வேண்டும். அச்செயல்மேல் ஏவுதல் வேண்டும். உளி = மரம் செதுக்கும் கருவி.

[நேரிசை வெண்பா]

3 மடியை வியங்கொளின் மற்றைக் கருமம்
முடியாத வாறே முயலும்—கொடியன்னாய்
பாரித் தவனை நலிந்து தொழில் கோடல்
மூரி எருத்தான் உழவு. 614

**குறிப்புரை :**

சோம்பலுடையவனைக் கொண்டு ஒரு செயலைச் செய்யச் செய்தல் கிழட்டு எருதினைக் கொண்டு உழுதலை ஒக்கும். அக் காரியம் முடியாதபடியே அவன் செயல் இருக்கும் என்பதாம்.

மடி = சோம்பலுடையவன் முயலும் = செயலாற்றும்
பாரித்து = பலவகையானும் நலிந்து = வருந்தி
மூரி = கிழ எருது.

4 உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமில் உள்ளத்தா னாகி — நடக்கையின்
ஒள்ளியன் அல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல். 615

**குறிப்புரை :**

நல்லறிவில்லாதவன் பெருமைக் குணமின்றி நடப்பானாதலின் வினையை அவன் மாட்டுக் கொடுப்பது. குரங்கின் கையில் கொள்ளியைக் கொடுப்பது போலாகும்.

பெருமை = தலைமைக் குணம் நடக்கையின் = நடத்தலினால்
ஒள்ளியன் = அறிவுடையவன் வைத்தல் = கொடுத்தல்
கொள்ளி = எரி.

[இன்னிசை வெண்பா]

5 காட்டிக் கருமம் கயவர்மேல் வைத்தவர்
ஆக்குவர் ஆற்ற எமக்கென்று அமர்ந்திருந்தல்
மாப்புரை நோக்கின் மயிலன்னாய் பூசையைக்
காப்பிடுதல் புன்மீன் தலை. 616

**குறிப்புரை :**

அரச வினையைக் கயவர்பால் ஒப்பித்து அவர் நன்கு ஆற்றுவரென இருத்தல் மீன்வற்றலுக்குப் பூனையைக் காவல் வைத்தாற் போலாகும் என்பது.

காட்டி = செய்ய வேண்டியதைக் கூறி ஆற்ற = நிறைவாக
மாப்புரை நோக்கு = மாவடுப் போன்ற கண் பூசை = பூனை
புன்மீன் = வற்றல் மீன் (கருவாடு).

6 தமரல் லவரைத் தலையளித்தக் கண்ணும்
அமராக் குறிப்பவர்க் காகாதே தோன்றும்
சுவர்நிலம் செய்தமைத்துக் கூட்டியக் கண்ணும்
உவர்நிலம் உட்கொதிக்கு மாறு. 617

**குறிப்புரை :**

சுவர் எடுத்துக் கட்டிய பின்னும் உவர்மண் உள்ளே கொதிப்புற்றிருக்கும் அதுபோல பகைமையுடையாரை அன்பு செய்தவிடத்தும் அவர்க்கு நல்லெண்ணம் தோன்றுது என்பது

தலையளித்த பின்னும் = அன்புசெய்த போதும்
அமராக்குறிப்பு = விருப்பமில்லாத எண்ணம்
உவர்நிலம் = உவர்மண்.

[நேரிசை வெண்பா]

7 நாட்டிக் கொளப்பட்டார் நன்மை இலராயின்
காட்டிக் களைதும் என வேண்டா—ஒட்டி
இடம்படுத்த கண்ணும் இறக்குமம்மை யாட்டை
உடம்படுத்து வெளவுண்டாரில். 618

**குறிப்புரை :**

ஆட்டினைக் கேட்டு அதனைக் கொல்வதில்லை. அதுபோல வினையாளன் நன்மை பயவான் எனக் கருதின் அவனிடம் சொல்லி நீக்கலாம் என எண்ணுமல் நீக்கிவிட வேண்டும் என்பது.

நாட்டி = அமைத்து நன்மை - செயல்திறன்
காட்டி - குறையினை எடுத்துக் கூறி களைதும் நீக்குவேம்
இறக்கும் மையாட்டை = கொல்லப்படும் ஆட்டினை
உடம்படுத்து = அதன் கருத்தினைக் கேட்டு ஒப்புதல் பெற்று
வெளவுண்டார் = வெட்டுபவர் இல் = இல்லை.

[இன்னிசை வெண்பா]

8 உழையிருந்து நுண்ணிய கூறிக் கருமம்
புரையிருந்த வாறறியான் புக்கான் விளிதல்
நிரையிருந்து மாண்ட அரங்கினுள் வட்டுக்
கரையிருந்தார்க் கெளிய போர். 619

**குறிப்புரை :**

நிரைந்து அமர்ந்து வட்டாடுமிடத்து அவ்வரங்கின் பக்கத்திருப்பார்க்கு அது எளிதாகத் தோன்றும். ஆடுவோர்க்கே அதன் இடர்ப்பாடு புரியும்) அதுபோல. ஒருவன் மேற்கொண்டு செய்யும் செயலின் உயர்வு முதலியவற்றை அறியாதவன் அவன்பாலிருந்து நுண்ணியவாகச் சில கூறி ஏவுதலுமாம். செய்வோனுக்கே அதன் அருமை தெரியும் என்றவாறு.

புக்கான் உழையிருப்து கூறி விளித்தல் எனக் கூட்டுக.

உழை = பக்கம் வட்டு = சூதுபோர் கரை = பக்கம்.

9 கட்டுடைத்தாகக் கருமம் செயவைப்பின்
பட்டுண் டாங் கோடும் பரியாரை வையற்க
தொட்டாரை ஒட்டாப் பொருளில்லை இல்லையே
அட்டாரை ஒட்டாக் கலம். 620

**குறிப்புரை :**

காவலுக்குரித்தான செயலைத் தன்மாட்டு அன்பில்லாதவரிடம் கொடுத்தல் கூடாது என்பது.

கட்டு = காவல் பட்டுண்டு - உண்டாகும் பயனைக் கைக்கொண்டு ஓடும் - நீங்கிவிடும் பரியாரை - அன்பில்லாதவரை வையற்க - அமர்த்த வேண்டாம் அட்டாரை - சமைத்தவரை ஒட்டாக்கலம் இல்லை - சேராத உணவுப் பண்டங்கள் இல்லை ஆதலால் என்க.

[நேரிசை வெண்பா]

10 அகந்தூய்மை இல்லாரை ஆற்றப் பெருக்கி
இகந்துழி விட்டிருப்பின் அஃதால்—இகந்து
நினைந்து தெரியானாய் நீள்கயந்துள் ஆமை
நனைந்துவா என்று விடல். 621

**குறிப்புரை :**

உள்ளந் தூய்மையில்லாரைச் சேர்த்துச் செய்மையிற் சென்று செய்ய வேண்டிய செயல்களை ஒப்படைத்தல் ஆமையைப் பிடித்து நீராடி வா என்று விடுதல் போலாகும்.

இகந்துழி = சேய்த்தாகிய இடம் கயம் = குளம்
நனைந்து வா = நீராடி வருக. விடல் = அனுபபுதல்.

11 ஆணியாக் கொண்ட கருமம் பதிற்றியாண்டும்
பாணித்தே செய்ப வியங்கொள்ளின்—காணி
பயவாமைச் செய்வாரார் தம்சாகா டேயும்
உயவாமைச் சேறலோ இல். 622

**குறிப்புரை :**

தமது சகடமாயினும் ( மசை ) நெய்யிடாமல் செலுத்தின் விரைந்து செல்லுதல் இல்லை. காணியளவாயின் பயன் பெறுமல் செயலைக் செய்வார் யார்? பொருள் தராமல் ஆணை யிட்டுச் செய்யும் செயல் அச்சாணி போன்ற செயலாயினும் செய்பவர் பத்தாண்டு என்னுமளவிற்குத் தாமதமாகவே செய்வர்.

ஆணியாகக் கொண்ட - இன்றியமையாத சிறந்த செயல்
பாணித்தே = விரைவின்றியே காணி என்பது பொருட் பயனை உணர்த்தி நின்றது. சாகாடு = வண்டி
உயவாமல் - நெய்யிட்டுச் செலுத்தாமல்
சேறல் = செல்லுதல்,

[இன்னிசை வெண்பா]

12 உறுமக னாக ஒருவனை நாட்டிப்
பெறுலாற்ற மின்றிப் பெயர்த்தே ஒழிதல்
சிறுமைக் கமைந்ததோர் செய்கை அதுவே
குறுமக்கள் காவு நடல். 623

**குறிப்புரை :**

ஒருவனிடத்து வேலையை ஒப்பித்துக் குறையில்லாதிருப்பவும் அவனை நீக்குதல் கீழ்மக்கள் செயலாகும். அது சிறுவர்கள் சோலை நட்டு வளர்ப்பதை ஒக்கும்.

உறுமகன் = அவ்வினைக்குத் தகுதியுடையவன்
பெயர்த் தொழிதல் = நீக்கிவிடுதல்
காவு = சோலை நடல் = நட்டுவளர்த்தல்.

13 உழந்ததூஉம் பேணார் ஒறுத்தமை கண்டும்
விழைந்தார்போல் தீயவை பின்னரும் செய்தல்
தழங்கண் முழவியம்பும் தண்கடற் சேர்ப்ப
முழங்குறைப்பச் சாண்நீளு மாறு. 624

**குறிப்புரை :**

தனது துன்பத்தினையும் பாராது ஒறுத்தமையைக் கண்டும் தம்மை விரும்பியவர்போல அமைந்து அவர்க்கு மீண்டும்தீமை செயல், முழங்குறைக்க எண்ணிச் செய்ய மேலும் அது சாண் நீளுமாறு போன்றதாகும்.

உழந்தது = துன்புற்று வருந்தியது தழங்கண் தழங்கும் (ஒலிக்கும்) கண். முழவியம்பும் = முரசுபோல ஆரவாரிக்கும் கடல்.

14 தந்தொழி லாற்றுந் தகைமையார் செய்வன
வெந்தொழிலர் ஆய வெகுளிகட்குக் கூடுமோ
மைந்திறை கொண்ட மலைசாப ஆகுமோ
நந்துழுத வெல்லாம் கணக்கு. 625

**குறிப்புரை :**

நத்தை ஊர்ந்த வரிகள் எல்லாம் கணக்காகுமோ? ஆகாது தம் தொழிலை ஆற்றும் தகவுடையார் செய்வனவே நற்செயல் ஆவதன்றிக் கொடுந்தொழிலாகிய சினமுடையார் அவ்வாறு செய்தல் கூடுமோ; கூடாது என்றபடி.

மைத்திறை கொண்ட = வலிமை தங்கிய நந்து = நத்தை.

15 வழிபட் டவரை வலியராச் செய்தார்
அழிப்பினும் ஆக்கினும் ஆகும்—விழுத்தக்க
பையமர் மாலை பணைத் தோளாய் பாத்தறிவென்
மெல்ல கவுள்கொண்ட நீர். 626

**குறிப்புரை :**

அடக்கப்பட்டவர்களை வலிமையுடையவராகச் செய்தவர் எவர் அவர் அவர்களை அழித்தலும், ஆக்குதலும் கூடும் கவுள் கொண்ட நீரை விழுங்கவும் உமிழவும் முடியுமன்றோ ? இதற்கு ஆராய்ச்சியறிவு வேண்டுமோ என்றவாறு.

வழிப்பட்டவர் = தம் ஆணைக்கு உட்பட்டவர்
பையமர் மாலை = பசுமை பொருந்திய மாலை
பாத்தறிவு = பகுத்தறிவு கவுள் = கன்னம்.

16 ஊழாயி னாரைக் களைந்திட் டுதவாத
கீழாயி னாரைப் பெருக்குதல்—யாழ்போலும்
தீஞ்சொல் மழலையாய்! தேனார் பலாக்குறைத்துக்
காஞ்சிரை நட்டு விடல். 627

**குறிப்புரை :**

முறைமையுடையாரை நீக்கிக் கீழாயினாரைத் தனக்குத் துணையாகப் பெருக்குதல் பலா மரத்தை அழித்துவிட்டுக் காஞ்சிரையை வளர்ப்பது போலாம்.

ஊழ் = முறைமை, தகுதி தேனார்பலா = தேன் பலா
நடுதல் = வளர்த்தல்.

17 தெற்ற அறிவுடையார்க் கல்லால் திறனில்லா
முற்றலை நாடிக் கருமஞ்செய வையார்
கற்றொன் றறிந்து கசடற்ற காலையும்
அற்றதன் பால்தேம்பல் நன்று. 628

[பழமொழி]

**குறிப்புரை :**

கற்று முதிர்ந்தோராயினும் திறனில்லார் மாட்டு வினையை ஒப்புவிக்கமாட்டார்கள் தெளிவுடையோர்கள் என்பது.

தேம்பல் = மெலிந்து நீங்குதல்
அற்றது — செயலறிவு இல்லாதது.

[நேரிசை வெண்பா]

18 பண்டாரம் பல்கணக்குக் கண்காணி பாத்தில்லார்
உண்டார் அடிசிலே தோழரின்-கண்டாரா
யாக்கைக்குத் தக்க அறிவில்லார்க் காப்படுப்பின்
காக்கையைக் காப்படுத்த சோறு. 629

**குறிப்புரை :**

பகுத்தறியாமல் தாமே கொள்ள நினைவார் தக்க அறிவில்லார். இவர்களைப் பண்டாரம் முதலியவற்றிற்குக் காவல் வைத்தல் சோற்றுக்குக் காக்கையை காவல் வைப்பதை ஒக்கும் என்பதாகும்.

19 வான்குரீஇக் கூடரக்குத் வால்உலண்டு
நூல்புழுக்கோல்
தேன்புரிந்த தியார்க்கும் செயலாகா — தாம்புரீஇ
வல்லவர் வாய்ப்பன என்னார் ஒரோவொருவர்க்
கொல்காதோ ரொன்று படும். 630

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

வான்குருவிக்கூடமைத்தல், பட்டுப்புழுநூல் சமைத்தல், தேன்வண்டு அரையமைத்தல் முதலியவற்றை யாரும் செய்தற்கு இயலாது. ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்று வாய்க்குமாதலின் வல்லவர் அவற்றை எண்ணி வருந்தமாட்டார் என்றவாறு.

**அதிகாரம்—16**

## சுற்றந்தழால்

சுற்றந்தழுவுதலாவது : ஆள்வோர் தம் துணையாய சுற்றத்தாரைத் தன்னின் நீங்காமல் அணைத்துக் கொள்ளுதலாம்.

தழால் = தழுவிக் கொள்ளுதல்.

[இன்னிசை வெண்பா]

1 மெய்யா உணரின் பிறர்பிறர்க்குச் செய்வதென்
பையா ரகலல்குற் பைந்தொடீ! எக்காலும்
செய்யார் எனினும் தமர்செய்வர் பெய்யுமாம்
பெய்யா தெனினும் மழை. 631

**குறிப்புரை :**

எப்பொழுதும் பெய்யாவிடினும் உயிர்கள் உய்ய மழை தானே பெய்யும். அவ்வாறே எப்பொழுதும் செய்யார் எனினும் வேண்டுங்கால் சுற்றத்தாரே உதவுவர் என்றவாறு.
மெய்யா உணரின் = உண்மையாக ஆராய்ந்து பார்க்கின்
பிறர் = அயலார்.

[நேரிசை வெண்பா]

2 உளைய உரைத்து விடினும் உறுதி
கிளைகள் வாய்க் கேட்பது நன்றே—விளைவயலுள்
பூமிதித்துப் புள்கலாம் பொய்கைப்புன லூர
தாய்மிதித்த ஆகா முடம். 632

**குறிப்புரை :**

தாய் மிதிக்கக் குஞ்சு முடமாகாது. மனம் வருந்த இடித்துரைப்பாராயினும் உறுதிமொழிகளைக் கேளாயினரிடத்துக் கேட்பதே நலம்பயக்கும்.

கிளை = சுற்றம் புட்கலாம் = பறவைகள் ஆரவாரிக்கும்.

3 அல்லல் ஒருவர்க் கடைந்தக்கால் மற்றவர்க்கு
நல்ல கிளைகள் எனப்படுவார்—நல்ல
வினைமரபின் மற்றதனை நீக்கு மதுவே
மனைமர மாய மருந்து. 633

**குறிப்புரை :**

நல்லசுற்றத்தார் எனப்படுவோர் அல்லலுற்ற உறவினரைப் பேணுதல் வேண்டும் என்பது. அச்செயல் வருத்தமுற்றார்க்கு வீட்டில்வளரும் மருந்துமரத்திற்கு ஒப்பாகும்.

வினைமரபின் = செய்யவேண்டிய முறையினால்.

[இன்னிசை வெண்பா]

4 முன்னின்னா ராயினும் மூடும் இடர்வந்தால்
பின்னின்னா ராகிப் பிரியார் ஒருகுடியார்
பொன்னாச் செயினும் புகாஅர் புனலூர
துன்னினார் அல்லர் பிறர். 634

**குறிப்புரை :**

கிளைஞராயினார் ஒருகால் இன்னாதவராயிருந்திடினும் பெருந் துன்பம் வந்தவிடத்து நீங்கிச்செல்லார் அதனைப் போக்குவர் பொன்போலப் போற்றியிருப்பினும் பிறராயினார் துன்பம் வந்தகாலத்து அதனை நீக்க முற்படுதல் இல்லை.

இன்னார் = இன்னாதவர் மூடும்இடர் = அழிவுநேரும்படி யானதுன்பம் ஒருகுடியார் = ஒருகுடியிற் பிறந்த கேளிர்.

[நேரிசை வெண்பா]

5 சேர்ந்தார் ஒருவரைச் சேர்ந்தொழுகப் பட்டவர்
தீர்ந்தாராக் கொண்டு தெளியினும்-தேர்ந்தவர்க்குச்
செல்லாமை காணுக்கால் செல்லும்வாய் என்னுண்டாம்
எல்லாம்பொய் அட்டூணே வாய். 635

**குறிப்புரை :**

தம்மைச்சார்ந்து நிற்பவர் கேளிரல்லாத பிறர் எனினும் அவர்க்குச்செல்லும் வறிதாகுறைநபொழுது எல்லாம் பொய்யே உணவளித்தலே மெய்யாம்.

அட்டுண் = சமைத்த உணவு வாய் = வாய்மை.

[இன்னிசை வெண்பா]

6 கூஉய்க் கொடுப்பதொன் றில்லெனினும் சார்ந்தார்க்குத்
தாஉய்ப் பயின்றாரே துன்பந்துடைக் கிற்பார்
வாய்ப்பத்தான் மாழ்கியக் கண்ணும் பெருங்குதிரை
யாப்புள்வே றாகி விடும். 636

**குறிப்புரை :**

சிறந்த குதிரை வாட்டமுற்ற நிலையிலும் போருக்குரியதாக அணிசெய்யுமிடத்து வீறுமிக்கதாக ஆகிவிடும் அவ்வாறே கூப்பிட்டுக் கொடுக்கும் வளமில்லாராயினும் வறியராய் ஒருவர் தன்னைச் சார்ந்தவிடத்துக். கொடுத்துப் பழகியவரே அவர் துன்பத்தைநீக்குவர்.

யாப்பு = போர்க்குரியவற்றை புனைந்தநிலை.

[நேரிசை வெண்பா]

7 பல்கிளையுள் பாத்துறான் ஆகி ஒருவனை
நல்குரவால் வேறாக நன்குணரான்—சொல்லின்
உரையுள் வளவியசொல் சொல்லா ததுபோல்
நிரையுள்ளே இன்னா வரைவு. 637

[பழமொழி]

**குறிப்புரை :**

சுற்றத்தார் குழுவினுள்வைத்து ஒருவரைக்குறை செய்தலும் ஒருவரை நிறை செய்தலும் கொடுஞ்செய்கையாகும் என்பது.

பாத்துறான் = பகுத்துஉணராமை. நல்குரவு = வறுமை
வளவியசொல் = நற்சொல்.

[இன்னிசை வெண்பா]

8 **வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு
அசாஅத் தானுற்ற வருத்தம் உசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும்.** 638

**குறிப்புரை :**

வேட்கையும்ஈனும் வருத்தமும் மகப்பெற்றபின் அதனைக்கண்டு மறந்துவிடுதல் போலத் தன்னலத்தை உசாவும் கேளிரைக் கண்டவுடன் தான் உற்ற வருத்தமெல்லாம்கெடும்.

**கவான்** = மடி. அசா = துன்பம் உசா = வினவுதல்.

[நேரிசை வெண்பா]

9 **அழல்மண்டு போழ்தின் அடைந்தவர் கட்கெல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்-பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்.** 639

**குறிப்புரை :**

வெப்பம் சூழ்ந்தவிடத்துத் தன்னை அடைந்தவர்க்கு நிழல் கொடுக்கும் பெருமரம்போலவும் பல்லார்பயன் கொளப் பழங்களை நல்கும் பழுமரம் போலவும் தான்வருந்தி வாழ்வதே நல்லாண்மகனுக்குக் கடமையாம்.

**அழல் – நெருப்பு** நன்மை குடிப்பிறப்பை உணர்த்தி நின்றது.

[இன்னிசை வெண்பா]

10 பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்
அக்காரம் பாலோ டமரார்கைத் துண்டலின்
உப்பிலிப் புற்கை உயிர்போல் கிளைஞர்யாட்
டெக்காலத் தானும் இனிது. 640

**குறிப்புரை :**

புலிநகம் போலும் புழுக்கிய உணவைப் பொன்கலத்தே பாலுடன்கூட்டி அன்பில்லாரிடத்து இருந்து உண்பதைக் காட்டிலும் உப்பில்லாத உணவை உயிர்போல நட்பும் அன்பும் உடைய கிளைஞரிடத்து இருந்து உண்ணுதல் இனிதாகும்.

உகிர் = நகம் புழுக்கல் = வெந்த உணவு அக்காரம் = சருக்கரை அமரார் = விரும்பாதவர் (பகைவர்) புற்கை = புல்லிய உணவு.

[நேரிசை வெண்பா]

11 அடுக்கல் மலைநாட தற்சேர்ந் தவரை
எடுக்கலம் என்னுர் பெரியோர்—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு. 641

[நாலடியார்]

**குறிப்புரை :**

நற்குடிப் பெரியோர் தம்மைச் சார்ந்தாரைப் பேணுதலைத் துன்பமாக எண்ணமாட்டார். அடுத்தடுத்துப் பெரியகாய்கள் பல காய்ப்பினும் அவற்றைப் பொறுக்காத (மரக்) கிளை இல்லை.

எடுக்கலம் = காத்தலைச் செய்யேம் என்னுர் = என்று சொல்லார் கொம்பு = மரக்கிளை.

**அதிகாரம்—17**

# பொச்சாவாமை

பொச்சாவாமையாவது : தமது செல்வம், வலிமை முதலிய சிறப்பால் செய்யும் கடமைகளை நெகிழ்ந்து சோர்வுறுதலைச் செய்யாமையும் நினையாது மறத்தலைச் செய்யாமையுமாம்.

[இன்னிசை வெண்பா]

1 **சில்சொல் பெருந்தோள் மகளிரும் பல்வகையும்**
**தாளினால் தந்த பெருநிதியும் நாள்தொறும்**
**நாத்தளிர்ப்ப ஆக்கிய உண்டியும் இம்மூன்றும்**
**காப்பிகழல் ஆகாப் பொருள்.** 642

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

தன்னைச் சார்ந்த மகளிர், உழைத்துச் சேர்த்த பொருள், முயன்று சமைத்த அறுசுவை உணவு இவற்றைக் காத்தலை வழுவுதல் கூடாது என்பது.

தாளினால் = முயற்சியால் இகழல் = சோர்வாற்காவாது இருத்தல்.

[நேரிசை வெண்பா]

2 **அலைபுனலுள் நிற்பினும் தாமரை யீன்ற**
**இலையின்கண் நீர்திவளா வாகும்—நிலையில்**
**புலங்களுள் நிற்பினும் பொச்சாவா னாயின்**
**மலங்கடி வாளனவன்.** 643

[அறநெறிச்சாரம்]

**குறிப்புரை :**

புலன் உணர்வோடு இருப்பினும் சோர்வில்லாதவனாயின் அவன் குற்றங்களை நீக்கும் வாளுடையவனாவான். அலை நீரில் இருப்பினும் தாமரையிலையில் நீர் ஒட்டாமை போலப் புலனால் வருந்துன்பம் அவனை ஒட்டாது.

திவளா = ஒட்டா நிலையில்லாத. புலன் = தன்மாத்திரைகள் மலம் = குற்றம் வாளன் = வாளையுடையவன்.

[இன்னிசை வெண்பா]

3 தன்னுடம்பு தாரம் அடைக்கலந்தன் னுயிர்க்கென்று
உன்னித்து வைத்த பொருளோடிவை நான்கும்
பொன்னினைப் போற்போற்றிக் காத்துய்க்க
உய்க்காக்கால்
மன்னிய ஏதந் தரும். 644

[ஆசாரக்கோவை]

குறிப்புரை :

தன் உடம்பு, தன் மனைவி முதலிய பொருளை நினைவோடு காத்தல்வேண்டும் இன்றேல் அவை நமக்குத் துன்பந் தரும். அடைக்கலம் = அடைக்கலமாகப்பெற்ற பொருள். உன்னித்து = எண்ணி மன்னிய = நிலையான ஏதம் = துன்பம்.

[அறுசீர்விருத்தம்]

4 வண்ணப்பூ மாலை சாந்தம்
வாலணி கலன்க ளாடை
கண்முகத் துறுத்தித் தூய்மை
கண்டலாற் கொள்ள வேண்டா
அண்ணலம் புள்ளோ டெல்லாம்
ஆயிரம் பேடைச் சேவல்
உண்ணுநீர் அமிழ்தங் காக்க
யூகமோ டாய்க என்றான். 645

குறிப்புரை :

அரசன் பூமாலை முதலியவற்றை சக்கரவாகப்புள்ளின் முகத்தும், உண்ணும் நீரையும் உணவையும் கருங்குரங்கினிடத்தும் வைத்துச் சோதித்துப் பயன்படுத்துக என்கிறது.

அன்னம் = கண்ணிற் குருதி காட்டும்—சக்கரவாகம் முகஞ் சுளிக்கும் கருங்குரங்கு உண்ணாது அவை மாசுடையவாயின். வாலணிகலன் = தூய ஆபரணங்கள் அண்ணலம்புள் = அன்னப்பறவை. ஆயிரம் பேடைச்சேவல் = சக்கரவாகப் பறவை ஊகம் = கருங்குரங்கு ஆய்க = சோதிக்க.

[அறுசீர்விருத்தம்]

5 அஞ்சனக் கோலி ஞற்ற
நாகமோ ரருவிக் குன்றிற்
குஞ்சரம் புலம்பி வீழக்
கூர்நுதி எயிற்றிற் கொல்லும்
பஞ்சியின் மெல்லி தேனும்
பகைசிறி தென்ன வேண்டா
அஞ்சித்தற் காத்தல் வேண்டும்
அரும்பொரு ளாக வென்றான். 646

**குறிப்புரை :**

சிறுகோலுக்கும் பற்றுதநாகம் தன் பல்விடத்தால் பெரிய யானையையும் கொன்றுவிடும் ஆதலின் பஞ்சினும் மெல்லிய தாயினும் பகையைச் சிறிதென்று கருதாது காத்துக்கொள்ள வேண்டும்.

அஞ்சனக்கோல் = கண்மையிடும்கோல் கூர்நுதி = கூர்மை எயிறு = பல் என்றான் பதுமுகன் சீவகனிடம் கூறினான்.

6 பொருந்தலாற் பல்லி போன்றும்
போற்றலால் தாய ரொத்தும்
அருந்தவர் போன்று காத்தும்
அடங்கலால் ஆமை போன்றும்
திருந்துவேற் றெவ்வர் போலத்
தீதற வெறிந்தும் இன்ப
மருந்தினன் மனைவி யொத்தும்
மதலையைக் காமின் என்றான். 647

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

பற்றிக்கொள்ளுதலிற் பல்லியையும் காத்தலில் தாயையும் ஒத்து அருந்தவர் போற்காத்து அமைபோல் அடங்கி பகைவரைப் போல இடித்துரைத்தும் உணவு இன்பநுகர்வில் மனைவியை ஒத்தும் காக்கவேண்டியவரைக் காத்தல் வேண்டுமென்பது.

தெவ்வர் = பகைவர் மதலை = காக்கப்படவேண்டியவர்.

[கலிவிருத்தம்]

7 இகழ்சி யிற்கெடு வோர்களை எண்ணுக
மகிழ்சி யின்மனம் மைந்துறும் போழ்தெனப்
புகழ்ச்சி நூலுட் புகன்றனர் பூவினுள்
திகழ்ச்சி சென்றசெம் பொன்முடி மன்னனே 648

[சூளாமணி]

**குறிப்புரை :**

சோர்வினால்வாழ்விழந்தோரை எண்ணுதல்வேண்டும்ஒருவன் மகிழ்ச்சியில் திளைக்கும்போது என்கிறது.
இகழ்ச்சி = சோர்வு மைந்துறும்போழ்து = வலியுறும் போது புகழ்ச்சிநூல் என்றது ஈண்டுத் திருக்குறளை.

**அதிகாரம்—18**

## செங்கோன்மை

செங்கோன்மையாவது : ஆளும் அரசப் பொறுப்பேற்றவர் விருப்பு வெறுப்பானும், பிற காரணங்களானும் ஒருபாற் கோடாது செய்யப்படும் முறையினது தன்மையாம். உள்ளத்தின் செம்மையைக் கருதி உவமையாகச் செங்கோல் எனச் சொல்வது மரபு.

[இன்னிசை வெண்பா]

1 எங்கண் அனையர் எனக்கருதின் ஏதமாம்
தங்கண்ணே யாயினுந் தகவில கண்டக்கால்
வன்கண்ண னாகி ஒறுக்க ஒறுக்கல்லா
மென்கண்ணன் ஆளான் அரசு. 649

**குறிப்புரை :**

குற்றம்புரிந்தார் தன்கண்போன்றவராயினும் அவரைத் தண்டித்தல் செங்கோன்மையாம்.

ஏதமாம் = குற்றமாம் வன்கண்ணனாகி = அஞ்சானாகி
மென்கண்ணன் = உள்ளம் மெலிவுடையவன்.

[நேரிசை வெண்பா]

2 சாலமறைத் தோம்பிச் சான்றவர் கைகரப்பக்
காலை கழிந்ததன் பின்றையும்—மேலைக்
கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்
முறைமைக்கு மூப்பிளமை யில் 650

**குறிப்புரை :**

அமைச்சர் முதலாயினோர் மறைத்துக்கூறவும் கேளானாய்க் கன்றினைத் தேர்காலிற் கொன்றபுதல்வனை மனுநீதிச் சோழன் தேர்க்காலிற் கிடத்தி ஊர்ந்தான் ஆதலின் செங்கோன்மைக்கு மூப்பு இளமை என்பதில்லை.

சான்றவர் - அமைச்சர் கறவை - பசு தந்தை = மனுநீதிச் சோழன் முறைமை - செங்கோன்மை.

3 முறைதெரிந்து செல்வர்க்கும் நல்கூர்ந்தவர்க்கும்
இறைதிரியான்நேரொத்தல்வேண்டும்-முறைதிரிந்து
நேரொழுகா னாயின் அதுவாம் ஒருபக்கம்
நீரொழுகப் பாலொழுகு மாறு. 651

**குறிப்புரை :**

செல்வர் ஏழை எனக் கருதாது நேர்மையாக ஆளுதல் வேண்டும் முறைதிரியின் அது ஒருபக்கம் பாலும் ஒருபக்கம் நீரும் சொரிவதை ஒக்கும்.

முறை = நீதி நல்கூர்ந்தவர் = வறியவர்.

4 உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும். 652

**குறிப்புரை :**

இவன் இளையவன் எவ்வாறு நீதிகாண்பான் என ஐயுற்ற முதியவர்கள் உவக்கும் வண்ணம் முதுமை வேடந்தாங்கி நீதியுரைத்தான் கரிகாற்சோழன். குல வித்தைப் பயிலாமலே பாதியளவு இயல்பாக ஒருவர்க்கு அமையும்.

உரைமுடிவு = நீதித்தீர்ப்பு முறை = நீதியுரை.

[இன்னிசை வெண்பா]

5 செயிரறு செங்கோல் சினவேந்தன் செய்கை
பயிரறு பக்கத்தார் கொள்வர் — துகிர்புரையும்
செவ்வாய்மணி முறுவல் சின்மொழி! செய்தானை
ஒவ்வாத பாவையோ இல். 653

[பழமொழி]

**குறிப்புரை :**

அரசன் செய்யும் நன்மைதீமைகள் அமைச்சர் முதலிய வரையே சாரும் அவர் விலக்கவில்லையாயின் அவர்க்கும் அது உடன்பாடாகலின், பாவை செய்தவன் தன் உள்ளத்திற்கு மாறுகச் செய்தலில்லை அதுபோல என்க.

செயிர் = குற்றம் பயிர் = தீமை துகிர் = பவளம்
பாவை = சித்திரப்பாவை.

[பஃறொடை வெண்பா]

6 இறப்பப் பெருகி இசைபடுவ தல்லால்
சிறப்பிற் சிறுகுவ துண்டோ அறக்கோலால்
ஆர்வமும் செற்றமும் நீக்கிமற் றியார்கண்ணும்
இன்னாத வேண்டா இகல்வேல் மறமன்னர்
ஒன்னார்க் குயர்த்த படை. 654

**குறிப்புரை :**

ஆர்வமும் சினமுமின்றிச் செங்கோன்மை செய்யும் அரசன் புகழ் பெருகுவதன்றிச் சுருங்காது என்பது.

இறப்ப = மிக இசை = புகழ் ஆர்வம் = பற்று
செற்றம் = பகை.

[இன்னிசை வெண்பா]

7 அறம்புரிந்தன் றம்ம அரசிற் பிறத்தல்
துறந்த தொடர்பொடு துன்னிய கேண்மை
சிறந்தார்க்கும் பாடு செயலீயார் தத்தம்
பிறந்தவேல் வென்றிப் பொருட்டு. 655

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

அரசகுடியிற் பிறத்தல் அறம்புரிந்ததன் பயன் ஆதலின் துறந்தார் பற்றுக்கோடாகப் பிறந்த குடியின்வெற்றியின் பொருட்டுச் செயலாற்றல் வேண்டும் தம் கேளிர்க்கும் நண்பர்க்குமே பெருமை செய்தலன்று என்பது கருத்து.

புரிந்தன்று = புரிந்தது தொடர்பு = சம்பந்தம்
கேண்மை = கேண்மையுடையார் சிறந்தார் = மதிக்கத் தக்கவர் பிறந்த = பிறந்தகுடி.

[கலிவிருத்தம்]

8 உறங்கு மாயினும் மன்னவன் தன்றொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்
இறங்குகண் ணிமையார் விழித்தே யிருந்து
அறங்கள் வெளவ வதன்புறங் காக்கலார். 656

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

அரசன் உறங்குவானுயினும் அவன் செங்கோலின் ஆற்றல் உலகத்தைக் காவல் செய்யும். தேவர்கள் உலகத்தார் செய்யும் அறங்களை அரசன்பெற்றுக் கொள்வதை நீக்கமாட்டார் என்றவாறு.

ஒளி = செங்கோன்மையால் பெருகிய புகழ் இறங்குதல் = சுழலுதல் கண்ணிமையார் தேவர் வெளவ = பற்றிக் கொள்ள.

9 ஆறிலொன் றறமெனா அருளில்லா தொன்று
ஊறுசெய் துலகினுள் உவப்ப தில்லையால்
மாறிநின் றவுரையும் வணங்கி னல்லது
சீறிநின் றவருயிர் செகுத்த தில்லையே. 657

**குறிப்புரை :**

மன்னன் மக்களிடத்து ஆறில் ஒருகூறு வரியாகப் பெறுதல் வேண்டும் அன்றேல் உலகம் வெறுக்கும் அவன் பகைவரை வெல்லுதலும் இயலாது என்பது கருத்து.

அறம் = நெறி ஊறு = துன்பம்.

10 நாமவேல் நரபதி உலகங் காக்குநாள்
காமவேள் கைக்கணை கலத்த லல்லது
தாமவேல் வயவர்தம் தழலங் கொல்படை
ஏமநீர் வரைப்பகத் தியைவ தில்லையே. 658

**குறிப்புரை :**

பயாபதி அரசன் ஆட்சியில் காமவேள்கணைகள் அன்றிப் பகை மன்னர் வேலும் கணையும் மக்களை நலியவில்லை என்கிறது.

நாமவேல் = அச்சந்தரும் வேற்படை வயவர் = வீரர்.

[அறுசீர் விருத்தம்]

11 குடிமிசை வெய்ய கோலும்
கூற்றமும் பிணியும் நீர்சூழ்
படிமிசை யில்லை யாயின்
வானுள்யார் பயிறு மென்பார்
முடிமிசைத் திவள வேந்தர்
முறைமுறை பணிய விம்மி
அடிமிசை யறையும் செம்பொன்
அதிர்கழ லரச ரேறே. 659

[சூளாமணி]

**குறிப்புரை :**

கொடுங்கோன்மையும் கூற்றவனும் ஓவாப்பிணியும் இவ்வுலகில் இல்லையாயின் வானுலகம் செல்லயாவர் விரும்புவார் என்கின்றது இதன்கருத்து அரசன் செங்கோன்மையுடையனாதல் வேண்டும் என்பதாம்.

படி = உலகம் பயிறும் (பயில்தும்) செல்வோம்.

[ஆசிரியப்பா]

12 இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும் என்றாங்கு
அவையளந் தறியினும் அளத்தற் கரியை
அறிவும் ஈரமும் பெருங்கண் ணோட்டமும்
சோறு படுக்குந் தீயொடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெறல் அறியார்நின் நிழல்வாழ் வோரே
திருவில் அல்லது கொலைவில் லறியார்
நாஞ்சில் அல்லது படையும் அறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணும் செம்மல்! நின்நாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணின் அல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே
அம்புதுஞ்சுங் கடியரணால்
அறந்துஞ்சும் செங்கோலையே
புதுப்புள்வரினும் பழம்புட் போகினும்
விதுப்புறவறியா ஏமக்காப்பினை
அனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லாம் நின்னஞ்சும்மே. 660

[புறநானூறு]

குறிப்புரை :

கடல்முதலாயினவற்றை அளந்தறியினும் நீ அளத்தற்கியலாதவன் அறிவும் கருணையும் கண்ணோட்டமும் உடையவன் நீ, அடுக்களை நெருப்பும் கதிரவன் வெப்பமுமன்றி உன் நாட்டில் தீயும் வெப்பமும் வேறில்லை வானவில் அல்லது கொலைவில்லை உன்மக்கள் அறியார், பகைவர் கெட அவர் நாட்டைக் கொள்ளுபவன்நீ கருவுற்ற மகளிர் உண்பதல்லது உன் மண்ணைப் பகைவர் கொள்ளார். அம்புகள் நிறையும் அரணும் அறம்தங்கும் செங்கோலும் உடையவன்நீ நிமித்தங்களுக்கு அஞ்சாதவன்நீ ஆதலால் உனக்கு எட்டுணையும் துயர் வரக் கூடாதென எல்லா உயிர்களும் அஞ்சிநிற்கும் என மன்னவன் பல்வேறு சிறப்பினை நயம்படக் கூறுகிறது.

குட்டம் = கடல் வளி = காற்று காயம் = ஆகாயம் ஈரம் = இரக்கம், அன்பு தெறல் = சுடுதல் திருவில் = வானவில் நாஞ்சில் = கலப்பை வயவர் = வீரர் தெவ்வர் = பகைவர் வயவுறு மகளிர் = கருவுற்றமகளிர் வேட்டுணின் (மசக்கையால்) விரும்பிஉண்ணின். துஞ்சும் = தங்கும் புள் = நிமித்தம் விதுப்புறவு = நடுங்குதல் ஏமக்காப்பு = பாதுகாவல் அஞ்சும் = தீங்குவந்துவிடுமோ என அஞ்சும்.

### அதிகாரம்—19

## கொடுங்கோன்மை

கொடுங்கோன்மையாவது : ஆளும் அரசன் நீதிநெறி முறை வழுவிச் செல்லும் தன்மை. செங்கோன்மைக்கு எதிரானது.

[நேரிசை வெண்பா]

1 வெண்குடைக்கீழ் வாழும் குடிகட்கு வேந்தனும்
செங்கோலன் அல்லனேல் செய்வதென்—பொங்கு
படுதிரைச் சேர்ப்பமற் றில்லையே யானை
தொடுவுண்ணின் மூடுங் கலம். 661

குறிப்புரை :

யானை தோண்டியுண்ணும் இடத்தை மூடுதற்கு முடியில்லை அதுபோலக் கொடுங்கோல் மன்னனுயின் மக்கள் என் செய்வார்.

தொடுவுண்ணின் = தோண்டிஉண்ணுமாயின்
கலம் = மூடி.

2 அடைய அடைந்தாரை அல்லவை செய்து
கொடைவேந்தன் கோல்கொடிய னுகிக்-குடிகள்மேல்
கூட்டிறப்பக் கொண்டு தலையளிப்பின் அஃதன்றோ
சூட்டறுத்து வாயில் விடல். 662

குறிப்புரை :

தஞ்சமென அடைந்தாரை வருந்திக் கொடுங்கோலனுய் இறைப்பொருளை முறையின்றி அதிகமாகப் பறித்துப்பின் மக்களுக்கு வேண்டியவற்றை செய்தல் என்பது மயிலின் கொண்டையை அறுத்து அதனைஅதற்கு உணவாகக் கொடுத்தலைப்போல்வதாகும்.

அல்லவை = தீமை கூட்டிறப்பக்கொண்டு = மிகுதியாக இறைப்பொருள்பெற்று சூட்டு = மயிலின் கொண்டை.

3 கூற்றம் உயிர்கொள்ளும் போழ்து குறிப்பறிந்து
மாற்றம் உடையாரை ஆராய—தாற்றவும்
முல்லை புரையும் முறுவலாய் செய்வதென்
வல்லை யரசாட் கொளின். 663

குறிப்புரை :

கூற்றுவன் உயிரைக்கொள்ளும்போது அவர் கூறுவதைக் கேளான் அதுபோல அரசன் வலிந்து அடிமையாக்கித் துன்புறுத்தினுல் குடிமக்கள் என்செய்வார் என்பது.

ஆராயாது = பொருட்படுத்திக் கேளாது ஆட்கொளல் = அடிமைப்படுத்துதல்.

[இன்னிசை வெண்பா]

4 தோற்றத்தாற் பொல்லார் துணையிலார் நல்கூர்ந்தார்
மாற்றத்தாற் செற்ருர் எனவலியார் ஆட்டியக்கால்
ஆற்ருதவ ரழுத கண்ணீர் அவை யவர்க்குக்
கூற்றமாய் வீழ்ந்து விடும். 664

[பழமொழி]

**குறிப்புரை :**

பிறப்பால் தாழ்ந்தவர் துணையில்லாதவர் சொற்களால் பொல்லார் எனக்கூறி ஆளும் வலிமையுடையார் அவர்களைத் துன்புறுத்தின் அவர் அழுதுமாய்வர். அங்ஙனம் அவர் அழுத கண்ணீரே அவ்வலியார்க்கு எமனுகி அழித்துவிடும்.

தோற்றம் = சாதிப்பிறப்பு மாற்றம் = உரை செற்ருர் = பகைவர் வலியார் = ஆளுவோர் ஆட்டியக்கால் = துன்புறுத்தியபோது வீழ்ந்துவிடும் = அழித்துவிடும்.

[அறுசீர்விருத்தம்]

5 கோள்நிலை திரிந்து நாழி
குறைபடப் பகல்கள் மிஞ்சி
நீள்நிலம் மாரி யின்றி
விளைவஃகிப் பசியும் நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற்
கற்பழிந் தறங்கண் மாறி
ஆணையிவ் வுலகு கேடாம்
அரசுகோல் கோடி னென்ருன். 665

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

அரசு கோல் கோடினல் கோள்முதலாயினவும் காலங்களும் தம் நிலைதிரியும் மழைபெய்யாது விளையுள் குன்றும் பசியும் வறுமையும் பெருகும் மகளிர் கற்புநிலை மாறும் அறநெறி பிறழும் உலகம் கெடும்.

பகல்கள் மிஞ்சி = பகற்பொழுது நீண்டு கோடின் = வளையின்,

[கலிவிருத்தம்]

6 நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும்
பொறையின் நீங்கிய தவமும் பொங்கருட்
குறையின் நீங்கிய அறமும் தொல்லையோர்
முறையின் நீங்கிய அரசின் முந்துமே. 666

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

அரசுமுறைமை கெடின் மகளிர் கற்பறமும், தவமுனிவர் பொறையும் அறமும் கெடும் என்பது கருத்து.

நிறை = கற்பு பொறை = பொறுமை முந்தும் = முன்னதாகக் கெடும்.

[ஆசிரியப்பா]

7 தற்பாடு பறவை பசிப்பப் பசையற
நீர்சூல் கொள்ளாது மாறிக் கால்பொரச்
சீரை வெண்டலைச் சிறுபுன் கொண்மூ
மழை கரலூன்று வளவயல் விளையா
வாய்மையும் சேட்சென்று கரக்கும் தீதுதரப்
பிறவு மெல்லாம் நெறிமாறு படுமே
கடுஞ்சினங் கவைஇய காட்சிக்
கொடுங்கோல் வேந்தன் காக்கும் நாடே. 667

[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

கொடுங்கோல் வேந்தன் ஆளும் நாட்டில் வானம்பாடி பசியுறும் மழை மேகங்கள் கால் கொள்ளாமல் சிதறும் வயல்கள் விளையா உண்மை நிலையாது எல்லாம் தம் நிலையில் மாறிவிடும் என்பது.

தற்பாடுபறவை = வானம்பாடிப்புள் பசை = ஈரம் கால்பொர = காற்று வீச கொண்மூ = மேகம் கரக்கும் = மறைந்துவிடும் கவைஇய = பற்றிக்கொண்ட.

அதிகாரம்—20

## வெருவந்த செய்யாமை

வெருவந்த செய்யாமையாவது: அரசு தான் காக்குங்குடிகளும் அரசச் சுற்றமும் தானும் அஞ்சத்தக்க தொழில்களைச் செய்யாமை யாகும்.

[இன்னிசை வெண்பா]

1 காப்பிழந் தோடிக் கழிபெருஞ் செல்வத்தைக்
கோப்பெரியான் கொள்ளின் கொடுத்திரா தென்செய்வர்
நீத்த பெரியார்க்கே யாயினும் ஈத்ததை
மேவின் பரிகாரம் இல். 668

[பழமொழி]

**குறிப்புரை :**

காவற்கடமையைவிட்டு மக்களின் செல்வத்தை அரசன் பற்றிக்கொள்ள எண்ணினால் மக்கள் கொடாமல் என் செய்ய இயலும் துறந்த பெரியவர்கட்கும் தாம் கொடுத்தவற்றைக் கொள்ளவிரும்பின் தடுப்பதற்கொன்றுமில்லை.

கோப்பெரியான் = அரசன் பரிகாரம் = நீக்கும் வகை.

[அறுசீர்விருத்தம்]

2 தீயினம் படர்ந்து வேந்தன்
செறுவதே புரியு மாயின்
போயினம் படர்ந்து வாழும்
புகலிட மின்மை யாலே
வேயினம் படர்ந்த சாரல்
வேங்கையை வெருவிப்புல் வாய்
மாயினம் படர்வ தெல்லாம்
வையகம் படரு மன்றே, 669

**குறிப்புரை :**

அரசன் தீயஇனத்தாரோடுகூடி மக்களுக்குத் துன்பம் புரிவானாயின் அவர்களுக்கு அடைக்கலமில்லை. புலியை அஞ்சி மான்களும் பிறவிலங்குகளும் படும்துன்பங்களையே அவர்கள் படுவார்.

படர்ந்து = கூடி படர்ந்து = சென்று படர்ந்த = சூழ்ந்த சாரல் = மலைப்பகுதி வெருவி = அஞ்சி புல்வாய் = மான் மாயினம் = பெருங்கூட்டம் படர்வது = துன்புறுவது படரும் = அடையும்.

3 நிறந்தலை மயங்கி வெம்பி
நெடுங்கடல் சுடுவ தாயின்
இறந்தலை மயங்கும் நீர்வாழ்
உயிர்க்கிடர் எல்லை யுண்டோ
மறந்தலை மயங்கும் செவ்வேல்
மன்னவன் வெய்ய னாயின்
அறந்தலை மயங்கி வையம்
அரும்பட ருழக்கு மன்றே. 670

**குறிப்புரை :**

கடல் சூடுகொண்டால் அதில் வாழும் உயிர்களின் துன்பத்திற்கு அளவுண்டோ. அதுபோல மன்னவன் கொடியனாயின் அறநிலை கெட்டு உலகம் பெருந்துன்பத்தை எய்தும்.

நிறம் = தன்மை தலைமயங்க = கெட இறந்து = கடந்து மறம் = வலிமை வெய்யனாயின் = கொடியவனாயின் தலையங்கி = நிலைகெட்டு படர் = துன்பம்.

4 மண்குளிர் கொள்ளக் காக்கும்
மரபொழிந் தரசர் தங்கள்
விண்குளிர் கொள்ள ஓங்கும்
வெண்குடை வெப்பு மாயின்
கண்குளிர் கொள்ளப் பூக்கும்
கடிக்கயத் தடமுங் காவும்
தண்குளிர் கொள்ளு மேனும்
தாம்மிக வெதுப்பு மன்றே. 671

[சூளாமணி]

**குறிப்புரை :**

உலகம் குளிரக் காவல்செய்யும் மன்னவன் வெண்குடை வெப்பமுடையதாகிச் சுடுமாயின் குளிர்ந்த தடமும் சோலையும் வெந்து கரியும். அதாவது குடிமக்கள் வெதும்பி அழிவர் என்பதாம்.

கயம் = குளம் தடம் = நீர்நிலைகள் கா = சோலை.

[ஆசிரியப்பா]

5 காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினும் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமுங் கெடுமே. 672

[புறநானூறு]

**குறிப்புரை :**

அரசன் முறையாக இறைப்பொருள் பெருது மக்களைத் துன்புறுத்திப் பெறுவானுயின் நாடு அழியும் என்பது.

காய்நெல் = விளைந்து முற்றியநெற்பயிர் கவளம் = யானைக்கு ஊட்டும் சோற்றுத்திரள் மா = நிலமாகிய ஒருமா செறு = வயல் தமித்து = தானேதனியாக புக்கு = விளைநிலத்திற்புகுந்து வாய்க்குள் செல்வதைவிடக் காலால் மிதிப்பதனுற் பெரிதும் அழியும் நெறியறிந்து = வரிதண்டும் முறையறிந்து கோடி = கோடிசெல்வம் நந்தும் = பெருகும் வரிசையறியாக் கல்லென் சுற்றம் = நீதிமுறையறியாமல் வெற்ருரவாரம் செய்யும் அரசஅலுவலர்கள் பரிவு = இரக்கம் தப = நீங்க பிண்டம் = வரிப்பொருள் நச்சின் = விரும்பினுல் கெடும் = அழியும்.

### அதிகாரம்—21

## கண்ணேட்டம்

**கண்ணேட்டமாவது :** தன்ஞெடு பழகினுரும் நண்பினுரும் விதிவயத்தான் தனக்கு ஒவ்வாதவற்றைச் செய்ய நேரினும் அவற்றை அறியாதவன்போல ஏற்று ஒழுகலாம். இது கண்ஞெடு கண் காணும் வழி நிகழ்வதாகலின் கண்ணேட்டம் எனப்பட்டது.

[நேரிசை வெண்பா]

1 தெற்றப் பகைவர் இடர்ப்பாடு கண்டக்கால்
மற்றுங்கண் ணேடுவர் மேன்மக்கள் —தெற்ற
நவைக்கப் படுந்தன்மைத் தாயினும் சான்ருேர்
அவைப்படின் சாவாது பாம்பு. 673

**குறிப்புரை :**

குற்றப்படும் நிலையினதாயினும் மேலோர்கள் இருக்கும் அவையின் கண்பட்டபொழுது பாம்பு அடிக்கப்படாமல் உய்வு பெறும். அதுபோல தெளிவான பகைவராயினும் அவர்க்குத் துன்பம் நேரும்பொழுது மேலோர்கள் பகைமை பாராட்டாமல் கண்ணோட்டம் செய்வர்.

தெற்ற = தெளிவாக கண்ணோடுவர் = கண்ணோட்டம் (இரக்க அருள்) செய்வர் நவைக்கப்படும்தன்மை = ஒறுக்கப்படும் குணமுடைமை அவை = மன்றம்.

[இன்னிசை வெண்பா]

2 எல்லையொன் றின்றியே இன்னாசெய் தாரையும்
ஒல்லை வெகுளார் உலகாண்டும் என்பவர்
சொல்லின் வளாய்த்தம் தாள்நிழற்கீழ்க் கொள்பவே
கொல்லையில் கூழ்மரமே போன்று. 674

[பழமொழி]

**குறிப்புரை :**

உலகை அருளால் ஆளுவேம் என்னும் பண்புடையவர் அளவின்றி ஒருவர் துன்பம் செய்தாரையும் விரைந்து வெகுள மாட்டார். கொற்றிச் சமப்படுத்தும் கொல்லையுள் உணவு தரும்மரத்தைக்களையாது அதன் கீழிருக்கும் மரத்தையும் காப்பதுபோல தம்கீழ்வைத்துக் காப்பார் அதுபோல என்பது.

ஒல்லை = விரைவு உலகாண்டும் = உலகத்தை ஆளுவேம் சொல்லின்வளாய் = நல்ல சொற்களால் அகப்படுத்தி கூழ்மரம் = உணவுதரும் மரம்.

[நேரிசை வெண்பா]

3 கண்ணுக் கணிகலங் கண்ணோட்டம் காழுற்ற
பெண்ணுக் கணிகலம் நாணுடைமை — நண்ணும்
மறுமைக் கணிகலம் கல்வி இம்மூன்றும்
குறியுடையார் கண்ணே யுள. 675

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

இன்னதற்கு இது அணிகலம் என்கின்றது.
நாணுடைமை - நாணத்தொடு திகழ்தல்
மறுமை - மேற்பிறவி குறி - குறிக்கோள்.

4 ஒன்றும் நரம்பென்கோ ஒன்றாத என்பென்கோ
இன்றசை தானென்கோ யாதென்கோ
—மென்றொடையாழ்
பண்ணோட்டு மின்சொற் பணைத்தோளாய்
சேர்ந்தவர்பாற்
கண்ணோட்ட மில்லாத கண். 676

**குறிப்புரை :**

கண்ணோட்டமில்லாத கண்ணினை நரம்பு என்பு தசை என்பதல்லாற் கண்ணென்று கூறவியலாது என்பது.
ஒன்றும் - பொருந்திய பணைத்தோள் - பரந்த வலியதோள்.

5 யாவர் வரினும் எதிரேற்கும் தெய்வமடப்
பாவை யகத்திருந்தும் பாழன்றே—மேவினரைத்
.... .... .... .... .... ....
கண்ணாகி நிற்கின்ற கண். 677

**குறிப்புரை :**

கண்ணோடாத கண்ணிற் பாவையிருந்தும் பயனில்லை என்பது.
பாவை - கருவிழியின் நலம் மேவினரை - விரும்பி வருவோரை இப்பாடலின் மூன்றாவதுஅடி சிதைந்துள்ளது.

6 வெண்மை கருமை விரிசெம்மை நீண்மைவனப்
பொண்மைஇவற்றின் அமைந்ததெனுங்கண்மையினை
வையாது மாந்தர் மயிலேபோ லத்தமது
கையா லிறை வகுத்தான் காண். 678

[பாரதம்]

**குறிப்புரை :**

வெண்மை கருமை முதலாயவற்றால் வடிவிற் சிறந்திருப்பினும் கண்ணோட்டமில்லாயின் அது மயிலிறகிற் கண்ணை ஒக்கும் என்பது.

எனும் = எனினும் கண்மை = கண்ணோட்டம் மயில் = மயிலிறஇன்கண் இறை = பிரமதேவன்.

### அதிகாரம்—22

## ஒற்றாடல்

ஒற்றாடலாவது: அரசன் தன் ஆட்சித் துணையாக அமைத்துக் கொண்ட ஒற்றரைப் பகை, நொதுமல் நட்பு என்னும் மூன்று திறத்தார் மாட்டும் நிகழ்வனவற்றை அறிந்து அறிவிக்கும் வகையில் அவரை ஆளுதல்.

[இன்னிசை வெண்பா]

1 எள்ளப் படுமரபின் றாகலும் உள்பொருளைக்
கேட்டு மறவாத கூர்மையும் முட்டின்றி
உள்பொருள் சொல்லும் உணர்ச்சியும் இம்மூன்றும்
ஒள்ளிய ஒற்றாள் குணம். 679

**குறிப்புரை :**

தூயமரபும் மறவாமையும் பகைவர் மாட்டுக்கண்ட உண்மையை வெளிப்படுத்தும் உணர்வும் ஆகிய மூன்றும் ஒற்றர்க்குச் சிறந்த குணங்களாம்.

கூர்மை = நினைவாற்றல் உணர்ச்சி = அறிவு.

2 அருமறை காவாத நட்பும் பெருமையை
வேண்டா துவிட்டொழிந்தபெண்பாலும்யாண்டானும்
செற்றங் கொண்டாடும் சிறுதொழும்பும் இம்மூவர்
ஒற்றாள் எனப்படு வார். 680

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

மறையைக்காவாத நண்பரும் பெருமையேனுத பண்டிரும், எவ்விடத்தும் பகைபாராட்டும் கயவரும் ஒற்றரால் ஆயப்படுபவராவர்.

அருமறை = இரகசியம் செற்றம் = பகை தொழும்பு = அடிமைத்தொழில் புரிபவர்.

3 ஒற்றினன் ஒற்றிப் பொருள்தெரியும் மாண்பினிதே
முன்தான் தெரிந்து முறைசெய்தல் முன்னினிதே
பற்றிலனய்ப் பல்லுயிர்க்கும்பார்த்துற்றுப்பாங்கறிதல்
வெற்றவேல் வேந்தர்க் கினிது. 681

[இனியவை நாற்பது]

**குறிப்புரை :**

இந்நான்கும் இனிமைபயக்கும் என்பது.

முன்தெரிந்து = ஆராய்த்து பற்று = விருப்பு வெறுப்பு.

[கலிவிருத்தம்]

4 ஒற்றர் தங்களை ஒற்றரின் ஆய்தலும்
கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலும்
சுற்றஞ் சூழ்ந்து பெருக்கலுஞ் சூதரோ
கொற்றங் கொள்குறிக் கொற்றவர்க் கென்பவே.
682

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

வெற்றியைக் குறிக்கோளாகவுடைய வேந்தர்க்கு இவை இராசதந்திரம் என்கின்றது.

கற்றமாந்தர் = சான்றோர் சுற்றம் = அமைச்சர் முதலிய அங்கம் சூழ்ந்து = ஆராய்ந்து சூது = தந்திரம்.

சூதரோ என்பதில் அரோ அசை.

அதிகாரம்—23

## ஊக்கமுடைமை

ஊக்கமுடைமையாவது : மேற்கொண்ட வினையினைச் செய்தற்கண் மனச்சோர்வுறாமல் கிளர்ச்சியை உடையராதலாம். ஊக்கம் = ஊக்கத்தின் திண்மை.

[நேரிசை வெண்பா]

1 இசையு மெனினும் இசையா தெனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர்—விசையின்
நரிமா உளங்கிழித்த அம்பினிற் றீதோ
அரிமாப் பிழைப்பஎய்த கோல். 683

**குறிப்புரை :**

விரும்பினும் விரும்பாவிடினும் ஒன்றைக் குற்றமற எண்ணியே செய்வர் சான்றோர் நரியைக் கிழித்த அம்பினைவிட அரிமா தப்பிவிடஎய்த அம்பு குற்றமுடையதாகாது என்பது.

வசை = இகழ்ச்சி எண்ணுவர் என்பது செயலைக் குறித்து நின்றது விசை = விரைவு அரிமா = சிங்கம் கோல் = அம்பு.

[இன்னிசை வெண்பா]

2 எமக்குத் துணையாவார் யாவரென் றெண்ணித்
தமக்குத் துணையாவார் தாம்தெரிதல் வேண்டா
பிறர்க்குப் பிறசெய்வ தொன்றுண்டோ இல்லை
தமக்கு மருத்துவர் தாம். 684

**குறிப்புரை :**

ஒருசெயலை மேற்கொண்டவர் துணையைநாடிச் செல்லுதல் வேண்டா. தமக்குத் தாமே துணைஎனும் ஊக்கம் வேண்டுமென்பது.

தெரிதல் = ஆராய்தல் மருத்துவர் = நோய்களைபவர்,

3 வன்சார் புடையார் எனினும் வலிபெய்து
தம்சார் பிலாதாரைத் தேசூன்றல் ஆகுமோ
மஞ்சுசூழ் சோலை மலைநாட யார்க்கானும்
அஞ்சுவார்க் கில்லை யரண். 685

**குறிப்புரை :**

வலிய துணைவரைப் பெறினும் தாம் வலியராய் இல்லையாயின் அவரைப் புகழ் வந்தடையாது. அஞ்சுவார்க்கு அரண் இல்லை.
தேசு – புகழ் அரண் = பாதுகாப்பு.

4 அருவிலை மாண்கலனும் ஆன்ற பொருளும்
திருவுடைய ராயின் திரிந்தும் வருமால
பெருவரை நாட பிரிவின் றதனால்
திருவினும் திட்பமே நன்று. 686

[பழமொழி]

**குறிப்புரை :**

அரியகலன்களும் பொருளும் இழப்பினும் ஊக்கமுடையார்க்கண் அவைமீண்டும் வரும். ஆதலின் செல்வத்தைக் காட்டிலும் ஒருவர்க்கு ஊக்கமுடைமையே சிறந்தது.

திரு என்பது ஈண்டு ஊக்கமுடைமையை. திரிந்தும் = மீண்டும்
திட்பம் = ஊக்கம்.

[நேரிசை வெண்பா]

5 ஊக்கம் முரண்மிகுதி ஒன்றிய நற்சூழ்ச்சி
ஆக்கம் அவன்கண் அகலாவால்—வீக்க
நகப்படா வென்றி நலமிகு தாராற்
ககப்படா வில்லை யரண். 687

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

ஊக்கமுடையவர்பால் வென்றிதானேவரும் என்பது.

முரண் = அஞ்சாமை சூழ்ச்சி = ஆராய்ச்சி அரண் = மதில்,

[ஆசிரியப்பா]

6 விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி உள்ளதம்
வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு
இயைந்த கேண்மை இல்லா கியரோ
கடுங்கண் வேழம் இடம்பட வீழ்ந்தென
அன்றவண் உண்ணா தாகி வழிநாள்
பெருமலை விடரகம் புலம்பவேட் டெழுந்து
இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
உரனுடை யாளர் கேண்மை யொடு
இயைந்த வைகல் உளவா கியரோ. 688

[புறநானூறு]

**குறிப்புரை :**

வேந்தனே! எலிபோல்வாருடைய உறவைவிட்டுப் புலிபோல்வார் கேண்மையைப் பெறுவாயாக என்கிறது.

விளைபதம் = உணவுப்பொருள் விளையுள் வல்சி = உணவு அளை = வளை உளம் = ஊக்கம் வேழம் = யானை இடம்பட = இடப்பக்கத்தில் ஒருத்தல் = ஆண் யானை வலம்பட = வலப்பக்கத்தில் வீழுமாறு கொன்று உரன் = வலிமை இயைந்த பொருந்திய வைகல் = பொழுதுகள்.

**அதிகாரம்—24**

## தாளாண்மை

தாளாண்மையாவது : மேற்கொண்ட வினையின்கண் இடைவிடாத மெய்ம்முயற்சியை உடைமை. தாளாண்மை எனினும் ஆள்வினை எனினும் ஒரு பொருளேயாம்.

[இன்னிசை வெண்பா]

1 இனியாரும் இல்லாதார் எம்மின் பிறர்யார்
தனியேம்யாம் என்றொருவர் தாம்மடிதல் வேண்டா
முனிவில ராகி முயல்க முனியாதார்
முன்னிய செய்தாமை யில். 689

குறிப்புரை :

துணைபுரிவோர் இல்லையென வருந்தாமல் தன்கடமையைச் செய்வதில் ஊக்கமுடையார்க்கு அவர் கருதியதுவந்துஎய்தும் என்கின்றது.

இனியார் = அன்புடையர் மடிதல் = சோம்பியிருத்தல் இளிவு = வெறுப்பு முன்னியது = கருதியதொருபொருள்.

[நேரிசை வெண்பா]

2 வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளாண்மை யானும் வலியராய்த்—தாளாண்மை
தாழ்க்கும் மடிகோள் இலராய் வருந்தாதார்
வாழ்க்கை திருந்து தலின்று. 690

குறிப்புரை :

தனதுகுடியை உயர்த்தும் முயற்சியில்லாதார் வாழ்க்கை சிறப்படைதல்இல்லை என்கின்றது.

வேளாண்மை = பொருள் விளைவுசெய்தல் வெஞ்சமம் = கடும்போர் தாளாண்மை = முயற்சி தாழ்க்கும் = தாழ்வடையச் செய்யும் மடி = சோம்பல் வருந்தாதார் = முயலாதவர் திருந்தல் = சிறப்புறுதல்.

3 வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பில்
தூங்கும் எயிலும் தொலைத்தலான்—ஆங்கு
முடியுந் திறத்தால் முயல்கதாம் கூரம்பு
அடியிழுப்பின் இல்லை யரண். 691

[பழமொழி]

குறிப்புரை :

தொடித்தோள் செம்பியன் சினந்துமுயன்றதனுல் தூங்கெயில் வென்றிருந்தான் அதனுல் முயல்வோர் வெற்றி பெறுவர் என்கின்றது.

செம்பியன் – தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்னும் சோழமன்னன்.
விசும்பு – ஆகாயம் தூங்கெயில் = ஆகாயத்தில் உலவும் கோட்டை தொலேத்தான் – வென்றழித்தான்
அடியிழுப்பின் = வில் நாணில் வைத்து இழுப்பின்
அரண் – பாதுகாப்பு.

[இன்னிசை வெண்பா]

4 ஆடுகோ டாகி அதரிடை நின்றதூஉம்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலும் அன்ன தகைத்தே ஒருவன்தான்
தாழ்வின்றித் தன்னைச் செயின். 692

குறிப்புரை :

காற்றில் அசையும் இளையமரமும் முற்றினுல் யானையைக் கட்டும்படியான வலியகட்டுதறியாகும் அதுபோலத் தாளாண்மையால் ஒருவன் வலியனுகலாம் என்கின்றது.
ஆடுகோடு – காற்றில் அசையும் கிளை அதர் – வழி காழ் – வைரம் கந்து – கட்டும்தறி தகைத்து – தன்மைத்து.

[நேரிசை வெண்பா]

5 உறுபுலி ஊனிரை யின்றி ஒருநாள்
சிறுதேரை பற்றியுந் தின்னும்—அறிவினுல்
காற்ருெழில் என்று கருதற்க கையினுல்
மேற்ருெழிலும் ஆங்கே மிகும். 693

**குறிப்புரை :**

பெரிய இரைகிட்டாத போது வலியபுலியும் சிறிய தேரை யையும் உணவாகத்தின்றும் அதனால் இது சிறிய தொழில் என்று அதனைஇகழாமல் செய்யின் அவ்வூக்கமே மேன்மை யைத்தரும் என்கின்றது.

உறுபுலி = வலிய பெரியபுலி ஊனிரை = விலங்கு உணவு காற்றொழில் = அடிமைச்செயல் மிகும் = உயர்வளிக்கும்.

[இன்னிசை வெண்பா]

6 நல்ல குலமென்றும் தீய குலமென்றும்
சொல்லளவல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருளொன்றோ தவங்கல்வி ஆள்வினை
என்றிவற்றான் ஆகுங் குலம். 694

**குறிப்புரை :**

குலச்சிறப்பு என்பது தவம்முதலியவற்றான் எய்துவதாகும் என்கின்றது.

சொல்லளவு = வாயாற் சொல்லும்நிலை பொருளில்லை = பயனில்லை ஒண்பொருள் = சிறந்த செல்வம் ஆள்வினை முயற்சி.

7 கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப்
பைங்கூழ்ப்போல்
கேளாவ துண்டு கிளைகளோ துஞ்சும்
வாளாடு கூத்தியர் கண்போல் தடுமாறும்
தாளாளர்க் குண்டோ தவறு. 695

**குறிப்புரை :**

முயற்சிஉடையார்க்குக் குறைஉண்டாகாது என்கின்றது.

கோடாற்ற = கொள்ளும் அளவுமிக குளம் = ஏரி பைங்கூழ் = நெல்முதலியபயிர்கள் கேள் = சுற்றத்தார் ஈவதுண்டு = கொடுப்பதை உண்டு துஞ்சுப = சோம்பி யிருப்பார். கண்போல் = கண்விரைந்து சுழலுமாறு போல தாளாளர் = ஊக்கமுடையார் தவறு = வாழ்வுத்துன்பம்.

[நேரிசை வெண்பா]

8 இசையா தெனினும் இயற்றியோ ராற்றல்
அசையாது நிற்பதாம் ஆண்மை—இசையுங்கால்
கண்டல் திரையலைக்கும் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று. 696

[நாலடியார்]

**குறிப்புரை :**

செய்தற்கு அரியதாயினும் தளராமல் முயல்வதே ஆளுமை என்கின்றது.

அசையாது = மனம் சோர்வடையாமல் ஆண்மை = தாளாண்மை இசையுங்கால் = செய்வதற்கு எளிதாகிய போது கண்டல் = தாழை கானல் = கடற்கரை வாழாரோ = செய்து வாழமாட்டரோ.

[இன்னிசை வெண்பா]

9 கண்டதே செய்பவாம் கம்மியர்; உண்டெனக்
கேட்டதே செய்ப புலனுள்வார் வேட்ட
இனியவே செய்ப அமைந்தார் முனியாதார்
முன்னியவே செய்யுந் திரு. 697

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

கம்மியர் = பொற்கொல்லர் புலனுள்வார் = அறிவின் மிக்கவர் வேட்ட = விரும்பியன அமைந்தார் = செல்வத்தால் நிரம்பியவர் முனியாதார் = சோம்பி இராதவர் முன்னியவே = கருதியவற்றையே திரு = திருமகள்.

[கலிவிருத்தம்]

10 உள்ள முடையான் முயற்சிசெய ஒருநாளே
வெள்ளநிதி வீழும் விளையாத தனினிலை
தொள்ளைவுணர் வின்னவர்கள் சொல்லின் மடிகிற்பின்
எள்ளுநர்கட் கேக்கழுத்தம்போல இனிதன்றே 698

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை ;

ஊக்கமுடையான் முயன்றால் பெருநிதி தானேவரும் என்கின்றது.

உள்ளம் — ஊக்கம் வெள்ளநிதி = வெள்ளம் போன்ற பெருஞ்செல்வம் மடிகிற்பின் = சோம்பியிருப்பின் எள்ளுநர் = நகைத்து இழிவுரை சொல்வோர் ஏக்கழுத்தம் = வலிமை.

அதிகாரம்—25

## இடுக்கணழியாமை

இடுக்கண் அழியாமையாவது: வினையின்கண் முயலும் ஒருவன், விதிப்பயனுலேவோ, பொருளின்மையாலோ மெய்வருத்தத்தாலோ தனக்கு இடையூறு வருமாயின் அதற்கு வருந்தி மனங் கலங்காமல் இருத்தலாம்.

[நேரிசை வெண்பா]

1 நனியஞ்சத் தக்கவை வந்தக்கால் தங்கண்
துனியஞ்சார் செய்வ துணர்வரர்—பனியஞ்சி
வேழம்பிடி தழூஉம் வேய்சூழ் மலைநாட!
ஊழம்பு வீழா நிலத்து. 699

[பழமொழி]

குறிப்புரை :

இடுக்கணுக்கு அஞ்சாதவர் ஊழான் வருந்துன்பத்தைக்கண்டு அஞ்சமாட்டார் என்கின்றது.

நனி = மிகவும் துனி = துன்பம் செய்வது
உணர்வார் = செய்யத்தக்கவற்றை உணரும் அறிவுடையார்
பனி = குளிர் வேய் = மூங்கில் ஊழம்பு = விதியாகிய அம்பு.

[அறுசீர் விருத்தம்]

2 விலங்கிவில் லுமிழும் பூணான்
விழுச்சிறைப் பட்ட போழ்து
மலங்கலந் தாரி னான்வந்
தருஞ்சிறை விடுத்த போழ்தும்
புலம்பலும் மகிழ்வும் நெஞ்சிற்
பொலிதலும் இன்றிப் பொன்னார்ந்
துலங்கலந் துயர்ந்த தோளான்
ஊழ்வினை என்று விட்டான். 700

குறிப்புரை :

விலங்கிவில்லுமிழும் பூணான் என்றது சீவகனை.

தாரினான் = தேவன் புலம்பல் = துன்பம் உலம் = திரண்டகல் இரண்டும் ஊழ்வினை என எண்ணி இருந்தான்.

3 இடுக்கண்வந் துற்ற காலை
எரிகின்ற விளக்குப் போல
நடுக்கமொன் றானு மின்றி
நகுகதாம் நக்க போழ்தவ்
இடுக்கணை அரியும் எஃகாம்
இருந்தழு தியாவ ருய்ந்தார்
வடுப்படுத் தென்னை யாண்மை
வருபவந்து துறங்க ளன்றே. 701

குறிப்புரை :

துன்பம் வந்துற்றபோது அதனை எள்ளிநகைத்து விடுக்க என்கின்றது.
ஒன்றுனுமின்றி சிறிதுமின்றி அரியும்ஃகம் அதனை அழிக்கும் கருவியாகும் அழுதலாற் பயனில்லை வருவது வந்தேதீரும் என்பது.

4 சாதலும் பிறத்தல் தானும்
தம்வினைப் பயத்தி னாகும்
ஆதலும் அழிவும் எல்லாம்
அவைபொருட் கியல்பு கண்டாய்
நோதலும் பரிவும் எல்லாம்
நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய்
பெய்வளைத் தோளி என்றான். 702

குறிப்புரை :

சாதலும் பிறத்தலும், ஆதலும், அழிதலும், பொருளியல்பாகும் அதற்காக நோதலும் பரிதலும் அறிவின்மையான் நிகழ் வதாகும் எனச் சச்சந்தன் கூறினான்.

5 பிரிந்தவர்க் கிரங்கிப் பேதுற்
றழுதநங் கண்ணி னீர்கள்
சொரிந்தவை தொகுத்து நோக்கின்
தொடுகடல் வெள்ள மாற்றா
முரிந்தநம் பிறவி மேனாள்
முற்றிழை இன்னும் நோக்காய்
பரிந்தழு வதற்குப் பாவாய்
அடியிட்ட வாறு கண்டாய். 703

குறிப்புரை :

சீவகனைப்பிரிந்து வருந்தும் பதுமையிடத்துத் தோழி கூறுவது.
முரிந்த = சென்று கழிந்த அடியிட்டவாறு = தொடங் கியவாறாகும்.

6 மயற்கையிம் மக்கள் யோனிப்
பிறத்தலும் பிறந்து வந்தீங்
இயற்கையே பிரிவு சாதல்
இமைப்பிடைப் படாத தொன்றால்
கயற்கணின் அளவுங் கொள்ளார்
கவற்சியுட் கவற்சி கொண்டார்
செயற்கையம் பிறவி நச்சுக்
கடலகத் தழுந்து கின்றார். 704

**குறிப்புரை :**

இதுவும் அது.
மயற்கை = மயக்கம் கவற்சி = கவலை கவலையுறுவார்
பிறவியாகிய நச்சுக்கடலில் அழுந்துவோராவர்.

7 பிறங்கின கெடுங்கள் யாவும்
புணர்ந்தவர் பிரிவர் பேசின்
இறங்கின வீழும் மேலாய்
ஓங்கிய எண்ணில் யோனிப்
பிறந்தவர் சாவர் செத்தார்
பிறப்பவே, என்ன நோக்கிக்
கறங்கிசை வண்டு பாடும்
கோதைநீ கவல லென்றான். 705

**குறிப்புரை :**

கேமசரியிடம் தோழிகூறும் கூற்று.
பிறங்கின = மேலாகவளர்ந்தவை பிரிவர் = சாவர்
கறங்கிசைவண்டு = சுழன்று இசைக்கும் வண்டுகள்
நீகவலல் = நீ கவலையுறாதே.

8 தொல்லைநம் பிறவி எண்ணின்
தொடுகடல் மணலும் ஆற்ரு
எல்லைய அவற்று ளெல்லாம்
ஏதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிகள் தம்முள்
சேரலஞ் சேர்ந்து நின்ற
இல்லினுள் இரண்டு நாளைச்
சுற்றமே இரங்கல் வேண்டா. 706

**குறிப்புரை :**

சச்சந்தன் விசயையிடம் கூறியது.

தொடுகடல் = ஆழமானகடல் ஆற்ரு = அளவிடற்கு ஒவ்வா எல்லைய = அளவின ஏதிலம் = வேறு பட்டோம் சேரலம் சேரமாட்டோம் இல்லினுள் = இவ்வாழ்வில் சுற்றமே = உறவே ஆதலின் வருந்த வேண்டா.

9 அன்பினி னவலித் தாந்ருது
அழுவதும் எளிது நங்கள்
என்பினின் ஆவி நீங்க
இறுவதும் எளிது சேர்ந்த
துன்பத்தால் துகைக்கப் பட்டார்
துகைத்தவத் துன்பந் தாங்கி
இன்பமென் றிருந்தல் போலும்
அரியதிவ் வுலகி லென்ருன். 707

**குறிப்புரை :**

இது பதுமையாரிடத்துத் தோழி கூறியது அன்பு காரணமாகத் துன்புற்று அழுவதும் எளிது இறப்பதும் எளிது துன்பத்தைத் தாங்கிஅதனையும் இன்பமாகக் கருதிப் பொறுத்திருத்தல் அரியது என்பது கருத்து.

10 மன்னுநீர் மொக்கு ளொக்கும்
மானிடர் இளமை இன்பம்
மின்னினைத் திறக்கும், செல்வம்
வெயிலுறு பனியின் நீங்கும்
இன்னிசை யிரங்கும் நல்யாழ்
இளியினும் இனிய சொல்லாய்
அன்னதால் வினையி னாக்கம்
அழுங்குவ தென்னை யென்றாள். 708

குறிப்புரை :

இது கேமசரியாரிடம் தோழிகூறியது. இளமை நீர்க்குமிழியை ஒக்கும் இன்பம் மின்னலை ஒக்கும் செல்வம் வெயில்கண்ட பனியை ஒக்கும் ஆதலின் வருந்துவதாற் பயனில்லை என்றாள்.

அழுங்குதல் = துன்புறுதல்.

11 தேன்சென்ற நெறியும் தெண்ணீர்ச்
சிறுதிரைப் போர்வை போர்த்து
மீன்சென்ற நெறியும் போல
விழித்திமைப் பவர்க்குத் தோன்றா
மான்சென்ற நோக்கின் மாதே
மாய்ந்துபோம் மக்கள் யாக்கை
ஊன்சென்று தேயச் சிந்தித்து
உருவதே தருவ தென்றான். 709

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை :

இது பதுமையாரிடத்துத் தோழிகூறியது. வண்டு பறந்து சென்றவழியும் மீன் நீந்திச்சென்ற வழியுக் தோன்றாமை போல மக்கள்யாக்கையும் போய்விடும் ஆதலின் உடம்பு நோவ உள்ளம் உருகுவது வேண்டா என்றான்.

[கலிவிருத்தம்]

12 மறிப மறியுமால் இறுப விறுமே
பெறுப பெறும்பெற் றிழப்ப விழக்கும்
அறிவ தறியார் அங்கா குவவார்
உறுவ துறுமென் றுரைப்ப நன்று. 710

**குறிப்புரை :**

மாறுவனமாறும் அழிவன அழியும், பெறுவன பெறும் இழப்பன இழக்கும் இவற்றை அறியாதவர் மனஅமைதியுறார் வருவன வந்தேதீரும் என்பதாம்.

[அறுசீர்விருத்தம்]

13 மதியினை மலரச் சூழ்ந்து
வருந்தித்தாம் படைக்கப் பட்ட
நிதியினை நுகர்வ லென்று
நினைத் தினிதிருந்த போழ்தின்
பதியினைக் கலக்கிச் சென்று
பறித்தயல் பிறர்க்கு நீட்டும்
விதியினை விலக்க மாட்டா
மெலிபவே எளிய நீரார். 711

[சூளாமணி]

**குறிப்புரை :**

மனத்திட்பமில்லாதார் ஊழினைப் புறங்காணார் என்கின்றது.

மலரச்சூழ்ந்து = விரிவாக ஆராய்ந்து நிதி = செல்வம்
நுகர்வல் = துய்ப்போம் பதி = இருப்பிடம்
பறிந்து = நீங்கி நீட்டும் = சென்று சேரும்
மெலிப = துன்புறுவார்.

[கலித்துறை]

14 வேரிக் கமழ்தா ராசன் விடு கென்ற போழ்தும்
தாரித்த லாகா வகையாற் கொலை சூழ்ந்த பின்னும்
பூரித்தல் வாடுதல் என்றி வற்றால் பொலிவின்றி
நின்றான்
பாரித்த தெல்லாம் வினையின் பயன் என்ன
வல்லான். 712

[குண்டலகேசி]

**குறிப்புரை :**

நிகழ்வன ஊழ்வினையின் பயனென்றுகருதிக் கொள்ளுங்கள். அச்சமின்றி இருங்கள் என்கின்றது.

வேரி = தேன் தாரித்தல் = தங்கியிருத்தல்
பூரித்தல் = மகிழ்தல் வாடுதல் = துன்புறுதல்
பாரித்தது = விளைந்தது.

[எழுசீர்விருத்தம்]

15 எய்த இன்னல் வந்த போழ்தில்
யாவ ரேனும் யாவரும்
செய்ய வல்ல ரென்று கொள்க
செந்நெ றிக்கண் ஏகிட
மைய கண்ணி செய்ய பாதம்
வல்ல வாய மற்றிவன்
கைக ளின்று பன்ன சாலை
கட்ட வல்ல வாயவே. 713

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

எய்த = நிரம்ப இன்னல் = துன்பம்
செந்நெறி = தூயவழி பன்னசாலை = தவக்குடில்
வல்லவாய = வன்மையுடையனவாயின.

## அதிகாரம்—26

# அமைச்சு

அமைச்சாவது : நாடாளும் வேந்தற்கு இன்றியமையாத உறுப்புக்களுள் சிறந்த உறுப்பாகிய அமைச்சனது தன்மை. அமைச்சன் அரசனுக்கு இணையாய பொறுப்புடையவனாதலின் அவனுக்கு வேண்டிய குணங்களையும் செயல்களையும் இவ்வதிகாரம் கூறுகின்றது.

[இன்னிசை வெண்பா]

1 ஐயறிவும் தம்மை அடைய ஒழுகுதல்
எய்துவது எய்தாமை முன்காத்தல் வைகலும்
மாறேற்கும் மன்னர் நிலையறிதல் இம்மூன்றும்
வீறுசால் பேரமைச்சர் கோள். 714

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

ஐயறிவு = ஐம்புலன்களான் அரியும் அறிவு
எய்துவது - அடையவருவது வைகலும் நாள்தோறும்
மறேற்கும்மன்னர் - பகைமன்னர் கோள் = கொள்கை.

[நேரிசை வெண்பா]

2 குடியோம்பல் வன்கண்மை நூல்வன்மை கூடம்
மடியோம்பும் ஆற்றலுடைமை—முடிஓம்பி
நாற்றம் சுவை கேள்வி நல்லாரினஞ்சேர்தல்
தேற்றுங்கால் தேறும் அமைச்சு. 715

[ஏலாதி]

**குறிப்புரை :**

ஓம்பல் = காத்தல் வன்கண்மை = அஞ்சாமை
நூல்வன்மை - அரசியல் நூல்களிற்புலமை
கூடம் = இரகசியம் மடி = சோம்பல்
ஓம்பும்ஆற்றல் - வாராமைக்காத்தல்
தேறும் - தெளிவுகொள்ளும்.

3 தன்னிலையும் தாழாத்தொழில் நிலையும் துப்பெதிர்ந்தார்
இன்னிலையும் ஈடில் இயல்நிலையும்—துன்னி
அளந்தறிந்து செய்வான் அரைசு அமைச்சன்யாதும்
பிளந்தறியும் பேராற்றலான். 716

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை :

துப்பெதிர்ந்தார் = வலிமையால் எதிர்ப்போடுவந்தார்
ஈடில் = ஒப்பில்லாத துன்னி = நெருங்கி
பிளந்தறியும் = பகுத்தறியும்.

4 செறிவுடைத்தார் வேந்தன் செவ்விமாறுமல்
அறிவுடையார் அவ்வியமும் செய்ப—வறிதுரைத்துப்
பிள்ளை களைமருட்டுந் தாயார்போல் அம்புலிமேல்
ஒள்ளிய காட்டாளர்க் கரிது. 717

குறிப்புரை ;

செவ்வி செம்மைநலம் அவ்வியம் = வஞ்சம்
வறிதுரைத்து = பொய்கூறி காட்டு = மேற்கோள்
ஆளர்க்கு = ஆளும் அரசர்க்கு அரிது = அரிய
செயலாகும்.

[இன்னிசை வெண்பா]

5 உலப்பில் உலகத் துறுதியே நோக்கிக்
குலைத்தடக்கி நல்லறங் கொள்ளார்க் கொளுத்தல்
மலைத்தழு துண்ணாக் குழவியைத் தாயர்
அலைத்துப்பால் பெய்து விடல். 718

[பழமொழி]

குறிப்புரை :

உலப்பில் = அழிவில்லாத உறுதி = நன்மை
குலைத்து தடுத்து கொள்ளார்க் கொளுத்தல் கொள்ளாத
வரை அறிவுறுத்தல் அலைத்து – வருத்தி
பெய்தல் = உண்பித்தல்.

[அறுசீர்விருத்தம்]

6 வடந்தவழ் முலையி னார்தம்
காமத்தின் மதர்த்த மன்னர்க்கு
அடைந்தவர் மாண்பும் ஆங்கோன்
நிலையேல் அரசர் வாழ்க்கை
கடந்தவழ் கடாத்த வேழம்,
களித்தபின் கல்வி மாணு
மடந்தவ ழொருவன் மேற்கொண்
டன்னதோர் வகை யிற்றுமே. 719

**குறிப்புரை :**

காமத்தால் மயங்கித் தன்கடமை செய்யத்தவறும் மன்னனை யானைப் பாகனைப்போல அமைச்சன் அடக்கி வழிப்படுத்துதல் வேண்டும் என்கின்றது

மதர்த்த = செருக்கிய மாண்பு = மாட்சிமைப்பட்ட குணம் கடம் = மதநீர் வேழம் = யானை கல்விமாணு = யானை நூற்கல்வி நிரம்பா வகையிற்றும் = தன்மைத்தாகும்.

[கலிவிருத்தம்]

7 தன்னுணர் பொறிப்புலன் பிறர்கண் கூட்டென
இன்னணம் இருவகைத் திறைவர் வாழ்க்கைதான்
தன்னுணர் பொறிப்புலன் தன்னி னுய்பிறிது
இன்னணம் இயற்றுகென் றமைச்சர் ஏவுவார். 720

**குறிப்புரை :**

அரசனை நல்வழியிற் செலுத்துவோரே அமைச்சர் என்கின்றது.

பொறி = மெய்வாய்கண் மூக்கு செவி இறைவர் = அரசர் ஏவுவார் = செலுத்துவார்,

[அறுசீர்விருத்தம்]

8 விங்குநீர் உலகங் காக்கும்
விழுநுக மொரு வனுலே
தாங்கலாந் தகைமைத் தன்று
தளையவீழ் தயங்கு தாரீர்
பாங்கலார் பணியச் சூழும்
நூல்வலார் பாக மாகப்
பூங்குலாம் அலங்கல் மாலைப்
புரவலன் பொறுக்கு மன்றே. 721

**குறிப்புரை :**

அமைச்சரது துணையால் அரசன் அரசியற் பாரத்தை தாங்குவான் என்கின்றது.

நீர் - கடல் நுகம் = தாங்கும்நிலை பாங்கலார் = பகைவர்
நூல்வலார் = அமைச்சர் புரவலன் = அரசன்
பொறுக்கும் = தாங்கும்,

9 எடுத்தனன் இலங்கு சாதி
எழிலொடு திகழு மேனும்
மடுத்தன நிறத்த தாகும்
அணிகிளர் பளிங்கு போல
மடுத்தவம் மணந்த நுண்ணூல்
மதியவர் வினையின் மாட்சி
கொடுத்தவாம் நிலைமை மன்னர்
குணங்களாக் கொள்ப வன்றே. 722

[சூளாமணி]

**குறிப்புரை :**

அரசர்க்குவரும் சிறப்புக்கட்குக் காரணம் அமைச்சர்களே என்கிறது.

மடுத்தன = தன்னுள் அடக்கிக்காட்டும் பொருள்
பளிங்கு = பளிங்கு மணிபோல மதியவர் = அமைச்சர்
கொடுத்தவாம் = கொடுக்கப்பட்டனவாகும்.

[கலிவிருத்தம்]

10 தண்ணிய தடத்தவே யெனினும் தாமரை
விண்ணியல் கதிரினால் விரியும் வேந்தரும்
புண்ணியப் பொதும்பரே பொருந்தி வைகினும்
கண்ணிய புலவரால் அலர்தல் காண்டுமே. 723

**குறிப்புரை :**

இதுவுமது :

தடம் = நீர்நிலை கதிர் = சூரியன்
புண்ணியப்பொதும்பர் = நல்வினையாகிய சோலை
வைகினும் = தங்கியிருப்பினும் புலவர் = இங்கே அமைச்சர்
அலர்தல் = விளக்கமுறுதல் காண்டும் = காண்கிறோம்.

[அறுசீர்விருத்தம்]

11 சுற்றுந்தின் றெரியும் செம்பொன்
மணிமுடி சுடரச் சூடி
வெற்றிவெண் குடையி னீழல்
வேந்தன்வீற் றிருக்கு மேனும்
மற்றவன் மனமும் கண்ணும்
வாழ்க்கையும் வலியும் சால்பும்
அற்றமில் புகழும் கோலும்
ஆயவர் அமைச்ச ரன்றே. 724

**குறிப்புரை :**

சுற்றுநின்றெரியும் சோதி = சூழ்ந்து பரவும் ஒளி
சால்ப்பு = நிறைகுணம் அற்றம் = தவறு
கோல் = செங்கோல் ஆபவர் = ஆகிநிற்பவர்.

12 அற்றமின் றுலகங் காக்கும்
அருந்தொழில் புரிந்து நின்றான்
கற்றவர் மொழிந்த வாறு
கழிப்பது கடன தாகும்
மற்றவர்க் குறுதி நோக்கி
வருபழி வழிகள் தூரச்
செற்றவர்ச் செருக்கும் சூழ்ச்சி
தெருண்டவர் கண்ட தன்றே. 725

குறிப்புரை :

அற்றமின்று = சோர்வின்றி கற்றவர் = அமைச்சர்கள்
வழிகள்தூர = வரும் வழிகள் அழிய சென்றவர் = பகைவர்
செருக்கும் = அழிக்கும் சூழ்ச்சி = உபாயம்.

13 செறிந்தவர் தெளிந்த நூலார்
சிறந்தன தெரிந்து சொன்னால்
அறிந்தவை யமர்ந்து செய்யும்
அமைதியான் அரசனு வான்
செறிந்தவர் தெளிந்த நூலார்
செறிந்தன தெரிந்து கூறி
அறிந்தவை ஆற்ற கிற்கும்
அமைதியான் அமைச்ச னுவான். 726

குறிப்புரை ;

செறிந்தவர் = நற்குணங்களான் நிறைந்தவர்
தெரிந்து = ஆராய்ந்து அமர்ந்து = விரும்பி
அமைதியார் = தன்மையுடையவர்.

14 சுந்தரச் சுரும்புண் கண்ணிச்
சூழ்கழல் அமைச்சர் வாழ்க்கை
தந்திர மறிந்து சூழ்வான்
சூழ்ச்சிய தமைதல் வேண்டும்
மந்திரம் வழுவு மாயின்
வாளெயிற் றரவு காய்ந்து
தந்திரந் தப்பினாற் போல்
தன்னையே தாழ்க்கு மன்றே. 727

**குறிப்புரை :**

சுரும்பு = வண்டு தந்திரம் = அரசியல் நூல்கள்
சூழ்வான் ஆராய்பவனாகிய அமைச்சன்
சூழ்ச்சி = ஆலோசனை வழுவுமாயின் = தவறினால்
அரவு = பாம்பு காய்ந்து = தீண்டி தன்னையே
தாழ்க்கும் = ஆட்சியையே அழித்துவிடும்.

[கலிவிருத்தம்]

15 மாலமர் நெடுங்கடல் மதலை யாசிலாக்
காலமைந் தொழுகுமேற் கரையுங் காணுமே
நூலவர் நுழைவொடு நுழைந்து செல்வரேல்
வேலவர் ஒழுக்கமும் வேறல் நண்ணுமே. 728

[சூளாமணி]

**குறிப்புரை :**

மாலமர் நெடுங்கடல் = திருமால் உறையும் நெடிய கடல்
மதலை = மரக்கலம் கால = காற்று நூலவர் = அமைச்சர்
நுழைவு = சூழ்ச்சி வேலவர் = வேலைத்தாங்கிய அரசர்
வேலைகாணும் = வெற்றிக்கரையை அடையும்.

16 நீதி யாலறுத் தந்திதி யீட்டுதல்
ஆதி யாய அரும்பகை நாட்டுதல்
மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்
பேது செய்து பிளந்திடல் பெட்டதே. 729

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை :

அறுத்து = ஆறிலொருகூறு என்றாற்போல வகுத்து. நாட்டுதல் நெஞ்சில் நிறுத்துதல் முட்பகை கண்டிடல் = முள்ளை முள்ளால் களைவதுபோலப் பகைவருள் ஒருவரைக் கொண்டு ஒருவரை அழித்தல் பேதுசெய்து = பகைவருடைய நாட்டினரை வேறுபடுத்தி பிளந்திடல் = பிரித்தல் பெட்டது = அரசர் விரும்புவது.

17 ஆயிரங் கதிருடை யருக்கன் பாம்பினால்
ஆயிரங் கதிரொடும் விழுங்கக் கண்டுகொல்
ஆயிரங் கண்ணுடை யமரர் கோனுமோர்
ஆயிரம் அமைச்சர்சொல் வழியி னயதே. 730

[சாந்தி புராணம்]

குறிப்புரை :

அருக்கன் = சூரியன் பாம்பு = இராகு கொல் = போலும் அமரர்கோன் = இந்திரன் இந்திரனுக்கு அமைச்சர் ஆயிரவர் என்றவாறு.

[அறுசீர் விருத்தம்]

18 உற்றது கொண்டு மேல்வந்
துறுபொருளுணருங் கோளார்
மற்றது வினையின் வந்த
தாயினும் மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேண்மைப்
பெரியவர் அரிய நூலும்
கற்றவர் மானம் நோக்கிற்
கவரிமா அனைய நீரார். 731

குறிப்புரை :

உற்றது = வத்து அடைந்தது கோளார் = கொள்கையுடையார் வினை = ஊழ்வினை மாற்றலாற்றும் = மாறச் செய்யும் பெற்றியர் - இயல்பினர் மானம் = தன்மானம் நீரார் = தன்மையுடையவர்.

19 தம்முயிர்க் குறுதி யெண்ணார்
　　தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
　　விடாதுநின் றுரைக்கும் வீரர்
செம்மையிற் றிறம்பல் செல்லாத்
　　தேற்றத்தார் தெரியுங் காலம்
மும்மையும் உணர வல்லார்
　　ஒருமையே மொழியும் நீரார். 732

**குறிப்புரை :**

உறுதி = காக்கும் கருத்து　தலைமகன் = அரசன்
வெம்மை = சினம்　தேற்றத்தார் - மனத்தெளிவுடையார்
ஒருமை = வாய்மை.

[கலிவிருத்தம்]

20 நல்லவுந் தீயவும் நாடி நாயகற்
கெல்லையில் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்
ஒல்லைவந் துறுவன உற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென உதவும் சூழ்ச்சியார். 733

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

நாடி = ஆராய்ந்து　நாயகற்கு = அரசனுக்கு
இயல்பின் = தன்மையைப்போல　ஒல்லை = விரைந்து
தொல்லை = முற்பிறப்பு　நல்வினை = புண்ணியம்
சூழ்ச்சி = மந்திராலோசனை.

அதிகாரம்—27

# சொல் வன்மை

சொல் வன்மையாவது : தான் கருதிய வினை நன்கு முடியும் முறைமையில் அமைச்சியல் நடத்தற்கும் பிற இனிது நிகழ்தற்கும் ஏதுவாகிய சொற்களைத் தேர்ந்து சொல்லும் வலிமைத் திறமாம்.

[நேரிசை வெண்பா]

1 கேட்பாரை நாடிக் கிளக்கப் படும்பொருட்கண்
வேட்கை யறிந்துரைப்பார் வித்தகர்—வேட்கையால்
வண்டு வழிப்படரும் வாட்கண்ணாய் தோற்பன
கொண்டு புகாஅர் அவை. 734

**குறிப்புரை :**

கிளக்கப்படும் பொருட்கண் சொல்லப்படும் கருத்துக்களின் பால் வித்தகர் = பேரறிவுடையார் புகாஅர் = பேசுதற்குச் செல்லார் அவை = அரசவை முதலிய மன்றம்.

[இன்னிசை வெண்பா]

2 நல்லவும் தீயவும் நாடிப் பிறருரைக்கும்
நல்ல பிறவும் உணர்வாரைக் கட்டுரையின்
வல்லீதின் நாடி வலிப்பதே புல்லத்தைப்
புல்லம் புறம்புல்லு மாறு. 735

**குறிப்புரை ;**

கட்டுரையின் = அறிவுறுத்துஞ் சொல்லினாலே வலிப்பது = வயப்படுத்துதல் புல்லம் = ஆனினம் புல்லுமாறு = தழுவிக்கொள்ளுதலைப் போன்றதாகும்.

[நேரிசை வெண்பா]

3 துன்னி இருவர் தொடங்கிய மாற்றத்தில்
பின்னை உரைக்கற் பாலான்—முன்னி
மொழிந்தான் மொழியறியான் கூறல் முழந்தாள்
கிழிந்தானை மூக்குப் பொதிவு. 736

**குறிப்புரை :**

துன்னி = நெருங்கியிருந்து. மாற்றம் = உரையாடல். பின்னை உரைக்கற்படற் பாலான் = பின்னர்ப் பேசுபவன் முன்னைமொழிந்தான் = முதற்கண் பேசியவன் மொழியறி யான் கூறல் - அவன் எழுப்பிய கருந்தறியாது தானென்று கூறுதல். முழந்தாள் இழிந்தானை மூக்குப்பொதிவு = முழங்காற் புண்ணுக்கு மூக்கினைக் கட்டுவதோடு ஒக்கும்.

[இன்னிசை வெண்பா]

4 ஒருவர் உரைப்ப உரைத்தால் அதுகொண்டு
இருவர் ஆவாரும் எதிர்மொழியற் பாலா
பெருவரை நாட சிறிதேனும் இன்னாது
இருவர் உடனாடல் நாய். 737

**குறிப்புரை :**

ஒருவர் கூற்றுக்கு இருவர் மறுமொழிகூறுதல் ஒருநாயை வேட்டைக்கு இருவர் ஒரேகாலத்தில் பயன்படுத்துவதோடு ஒக்கும் என்கின்றது.

ஆடல் = வேட்டையாடல்.

5 மாற்றத்தை மாற்றம் உடைந்தலான் மாற்றவர்க்கு
ஆற்றும் வகையான் அவர்க்களைய வேண்டுமே
வேற்றுமை யார்க்கும்உண் டாதலான் ஆற்றுவான்
நூற்றுவரைக் கொண்டு விடும். 738

[பழமொழி]

**குறிப்புரை :**

சொற்களைச் சொற்களே வெல்லுதலான் பகைவரை அவர் கொண்ட கருவியாலேயே வெல்லவேண்டுமென்கிறது.

ஆற்றுவான் = ஆற்றலுடையவன் நூற்றுவரைக்கொண்டு விடும் = நூறுபேர் வலிமையைக் கொள்வான் என்பதாகும்.

[நேரிசை வெண்பா]

6 விரைந்துரையார் மேன்மேலுரையார் பொய்யாய
பரந்துரையார் பாரித்துரையார்—ஒருங்கெனைத்தும்
சில்லெழுத்தினனே பொருளடங்கக் காலத்தால்
சொல்லுக செவ்வி யறிந்து. 739

[ஆசாரக் கோவை]

**குறிப்புரை :**

காலமும் செவ்வியும் அறிந்து பேசவேண்டும் என்கின்றது விரைந்தும் மேன்மேலும் பேசற்க பொய்யுரையாமல் விரித் துரையாமல் சில எழுத்தினால் சுருங்க உரைக்க என்பது. கருத்து.
பாரித்து = மிகவிளக்கி செவ்வி = தக்க சமயம்.

7 மயிர்வனப்பும் கண்கவரும் மார்பின் வனப்பும்
உகிர் வனப்பும் காதின் வனப்பும்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு. 740

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

ஒருவற்கு நூலொடு பொருந்திய சொல்வன்மையே பேரழகாகும் என்கிறது.
உகிர் = நகம் செயிர்தீர்ந்த = குற்றம் நீங்கிய
வனப்பு = அழகு.

8 சாவ தெளி தரிது சான்றாண்மை நல்லது
மேவல் எளி தரிது மெய்போற்றல்—ஆவதன்கண்
சேறல் எளிது நிலை யரிது தெள்ளியராய்
வேறல் எளிது அரிது சொல். 741

[ஏலாதி]

குறிப்புரை :

இவைஎளியவை இவை அரியவை என்கின்றது.
சாவது-நல்லதை விரும்புதல்-ஆகுமிடத்துச் சேர்தல் அறிவினால் வெற்றியடைதல் இவை எளியனவாகும். சான்றாண்மையுடையராதல்-வாய்மையைப்போற்றல் ஒரு நிலையில் நிற்றல் சொல்வன்மையைப் போற்றல் சொல்வன்மை பெறுதல் இவை அரியனவாம்.
மேவல் = விரும்புதல் சேறல் = சென்றடைதல்
சொல் = சொல்வன்மை.

9 நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா
வெண்மொழி வேண்டினும் சொல்லாமை
—நன்மொழியைச்
சிற்றின மல்லார்கண் சொல்லலும் இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன். 742

குறிப்புரை :

கற்றவர் என்பாரது பேச்சு இத்தகையது என்கின்றது.
நுண்மொழி = நுட்பமாக அமைந்த சொல் வெண்மொழி பொருளில்லாத வறும்சொல் சிற்றினமல்லார் = மேலோர் கடன் = கடப்பாடாகும்.

10 பொழிப்பகலம் நுட்பம் நூலெச்சம் இந்நான்கின்
கொழித்தகலங் காட்டாதார் சொற்கள்—பழிப்பில்
நிரையாமா சேக்கும் நெடுங்குன்ற நாடா
உரையாமோ நூலிற்கு நன்கு. 743

[நாலடியார்]

குறிப்புரை :

நூலின்உரை இவ்வாறு அமைதல் வேண்டுமென்கிறது.
பொழிப்பு = சொற்பொருளைத் தொகுத்துக்கூறல்
அகலம் = விரித்துக்கூறல் எச்சம் = எஞ்சிமறைந்து நிற்பவை. பழிப்பில் = குற்றமில்லாத ஆமா = காட்டுப் பசுக்கள் சேக்கும் = தங்கியிருக்கும்.

[பஃறொடை வெண்பா]

11 சொல்லுங்காற் சொல்லின் பயன்காணும் தான்பிறர்
சொல்லிய சொல்லை வெலச் சொல்லும், பல்லார்
பழித்த சொல் தீண்டாமல் சொல்லும், விழுத்தக்க
கேட்டார்க் கினியவாச் சொல்லானேல் பூக்குழலாய்
நல்வய லூரன் நறுஞ்சாந் தணியகலம்
புல்லலின் உடை லினிது. 744

[தகடூர் யாத்திரை]

குறிப்புரை :

பயன்காணும் = பயனைத்தெரிந்துகொள்ளும்
தீண்டாமல் = எடுத்துச்சொல்லாமல் விழுத்தக்க = மேன்மை
யுடையவை. அணியகலம் = அழகிய மார்பு
புல்லலின் = தழுவிக்கொள்வதினும் ஊடல் = புலவி
கொள்ளுதல் இனிது = நல்லது.

அதிகாரம்—28

## வினைசெயல் வகை

வினைசெயல் வகையாவது: வினைத் தூய்மையும் வினைத் திட்பமும் உடையான் அவ்வினையைச் செய்யுந் திறம்.

[நேரிசை வெண்பா]

1 மறையா தினிதுரைத்தல் மாண்பொரு ளீதல்
அறையான் அகப்படுத்துக் கோடல்—முறையால்
நடுவணுச் சென்றவரை நன்கெறிதல் அல்லால்
ஒடியெறியத் தீராப் பகை. 745

**குறிப்புரை :**

மறையாது = ஒளிக்காமல் மாண்பொருள் = சிறந்த செல்வம் அறையான் = சூழ்ச்சியால்
முறையால் = நீதியால் நடுவணுச்சென்று = நடுவுநிலை யொடுசென்று எறிதல் = வெல்லுதல்
ஓடியெறிய = தண்டனையைச் செய்வதனால்
தீராப்பகை = பகைதீராது.

[இன்னிசை வெண்பா]

2 தெள்ளி உணருந் திறனுடையார் தம்பகைக்கு
உள்வாழ் பகையைப் பெறுதல் உறுதியே
கள்ளினால் கள்ளறுத்தல் காண்டும் அதுவன்றே
முள்ளினால் முட்களையு மாறு. 746

**குறிப்புரை :**

தெள்ளி = ஆராய்ந்து உள்வாழ்பகை = பகைவருடைய பகைவர் பெறுதல் = தனக்குத் துணையாகக் கொள்ளல் உறுதி = வலிது அது கள்ளின் மயக்கத்தை பிறிதொரு கள்ளினால் மாற்றுவதையும் முள்ளைமுள்ளால் களைவதையும் ஒக்கும்.

[நேரிசை வெண்பா]

3 யானுமற் றிவ்விருந்த எம்முன்னும் ஆயக்கால்
ஈனம் செயக்கிடந்த தில்லென்று—கூனல்
படைமாறு கொள்ளப் பகைதூண்ட லஃதே
இடைநாய்க் கெலும்பிடு மாறு. 747

**குறிப்புரை :**

இருவர் பகையாயபொழுது ஒருவரை நட்பாக்கிக்கொள்ளல் கொள்ளையர் காவல் நாய்க்கு எலும்பினை வீசிவயப்படுத்துதல் போன்றதாகும் என்கின்றது.

எம்முனும் எனக்கு மூத்தவனாகிய இவனும் ஈனம் = தாழ்வு
கூனல்படை = குறுகி நிற்கும் பகைப்படை
பகைதூண்ட = பகைவருள் ஒருவரைத் தூண்டுதல்
இடைநாய் = நாய் இடையே என மாறிக்கொள்க.

4 தன்னலி கிற்பான் தலைவரின் தான்அவற்குப்
பின்னலி வானைப் பெறல் வேண்டும் —என்னதூஉம்
வாய்முன்ன தாக வலிப்பினும் போகாதே
நாய்பின்ன தாகத் தகர். 748

**குறிப்புரை :**

தன்னினும் வலியான் பகையானால் அவனினும் வலியானை அவனுக்குப் பகைவனாக்கவேண்டுமென்கின்றது.
நலிகிற்பான் = துன்புறுத்துபவன்
பெறல்வேண்டும் = நட்பாகக் கொள்ளவேண்டும்
போகாதே நாய் பின்னதாகத் தகர் = வேட்டை நாய் தனக்குப் பின்வரின் ஆடு அதற்கு முன்னாகப் போகாது அதுபோல என்றவாறும்.

[இன்னிசை வெண்பா]

5 ஆண முடைய அறிவினர் தந்நலம்
மானும் அறிவினவரைத் தலைப் படுத்தல்
மானமர்க் கண்ணாய்! மறங்கெழு மாமன்னர்
யானையால் யானையாத் தற்று. 749

**குறிப்புரை :**

ஆணம் = மனத்திட்பம் மானும் அறிவினவரை = தம்மையொத்த அறிஞர்களை தலைப்படுதல் = உறவாக்கிக் கொள்ளுதல் யானையால் யானையாத்தற்று = யானையைக் கொண்டு யானையைப் பிடித்தல் போன்றதாகும்.

[நேரிசை வெண்பா]

6 தெருளா தொழுகுந் திறனிலா தாரைப்
பொருளால் அறுத்தல் பொருளே-பொருள்கொடுப்பப்
பாணித்து நிற்கிற்பார் யாவருளர் வேல்குத்திற்கு
ஆணியின் குத்தே வலிது. 750

**குறிப்புரை :**

தெருளாது = தெளிவில்லாமல்  திறன் = வலிமை
பொருளால் அறுத்தல் = பொருளைக் கொடுத்துந் தன் வயமாக்குதல்  பாணித்து - காலந்தாழ்த்து. வேல்குத்திற்கு ஆணியின் குத்தேவலிது = வேலாற்குத்துதலைவிட ஆணியினால் (பொன்னால்) குத்துதல் வலிமையுடையதாகும் ஆணி என்பது பொன்னைக் குறிப்பாலுணர்த்தி நின்றது.

[இன்னிசை வெண்பா]

7 மெய்ந்நீர ராகி விரியப் புகுவார்க்கும்
பொய்ந்நீர ராகிப் பொருளை முடிப்பார்க்கும்
எந்நீரர் ஆயினும் ஆக அவரவர்
தந்நீரர் ஆதல் தலை. 751

[பழமொழி]

**குறிப்புரை ;**

பிறர்பால் காரியம் முடிப்போர் அவர் நீர்மையாரதல் சிறப்பு என்கின்றது.
மெய்ந்நீரர் = உண்மைவழி நின்று ஒழுகும் தன்மையர்
பொய்ந்நீரர் = பொய்வழி ஒழுகும் தன்வமயர்
அவரவர் = காரியம் முடிக்கவேண்டியவர்கள்.

8 சிறையில் கரும்பினைக் காத்தோம்ப லின்னா
உறைபழங் கூரை சேர்ந்தொழுக லின்னா
முறையின்றி ஆளும் அரசின்னா இன்னா
மறையின்றிச் செய்யும் வினை. 752

[இன்னாநாற்பது]

**குறிப்புரை :**

இன்னின்னவை துன்பமுடையவை என்கின்றது.
சிறையில் கரும்பு = வேலியின்றி விளைந்துள்ள கரும்பு
உறைபழங்கூரை = ஒழுகுங்கூரை வேய்த குடிசை
முறை = செங்கோன்மை, நீதி  மறை = இரகசியம்,

9 சூதினு ளுகத்தன் தோள்வலியாற் ருளுக
யாதினு ளுயினும்வந் தெய்துமேல்—தீதெள்ளிச்
சூழ்வாரைத் தாமுன்னஞ் சூழ்வதே மன்னராய்
வாழ்வாருக் குள்ள வழக்கு. 753

[பாரதம்]

குறிப்புரை :

மாற்ருேர் சூழ்ச்சிசெய்வதன் முன்தான் சூழ்ச்சிசெய்து வெல்லுதலே மன்னர்க்கு அழகு என்கின்றது.

சூதினுன் ஆக = சூதுபோர் செய்தோ தோள்வலி = தன் ஆற்றல் தீது எள்ளி = தீமையைத் தவிர்த்து சூழ்தல் = வெல்லுவதற்காகச் சூழ்ச்சி செய்தல் வழக்கு = முறைமை.

[கலிவிருத்தம்]

10 நலிவில் குன்றெடு காடுறை நன்பொருள்
புலிய ஞர்மகட் கோடலும் பூமிமேல்
வலியின் மிக்கவர் தம்மகட் கோடலும்
நிலைகொள் மன்னவர் வழக்கென நேர்பவே. 754

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை :

இது விசயை சீவகனுக்குக் கூறிய அறிவுரை.

புலியன்ஞர் = புலிபோலும் வலியுடைய குறுநில மன்னர் வலியின்மிக்கவர் = படைமுதலிய வலிமை வாய்ந்த பேரரசர் வழக்கு = நீதிநூல் முறைமை நேர்ப - ஏற்றுக் கொள்வர்.

## அதிகாரம்—29

# தூது

தூதாவது : நட்பாக்குதலையும் பகையாக்குதலையும் கருதி ஒருவர் பொருட்டு ஒருவர் பிறிதொருவர்பால் உரையொடு செல்லுதலாகும்.

[நேரிசை வெண்பா]

1 மாண்டமைந்தார் ஆய்ந்த மதிவனப்பே வன்கண்மை
ஆண்டமைந்த கல்வியே சொல்லாற்றல்
— பூண்டமைந்த
கால மறிதல் கருதுங்கால் தூதுவர்க்கு
ஞாலம் அறிந்த புகழ். 755

[ஏலாதி]

**குறிப்புரை :**

இது தூதுவர்க்குரிய தன்மைகள் பற்றிக் கூறுகின்றது.
மாண்டமைந்தார் = நூலாராய்ச்சியில் மாண்புற்றவர்
மதி = அறிவு வனப்பே = அழகாகும்
வன்கண்மை = அஞ்சாமை ஆண்டமைந்த = தெளிந்து நிறைந்த புகழ் = புகழுக்குரிய தன்மையாகும்.

2 ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
நல்லிசை முச்செந்தீ நான்மறையோன்—செல்லலும்
வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
என்றன்றி மீண்ட திலர். 756

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

ஒல்லெனீர் = ஒலிக்கின்ற அலைஎறியும் கடல்
ஞாலம் = உலகம் விழுமிது = மேலானது
முச்செந்தீ = மறையவர் காக்கும் மூவகைத்தீ
செல்லலும் = தூதாகச் சென்றபின் விறல்வேந்தர் = வெற்றி மிக்க மன்னர்.

[இன்னிசை வெண்பா]

3 செருக்குடை மன்ன ரிடைப்புக்கு அவருள்
ஒருத்தற் குதவாத சொல்லின் தனக்குத்
திருத்தலும் ஆகாது தீதாம் அதுவே
எருத்திடை வைக்கோல் தினல். 757

[பழமொழி]

**குறிப்புரை :**

தூதன் யாரேனும் ஒருவரைச்சார்ந்து கூறல்வேண்டும் என்பது.

செருக்கு = வலிமை உதவாத = பயன்படாத
சொல்லின் = சொல்வாருயின் தீதாம் = தனக்குத் துன்பமாம் அது. இருகாளைகளுக்கிடையே ஒருமாடு புகுந்து வைக்கோலைத் தின்னமுனைவது போலாகும்.

[நேரிசை வெண்பா]

4 ஒருவ ரகத்தொருவர் உண்டுடுத்துத் தம்மின்
மருவி மனமகிழ்வ ராயின் — செருமுனையில்
மன்னைப்போர் செய்யும் மழைமதமால் யானையாய்
பின்னைப்போர் தக்கதோ பேசு. 758

**குறிப்புரை :**

இருவர் உள்ள மொத்தாராயின் பகையில்லை. என்பது.
செருமுனை = போர்க்களம் மன்னைப்போர் = இரங்குதற் குரியபோர் பின்னை = பின்பு.

5 செல்லுங்கால் தேயத் தியல்தெரிந்து சென்றக்கால்
புல்லிய சுற்றம் புணர்வறிந்து—புல்லார்
மனத்தாற் பிரித்து வலியால் உதவும்
இனத்தால் தெரிவது தூது. 759

**குறிப்புரை :**

தேயத்தியல் = தூதுசெல்லும் நாட்டுவழக்கம் புல்லிய சுற்றம் = அரசனைச் சார்ந்துள்ள சுற்றத்தார்
புல்லார் = பகைவர் தெரிவது = ஆய்ந்தறிவது.

6 தடுமாற்ற மின்றித் தகைசான்ற சொல்லான்
வடுமாற்றம் வாய்சோரா னாகி— விடுமாற்றம்
எஞ்சாது கூறி இகல்வேந்தன் சீறுங்கால்
அஞ்சா தமைவது தூது. 760

**குறிப்புரை :**

வடுமாற்றம் = பிழையானசொற்கள்
வாய்சோரானாகி = சொல்லானாய் விடுமாற்றம் = தூது
மொழிகள் இகல்வேந்தன் = பகையரசன்
சீறுங்கால் = வெகுண்டபோது.

7 படையளவு கூறார் பெரியார்முன் மாற்றார்
படையள விற்றென்று வியவார்—கொடைவேந்தர்
ஈத்ததுகண் டின்புறார் ஏந்திழையார்தோள் சேரார்
பாத்திபர்தூ தாயடைந்தார் பண்பு. 761

**குறிப்புரை :**

படை = நால்வகைப்படை இற்று = இவ்வளவினது
ஈத்தது = பரிசாகக் கொடுக்கும் பொருள் தோள்சேரார் = கலவி
கொள்ளார் பாத்திபர் = அரசர்.

8 தானறிந்து கூறுந் தலைமற் றிடையது
கோனறைந்தத் தென்று கூறுமால்— தானறியாது
ஓலையே காட்டுங் கடையென் றுரைமூன்று
மேலையோர் தூதுரைத்த வாறு. 762

**குறிப்புரை :**

தூதர் வகைகூறுகின்றது. தான்வகுத்துரைப்பவன் தலையாய தூதன்; சொன்னவற்றைச் சொல்பவன் இடை. ஓலையைமட்டும் காட்டுபவன் கடை என்பர்.

மேலையோர் = முன்னோர்.

9 அன்புடைமை ஆய்ந்த அறிவுடைமை இற்பிறப்பு
நன்குடைமை நல்ல நயனுடைமை— நன்கமைந்த
சுற்ற முடைமை வடிவுடைமை சொல்வன்மை
கற்றடங்கல் தூதின் கடன். 763

[பாரதம்]

**குறிப்புரை :**

தூதனுக்குரிய பண்பும் செயலும் இவை என்கின்றது.

இற்பிறப்பு = உயர்குடிப்பிறப்பு நயனுடைமை = நீதியுடைமை வடிவு = தோற்றப்பொலிவு கடன் என்றது இங்கு இலக்கணம் என்னும் கருத்துப்படவந்தது.

[இன்னிசை வெண்பா]

10 கால வெகுளிப் பொறைய கேள் நும்பியைச்
சாலுந் துணையுங் கழறிச் சிறியதோர்
கோல்கொண்டு மேற்சேறல் வேண்டா அதுகண்டாய்
நூல்கண்டார் கண்ட நெறி. 764

[தகடூர்யாத்திரை]

**குறிப்புரை :**

சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையிடம் புலவர் கூறியது.

காலவெகுளி = காலனைப்போன்ற சீற்றம்
பொறைய = சேரனே! நும்பி = உன்பின்னோனை
அதியமானை சாலுந்துணை = இயன்ற அளவு
கழறி = இடித்துரைத்து கோல்கொண்டு = படைகொண்டு
சேறல் = போரிடச் செல்லுதல் நூல் = நீதிநூல்.

[அறுசீர்விருத்தம்]

11 ஆதிநூல் அமைச்சர்க் கோதும்
மாண்பெலாம் அமைந்து நின்றான்
தூதனைச் செல்லின் செல்லாச்
சூழ்பொரு ளில்லை போலாம்
ஏதிலார்க் காவ துண்டோ
இன்னன புகுந்த போழ்திற்
கோதிலாக் குணங்கள் தேற்றிக்
கொழித்துரை கொளுத்த லென்றான். 765

குறிப்புரை :

ஆதிநூல் = முதலாகமநூல் சூழ்பொருள் = ஆராயத்தக்க தொரு பொருள் ஏதிலார் = அயலார் கோதிலா = குற்ற மில்லாத கொழித்துரை = தேர்ந்து அமைத்த சொல் கொளுத்தல் = செவிகொளக் கூறுதல்.

12 மந்திரக் கிழவர் கண்ணு
மக்கள்தன் தாள்க ளாகச்
சுந்தர வயிரத் திண்டோள்
தோழராச் செவிக ளொற்று
அந்தர வுணர்வு நூலா
அரசெனும் உருவு கொண்ட
எந்திர மிதற்கு வாயாத்
தூதுவர் இயற்றப் பட்டார். 766

குறிப்புரை :

அரசு என்னும் எந்திரத்திற்கு இவை இன்ன உறுப்பு என்கின்றது.

மந்திரக்கிழவர் = அமைச்சர் மக்கள் = குடிமக்கள் தோழர் = நட்பினர் ஒற்று = ஒற்றர்கள் அந்தர உணர்வு = அகம உணர்வு வாயா = வாயக தூதன் அரசனுக்கு வாய்போன்றவன் என்பதாம்.

[கலிவிருத்தம்]

13 கற்றவர் கற்றன கருதுங் கட்டுரைக்
குற்றன வுற்றவுய்த் துரைக்கும் ஆற்றலான்
மற்றவன் மருசியே யவனே நாம்விடச்
சுற்றமும் கருமமும் சொல்ல வல்லனே. 767

[சூளாமணி]

குறிப்புரை :

கட்டுரைக்கு = உறுதிச் சொல்லிற்கு உற்ற = பொருந்திய உரையை மருசி = மருசிஎன்னும் தூதுவன் கருமம் = செயல் வல்லன் = வல்லவனுவான்.

[ஆசிரியப்பா]

14 இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டி
கண் திரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனகரவ்வே. அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுனி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ என்றும்
உண்டாயின் பதங் கொடுத்து
இல்லா யின் உடனுண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே. 768

குறிப்புரை :

இவ்வே = இப்படைக்கருவிகள் பீலி = மயிலிறகு
நோன்காழ் = வலிய உள்ளிடம் நெய் = தயிலம்
கடி = மதில் வியனகர் = அரண்மனை
அவ்வே = அதியமரனிடம் உள்ள படைக்கருவிகள்
சிதைந்து = மழுங்கி கொற்றுறை = கொல்லனது பற்றறை
குற்றிலம் = சிறுவீடு பதம் = உணவு
இல்லோர் = ஏழையர் ஒக்கல் = உறவினர்
வைந்நுதி = கூரியநுனி.

15 இரும்பனை வெண்டோடு மிலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோ னல்லன்
நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந்தன்றே
ஒருவீர் தோற்பினும் தோற்பதுங் குடியே
இருவீர் வேறல் இயற்கையு மன்றே, அதனால்
குடிப்பொருள் அன்றுநும் செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலியு வகைசெய்யுமிவ் விகலே. 769

**குறிப்புரை :**

இரும்பனை = வலியபனைமரம் தோடு = குருத்து ஓலை.
மிலைந்தோன் = சூடியவன் கருஞ்சினை = வலியகிளை
தெரியல் = மாலை நின்னகண்ணியும் = நீயணிந்துள்ள
மாலையும் ஆர் ஆத்தி மிடைந்தன்று = கட்டப்பட்டது
பொருவோன் = போர் செய்யவருவோன் வேறல் = வெற்றி
யடைதல் குடிப்பொருள் = குடிமைப் பண்பு
செய்தி = செய்யும் செயல் உவகை = எள்ளல் நகைப்பு
இகல் = இம்மாறுபாடு.

16 வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவல ஊர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே; அதற்கே
ஏணியும் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையும் மணிகளைந்தனவே.

**குறிப்புரை :**

வயலை = பசலை மருங்குல் = இடை உயவல் = மெலிவு
பயலை = பசலை எல்லி = இரவுப்பொழுது
புக்கு = அரசவைக்கண் புகுந்து. ஏணி, சீப்பு என்பவை மதிலைக் கடத்தற்குச் சார்த்தப்படும் கருவிகள் மாற்றி = நீக்கி
களைந்தன = களையப்பட்டன தூதுவந்தபார்ப்பான் கூறிய உரையால் போர்நின்றது என்றவாறு.

17 இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ
திருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்த்துயிர்த்து
அலமரல் யானை உரும்என முழங்கவும்
பாலில் குழவி அலறவும் மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்

இன்னா தம்ம ஈங்கினி திருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்
அறவை யாயின் நினதெனத் திறத்தல்
மறவை யாயின் போரொடு திறத்தல்
அறவையும் மறவையும் இல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங்காலே. 771

**குறிப்புரை :**

தொழுதி = கூட்டம் கயம் = நீர்நிலை படியா = மூழ்கிக் களிக்க மாட்டா. நெய்ம்மிதி = நெய்கலந்த சோற்றுத் திரள் திருந்தரை நோன்வெளில் = திருந்திய அரையையுடைய வலிய வெளில் கைய = துதிக்கையை உடையன அலமரல் = மயங்கிச் சுழலும் உரும் = இடி குழவி = குழந்தை இனைகூ = வருந்தி அழைக்கும் கூப்பாடு இன்னாது = துன்பந் தருவது; துன்னருத்துப்பின் = நெருங்குதற்கரிய வலிமை யுடைய வயமான் = வெற்றிக் குதிரையையுடைய தோன்றல் = அரசனே! அறவையாயின் = அறநெறி யுடையையாயின் திண்ணிலைக் கதவு = கோட்டைவாயிற் கதவு ஒடுங்குதல் = முற்றுகையிட்டுத் தங்கி இருத்தல் நாணுத் தகவுடைத்து = நாணத்தக்கதாகும்.

18 அடுநை யாயினும் விடுநை யாயினும்
நீயளந் தறிதி நின் புரைமை வார்கோல்
செறியரிச் சிலம்பின் குறுந்தொடி மகளிர்
பொலஞ் செய் கழங்கின் தெற்றி யாடும்
தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
கருங்கைக் கொல்லன் அரஞ்செய் அவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலின், நிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறும்
கடிமரந் தடியும் ஓசை தன்னூர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப
ஆங்கினி திருந்த வேந்தனொடு ஈங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தக வுடைத்தே. 772

[புறநானூறு]

குறிப்புரை :

அடுநையாயினும் = போர் புரிந்து அழிப்பாயாயினும் விடுநையாயினும் = போர் புரியாது விட்டுவிடுவாயாயினும் நீயளந்து அறி = நீயே எண்ணி முடிவு செய் புரைமை = உயர்வு. வார்கோல் = நீண்டு திரண்ட. தொடி = தோள்வளை பொலம் = பொன் தெற்றியாடும் = திண்ணையிலிருந்து விளையாடும் பொருநை = தாமிரபரணியாறு அவ்வாய் = கூரிய வாயுடைய நவியம் = கோடரி காவுதொறும் = சோலைகள் தோறும் கடிமரம் = காவல்மரம் தடியும் = வெட்டப்படும் ஓசை = ஆரவாரம் கடிமனை = அரண்மனை தார் = மாலை கறங்க = ஒலிக்க மலைத்தனை = போர் செய்தனை என்பது = என்று கூறுவது.

## அதிகாரம்—30

# மன்னரைச் சேர்ந்தொழுகுதல்

மன்னரைச் சேர்ந்தொழுகலாவது: அரசச் சுற்றமாக அமைந்து செயலாற்றும் அமைச்சர் முதலானோர் அரசனொடு சார்ந்து ஒழுகும் நெறிமுறைமையாம்.

[ஆசிரியப்பா]

1 ஒளிவிடு பசும்பொன் ஓடை சூட்டிய
வெளிறில் வெண்கோட்ட களிறுகெழு வேந்தே
வினவுதி யாயின் கேண்மதி சினவாது
ஒருகுடர்ப் படுதா ஒரிரை துற்றும்
இருதலைப் புள்ளின் ஓருயிர் போல
அழிதரு வெகுளி தாங்காய், வழிகெடக்
கண்ணுறு பொழுதிற் கைபோல் எய்தி
நும்மோர்க்கு நீதுணை யாகலும் உளையே, நோதக
முன்னவை வருஉங் காலை நும்முன்

நுமக்குத் துணையாகலும் உரியன், அதனால்
தொடங்க உரிய வினைபெரி தாயினும்
அடங்கல் வேண்டுமதி யத்தை, அடங்கான்
துணையிலன் தமியன் மன்னும் புலையிலன்
பேர்யா றெதிர் நீந்தும் ஒருவன் அதனைத்
தாழ்தல் அன்றோ அரிது, தலைப்படுதல்
வேண்டிற் பொருந்திய
வினையின் அடங்கல் வேண்டும்
அனைய மாகீண் டறிந்திசி னோர்க்கே. 773

குறிப்புரை :

ஓடை = நெற்றிப் பட்டம் கோட்ட = கொம்பினை உடைய
களிறுகெழுவேந்தே = யானைப் படையை உடைய அரசனே
கேண்மதி = கேட்பாயாக! படுதர = நிறைய
ஓரிரை = ஒரே உணவை துற்றும் = உண்ணும்
இருதலைப்புள்ளின் = ஒருடம்பும் இருதலையும் உள்ள பறவையின்
ஒருயிர்போல = ஓர் உயிர் போன்ற உடன் பிறந்தவனை
தாங்காய் = அடக்கவில்லை
துணை ஆகலும்உளையே = நும்மோர்க்குத் துணையாதற்குஉரியை
உரியன் = அவ்வாறே உன் உடன் பிறந்தான் உனக்குத்
துணையாதலும் உரியன் (மதி-அத்தை இரண்டும் அசைகள்
தாழ்தல் = கடந்து செல்லுதல்
தலைப்படுதல் = ஒன்றுபட்டு வாழ்தல்
வினையின் அடங்கல் வேண்டும் = மேற்கொண்ட போர்ச்
செயலை அடக்குதல் வேண்டும்
அனையமாக = அத்தன்மையுடையோனுகுக.

2 மொய்வேற் கையர் முரசெறிந் தொய்யென
வையகம் அறிய வலிதலைக் கொண்டது
எவ்வழி என்றி இயல்தார் மார்ப!
எவ்வழி யாயினும அவ்வழித் தோன்றித்
திண்கூர் எஃகின் வயவர்க் காணிற்
புண்கூர் மெய்யின் உராய்ப் பகைவர்
பைந்தலை எறிந்த மைந்துமலி தடக்கை
ஆண்டகை மறவர் மலிந்து பிறர்
தீண்டற் காகாது வேந்துடை அரணே. 774

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

மொய்வேல் = பறவைகள் மொய்க்கும் வேல்
வலிதலைக் கொண்டது = வன்மையில் மேலோங்கியது
என்றி = என்று வினவுகின்றாய்
எஃகின் வயவர் = வேற்படையை ஏந்திய பகை வீரர்
உராஅய் = உரசிச் சென்று எறிந்த = வெட்டி வீழ்த்திய
மைந்து = வலிமை. ஆண்டகை மறவர் = ஆண்மைமிக்கவீரர்கள்
மலிந்து = மிக்குக்காவல் புரிதலால். தீண்டற்கு = அகப்படுத்
தற்கு அரண் = கோட்டை

[இன்னிசை வெண்பா]

3 விடலைமை செய்ய வெருண்டகன்று நில்லாது
உடலரும் மன்னர் உவப்ப ஒழுகின்
மடலணி பெண்ணை மலிதிரைச் சேர்ப்ப
கடல்படா எல்லாம் படும். 775

**குறிப்புரை :**

விடலைமைசெய்தும் = நீங்கச் செய்தும் வெருண்டு = அஞ்சி
உடலரும் = வெல்லுதற்கரிய பெண்ணை = பனை மரம்
படா = உண்டாகாத எல்லாம் = எல்லாச் செல்வமும்
படும் = உளவாகும்.

4 ஆண்டகை மன்னரைச் சேர்ந்தார் அலவுறினும்
ஆண்டொன்று வேண்டுதும் என்ப துரையற்க
பூண்டகு மார்ப பொருள்தக்கார் வேண்டாமை
வேண்டிய தெல்லாந் தரும். 776

**குறிப்புரை :**

ஆண்டகை = ஆளும் தகைமை
அலவுறினும் = வறுமையுற்றாலும். உரையற்க = சொல்லாது ஒழிக
வேண்டாமை = இரந்து நில்லாமை தரும் = கொடுக்கும்

[நேரிசை வெண்பா]

5 வெற்றிவேல் வேந்தன் வியங்கொண்டால் யாமொன்றும்
பெற்றிலேம் என்பது பேதைமையே—மற்றதனை
ஐயம் இலராகிச் செய்க அதுவன்றோ
செய்கென்றான் உண்கென்னுமாறு. 777

குறிப்புரை :

வியங்கொண்டால் = ஏவுதலை மேற்கொண்டால்
பேதைமை = அறியாமை. எவ்வமிலராகி = துன்பமில்லாதவராகி
அதுவன்றோ = அங்ஙனம் செய்யும் கடமை
உண்க என்னுமாறு = உண்க என அவனைக் கூறவைக்கும் நெறியாகும்.

[இன்னிசை வெண்பா]

6 பன்னாள் தொழில்செய் துடைய கவர்ந்துண்டார்
இன்னாத செய்யாமை வேண்டி இறைவர்க்குப்
பொன்யாத்துக் கொண்டு புகுதல் குவளையைத்
தன்னாரால் யாத்து விடல். 778

குறிப்புரை ;

தொழில் செய்து = அரச வினையைச் செய்து
உண்டார் = வாழ்பவர் பொன்யாத்துக் கொண்டு
புகுதல் = பொன்னைத் திரட்டிக் கொடுத்து ஒழுகுதல்
குவளை மலரை அதன் நாராலேயே மாலையாகக் கட்டிக் கொள்ளுதல் போல்வதாகும்.

[நேரிசை வெண்பா]

7 வேந்தன் மதித்துணரப் பட்டாரைக் கொண்டேனை
மாந்தரும் ஆங்கே மதித்துணர்ப—ஆய்ந்த
நலமென் கதுப்பினாய் நாடின்நெய் பெய்த
கலமேநெய் பெய்து விடும். 779

**குறிப்புரை:**

அரசனால் மதிக்கப்படுபவர் ஏனையோராலும் மதிக்கப்படுவார் என்கின்றது.
ஆங்கே = அவ்வாறே நாடின் = ஆராய்தால்
நெய் இருந்த கலமே நெய் பெய்தற்கு உரியதாக அமைவது போல்வது அது.

[இன்னிசை வெண்பா]

8 செருக்கெழு மன்னர்த் திறலுடையார் சேர்ந்தால்
ஒருத்தரை அஞ்சி உலைதலும் உண்டோ
உருத்த சுணங்கின் ஒளியிழாய்! கூரிது
எருத்து வலியதன் கொம்பு. 780

**குறிப்புரை:**

செருக்கெழு மன்னர் = போரைப் பொருந்திய மன்னர்
திறலுடையார் = ஆற்றலுடையவர் உலைதல் = துன்புறுதல்
உருத்த = உருக்கொண்ட சுணங்கு = அழகுத் தேமல்
எருதினுடைய வலிமைக்கேற்ப அதன் கொம்பு வலிமையுடையதாகும் என்பது.

9 காவலனை யாக வழிபட்டார் மற்றவன்
ஏவல் வினைசெய் திருந்தார்க் குதவடுத்தல்
ஆவணைய நின்றதன் கன்று முலையிருப்ப
தாயணல் தான்சுவைத் தற்று. 781

**குறிப்புரை :**

காவலனை = அரசனை ஆக = துணையாக
உதவடுத்தல் (உதவு அடுத்தல்) = உதவி செய்து அவரால் காரியம் பெற நினைத்தல் ஆஅணைய = பசுவைச் சார்ந்து
முலையிருப்ப = பாலுண்ணும் மடியிருப்பவும் (அஃதுணராமல்)
தாயணல் சுவைத்தற்று = தாயினது அணலை (தாடையை)ச் சுவைத்தது போலாகும்.

[நேரிசை வெண்பா]

10 எமரிது செய்க எமக்கென்று வேந்தன்
தமரைத் தலைவைத்த காலை—தமரவற்கு
வேலின்வா யாயினும் வீழ்வார் மறுத்துரைப்பின்
ஆலென்னின் பூலென்னு மாறு. 782

**குறிப்புரை :**

அரசனிட்ட கட்டளையை வினைசெய்வார்மறுது மேற்கொள்ளல் வேண்டுமென்கின்றது.
தமர் = தன்னைச் சார்ந்த வினைச் சுற்றத்தார்
தலைவைத்தல் = பொறுப்பாக வைத்தல் மறுத்துரைத்தல்
ஆலமென்று கூற அதனை மறுத்துப் பூலச்செடி என்று கூறுதலை ஒக்கும் என்றவாறு.

11 சிறிதாய கூழ்பெற்றுச் செல்வரைச் சேர்ந்தார்
பெரிதாய கூழும் பெறுவர்—அரிதாம்
இடத்துள் ஒருவன் இருப்புழிப் பெற்றால்
கிடப்புழியும் பெற்று விடும். 783

**குறிப்புரை :**

தக்கோரைச் சார்ந்தவர் மிக்க பயனைப் பெறுவார் என்பது.
கூழ் = உணவு இருப்புழி = அமர்ந்திருக்குமளவு இடம்
கிடப்புழி = படுத்துறங்கற்குரிய அளவுடைய இடம்.

12 ஆற்றவினை செய்தார் நிற்பப் பலவுரைத்து
ஆற்றாதார் வேந்தனை நோவது—சேற்றுள்
வழாஅமைக் காத்தோம்பி வாங்கும் எருத்தும்
எழாஅமைச் சாகா டெழல். 784

**குறிப்புரை :**

ஆற்ற வினை செய்தார் = நிறைந்த போர்த் தொழிலை வெற்றி பெறுமாறு செய்தவர் ஆற்றாதார் = அவ்வாறு செய்யாதவர்
நோவது = அரசன் வரிசை செய்யவில்லையே என வருந்துவது
அது வண்டியை இழுக்கும் எருது இருப்பதால் வண்டி தானே ஓடுதலை ஒக்கும் என்றவாறு. சாகாடு = வண்டி

[இன்னிசை வெண்பா]

13 சிறப்புடைய மன்னரைச் செவ்வியான் நோக்கித்
திறத்தின் உரைப்பாற்கொன்று ஆகாத தில்லை
விறற்புகழ் மன்னர்க்கு உயிரன்ன ரேனும்
புறத்தமைச்சின் நன்றகத்துக்கூன். 785

[பழமொழி]

**குறிப்புரை :**

அரசனை நெருங்கியிருப்பவர் நலம் பெறுவர் என்பது. செவ்வியின் = ஏற்ற காலத்தினல். விறற்புகழ் = வெற்றி மிக்க புகழ் புறத்தமைச்சின் = புறமாக இருக்கும் அமைச்சரை விட அகத்துக்கூன் நன்று = அரசனுடன் அகத்தே இருக்கும் பணியாளனாக இருத்தல் நலமாம்.

[நேரிசை வெண்பா]

14 மன்னர் திருவும் மகளிர் எழில்நலமும்
துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா—துன்னி
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மர மெல்லாம்
உழைதங்கண் சென்றார்க் கொருங்கு. 786

[நாலடியார்]

**குறிப்புரை :**

மன்னர் திரு = அரசனது செல்வம். துன்னியார் = நெருங்கி நட்பாக உள்ளவர் துய்ப்பர் = அனுபவிப்பார் தகல்வேண்டா = வேறு தகுதிகள் வேண்டுவதில்லை குழை = தழைகள் உழை = தங்க நிழல் தரும் என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

15 கடைவிலக்கின் காயார் கழிகிழமை செய்யார்
கொடையளிக்கண் பொச்சாவார் கோலம்நேர்
செய்யார்
இடையறுத்துப் போகி பிறனொருவற் சேரார்
கடைபோக வாழ்துமென்பார். 787

குறிப்புரை :

கடைவிலக்கின் = அணுகாமல் விலக்கினும் காயார் = சினங் கொள்ளார் கழிகிழமை = மிக்க உரிமை பொச்சாவார் = மறவார் கோலம் = ஒப்பனை நேர் = அரசனுக்கு நேராக இடையறுத்து = வஞ்சனை செய்து கடைபோக = முழுதுமாக

16 முனியார் துனியார் முகத்தெதிர் நில்லார்
தனிமை இடத்துக்கண் தங்கருமம் சொல்லார்
இனியவை யாமறிது மென்னார் கசிவின்று
காக்கைவெள் ளென்னுமெனின். 788

குறிப்புரை :

முனியார் = வெகுளார் துனியார் = வெறுக்க மாட்டார் தங்கருமம் = தமக்கு வேண்டிய காரியங்கள் கசிவின்று = வாய்சோர்தலின்றி காக்கை வெள்ளென்னுமெனின் = காக்கை வெள்ளை நிறம் எனக் கூறினும்.

[சிந்தியல் வெண்பா]

17 உமிழ்வும் உயர்ந்துழி ஏறலும் பாக்கும்
வகையில் உரையும் வளர்ச்சியும் ஐந்தும்
புணரார் பெரியா ரகத்து. 789

குறிப்புரை :

தம்மினும் பெரியவரிடத்து இவ் ஐந்தினையும் அறிவுடையார் செய்யார் என்கின்றது.
உமிழ்வு = எச்சில் உமிழ்தல் ஏறல் = மேலிடத்து இருத்தல் பாக்கும் = பிரித்தலும் வகையில் உரை = தகாத உரை வளர்ச்சி = மேலோங்கல்.

18 இறைவர்முன் செல்வமும் கல்வியும் தேசும்
குணனும் குலனுடையார் கூறார்—பகைவர்போல்
பாரித்துப் பல்கால் பயின்று. 790

குறிப்புரை :

நற்குடிப் பிறந்தவர் வேந்தனிடத்து இவற்றை விரிவாகப் பேசமாட்டார் என்பது.

தேசு = புகழ் குலன் = சாதி பாரித்து = விரித்து

[இன்னிசை வெண்பா]

19 நின்றக்கால் நிற்க அடக்கத்தால், என்றும்
இருந்தக்கால் ஏவாமை ஏகார் பெருந்தக்கார்
சொல்லின் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்
விழைவற்க சொல்லொழிந்தக்கால். 791

குறிப்புரை :

ஏவாமை = தலைவன் கட்டளை இடாமல்
கேட்டீக = கேட்டுக்கொள்க
ஏகார் = செல்லமாட்டார் மீட்டும் = மறுபடியும்.

[சிந்தியல் வெண்பா]

20 தம்மேனி நோக்கார் தலைஉளரார் கைந்நொடியார்
எம்மேனி யாயினும் நோக்கார் தலைமகன்
தன்மேனி யல்லால் பிற. 792

குறிப்புரை :

மேனி = உடலழகை தலை = முந்தல் எம்மேனியாயினும் அவையில் உள்ள பிறரை நோக்கார் = மதித்துக்காணார் அரசனை நோக்கியிருப்பார் என்றபடி

21 பிறரொடு மந்திரங் கொள்ளார் இறைவனைச்
சாரார்செவி யோரார் சாரின் பிறிதொன்று
தேர்வார்போல் நிற்கதிரிந்து. 793

குறிப்புரை :

மந்திரம் = மந்திராலோசனை சாரார் = மிக நெருங்க மாட்டார்
தேர்வார் போல் = ஆலோசிப்பவர் போல்

[இன்னிசை வெண்பா]

22 நிரல்படச் செல்லார் நிழல்மிதித்து நில்லார்
உரையிடை ஆய்ந்துரையார் ஊர்முனிவ செய்யார்
அரசர் படையளவும் சொல்லாரே என்றும்
புரைதீர்ந்த காட்சி யவர். 794

**குறிப்புரை :**

ஊர்முனிவ = ஊரார் வெறுப்பனவற்றை படை = கருவி
புரை தீர்ந்த = குற்றமற்ற. காட்சியவர் = அறிவினை உடையவர்

[நேரிசை வெண்பா]

23 அறத்தொடு கல்யாணம் ஆள்வினை கூறை
இறப்பப் பெருகியக் கண்ணும்—திறப்பட்டார்
மன்னரின் மேம்படச் செய்யற்க செய்பவேல்
மன்னிய செல்வங் கெடும். 795

**குறிப்புரை :**

அறம் = ஈகை கல்யாணம் = திருமணம் கூறை = உயர்ந்த
ஆடை. மன்னிய = நிலையான

[இன்னிசை வெண்பா]

24 அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும்
முழையுறை சீயமும் என்றிவை நான்கும்
இளைய எளிய பயின்றன என்றெண்ணி
இகழின் இழுக்கந் தரும். 796

[ஆசாரக் கோவை]

**குறிப்புரை :**

அளை = புற்று அரசு = அரசன் முழை = குகை சீயம் = அரிமா
பயின்றன = பழக்கமுடையன இகழின் = எளியனவாகக்
கருதின் இழுக்கம் = துன்பம்.

அதிகாரம்—31

# குறிப்பறிதல்

குறிப்பறிதலாவது. ஆட்சி பூண்டார்தாம் கருதிய அதனை அவர் கூறுமல் அவர்தம் நிலையாலும் சூழலாலும் அறிந்து கொள்ளுதலாம்.

[இன்னிசை வெண்பா]

வெள்ளம் வருங்காலை ஈர்ப்படுக்கும் அஃதேபோல்
கள்ளம் உடையாரைக் கண்டே அறியலாம்
ஒள்ளமர் கண்ணாய் ! ஒளிப்பினும் உள்ளம்
படர்ந்ததே கூறும்முகம். 797

குறிப்புரை :

ஈர்ப்படுக்கும் = ஈரம் தோன்றி நிற்கும்
ஒளிப்பினும் = மறைப்பினும் படர்ந்ததே = உள்ளத்தில் விளங்குவதே கூறும் = காட்டும்

[நேரிசை வெண்பா]

2 நோக்கி அறிகல்லாத் தம்முறுப்புக் கண்ணாடி
நோக்கி அறிப அதுவேபோல்—நோக்கி
முகனறிவார் முன்னம் அறிய அதுவே
மகனறிவு தந்தையறிவு. 798

குறிப்புரை :

நேரே காணமுடியாத உறுப்பினைக் கண்ணாடி வாயிலாக அறிதல்போல முகக்குறிப்பால் உள்ளக் குறிப்பை அறிந்து கொள்வார் குறிப்பறியவல்லவர் என்பது.

அது மகனறிவைக் கொண்டு அவனது தந்தையறிவை உணர்தல் போலாகும்.

3 பேருலையில் பெய்த அரிசியை வெந்தமை
ஓரவிழினாலே உணர்ந்தாங்கு—யார்கண்ணும்
கண்டதனாற் காண்டலே வேண்டுமாம் யாதற்கும்
கண்டது காரணமா மாறு. 799

**குறிப்புரை :**

ஓரவிழ் = வெந்த ஒரு அரிசி ஒன்றைக் கொண்டே மற்றவற்றை அறிந்து கொள்ளலாம் என்றவாறு.

4 நினைத்த திதுவென்றந் நீர்மையைப் பார்த்து
மனத்த தறிந்தீவார் மாண்டார்—புனத்த
குடிஞை யிரட்டும் குளிர்வரை நாட
கடிஞையுட் கல்லிடுவாரில். 800

[பழமொழி]

**குறிப்புரை :**

அந்நீர்மை = அத்தன்மை அறிந்தீவார் = அறிந்து கொடுப்பார் மாண்டார் குறிப்பறிதலில் மாட்சிமைப்பட்டவர் புனம் = காடு குடிஞை = கோட்டான் கடிஞை = இரப்போரின் பிச்சைப் பாத்திரம்.

[இன்னிசை வெண்பா]

5 நாற்றம் உரைக்கும் மலருண்மை கூறிய
மாற்றம் உரைக்கும் வினைநலம் தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனமுரைக்கும் முன்னம்
முகம்போல முன்னுரைப்பதில். 801

**குறிப்புரை :**

அகம் பொதிந்த = உள்ளத்தில் மறைந்துள்ள
முகம் அகத்திலுள்ளதைத் தெளிவாகக் காட்டிவிடும் என்றவாறு.

6 மகனுரைக்கும் தந்தை நலத்தை ஒருவன்
முகனுரைக்கும் உள் நின்ற வேட்கை—அகல்நீர்ப்
பிலத்தியல் புக்கானுரைக்கும் நிலத்தியல்பு
வானம் உரைத்து விடும். 802

குறிப்புரை :

நலம் = நற்குணம் நற்செயல் முதலியவை
அகல் நீர் = நீரின் ஆழம் வானம் = மழை.

[நேரிசை வெண்பா]

7 புகைவித்தாப் பொங்கழல் தோன்றும் சிறந்த
நகைவித்தாத் தோன்றும் உவகை
—பகையொருவன்
முன்னம் வித்தாக முளைக்கும் முளைத்தபின்
இன்னாவித் தாகிவிடும். 803

குறிப்புரை :

புகை வித்தா = புகை காரணமா இன்னா = துன்பம்
பகைவிதையாகப் பின்னர் துன்பம் விளையும் என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

8 சொல்லாலறிப ஒருவனை மெல் லென்ற
நீரான் அறிப மடுவினை யார்கண்ணும்
ஒப்புரவி னானறிப சான்ருண்மை மெய்க்கண்
மகிழான் அறிப நறா. 804

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை :

மடுவினை = மடுவில் உள்ள நீரின் ஆழத்தை ஒப்புரவு = உலக நடை மகிழான் = மகிழ்ந்து விளைக்கும் செயல்களால் நறா = கள்ளுண்ட நிலைமையை அறிப = அறிந்து கொள்வார் நறவு = கள்

அதிகாரம்—32

# அவையறிதல்

அவையறிதலாவது. அரசவை சான்றோரவையின் கண் குழுமியுள்ள பேரறிவாளர் சிற்றறிவாளர் தம் நிலையினைத்தன் நுண்ணறிவால் ஓர்ந்தறிந்து கொள்ளல்.

[இன்னிசை வெண்பா]

1 நடலை யிலராகி நன்றுணரா ராய
முடலை முழுமக்கள் மொய்கொள் அவையுள்
உடலா ஒருவற் குறுதி யுரைத்தல்
கடலுளால் மாவடித் தற்று. 805

**குறிப்புரை :**

நடலை = நன்மை தீமைகளை ஆராயும் கவலை முடலைமுழு
மக்கள் = உணர்வு முடம்பட்ட அறிவில்லாத மக்கள்
மொய்கொள் = குழுமியுள்ள அவையுள் = மன்றத்துள்
உடலா ஒருவற்கு = வருத்தமில்லாத ஒருவற்கு
உறுதி = மெய்ப்பொருள் மா = மாங்கனிகள்
வடித்தற்று = உதிர்த்தலை ஒக்கும்.

[நேரிசை வெண்பா]

2 அறிவன் றழகன் றறிவதூஉ மன்று
சிறியார் எனற்பாடும் செய்யும்—எறிகிரை
சென்றுலாம் சேர்ப்ப குழுவத்தார் மேயிருந்த
என்றூ டறுப்பினுமன்று. 806

**குறிப்புரை :**

கதிரவனுக்குக் குறுக்கே சென்றாலும் செல்க சான்றோர் அவையின் குறுக்கே செல்லற்க என்கின்றது.

குழுவத்தார் — நல்லறிஞர் குழுவினர் மேயிருந்த = பொருந்தி
இருந்த மன்று = அவை என்று = சூரியன்
ஊடறுப்பினும் = குறுக்கே ஊடருவிச் செல்லினும்.

3 கல்வி யகலமும் கட்டுரை வாய்பாடும்
சொல்சின வேந்தன் அவைகாட்டும்—மல்கி
தலைப்பெய் திழிதரூஉம் தண்புனல் நீத்தம்
மலைப்பெயல் காட்டுந்துணை. 807

குறிப்புரை :

அகலம் = பரப்பு, பெருக்கம் கட்டுரை வாய்பாடு = நீதி கூறும் முறை அவைகாட்டும் = அரசனது மன்றமே காட்டும் ஆற்றுநீர் வெள்ளம் மலையில் பெய்த நீரின் அளவைக் காட்டுவதுபோல என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

4 கல்வியா றுய கழிநுட்பம் கல்லார்முன்
சொல்லிய நல்லவுந் தீயவாம்—எல்லாம்
இவர்வரை நாட தமரை இல்லார்க்கு
நகரமும் காடுபோன்றுங்கு. 808

குறிப்புரை :

கழி நுட்பம் = மிக நுண்ணிய பொருள் நல்லவும் = சிறந்த பொருளும் தீயவாம் = தீங்கு பயப்பனவாகும் இவர்வரை = திரம்பி வழியும் மலை தமர் = சுற்றம் போன்றுங்கு = போல்வதை ஒக்கும்.

[நேரிசை வெண்பா]

5 கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
பொல்லாத தில்லை ஒருவற்கு—நல்லாய்
இழுக்கத்தின் மிக்க இழிவில்லை இல்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு. 809

குறிப்புரை :

கட்டுரை = விரித்துச் சொல்லும் பொருளுரை. இழுக்கம் = அறநெறியினின்றும் தவறுதல் ஒழுக்கம் = நல்லொழுக்கம்.

6 அல்லவையுட் டோன்றி அலவலைத்து வாழ்பவர்
நல்லவையுற் புக்கிருந்து நாவடங்கக் கல்வி
அளவிறந்து மிக்கார் அறிவெள்ளிக் கூறல்
மிளகுளு உண்பான் புகல். 810

[பழமொழி]

**குறிப்புரை :**

அல்லவை = சால்பில்லாதார் அவைக்களம் அல அலைத்து பயனில்லாதவற்றைக்கூறி வாழ்பவர் = பிழைப்பவர் மிக்கார் அறிவெள்ளி = சான்றோர் அறிவுடைமையை இகழ்ந்து மிளகுஉளு = மிளகின்கண் புகுந்த புழு புகல் = முற்படுதலை ஒக்கும் என்றவாறு.

7 பாடமே ஓதிப் பயன் தெரிதல் தேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்றாட் கிறப்பப் பரிந்து, 811

**குறிப்புரை :**

அவையறியாது பேசும் மூடர்களைச் சான்றோர் அவர்களை ஈன்ற தயார் வருந்துவரே எனப் பொறுத்து இரக்கங் காட்டி நிற்பர் என்கின்றது.

பயன் = பொருள்நயமும் சுவையும் தேற்றாத தெளியாத முனிதக்க = வெறுக்கத் தக்கவற்றை சமழ்த்தனர் நிற்ப இரங்கிப் பொறுத்திருப்பர் இறப்ப = மிக பரிந்து பரிவு கொண்டு.

[இன்னிசை வெண்பா]

8 மெய்ஞ்ஞானக் கோட்டி உறழ்வழிவிட் டாங்கோர்
அஞ்ஞானந் தந்திட் டதுவாங் கறத்துழாய்
கைஞ்ஞானங் கொண்டொழுகும் காரறி வாளர்முன்
சொல்ஞானம் சோரவிடல். 812

**குறிப்புரை :**

அறிவிலார் தம்கருத்தையே பன்னிப் பன்னிப் பேசுமிடத்து நல்லறிவுடையோர் தம் கருத்துக்களைக் கூறுதொழிக என்கின்றது.

கோட்டி = குழுவினர் உறழ்வழி = ஒத்து ஒழுகும் நெறி
அறத்துழாய் = அதையே மிகவும் துழாவி
கைஞ்ஞானம் = சிற்றறிவு காரறிவு = மயங்கிய அறிவு
சோரவிடல் = சொல்லுதலைத்தவிர்க்க.

[நேரிசை வெண்பா]

9 சொற்றுற்றுக் கொண்டு சுனைத்லெழுதல் காமுறுவார்
கற்றுற்றல் வன்மையுந் தாந்தேருர்—கற்ற
செலவுரைக்கும் ஆறறியார் தோற்ப தறியார்
பலவுரைக்கும் மாந்தர் பலர். 813

**குறிப்புரை :**

அவையறியாது தம் அறிவறியாது நாத்தினவாற் பேசும் அறிவிலார் பலர் என்கின்றது.

சொற்றுற்றுக் கொண்டு - சொல்லாகிய முட்கோலைக் கொண்டு. சுனைத்து = நாக்கூர்மையாக எடுத்து காமுறுவார் = விரும்புவார் ஆறறியார் = முறைமை தெரியார்.

10 தவலருந் தொல்கேள்வித் தன்மையுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்
தும்பர் உறைவார் பதி. 814

[நாலடியார்]

**குறிப்புரை :**

கற்றோரோடு கலந்திருத்தல் தேவருடன் உறைதலைக் காட்டினும் இன்பமுடையது என்பது.

தவல் = கேடு இகல் = முரண்பாடு
எஃகுடையார் = கூரிய அறிவினையுடையார் குழீஇ = கூடியிருந்து நகலின் = அளவளாவி மகிழ்தலின்.
உம்பர் = தேவர் பதி = சுவர்க்கம்.

[ஆசிரியப்பா]

11 குடிப்பிறப் புடுத்துப் பனுவல்சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதலின்பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்காறின்மை அவாஅ வின்மையென
இருபெரு நிதியமும் ஒருதா மீட்டும்
தோலா நாவின்மே லோர் பேரவை
உடன்மரீஇ இருக்கை ஒருநாட் பெறுமெனின்
பெறுகதில்லம்ம யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது
நிலையழியாக்கை வாய்ப்பவிம்
மலர்தலை யுலகத்துக் கொட்கும் பிறப்பே. 815

[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

நாவன்மை சான்ற மேலோரோடு அளவளாவும் பேறு வாய்ப்பின் பிறவித்துன்பத்தைப் பொறுத்து ஏற்பேன் என ஒருவர் கூறுவதாக வைத்து நல்லவையின் சிறப்புக் கூறுகின்றது.

பனுவல் = உயர்ந்தநூல்கள் விழு = மேலான
மாந்தி = அருந்தி வைகலும் = நாள்தோறும் ஈட்டும் வருவாயாகச் சேர்க்கும் மரீஇ = கலந்து பெறுமெனின் பெறுதற்கு வாய்க்குமாயின் புலவுப் பொதிந்து = உடம் போடு கூடி கொட்கும் = சுழன்றுதிரியும்
பிறப்பு = பிறவித்துன்பம்,

## அதிகாரம்—33

# நாடு

நாடென்பது: அரசனால் ஆளப்படும் நாடு. அது நாடா வளத்ததாய் அரண்சூழ்ந்து தக்காரையும் தாழ்விலாச் செல்வரையும் உடையதாகும்.

[நேரிசை வெண்பா]

1 எண்ணின் இடரெட்டும் இன்றி வயற்செந்நெல்
கண்ணின் மலரக் கருநீலம்—விண்ணின்
வகைத்தாய் வளனொடு வைகின்று வென்வேல்
நகைத்தாரான் தான்விரும்பும் நாடு. 816

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை:**

நாடு என்பது இத்தகைய சிறப்புடையதாக இருத்தல் வேண்டு மென்கின்றது.

இடர் எட்டாவன விட்டில்; கிளி, நால்வாய், வேற்றரசு, தன்னரசு, நட்டம், பெரும்பெயல், பெங்குகாற்று.
விண்ணின் வகைந்து—தேவலோகத்தை ஒப்பது. வைகின்று அமைந்தது.

2 அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ
வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப் புள்ளினம்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்கும் கவ்வையுடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை நாடு. 817

**குறிப்புரை:**

சேரனதுநாடு இத்தகையவளமுடையது என்கின்றது.

அள்ளல் = சேறு பழனம் = வயல் வெள்ளம் = நீர்ப் பரப்பு புள்ளினம் = பறவைக்கூட்டம்
கவ்வை = ஆரவாரம் கோதை = சேரமன்னன்.

3 நந்தின் இளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்
பந்தர் இளங்கமுகின் பாளையும்—சிந்தித்
திகழ்முத்தம் போற்றோன்றும் செம்மற்றே தென்னன்
நகைமுத்த வெண்குடையான் நாடு. 818

**குறிப்புரை :**

பாண்டியன் நாட்டுவளம் கூறுகின்றது.

நந்து = நத்தை   சினை = முட்டை   கமுகு = பாக்குமரம்
செம்மற்று = தலைமையுடையது   தென்னன் = பாண்டியன்.

4 காவலுழவர் கடுங்களத்துப் போரேறி
நாவலோஓ என்றிசைக்கும் நாளோதை
— காவலன்றன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு. 819

[முத்தொள்ளாயிரம்]

**குறிப்புரை :**

சோழனது நாட்டுவளம் கூறுகின்றது.

காவலுழவர் = நெற்குவியலைக் காவல் செய்யும் உழவர்கள். 'நாவலோ' என்பது வளமிகுதையைக் குறித்து மகிழ்ந்து கூவும் ஆரவாரம்   ஓதை = ஓசை   கிள்ளி = சோழமன்னர்

[அறுசீர்விருதம்]

5 நற்ற வஞ்செய் வாக்கிடம்
தவஞ்செய் வார்க்கு மஃதிடம்
நற்பொருள்செய் வார்க்கிடம்
பொருள்செய் வார்க்கும் அஃதிடம்
வெற்ற வின்பம் விழைவிப்பான்
விண்ணு வந்து வீழ்ந்தென
மற்ற நாடு வட்டமாக
வைகுமற்ற நாசரோ 820

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை :

இவ்வகையாற் சிறந்த நாடு இது என்கின்றது.
நற்றவம் = வீடுபேறுகருதிச்செய்யும் தவம் — தவம் — மறுமை கருதிச் செய்யும் தவம் நற்பொருள் = கல்வி பொருள் = செல்வம் வெற்ற வின்பம் - வெற்றிபொருத்திய உவகை. விண்ணு = தேவருலகு வட்டமாக = தனக்கு எல்லையாக வைகும் = விளங்கும் இது ஏமாங்கத நாட்டின் சிறப்பு.

[கலிவிருத்தம்]

6 கரும்பிவை கமுகிவை என்று கண்டரிது
அருந்து நெய்யார்தலின் அருந்து மேதிகள்
கரும்புகள் இவையெனக் களையுங் கார்பொழி
சுரும்பியவர் கமுகினைக் குயில்கள் சொல்லுமே? 821

குறிப்புரை :

கோசலநாட்டிற் கரும்பு கமுகையொத்து வளமாக விளங்கு மென்கின்றது.
மேதிகள் = எருமைகள் சுரும்பு = வண்டு.

[வேறு]

7 நெறிகடந்து பரந்தன நீத்தமே
குறிய ழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயும் மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே 822

குறிப்புரை :

நீத்தம் = நீர்வெள்ளம் குறி = பூசிய அடையாளம்
மருங்குல் = இடை வெறி = நறு நாற்றம்.

8 கூற்றமில்லையோர் குற்றமில் லாமையாற்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் செய்கையால்
அற்றல் நல்லற மல்லதி லாமையால்
ஏற்றமல்ல திழிதக வில்லையே. 823

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

கூற்றம் = யமன் சீற்றம் = சினம் ஆற்றல் = செய்தல்
ஏற்றம் = உயர்வு சிறப்பு.

[வேறு]

9 சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேல்லார்
செல்வமே போறறலே நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே. 824

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

ஏமாங்கத நாட்டு மருதவளம் கூறுகின்றது.
சொல் = நெற்பயிர் ஈன்று = விளைந்து
மேலலார் = தாழ்ந்தோர் நிறுவி = நிமிர்ந்து
இறைஞ்சி = பணிந்து காய்த்த = காய்ந்தன.

10 மோடு கொண்டெழும் மூரிக்கழை கரும்
பூடுகொண்ட பொதும்ப ருடன் வீராய்த்
தோடு கொண்ட பைங் காய்கதிர்ச் செந்நெலின்
காடுகொண்டது கண்ணக நாடெலாம். 825

**குறிப்புரை :**

மோடு = பருமை மூரிக்கழை = முற்றிய கரும்பு
பொதும்பர் = சோலை தோடு = தொகுதி பைங்காய்
பசுங்கதிர் கண்ணகநாடு = இடமகன்ற நாடு சுரமை
நாட்டுவளம் இத்தகையது.

11 வானிலங் கருவியவரையும் முல்லைவாய்த்
தேனிலங் கருவிய திணையுந் தேறல் சேர்
பானலங் கழனியும் கடலும் பாங்கணி
நானிலங் கலந்து பொன் நாலும் நாடதே. 826

[சூளாமணி]

**குறிப்புரை :**

அருவியவரை = அருவிகளையுடையமலை தேறல் = தேன்
பானல் = நீலோற்பலமலர் கழனி = வயல்
கூடல் = நெய்தல்நிலம் இது நானில வளமும் உடையது அந்நாடு என்கிறது.

12 செந்நெலங் கரும்பினோ டிகலுந் தீஞ்சுவைக்
கன்னலங்கரும்புதான் கமுகைக் காய்ந்தெழும்
இன்னவை காண்கிலன் என்று பூகமும்
முன்னிய முகில்களான் முகம்பு தைக்குமே. 827

**குறிப்புரை :**

கோசலநாட்டில் செந்நெற் பயிர் கரும்பை ஒத்தும் கரும்பு கமுகத்தை ஒத்தும் காணலால் பாக்குமரம் மேகத்தால் தம்முகம் புதைத்துக்கொள்ளும் என்கிறது.
பூகம் = பாக்குமரம் முகில் = மேகம் புதைக்கும் = மூடிக் கொள்ளும்.

[வேறு]

13 சங்க நித்தில முங்கட லிப்பியும்
தெங்கந் தீங்குலை யூறிய தேறலும்
வங்க வாரியும் வார்வலை வாரியும்
தங்குவாரிய தண்டக நாடெலாம். 828

**குறிப்புரை :**

சங்க நித்திலம் = சங்கினது முத்து சிப்பி = கிளிஞ்சல்
தேறல் = கள் வங்கம் = கப்பல் வாரி = வருவாய்
வலை = மீன்வலை வாரி = வருவாய்
வாரிய = வருவாயை உடையன.

[அறுசீர் விருத்தம்]

14 ஆலைவாய்க் கரும்பின் தேனும்
அரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் தேனும்
தொடைபிழி இருலின் தேனும்
மாலைவாய் உகுத்த தேனும்
வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வுண்டு
மீனெலாங் களிக்குமாதோ. 829

குறிப்புரை :

தொடை = தேனடை இருல் = தேன்கூடு
வரம்பு = வரப்பு வங்கவேலை = வங்கக்கடல்
களிக்கும் = கள்ளுண்டு மகிழும்.

15 வரம்பெலாம் முத்தம் தத்தும்
மடையெலாம் பணிலம் மாநீர்க்
குரம்பெலாம் செம்பொன், மேதிக்
குழியெலாங் கழுநீர்க் கொள்ளை
பரம்பெலாம் பவளஞ் சாலிப்
பரப்பெலாம் அன்னம் பாங்கர்க்
கரம்பெலாம் செந்தேன் சந்தக்
காவெலாங் களிவண் டீட்டம். 830

குறிப்புரை :

வரம்பு = வயல் வரப்பு. மடை = நீர்மடை.
பணிலம் = சங்கு. மேதி = எருமை. குழி = குளம்.
கொள்ளை = கூட்டம். சாலிப்பரப்பு = நெல்வயல்
கா = சோலை,

16 வெண்டளக் கலவைச் சேறும்
குங்கும விரைமென் சாந்தும்
குண்டலக் கோல மைந்தர்
குடைந்த நீர்க் கொள்ளை சாற்றில்
தண்டலைப் பரப்புஞ்சாலி
வேலியுந் தழீஇய வைப்பும்
வண்டலிட் டோடும் மண்ணும்
மதுகரம் மொய்க்குமாதோ. 831

[இராமவதாரம்]

குறிப்புரை :

கலவை = சாந்து. விரை = நறுமணம்.
குடைந்த நீர் = மூழ்கி விளையாடும் நீர்நிலைகள்.
தண்டலை = சோலை. வைப்பு = நிலங்கள், மதுகரம் = வண்டு

[மருட்பா]

17 பெருநீரால் வாரி சிறக்க இருநிலத்
திட்டவித் தெஞ்சாமை நாறுக நாறூர
முட்டாது வந்து மழைபெய்க பெய்தபின்
ஒட்டாது வந்து கிளைபயில்க அக்கிளை
பால்வார் பிறைஞ்சிக் கதிரீன அக்கதிர்
ஏர்கெழு செல்வர் களம்நிறைக அக்களத்துப்
போரெலாம் காவாது வைகுக போரின்
உருகெழும் ஓதை வெரீஇப் பெடையொடு
நாரை இரியும் விளைவயல்
யாணர்த்தாகவவன் அகன்றலை நாடே. 832

[தகடூர் யாத்திரை]

குறிப்புரை :

வாரி = நீர்வரவு. நாறுக = முளைப்பதாக. நாறு = நாற்று
கிளை = பக்கக்கிளை. இறைஞ்சி = தலைசாய்த்து.
போர் = நெற்போர். உருகெழும் ஓதை = அச்சந்தரும் ஆரவாரம்
வெரீஇ = அஞ்சி. இரியும் = பறந்து செல்லும்.
யாணர்ந்தாக = புதுவருவாயை உடையதாகுக.

[ஆசிரியப்பா]

18 திருவுடைத் தம்ம பெருவிறற் பகைவர்
பைங்கண் யானைப் புணர்நிரை துமிய
உரந்துரந் தெறிந்த கறையடிக் கழற்கால்
கடுமா மறவர் கதழ்தொடை மறப்ப
இளை இனிது தந்து விளைவுமுட் டுறுது
புலம்பா உறையுள் நீதொழி லாற்றலின்
விடுநிலக் கரம்பை விடரளை நிறைய
கோடை நீடக் குன்றம் புல்லென
அருவியற்ற பெருவறற் காலையும்
நிவந்துகரை இழிதரும் நனந்தலைப் பேரியாற்றுச்
சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇயர்
உவலைசூடி உருத்துவரு மலிர்நிறைச்
செந்நீர்ப் பூசலல்லது
வெம்மை யரிதுநின் அகன்றலை நாடே. 833

[பதிற்றுப்பத்து]

குறிப்புரை :

திருவுடைத்து = செல்வமுடைத்து. விறல் = வெற்றி.
துமிய = அழிய. கழற்கால் = வீரக்கழல் கட்டியகால்
மறவர் = வீரர். முட்டுறுது = முட்டுபாடுறுமல். விடர் = பிளப்பு
அளை = வளை வறற்காலை = வற்றியகாலத்து.
நனந்தலை = இடமகன்ற. வியன்புலம் = அகன்ற இடம்
மிகீஇயர் = மிகுவதாகுக. மலிர்நிறை = வெள்ளப்பெருக்கு.
பூசல் = ஆரவாரம். வெம்மை = துன்பம்.

[ஆசிரியப்பா]

19 தாமரை வண் கிழங்கு விரவி ஒரங்குக்
கருமலங்கு மிளிரக்கொழு முகந்தியக்கிய
பழஞ்சேற்றுப் பரப்பிற் பருமுத லெடுத்து
நெடுங்கதிர் இறைஞ்ச வாங்கிக் கால் சாய்த்து
வாளிற்றுமித்த சூடே மாவின்
சினைகளைந்து பிறக்கிய போரே எருத்தின்
கவையடி வைத்த வுணவே, மருதின்
கொழுநிழற் குவைஇய குப்பையோடனைத்தினும்
மலர்மகிழ் தூங்க உலகுபுறந்தரூஉம்
மாவண் சோணாட் டூர்தொறும்
ஏரோர் களவழி வாழிய நெடிதே. 834

[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

ஓராங்கு = ஒரு சேர. மலாங்கு = ஒருவகைமீன்.
கொழு = ஏர்முனை. வாங்கி = வளைத்து. துமித்த = அறுத்த
சூடு = நெற்கதிர். கவையடி = பிளந்த குளம்புள்ள பாதம்
புறந்தரூஉம் = பாதுகாக்கும். களவழி = நெற்களத்தில்
இரவலர்க்கு வழங்கி மகிழும் செயல்.

## அதிகாரம்—34

# அரண்

அரணாவது : இலைகிடங்குகளானும் பொறிகளானும் உயர்ந்து திண்ணிதாயமைந்து பகைவராற்கொள்ளுதற்கரிதாக எழுப்பப்பெற்ற செயற்கைக் காவல் மதிலும் இயற்கையாயமைந்த காடும், களரும், நீரும் மலையுமாம்.

[நேரிசை வெண்பா]

1 **நீண்ட நீர்க்காடு களர்நிவந்து விண்தோயும்**
**மாண்ட மலைமக்கள் உள்ளிட்டு — மாண்டவர்**
**ஆய்ந்த இவ்ஐந்தும் அரணு உடையானை**
**வேந்தனு நாட்டல் விதி.** 835

[சிறுபஞ்சமூலம்]

**குறிப்புரை :**

நீண்ட நீர் = பெரிய அகழி. களர் = தரிசுநிலம்.
மாண்டவர் = மாட்சிமையுடையார். ஐந்து = நீர் அரண், நில அரண், காட்டரண், மலையரண், மதிலரண் என்பவை.
நாட்டல் = அமைத்தல். விதி = இலக்கணமுறை.

2 **அமையா இடத்தோர் அரும்பொருள் வைத்தால்**
**இமையாது காப்பினும் ஆகா — இமையாரும்**
**அக்காலத் தோம்பி அமிழ்துகோட்பட்டமையின்**
**நற்காப்பின் தீச்சிறையே நன்று.** 836

[பழமொழி]

12 களமர் பலரானும் கள்ளம் படினும்
வளம்மிக்கார் செல்வம் வருந்தா—விளைநெல்
அரிநர் அணைத்திறக்கும் ஊர அறுமோ
நரிநக்கிற் றென்று கடல். 878

**குறிப்புரை :**

நரிநக்கிற்று எனக் கடல்நீர் வற்றாது அதுபோலக் களத்தில் வினைபுரிவார் களவு செய்யினும் பெருவளமுடையார் செல்வம் குறையாது என்பது.

வருந்தா = குறையா அறுமோ = வற்றிவிடுமோ.

13 அருமை யுடைய பொருளுடையார் தங்கண்
கருமம் உடையாரை நாடார்—எருமைமேல்
நாரை துயில்வழியும் ஊர! குளந்தொட்டுத்
தேரைவழிச் சென்றா ரில். 879

**குறிப்புரை :**

செல்வம் உடையாரிடத்துப் பணிபுரிவோர் தாமே வந்து சேர்வர் என்பது.

கருமம் = வினைபுரிதல் நாடார் = தேடிச் செல்லமாட்டார்

தேரைவழிச் சென்றாரில் = தேரையை (தவளைகளை)த் தேடிக் கொணரச் செல்வார் இல்லை.

[இன்னிசை வெண்பா]

14 நோக்கி யிருந்தார் இமைக்கும் அளவின்கண்
ஒப்பப் படினும் உணங்கலைப் புட்கவரும்
போற்றிப் புறந்தந்தக் கண்ணும் பொருளினைக்
காப்பாரின் பார்ப்பார் மிகும். 880

**குறிப்புரை :**

நோக்கியிருந்தார் = காவல் செய்வார் ஒப்ப = விரட்ட

உணங்கல் = காயவைத்துள்ள பொருளை புள் = பறவை

பார்ப்பார் = கவர்ந்து கொள்ளக் காலம் பார்த்திருப்பவர்

மிகும் வலியராவார்.

15 அருளுடை யாரும்மற் றல்லா தவரும்
பொருளுடை யாரைப் புகழாதா ரில்லை
பொருபடைக் கண்ணுய்! அதுவால் திருவுடையார்
பண்டம் இருவர் கொளல். 881

குறிப்புரை :

கருத்து வேறுபா டுடையாராயினும் பண்டம் வாங்குதலில் ஒப்பார் அதுபோலச் செல்வமுடையாரை அருளுடையாரும் புகழ்வர் வறியவரும் புகழ்வர் என்றவாறு.
இருவர் = முரண்பட்டநிலையினர்.

[பழமொழி]

[கலிவிருத்தம்]

16 செய்க பொருள்யாரும் செறுவாரைச் செறுகிற்கும்
எஃகு பிறிதில்லை இருந்தேஉயி ருண்ணும்
ஐயமில்லை இன்பம் அறனோ டவையுமாக்கும்
பொய்யில் பொருளே பொருள்மற்றல்ல
பிறபொருளே. 882

குறிப்புரை :

செறுவாரை = பகைவரை செறுகிற்கும் = வென்றழிக்கும்
எஃகு = போர்க்கருவி பொய்யில்பொருள் = வற்றியழியாத
பெரும்பொருள்.

17 பொன்னினாகும் பொருபடை யப்படை
தன்னினாகும் தரணி தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங்காலைத் துன்னாதன வில்லையே. 883

குறிப்புரை :

பொருள் இருப்பின் அதனால் அடைய இயலாததொன்றுமில்லை என்பது.
பொருபடை = போரிடும் நால்வகைச் சேனைகள்.

## அதிகாரம்—76

# குதிரை மறம்

[குதிரை மறமாவது : போர்க் களத்தின்கண் சமர்புரியும் மறவர் ஏறிச்செலுத்தும் குதிரைகளின் தறுகண்மையாம்.]

[நேரிசை வெண்பா]

1 தாங்கன்மின் தாங்கன்மின் தானை விறன்மறவிர்
ஓங்கல் மதிலுள் ஒரு தனிமா—ஞாங்கர்
மயிரணியப் பொங்கி மழைபோன்று மாற்றார்
உயிருணிய ஓடிவரும். 1347

**குறிப்புரை :**

தாங்கன்மின் = தடுக்காதீர் தானை = சேனை
ஓங்கல் மதிலுள் = மலைபோன்ற மதிலினுள் மா = குதிரை
மயிர் = பிடரி, மாற்றார் = பகைவர், உயிருணிய = உயிரை உண்ணுதற்கு.

2 குந்தங் கொடுவிற் குருதிவேல் கூடாதார்
வந்த வகையறியா வாளமருள்—வெந்திறல்
ஆர்கழல் மன்னன் அலங்குளைமா வெஞ்சிலை
வார்கணையின் முந்திவரும். 1348

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

குத்தம் = குந்தாலிப் படைக்கருவி, கூடாதார் = பகைவர்
அமருள் = போருள், அலங்குளை = அசைஅன்ற பிடரி,
மா = குதிரை, வெஞ்சிலை = கொடியவில், கணையின் = அம்புபோல.

3 நிரை கதிர்வேல் மாறனை நேர்நின்றார் யானைப்
புரைசையற நிமிர்ந்து பொங்கா—அரசர்தம்
முன்முன்னா வீழ்ந்தார் முடிகள் உதைத்தமாப்
பொன்னுரைகல் போன்ற குளம்பு. 1349

[முத்தொள்ளாயிரம்]

**குறிப்புரை:**

மாறன் = பாண்டிய மன்னன், புரசை = யானையின் மேலிடும் கயிறு, பொங்கா = கோபித்து, முடிகள் = கிரீடங்கள், உதைத்தமா = மிதித்துவரும் குதிரை, குளம்பு = காற்குளம்பு.

[பஃறொடை வெண்பா]

4 அடுதிறல் முன்பினன் ஆற்ற முருக்கிப்
படுதலை பாறுண்ண நூறி வடியிலைவேல்
வீசிப் பெயர்பவன் ஊர்ந்தமாத் தீதின்றி
நாண்மகிழ் தூங்கும் துடியன் துடிகொட்டும்
பாணியிற் கொட்டும் குளம்பு. 1350

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

முன்பினன் = வலிமையுடையான், முருக்கி = தொலைத்து, படுதலை=வெட்டப்பட்டதலைகள், பாறுண்ண = பருந்துகள் உண்ணுமாறு, நூறி = சிதைத்து, ஊர்ந்த = ஏறிவந்த, மா = குதிரை. மகிழ் = கள். தூங்கும்=பருகித்திளைக்கும், பாணியின் = தாளத்திற் கேற்ப, கொட்டும் = தாளமிடும்.

[கலிவிருத்தம்]

5 கறங்கெனக் காலச்சக் கரங்கள் தாமெனா
மறங்கிளர் மன்னவர் மகுடம் எற்றியும்
உறங்கலிற் கடாக் களிற் றுச்சி மேலுமாய்த்
திறங்கிளர் புரவிகள் திரிதர் கின்றதே. 1351

[சூளாமணி]

**குறிப்புரை :**

கறங்கு என = காற்றுடிபோல, மறங்கிளர் = வீரமிக்க, எற்றியும் = காலால் எற்றியும், உறங்கலில் = உறங்காத, திறங்கிளர் = வலிமை மிக்க, புரவிகள் = குதிரைகள்.

[ஆசிரியப்பா]

6 பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
உழுத்ததர் உண்ட ஓய்நடைப்புரவி
கடல்மண்டு தோணியின் படைமுகம் போழ
நெய்ம்மிதி யருந்திய கொய்சுவல் எருத்தின்
தண்ணடை மன்னர் தாருடைப் புரவி
அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிரின் இகந்து நின்றவ்வே. 1352

[புறநானூறு]

**குறிப்புரை :**

உழுத்ததர் = உழுந்தின்தவிடு, ஓய்நடை = நுணுகிய நடை, தோணி = படகு, போழ = பிளக்க, நெய்ம் மிதி = நெய் கலந்த சோறு, தண்ணடை = மருதநிலம், கோட்டம் = கோயில், கலந்தொடாமகளிர் = கைம்பெண்டிர், இகந்து = ஒதுங்கி, நின்றவ்வே = நின்றன.

7 நிலம்பிறக்கிடுவது போலக் குளப்பு கடையூஉ
உள்ளம் அழிக்கும் கொட்பின் மான்மேல்
எள்ளுநர்ச் செகுக்கும் காளை கூர்த்த
வெந்திறல் எஃகம் நெஞ்சு வடுவிளைப்ப
ஆட்டிக் காணியவருமே, நெருநை
உரைசால் சிறப்பின் வேந்தர் முன்னர்
கரை பொரு முந்நீர்த் திமிலின் போழ்ந்தவர்
கயந்தலை மடப்பிடி புலம்ப
இலங்கு மருப்பியானை எறிந்த எற்கே. 1353

[புறநானூறு]

**குறிப்புரை :**

பிறக்கிடுவதுபோல் = பின்னே செல்வது போல, கடையூ = செலுத்தி, கொட்பின் = சுழன்று செல்லுதலையுடைய, மான் = குதிரை, காளை = மறவன், ஆட்டி = சுழற்றி, காணிய = காணுதற்கு, நெருநை = நேற்று, உரை = புகழ், திமிலின் = படகு போல, கயந்தலை = மெல்லிய தலை, எறிந்த = எறிந்து கொன்ற, எற்கே = என்னிடத்தே,

8 கொடுங்குழை மகளிர் கோதை சூட்டி
நடுங்குபனிக் களைஇயர் நாரரி பருகி
வளிதொழில் ஒழிக்கும் வண்பரிப் புரவி
பண்ணற்கு விரைதி நீயே நெருநை
எம்முற்றப்பி யோன் தம்பியொ டொராங்கு
நாளைச் செய்குவன் அமர் எனக் கூறிப்
புன்வயி றருத்தலும் செல்லான் வன்மான்
கடவும் என்பபெரிதே அதுகேட்டு
வலம்படு முரசின்வெல் போர் வேந்தன்
இலங்கிடும் பாசறை நடுங்கின்று
இரண்டா காதவன் கூறிய தெனவே. 1354

[புறநானூறு]

குறிப்புரை :

குழை = காதணி, கோதை = மாலை, பனி = குளிர், களைஇயர் நீக்குதற்காக, நாரரி = கள், வளி = காற்று, எம்முன் = என்முன்னோனை, தப்பியோன் = தவறச் செய்தவன், ஒராங்கு = ஒருசேர, அருத்தலும் செல்லான் = உணவு உண்ணுதலையும் செய்யான், மான் = குதிரை, கடவும் = செலுத்தும், வலம் = வெற்றி கூறிய வஞ்சினம் இரண்டுபடாது என்றவாறு.

9 உருவப் புள்ளினுள் உட்குவரு கடுந்திறற்
குருகு பறந்தன்ன வெள்ளை மா யோன்
முடுகுமா மாயனிவன் யாவன் கொல்லோ
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
நண்ணார் நடுவட் டோன்றித்தன்
பண்ணியற் புரவி பாய்தல் தருமே. (?) 1355

குறிப்புரை :

உருவப்புள் = கருடன், மாயோன் = திருமால், நண்ணார் = பகைவர், பாய்தல் தரும் = பாயச் செய்யும் இதன் இடையே சிலவரிகள் சிதைந்துள்ளன,

## அதிகாரம்—78

## யானை மறம்

[யானைமறமாவது: போர்க்களத்துப் போர்புரியும் யானைப் படையின் தறுகண்மையாம்.]

[நேரிசை வெண்பா]

1 அடக்கருந் தானை அலங்குதார் மன்னர்
விடக்கு முயிரும் உணியக்—கடற்படையுட்
பேயும் எருவையுங் கூற்றுந்தன் பின்படரக்
காயுங் கழலான் களிறு. 1356

[புறப்பொருள் வெண்பா மாலை]

**குறிப்புரை:**

அலங்குதார் = அசைகின்ற மாலை, விடக்கு = உடம்பின் தசை, உணிய = உண்ண, எருவை = கழுகு, பின்படர = பின்வர, காயும் = கோபித்துவரும்.

2 வீறுசால் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற எறிந்த பரிசயத்தால்—தேருது
செங்கண் மாக்கோதை சினவெங்களி யானை
திங்கள் மேல் நீட்டுந்தன் கை. 1357

**குறிப்புரை:**

தாமம் = மாலை, பாற = கிழியுமாறு, பரிசயம் = பழக்கம், தேருது = தெளியாமல், கோதை = சேரமன்னன், நீட்டும் = மன்னர் தம் வெண்குடையென்று கருதி அழித்தற்கு உயர்த்தும்.

3 அயிற்கதவம் பாய்ந்துழக்கி ஆற்றல்சால் மன்னர்
எயிற்கதவம் கோத்தெடுத்த கோட்டாற்—பனிக்
கடலும்
பாய்தோய்ந்த நாவாய்போல் தோன்றுமே எங்கோ
மான்
காய்சினவேற் கோதை களிறு. 1358

குறிப்புரை :

அயிற்கதவம் = இரும்புக்கதவு, உழக்கி = அழித்து, எயில் = மதில், கோட்டால் = கொம்புகளால், தோய்ந்த = கட்டிய, நாவாய் கப்பல், கோமான் = அரசன்

4 மருப்பூசி யாக மறங்கனல் வேல் மன்னர்
உருத்தகு மார்போலை யாகத் — திருத்தக்க
வையக மெல்லாம் எமதென் றெழுதுமே
மொய்யிலைவேல் மாறன் களிறு. 1359

குறிப்புரை :

மருப்பூசியாக = கொம்புகள் எழுத்தாணியாக, உருத்தகு = அஞ்சத்தக்க, மார்போலையாக = மார்புகள் எழுதப்படும் ஓலையாக, மாறன் = பாண்டியன்.

5 உருவத்தார்த் தென்னவன் ஓங்கெழில் வேழத்து
இருகோடும் செய்தொழில் வேறால் — ஒருகோடு
வேற்றூர் அகலம் உழுமே ஒருகோடு
மாற்றூர் மதில்திறக்கு மால். 1360

குறிப்புரை :

உருவத்தார் = அழகியமாலை, வேழம் = யானை, இருகோடும் = இரண்டு கொம்புகளும், வேற்றூர் = பகைவர் மதில் = மதிற்கதவை.

6 கொடி மதில் பாய்ந்திற்ற கோடும் அரசர்
முடியிடறித் தேய்ந்த நகமும் — பிடி முன்பு
பொல்லாமை நாணிப் புறங்கடை நின்றதே
கல்லார்தோட் கிள்ளி களிறு. 1361

குறிப்புரை :

கொடி மதில் = கொடி பறக்கும் மதில், இற்ற = ஒடிந்த, கோடு = கொம்பு, பிடி = பெண் யானை, பொல்லாமை = சிறவாமை, புறங்கடை = புறத்தே, கல்லார் தோள் = மலைபோன்ற தோள், கிள்ளி = சோழ மன்னன்.

[இன்னிசை வெண்பா]

7 கச்சி ஒருகால் மிதியா ஒருகாலால்
தத்துநீர்த் தண்ணுஞ்சை தான்மிதியாப்—பிற்றையும்
ஈழம் ஒருகால் மிதியா வருமேநம்
கோழியர்கோக் கிள்ளி களிறு. 1362

**குறிப்புரை :**

கச்சி = காஞ்சிபுரம், தண்ணுஞ்சை = தண்ணிய உச்சினி மாநகர், ஈழம் = இலங்கை, மிதியா = மிதித்து, கோழியார்கோ = உறையூரினர் தம் மன்னவன்.

[நேரிசை வெண்பா]

8 தோற்ற மலைகடல் ஓசை புயல்கடாஅங்
காற்றின் நிமிர்ந்த செலவிற்றாய்க்—கூற்றும்
குறியெதிர்ப்பைக் கொள்ளும் தகைமைத்தே
யெங்கோன்
எறிகதிர்வேல் மாறன் களிறு. 1363

**குறிப்புரை :**

தோற்றம் = உருவம், ஓசை = எழுப்பும் ஓசை,
புயல் = மழை, கடாம் = மதநீர், நிமிர்ந்த = விரைந்த,
செலவு = நடை, கூற்றும் = யமனும்,
குறியெதிர்ப்பு = எதிர்பார்ப்பு, கோன் = அரசன்.

9 பாற்றின மார்ப்பப் பருந்து வழிபட
நாற்றிசையும் ஓடி நரி கதிப்ப—ஆற்ற
அலங்கலம் பேய்மகளிர் ஆட வருமே
இலங்கிலைவேற் கிள்ளி களிறு. 1364

**குறிப்புரை :**

பாற்றினம் = கழுகுக் கூட்டம், ஆர்ப்ப = ஆரவாரம் செய்ய,
வழிபட = பின்தொடர, கதிப்ப = ஊளையிட,
இலங்கு = விளங்குகின்ற, கிள்ளி = சோழ மன்னன்.

10 அடுமதில் பாய அழிந்ததன் கோட்டைப்
பிடிமுன் பழகழிதல் நாணி—முடியுடை
மன்னர் குடரால் மறைக்குமே செங்கனல் வேல்
தென்னவர் கோமான் களிறு, 1365

குறிப்புரை:

அடுமதில் = போரிடும் மதில், பாய = பாய்ந்து குத்தியதனுல், கோட்டை = கொம்புகளை, பிடி பெண் யானை, அழகழிதல் = அழகுகெட்டிருத்தலை, செங்கனல் = செந்நெருப்பு, தென்னவர் கோமான் = பாண்டிய மன்னன்.

11 இருங்களி ......ன்ற மடப்பிடி சாரல்
இருங்கருவி நீராற் றெளி......நலங்கிளர்வேற்
றுன்னரும்போர்க் கோதை துடா செருக்கின்.......
மன்னர் மதிலாய வென்று. 1366

[முத்தொள்ளாயிரம்]

குறிப்புரை :

இப்பாடல் சிதைந்துள்ளது. செம்மையான பாடம் கிடைக்க வில்லை.

12 மம்மர் விசும்பின் மதியும் மதிப்பகையும்
தம்மிற் றடுமாற்றம் போன்றதே—வெம்முனையிற்
போர்யானை மன்னர் புறங்கவித்த வெண்குடையைக்
கார்யானை அன்றடர்த்த கை. 1367

குறிப்புரை :

மம்மர் = மயக்கம். விசும்பு = ஆகாயம், மதி = திங்கள் மதிப்பகை = பாம்பு (இராகு), வெம்முனை = போர்க்களம், புறங்கவித்த = புறத்தே கவியச் செய்த, கார்யானை = கரிய யானை, அடர்த்த = அழித்த, கை = துதிக்கை.

13 வான்ரேய் கழுகினமும் வள்ளுகிர்ப் பேய்க்கணமும்
ஊன்ரேய் நரியும் உடன்ரெக்க—மூன்றும்
கடமா நிலநனைக்கும் கார்யானைக் கிட்ட
படமாறு நீப்பதனைப் பார்த்து. 1368

**குறிப்புரை :**

வான் = ஆகாயம். உகிர் = நகம், பேய்க்கணம் = பேய்க் கூட்டம், ஊன் = தசை, உடன்தொக்க = ஒன்று கூடிய, கடம் = மதநீர், நிலம் நனைக்கும் = தரையை ஈரம் செய்யும், படம் = முகபடாம், நீப்பதனை = நீக்குதலை.

14 மாயத்தாற் ருக்கும் மலையும் மலையும் போற்
காயத்தூ றஞ்சாக் களிற்ரெடும் போய்ச்—சாயும்
தொலைவறியா ஆடவரும் தோன்றினர் வான்மேல்
மலையுறையுந் தெய்வம்போல் வந்து. 1369

[பெரும்பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

மாயத்தால் = வஞ்சனையால், தாக்கும் = போரிடும், காயம் = புண், ஊறு = துன்பம், சாயும் = வீழ்ந்துவிடும், ஆடவர் = வீரர், மலையுறையும் தெய்வம் = முருகவேள்.

[கலிவிருத்தம்]

15 தெறியா நடை மாவவொடு தேர்களெடுத்
தெறியா வகையா துகொ லேறுகரம்
பறியா முறியா படையோர் படையும்
செறியா மதயானை திரிந்தனவே 1370

**குறிப்புரை :**

தெறியாநடை = தெறுத்துச் செல்லும் நடை. மா = குதிரை, ஏறு = களிறு, பறியா = பறித்து, முறியா = முறித்து, செறியா = கட்டப்படாத.

[ஆசிரியப்பா]

16 ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே
கார்ப்பெய லுருமின் முழங்க லானாதே
யார்கொல் அளியர் தாமே யாராற்
செறியத் தொடுத்த கண்ணி 1371
.... .... — மன்னன் கைப்பட்டோரே

**குறிப்புரை:**

ஆர்ப்பு = ஆரவாரம், உருமின் = இடியைப் போல
முழங்கல் = பிளிற்றி ஒலித்தல், ஆனாது = அமையாது.

## அதிகாரம்—79

# மூதின் மறம்

[மூதில் மறமாவது வீரக்குடியிற் பிறந்து மக்களை ஈன்று புறந் தந்த முதுமகளின் தறுகண்மையாம்]

[ஆசிரியப்பா]

1 ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
தண்ணடை நல்கல் வேந்தருக்குக் கடனே
ஒளிறு வாளருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே 1372

[புறநானூறு]

**குறிப்புரை:**

புறந்தருதல் = பேணி வளர்த்தல், சான்றோனாக்குதல்=பெரு வீரனாகச் செய்தல், தண்ணடை = விளைநிலங்கள்,
அருஞ்சமம் = போர், முருக்கி = வென்று,
எறிந்து = அழித்து, காளை = மறக்குடிமகன்,
கடன் = கடமை.

2 வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்னோர் இளையர் இருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள்ள றுவை போர்பித்திலதே 1373

[புறநானூறு]

**குறிப்புரை :**

யாடு = ஆடு. செச்சை = ஆட்டுக்கடாய், அன்னோர் = ஒத்தவர், மண்டை = (கள் நிறைந்த பாத்திரம்) உண்கலம், கால்கழிகட்டில் = பாடை, அறுவை = ஆடை.

3 தோரு தோரு என்றித் தோலொடு
துறுகல் மறையினும் உய்குவை போலாய்
நெருநல் எல்லை நீ எறிந்தோன் றம்பின்
அகல்பெய் குன்றியின் சுழலுங் கண்ணன்
பேரூரட்ட கள்ளிற்கு
ஓரிற்கோயிற் றேருமால் நின்னே 1374

[புறநானூறு]

**குறிப்புரை :**

தோரு + தோல்தா = கேடகப் படையைத் தருவாயாக, என்றி = என்கின்றாய், துறுகல் = குண்டுக்கல், மறையினும் = மறைத்துக் கொண்டாலும், உய்குவை = பிழைப்பாய், நெருநல் = நேற்று, எறிந் தோன் = வெல்லப்பட்டவன், தம்பின் = தம்பி, அகல்பெய் குன்றியின் = அகலில் இட்ட குன்றிமணிபோல, அட்ட = சமைத்த, ஓரிற்கோயிற்றேருமால் = ஒருவீட்டி னுள்ளே கள்ளிருக்கும் சாடியைத் தேடுவது போலத் தேடு கின்றான்.

4 எற்கண் டறிகோ எற்கண் டறிகோ
என்மகன் ஆதல் எற்கண் டறிகோ
கண்ணே கணைமூழ் கினவே, தலையே
வண்ண மாலை வாள்விடக் குறைந்தன
வாயே, பொருநுனைப் பகழிமூழ்கலின் புலால் வழிந்து
ஆவநாழிகை அம்பு செறித்தற்றே
நெஞ்சே, வெஞ்சரங் கடந்தன, குறங்கே
நிறங்கரந்து பல்சரம் நிறைத்தன, அதனால்
அவிழ்பூ அப்பணைக் கிடந்த காளை
கவிழ்பூங் கழற்றின் காய்போன் றனனே 1375

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

எற்கண்டறிகோ = என்னைக்கண்டு அறிவேனோ? கணை = அம்புகள், வாள்விடக் குறைந்தன = வாள்வீசி வெட்டியதாற் குறைந்தன, நுனை = நுனி, பகழி = அம்பு, ஆவநாழி = அம்புகளை நிறைக்கும் புட்டில் (அம்பறாத்தூணி), வெஞ்சரம் = கொடிய அம்புகள், அப்பணை = அம்புப் படுக்கை, காளை = வீரன், கழற்றின் காய் = கழற்காய்.

5 சிற்றில் நற்றூண் பற்றி நின்
மகன் யாண்டுளனோ என வினவுதி
யாண்டுள னாயினும் அறியேன் ஓரும்
புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே 1376

[புறநானூறு]

**குறிப்புரை :**

சிற்றில் = சிறியவீட்டில், வினவுதி = வினவுகின்றாய். அறியேன் = தெரியேன் ஆயினும், சேர்ந்து = தங்கியிருந்து. கல்லளை = கற்குகை, தோன்றுவன் = காணப்பெறுவான், போர்க்களத்தான் = போர்க்களத்தின் கண்.

6 கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதில் மகளிர் ஆதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற் கிவள் தன்னை
யானை எறிந்து களத்தொழிந் தனனே
நெருநல் உற்ற செருவிற் கிவள் கொழுநன்
பெருநிரை விலங்கி ஆண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே. 1377

[புறநானூறு]

குறிப்புரை :

கெடுக = அழிவதாக, கடிது = மிக்கது, மூதில் = மறக்குடி, தகும் = பொருந்தும், மேனாள் = நேற்று முன்னாள், செருவிற்கு = போருக்கு, தன்னை = தந்தை, நெருநல் = நேற்று, கொழுநன் = கணவன், விலங்கி = தடுத்துப் போரிட்டு, பட்டனன் = இறந்தான், செருப்பறை = போர் முரசு, வெளிது = வெள்ளாடை, உடீஇ = உடுத்து, பாறுமயிர் = பிரிந்து கிடந்த தலை மயிர், செருமுகம் = போர்க்களம், விடும் = அனுப்பும்.

7 வாதுவல் வயிறே வாதுவல் வயிறே
நோலா தோனகத் துன்னீன் றனனே
பொருந்தா மன்னர் அருஞ்சமம் முருக்கி
அக்களத் தொழிதல் செல்லாய், மிக்க
புகர்முகக் குஞ்சரம் எறிந்த எஃகம்
அதன் முகத் தொழிய நீபோந் தனையே
எம்மில் செய்யா அரும்பழி செய்த
கல்லாக் காளையை ஈன்ற வயிறே. 1378

[தகடூர்யாத்திரை]

குறிப்புரை :

வாதுவால் = அறுப்பேன். நோலா = மறக்குடிக்குரிய நோன்பு செய்யாத, உன்னீன்றனனே = உன்னைப் பெற்றேனே, முருக்கி = வென்றோடச் செய்து, ஒழிதல் = இறத்தல், போந்தனை = திரும்பிவந்தாய், கல்லா = மறக்குடிப்பண்பினைக்கல்லாத, காளையை = மகனை.

[நேரிசை வெண்பா]

8 தருமமும் ஈதேயாம் தானமும் ஈதேயாம்
கருமமும் காணுங்கால் ஈதாம்—செருமுனையிற்
கோள்வாய் மறவர் தலைதுமிய என்மகன்
வாள்வாய் முயங்கப் பெறின். 1379

குறிப்புரை :

தருமம் = அறம், தானம் = கொடை, கருமம் = கடமை, கோள்வாய் மறவர் = கொள்கைவாய்ந்த வீரர், துமிய = துண்டுபட, வாய்வாள் = வாள்முனை, முயங்கப் பெறின் = தழுவிக்கிடக்கப் பெற்றால்.

9 இன்பம் உடம்புகொண் டெய்துவீர் காண்மினோ
அன்பின் உயிர்மறக்கும் ஆரணங்கு—தன்கணவன்
அல்லாமை உட்கொள்ளும் அச்சம் பயந்ததே
புல்லார்வேல் மெய்சிதைத்த பூண். 1380

[தகடூர்யாத்திரை]

குறிப்புரை :

ஆரணங்கு = (இங்கு) மனைவி, அச்சம் = கைம்மை எய்தும் அச்சம், புல்லார் = பகைவர், மெய் = உடம்பு.

10 முலைத்தா யிரங்கப் புலைப்பறை முழங்க
தம்மிற் சாவார் தம்மில் லோரே
அன்னரல்லர் என் சிறுவர் முன்னிய
வேந்து களத்தவிய நூறி வேந்தரொடு
முளிபுற் கானத்து விளி ... ... ... ... 1381
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ?

**குறிப்புரை :**

முலைத்தாய் = பாலூட்டிய அன்னை, புலைப்பறை புலையன் முழக்கும் சாப்பறை, தம்மில்லோர் = தம்மை உடைய வரல்லர், அவிய = இறந்துபட, நூறி = அழித்து.
இப்பாடல் இறுதி சிதைந்துள்ளது.

11 குரங்கு மேனித் திரங்குமுகச் செதுமுலை
நரைமூதாட்டி வினவுதி யாயின்
நும்மகன் கொல்லோ அறியேன் இம்மகன்
கொற்ற வெண்குடை மன்னர்க் குதவிச்
செஞ்சோற் றருங்கடன் வெட்சமத் தாற்றிக்
களிறுதலை யடுத்து மாகால் நீட்டிப்
பிளிறு குரல் முரசம் மெத்தணையாகப்
பருந்தின் செறுநிழல் பந்த ராக
அழிபிணக் குன்றே வேலியாகக்
கழுகுணக் கிடந்த காளை
நும் மகன் கொல்லோ யானறியேனே. 1382

**குறிப்புரை:**

குரங்குமேனி = கூனல் உற்ற உடம்பு, திரங்கு முகம் = சுருங்கிப்போன முகம், வினவுதியாயின் = கேட்பாயானால்.
செஞ்சோற்றுக்கடன் = நன்றிக்கடன், ஆற்றி = புரிந்து, தலையடுத்து = தலைவைத்து, மா = குதிரை, பிளிறு குரல் = முழங்கும் ஒலி, அணை = படுக்கை, கழுகுண = கழுகுகள் தன் உடம்பைத் தின்ன, காளை = வீரன்.

12 வாழிய துடிய வாழிய துடிய
என் மகன்
ஆர்த்தெறிந் தனனே எறிந்தார்த் தனனே
ஆர்த்தும் எறியான் எறிந்தும் அமரான்
கையது வேலே காலது கழலே

மெய்யது சினனே மேற் சென் றனனே
வேந்த ரெல்லாந் தன்னே க்கினரே
நோக்கி நோக்கான் முறுவலன் தாக்கித்
தழீஇந் தாமெனத் தண்ணுமை
கழித்தான் ஒள்வாள் வீழ்ந்தன களிறே. 1383

குறிப்புரை :

துடிய = துடிகொட்டுவோனே! அமரான் = அமைதியுற மாட்டான், சினனே = கோபம், முறுவலன் = புன்சிரிப் புடையவனாய் தாக்கி = மோதி, "தழீஇந்தாம்" என்பது தண்ணுமையின் முழக்கம், கழித்தான் = உறையினின்று, உருவினன், வீழ்ந்தன = வெட்டுண்டு மாய்ந்தன.

13 மாவா ராதே மாவா ராதே
எல்லார் மாவும் வந்தன, எம்மில்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வன் ஊரும் மாவா ராதே
இருபேர் யாற்ற ஒருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
உலந்தன் று கொல்லவன் மலைந்த மாவே- 1384

[புறநானூறு]

குறிப்புரை :

மா = வீரமகன் ஏறிச்சென்ற குதிரை, செல்வன் = மகன், யாற்ற = ஆற்றினுடைய, கூடல் = சங்கமம், விலங்கிடு பெருமரம் = குறுக்கே அமைந்த மரம், உலந்தன்று கொல் = இறந்து வீழ்ந்ததோ?

14 வேம்பு சினை ஒடிப்பவும் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்
எல்லா மனையுங் கல் லென் றவ்வே
வேந்துடன் றெறிவான் கொல்லோ
நெடிது வந்தன்றால் நெடுந்தகை தேரே, 1385

]புறநானூறு]

**குறிப்புரை :**

சினை = தழைக்கொம்பு, காஞ்சி இரங்கற்பண், ஐயவி = வெண்சிறுகடுகு, கல்லென்று ஒலித்தன, உடன்று = முரண்பட்டு, வந்தன்றால் = வந்தது, நெடுந் தகை = மாவீரன்.

கடல் கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்து வாய் மடிந்து வேல்தலைப் பெயரி
தோடுகைத் தெழுதரூஉத் துரந்தெறி ஞாட்பின்
வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி
இடைப்படை அழுவத்துச் சிதைந்து வேருகிய
சிறப்புடையாளன் மாண்புகண் டருளி
வாடுமுலை ஊறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே. 1386

[புறநானூறு]

**குறிப்புரை:**

கிளர்ந்தன = பொங்கிஞற்போல, கட்டூர் = பாசறை, நாப்பண் = நடுவே, பெயரி = பெயர்த்து, தோடு = தொகுதி கூட்டம், ஞாட்பின் = போர்க்களத்தின், விலங்கி = தடுத்து, அழுவம் = காடு (காடு போன்ற பகைக் கூட்டம்) ஊறி = பால் ஊறி, ஓடாப்பூட்கை = புறங்கொடாத கொள்கை, விடலை = வீரன்.

## அதிகாரம்—80

## களம்

களமாவது : போர் நிகழும் களத்தின் காட்சியாம்.

[இன்னிசை வெண்பா]

1 கவளங் கொள் யானையின் கைகள் துணிக்கப்
பவளம் சொரிதரு பைபோல்—திவளொளிய
ஒண்செங் குருதி ஒழுகும் புனல்நாடன்
கொங்கரை அட்ட களத்து. 1387

குறிப்புரை :

துணிக்க = வெட்டுப்பட, திவள் ஒளிய = விளங்கும் ஒளி யினையுடை, குருதி = இரத்தம், புனல் நாடன் = சோழ மன்னர், கொங்கர் = கொங்கு நாட்டு மன்னர், அட்ட = போரிட்டுக் கொன்ற.

[நேரிசை வெண்பா]

2 உருவக் கடுந்தேர் முருக்கிமற் றத்தேர்ப்
பருதி சுமந்தெழுந்த யானை—இருவிசும்பில்
செல்சுடர் சேர்ந்த மலைபோன்ற செங்கண்மால்
புல்லாரை யட்ட களத்து. 1388

குறிப்புரை :

உருவக்கடுந்தேர் = அழகிய விரைந்து செல்லும் தேர் பருதி = சக்கரம், விசும்பில் = வானில், செங்கண் மால் = சோழன் கோச்செங்கணான், புல்லாரை = பகைவரை.

[இன்னிசை வெண்பா]

3 கொல்யானை பாயக் குடைமுருக்கி எவ்வாயும்
புக்கவா யெல்லாம் பிணம்பிறங்கத் தச்சன்
வினைபடுபள்ளியின் தோன்றுமே செங்கண்
சினமால் பொருத களத்து. 1389

குறிப்புரை :

எவ்வாயும் = எவ்விடத்தும், பிறங்க = விளங்கிக்கிடக்க, வினைபடுபள்ளி = தொழிற் கூடம், செங்கண் சினமால் = கோச் செங்கணான்.

[பஃறொடை வெண்பா]

4 திண்தோள் மறவர் எறியத் திசைதொறும்
பைந்தலை பாறிப் புரள்பனை நன்கெனைத்தும்
பெண்ணையந் தோட்டம் பெருவளி புக்கற்றே
கண்ணார் கமழ்தெரியல் காவிரி நீர்நாடன்
நண்ணாரை யட்ட களத்து. 1390

குறிப்புரை :

பசுந்தலை = குருதிகசியும் வெட்டுண்ட தலைகள், பாறி - சிதைந்து, பெண்ணை = பனைமரம், பெருவளி = புயல் நீர்நாடன் = சோழ மன்னன்.

5 எவ்வாயும ஓடி வயவர் துணித்திட்ட
கைவாயிற் கொண்டெழுந்த செஞ்செவிப் புன்சேவல்
ஐவாய நாகங் கௌவி விசும்பிவரும்
செவ்வாய் உவணத்திற் றோன்றும புனல்நாடன்
தெவ்வரை அட்ட களத்து. 1391

குறிப்புரை :

வயவர் = போர் மறவர், துணித்திட்ட = வெட்டியிட்ட செஞ்செவிப் புன்சேவல் - செய்போத்து, இவரும் எழுந்து பறக்கும், உவணத்திற்றோன்றும் = கருடப்பறவைபோலத் தோன்றும், தெவ்வர் = பகைவர்.

6 செவ்வரைச் சென்னி அரிமானோ டவ்வரை
ஒல்கி உருமிற் குடைந்தற் றால்—மல்கிக்
கரைகொன் றிழிதரும் காவிரி நாடன்
உரைசால் மடப்பிடி மூழ்க அரசொடு
அரசுவா வீழ்ந்த களத்து. 1392

குறிப்புரை:

செவ்வரை = சிவந்த மலை, சென்னி = உச்சி,
அரிமான் = சிங்கம், ஒல்கி = அசைந்து,
உருமிற்கு = இடி ஓசைக்கு, மல்கி = நிறைந்து,
கொன்று = இடித்து, அரசுவா = பட்டத்து யானை.

7 ஓஒ உவமன் உறழ்வின்றி யொத்ததே
காவிரி நாடன் கழுமலங் கொண்டநாள்
மாவுதைப்ப மாற்றார் குடையெல்லாம் கீழ்மேலாய்
ஆவுதை காளாம்பி போன்ற புனல்நாடன்
மேவாரை யட்ட களத்து. 1393

குறிப்புரை:

'ஓஒ' வியப்பு. உவமன் = ஒப்பிடும் பொருள்,
கழுமலம் = சீர்காழி, மா = குதிரை, ஆ = பசு,
காளாம்பி = காளான் குடை, போன்ற = போன்றன,
மேவாரை = பகைவரை.

8 இருநிலம் சேர்ந்த குடைக்கீழ் வரிநுதல்
ஆடியல் யானைத் தடக்கை ஒளிறுவாள்
ஓடாமறவர் துணிப்பத் துணிந்தவை
கோடுகொள் வெண்மதியை நக்கும் பாம்பொக்குமே
பாடார் இடிமுரசின் பாய்புனல் நீர்நாடன்
கூடாரை யட்ட களத்து. 1394

குறிப்புரை:

வரிநுதல் = புள்ளிகளையுடைய நெற்றி,
ஆடியல் = ஆசையும் இயல்புடைய, ஓடா = அஞ்சி
ஓடாத, துணிந்தவை = துண்டுபட்ட உறுப்புக்கள்,
நக்கும் = வாயாற்பற்றும், பாம்பு = இராகு,
பாடார் = பெருமையமைந்த, கூடார் = பகைவர்.

18 வென்றி யாக்கலும் மேதக வாக்கலும்
குன்றி னார்களைக் குன்றென வாக்கலும்
அன்றியும் கல்வி யோடழ காக்கலும்
பொன்றும் சாகத்தினுய் பொருள் செய்யுமே. 884

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

மேதகவு = மேலானதகைமை குன்றினூர் = வறுமையாளர் குன்றென = மலையைப் போலச் செய்தலும் செய்யும் = ஆக்கும்.

[வேறு]

19 குலந்தருங் கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைகள் அழிபசி தீர்க்கும்
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருள் தரப் புன்கண்மை யுண்டோ. 885

[வளையாபதி]

**குறிப்புரை :**

அலந்த = வருத்தமுற்ற கிளை = சுற்றம் பக = பிளக்க வெம்பிய = வெப்பமுற்ற சுரம் = பாலைநிலம் புன்கண்மை = துன்பம். உண்டோ? இல்லை என்றவாறும்.

### அதிகாரம்—37

## படை மாட்சி

படை மாட்சியாவது : நல்லன காத்துத் தீயன விலக்கி ஆட்சி புரியும் அரசர்க்குத் துணையாய படைவீரர்களின் சீரிய பண்பும் செயலுமாகிய மாட்சியாகும்.

[இன்னிசை வெண்பா]

1 போரறின் வாடும் பொருநர்சீர்க்கீழ் வீழ்ந்த
வேரறின் வாடும் மரமெல்லாம் நீர்பாய்
மடையறின் நீள் நெய்தல் வாடும் படையறின்
மன்னர்சீர் வாடி விடும். 886

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை :

வீரர் போரில்லையாயின் வாடுவர் மரம்வேர் அறின்வாடும் நிலம் நீர்பாயும் மடையறின் வாடும் மன்னர் சிறப்பு படைவலி அறின் வாடிவிடும் என்பது.

[நேரிசை வெண்பா]

2 பொய்யகல நாளும்புகழ் விளைத்தல் என்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்
கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி. 887

குறிப்புரை :

வயங்கொலிநீர் = கடல்நீர் கையகல = இடம்விட்டு விலக வாளோடுஎன்றது வீரத்தோடு என்றவாறு.

3 மின்னார் சினஞ்சொரிவேல் மீளிக்கடற் றானை
ஒன்னார் நடுங்க உலாய்நிமிரின்—என்னாங்கொல்
ஆழித்தேர் வெல்புரவி அண்ணல் மதயானை
பாழித்தோள் மன்னர் படை. 888

குறிப்புரை :

மின் = ஒளி மீளி = வலிமை கடற்றானை = கடல் போன்ற பெரியபடை ஒன்னார் = பகைவர் நிமிரின் = எதிர்த்துப் போரிடின் பாழி = வலிமை மன்னர் = பகையரசர் படை = படைவீரர்கள்.

4 தமருட்டலை யாதல் தார்தாங்கி நிற்றல்
எமருள்யாம் இன்னமென் றெண்ணல்—அமரின்
முடுகழலின் முந்துறுதல் முல்லைத்தார் மன்னர்
தொடுகழல் மைந்தர் தொழில். 889

[புறப்பொருள் வெண்பாமாலை]

9 ஞாட்பினுள் எஞ்சிய ஞாலஞ்சேர் யானைக்கீழ்ப்
போர்ப்பில் இடிமுரசின் ஊடுபோம் ஒண்குருதி
கார்ப்பெயல் பெய்தபின் செங்குளக் கோட்டுக்கீழ்
நீர்த்தூம்பு நீர்உமிழ்வ போன்ற புனல்நாடன்
ஆர்த்தமர் அட்ட களத்து. 1395

**குறிப்புரை :**

ஞாட்பினுள் = போர்க்களத்தில், ஞாலம் சேர் = மண்ணில் வீழ்ந்து கிடக்கும், போர்ப்பில் = மேல்தோல் இல்லாத ஊடுபோம் = நடுவேபோகும், கோட்டுக்கீழ் = கரையின் கீழ், நீர்த்தூம்பு = தண்ணீர்பாயும் வாய், உமிழ்வ = வெளிப்படுவன

[நேரிசை வெண்பா]

10 படைப்பொலிதார் மன்னர் பரூஉக்குடர் மாந்திக்
குடைப்புறத்துத் துஞ்சும் இகலன் — இடைப்
பொலிந்த
திங்களிற் றோன்றும் முயல்போலும் செம்பியன்
செங்கண் சிவந்த களத்து. 1396

[களவழி நாற்பது]

**குறிப்புரை :**

பரூஉக்குடர் = பருத்தகுடல், துஞ்சும் = உறங்கும், இகலன் = நரி, முயல் = களங்கம், செம்பியன் = கோச்செங்கணான், சிவந்த = கோபித்துப்போர் செய்த.

11 கைபொருத ஓசையாற் கண்ணுமிழ்ந்த செந்தீயான்
மெய்பொருது தோய்ந்தெழுந்த
வெம்புகையா—றை....
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
எதிர்வேந்தர் செய்த இடம். 1397

[பாரதம்]

குறிப்புரை :

பொருத = மோதிய செந்தீ = கோபத்தீ.

12 வென்று களங்கொண்ட வேந்தன்தேர்
சென்றதன்பின்
கொன்ற பிணக்கூழ் கொற்றவை—நின்றளிப்ப
உண்டாடுபேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில்
கொண்டா டினகுரவைக் கூத்து. 1398

[பெரும்பொருள் விளக்கம்]

குறிப்புரை :

கொற்றவை = காளி. அளிப்ப = அருள்புரிய
உண்டாடுபேய் = பிணச்சோற்றை உண்டாடும் பேய்கள்
குரிசில் = மன்னன்.

13 வெருவருவெஞ்சமத்து வேலிலங்க வீழ்ந்தார்
புருவ முரிவுகண் டஞ்சி—நரிவெரீஇச்
சேட்கணித்தாய் நின்றழைக்கும் செம்மற்றே
தென்னவன்
வாட்கணித்தாய் வீழ்ந்தார் களம், 1399

குறிப்புரை :

வெருவரு = அச்சந்தருகின்ற புருவமுரி = புருவத்தின் சுளிப்பு வெரீ = அஞ்சி சேட்கணித்தாய் = சேய்மையாக செம்மற்று = தலைமையுடையது வீழ்ந்தார் = இறந்தார்.

14 மரகதப்பூண் மன்னவர் தோல்வளை கீழா
வயிரக் கடகக்கை வாங்கித்—துயருழந்து
புண்ணுற் றழைக்கும் குறுநரித்தே பூழியனைக்
கண்ணுற்று வீழ்ந்தார் களம். 1400

குறிப்புரை :

கவர்ந்துகொண்டு புண்ணூற்று = காயமடைந்து பூழியனை = சோழனை கண்ணுற்று = போர்செய்தற்கு நெருங்கி.

15 முடித்தலை வெள்ளோட்டு மூளை நெய்யாகத்
தடித்த சுடர்திரியா மாட்டி—எடுத்தெடுத்துப்
பேஎய் விளக்கயரும் பெற்றித்தே செம்பியன்
சேஎய் பொருத களம். 1401

குறிப்புரை :

திரியா = அகல் விளக்கிடும் திரி விளக்கயரும் = விளக்காக்கொள்ளும் பெற்றித்தே = தன்மையுடையது சேய் = மகன் பொருத = போரிட்ட.

16 ஏனைய பெண்டிர் எரிமூழ்கக் கண்டுதன்
தானையாற் கண்புதைத்தான் தார்வழுதி—யானையும்
புல்லார் பிடிபுலர்பத் தன்கண் புதைத்ததே
பல்யானை அட்ட களத்து. 1402

[முத்தொள்ளாயிரம்]

குறிப்புரை :

எரி = நெருப்பு தானை = மேலாடை புதைத்தான் = பொத்திக்கொண்டான் புல்லார் = பகைவர் பிடி = பெண் யானைகள்.

[கலிவிருத்தம்]

17 பெருகிய குருதியுட் பிறக்குஞ் செந்தடி
அருகுடை யளற்றினுள் அழுந்திப் பாகமோர்
சொரிகதிர்க் கோடக முடிகள் தோன்றலாற்
பொருகளம் புற்றெடுக்கின்ற போன்றவே. 1403

[சூளாமணி]

குறிப்புரை :

செந்தடி = சிவந்த தசைத்துண்டு அளந்தினுள் = சேற்றில்
புற்று = பாம்புறையும் புற்று.

அதிகாரம்—81

## இரங்கல்

இரங்கலாவது : போர்களத்துப் பொருது வீழ்ந்து பட்டாரது நிலை நோக்கி மனங்கசிதலாம்.

[நேரிசை வெண்பா]

1 போர்க்குப் புணைமன் புரையோர்க்குத் தாணுமன்
ஊர்க்கும் உலகிற்கும் ஓருயிர்மன்—யார்க்கும்
அறந்திறந்த வாயி லடைத்ததா லண்ணல்
நிறந்திறந்த நீளிலை வேல். 1404

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

புணை = தெப்பம் புரையோர் = உயர்ந்தோர்
நிறம் = மார்பு இலைவேல் = இலைத்தொழிலமைந்தவேல்.

2 இரவலர் வம்மின் எனஇசைத்த லின்றிப்
புரவலன் மாய்ந்துழியும் பொங்கும்—உரையழுங்க
வேற்கண் ணியரழுத வெம்பூசல் கேட்டடங்கா
தோற்கண்ண போலுந் துடி. 1405

[தகடூர்யாத்திரை]

குறிப்புரை :

இசைத்தல் = அழைத்தல் புரவலன் = மன்னன்
உரையழுங்க = வாய்ச்சொல் வெளிப்படாமல் அடங்க
கண்ணியர் = கண்களையுடைய மகளிர்
பூசல் = அரற்றொலி துடி = துடிப்பறை.

[அறுசீர்விருத்தம்]

3 அரைசர் கோவே அடலாழி
வலவ ஆர்க்குந் தோலாதாய்
புரிசை நகரம் நூற்றொருபது
உடையாய் பூமி முழுதாண்டாய்
உரைசெய் துலகம் பாராட்டும்
ஒளியாய் ஓடை யானைமேல்
வரைசெய்தனைய திரள் தோளாய்
மறிதல் பொருளோ வயவேந்தே. 1406

குறிப்புரை :

அரைசர்கோ = மன்னர்க்கு மன்னன் ஆழி = சக்கரம்
புரிசை = மதில் உரை செய்து = புகழைக் கூறி
ஒளி = புகழ் ஓடை = நெற்றிப்பட்டம் வரை = மலை
மறிதல் = இறத்தல்.

4 மூரிமுந்நீர் உலகங்கள்
முழுதுங் காவல் முனிந்தாயோ
ஆருமில்லா அடியோங்கள்
வழிபா டாற்ற மாட்டாயோ
சீரின் மன்னும் வளநாடும்
தெய்வப் படையும் செல்வமும் நீ
பாரின் மன்னர் பிறர் கொள்ளப்
பணித்த தென்னோ படைவேந்தே. 1407

[சூளாமணி]

குறிப்புரை :

மூரி = வலிமை முந்நீர் = கடல் முனிந்தாயோ =
வெறுத்தாயோ ? மன்னும் = நிலைபெற்று விளங்கும்
படை = போர்க்கருவிகள் பணித்தது = ஆணையிட்டது.

[ஆசிரியப்பா]

5 செற்றன் றாயினும் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினும் உய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
இரந்தன் றாதல் வேண்டும் பொலந்தார்
மண்டமர் கடக்குந் தானைத்
திண்டேர் வளவற் கொண்ட கூற்றே. 1408

[புறநானூறு]

**குறிப்புரை :**

செற்றன்றாயினும் = உள்ளத்தில் கறுவுகொண்டதாயினும்
செயிர்த்தன்றாயினும் = வெகுண்டதாயினும்
உற்று = மெய்தீண்டி  உய்வின்று = பிழையாது.
இரந்தன்றாதல் = யாசித்துக்கொண்டாதல்  கடக்கும் =
எதிர்நின்று வெல்லும்  வளவன் = சோழமன்னன்

6 எறிபுனக் குறவன் குறையலன்ன
கரிபுற விறகின் ஈம ஒள்ளழல்
குறுகினும் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினும் நீள்க பசுங்கதிர்த்
திங்க ளன்ன வெண்குடை
ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே. 1409

[புறநானூறு]

**குறிப்புரை :**

எறிபுனம் = வெட்டி எரித்த கொல்லை  குறையல் =
துண்டம்  ஈமம் = பிணம் சுடும் இடம்  அழல் = நெருப்பு
விசும்பு = ஆகாயம்  பசுங்கதிர் = குளிர்ந்த சுடர்
ஒண்ஞாயிறு = ஒளிபொருந்திய சூரியன்  மாயா = அழியா

7 பாடுநர்க்கீத்த பல்புகழன்னே
ஆடுநர்க் கீத்த பேரன்பினனே
அறவோர் புகழ்ந்த ஆய்கோலன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி உயர்ந்தோர்புக்கில்
அனையன் என்னாது அத்தக் கோனை
நினையாக் கூற்றம் இன்னுயி ருய்த்தன்று
பைதல் ஒக்கல் தழீஇ அதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை உலகம் அரந்தை தூங்க
கேடில் நல்லிசை சூடி
நடுகல் ஆயினன் புரவலன் எனவே. 1410

[புறநானூறு]

குறிப்புரை :

பல்புகழன்னே = பலபுகழை உடையவன்
ஈத்த = கொடை வழங்கிய ஆய்கோலன் = செங்கோலன்
சாயல் = மென்மையுடையவன் மைந்தர் = வலிமை
யுடையார் மைந்து = வலிமையுடையவன்
உயர்ந்தோர் = அந்தணர் புக்கில் = புகலிடம்
உய்த்தன்று = கொண்டுபோயிற்று பைதல் = துன்பம்
ஒக்கல் = சுற்றம் வைகம் = சபித்துவைவோம்
வம்மோ = வருவீராக நனந்தலை = அகன்ற
அரந்தை = துன்பம் தூங்க = மிக
புரவலன் = நம்மைப் பேணிய அரசன்.

8 நோகோ யானே தேய்கமா காலை
பிடியடியன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்குண்டனன்கொல்
உலகுபுகத் திறந்த வாயில்
பலரோ டுண்டல் மரீஇ யோனே. 1411

[புறநானூறு]

குறிப்புரை :

நோகோ = துன்பமுறுவேனே தேய்கமாகாலே = என் வாழ்நாள் கெடுவதாக பிடி = யானை
பிண்டம் = நீர்க்கடனாக வைக்கும் உணவு
உண்டல் மரீஇயோன் = உண்ணுதலே மேற்கொண்டவன்!

9 தொடியுடைய தோள் மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
தண்கமழும் சாந்து நீவினன்
செற்றோரை வழிதபுத்தனன்
நட்டோரை உயர்பு கூறினன்
வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத் தான் இரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடையவையத்து ஓங்குபுகழ் தோற்றினன்
வருபடை எதிர்தாங்கினன்
பெயர்படை புறங்கண்டனன்
கடும்பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவிற் றேர் வழங்கினன்
ஓங்கியல் களிறூர்ந்தனன்
தீஞ்செறி தசும்பு தொலைச்சினன்
பாண் உவப்பப் பசி தீர்த்தனன்
மயக்குடைய மொழி விடுந்தனன், ஆங்குச்
செய்பவெல்லாம் செய்தனனாகலின்
இடுகவொன்றோ சுடுகவொன்றோ
படுவழிப் படுகவிப்புகழ்வெய்யோன் தலையே. 1412

[புறநானூறு]

குறிப்புரை :

தோள் = காதல் மகளிருடையதோள் கடிகா = இளம்பூங்கா
சாந்து = சந்தனம் செற்றோர் = பகைவர்
தபுத்தனன் = அழித்தனன் வழிமொழிதல் = தாழ்ந்து கூறல் மீக்கூறலன் = மிகுத்துச் சொல்லியறியான்

தாங்கினன் = தடுத்துவென்றனன் பரியமா = விரைந்து செல்லும் குதிரை இயல் = இயல்புடைய
தசும்பு = கள்குடம் தொலைச்சினன் = பலர்க்கும் வழங்கினன்
மயக்குடைய மொழி = நடுவு நிலையற்ற சொற்கள்
ஒன்றோ = அல்லது புகழ்வெய்யோன் = புகழை விரும்பியவன்.

நனிபேதையே நயனில் கூற்றம்
விரகின்மையின் வித்தட்டுண்டனை
இன்றுங் காண்குவை நன்வாயாகுதல்
ஒளிறுவாள் மறவரும் களிறும் மாவும்
குருதியங் குரூஉப் புனற் பொருகளத்தொழிய
நாளும் ஆனான் கடந்தட்டென்றுநின்
வாடுபசி யருத்திய வசைதீ ராற்றல்
நின்னோ ரன்னபொன்னியற் பெரும்பூண்
வளவன் என்னும் வண்டுமூசு கண்ணி
இனையோற் கொண்டனை யாயின்
இனியார் மற்றுநின் பசிதீர்ப் போரே. 1413

[புறநானூறு]

குறிப்புரை :

கனிபேதையே = மிக்க பேதமையுடையையே
நயன் = ஈரம் விரகு = தந்திரம்
வித்து அட்டு உண்டனை = விதையைச் சமைத்து உண்டு விட்டாய் குரூஉப்புனல் = இரத்தவெள்ளம்
ஆனான் = மடிந்திரான் கடந்தட்டு என்றும் = எதிர்நின்று நாள்தோறும் நின்னோரன்ன = நின்னை ஒத்த
வளவன் = சோழ மன்னன்
வண்டுமூசு கண்ணி = வண்டுகள் மொய்க்கும் முடிமாலை
இனையோன் = இத்தன்மையோன்.

11 ஐயோ எனின்யான் புலியஞ்சுவலே
அணைத்தனன் கொளினே அகன்மார்
பெடுக்கவல்லேன்
என்போல் பெருவிதிர்ப்புறுக நின்னை
இன்னாதுற்ற அறனில் கூற்றே;
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழல் சேர்கம நடந்திசின்சிறிதே. 1414
[புறநானூறு]

குறிப்புரை:

அணைத்தனன் கொளினே = அணைத்து எடுத்துக்கொண்டு செல்லலாமெனின் வல்லேன் = வன்மையில்லேன் விதிர்ப்பு = நடுக்கும் இன்னாதுற்ற = இறந்து படும்படி வந்து தாக்கிய கூற்று = யமன் வரைநிழல் = மலையினது நிழல் சேர்கம் = சென்றடைவோம் நடந்திசின் சிறிதே = மெல்ல நடப்பாயாக.

12 இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்யாழ் மருப்பின் மெல்லவாங்கிப்
பாணன் சூடான் பாடினி யணியாள்
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே. 1415
[புறநானூறு]

குறிப்புரை:

இளையோர் = இளையவீரர் சூடார் = சூட்டிக்கொள்ளார் வளையோர் = மகளிர் வாங்கி = வளைத்துப்பறித்து பாடினி = பாணத்தி ஆண்மை = ஆளுமை ஆடவர் = வீரர் கடந்த = கொன்றுவென்ற சாத்தன் = ஒல்லையூர்க்கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்னும் வீரன் பூத்தியோ = பூக்கக்கடவையோ? ஒல்லையூர் நாட்டின்கண்.

13 பெருஞ்சோறு பயந்து பல்யாண்டுபுரந்த
பெருங்களி றிறந்த பைதற் பாகன்
அதுசேர்ந் தல்கிய அழுங்கல் ஆலை
வெளில் பாழாகக் கண்டு கலுழ்ந் தாங்குக்
கலங்கினெ னல்லெனோ யானே பொலந்தார்த்
தேர்வண் கிள்ளி போகிய
பேரிசைமூதூர் மன்றங் கண்டே. 1416

[புறநானூறு]

குறிப்புரை :

பயந்து = சமைத்து ஆக்கி புரந்த = பாதுகாத்த
பைதல்பாகன் = வருத்தத்தை யுடைய யானைப்பாகன்
அது = அவ்யானை அல்கிய = தங்கிய ஆலை = யானை
கட்டும் கூடம் வெளில் = கம்பம் பாழாக = வறிதே
நிற்க (க்கண்டு) கலுழ்ந்தாங்கு = கலங்கியதுபோல
தேர்வண்கிள்ளி = சோழவேந்தன் போகிய = கழிந்து
சென்ற மூதூர் = உறையூர் மன்றம் = கொலுமன்றம்.

14 இழுமென முழங்கும் முரசமொடு குழுமிய
ஒன்னு மள்ளர்த் தந்த முன்னூர்ச்
சிறையில் விலங்கிச் செவ்வேல்ஏந்தி
ஆண்டுப்பட்டனனே நெடுந்தகை
ஈண்டுநின் றம்ம அணியிற் பெரும்புகழே. 1417

[தகடூர் யாத்திரை]

குறிப்புரை :

குழுமிய = திரளாக வந்த ஒன்னுமள்ளர் = பகைமறவர்
முன்னூர்ச்சிறை = ஊர்புறத்து முற்றுகை விலங்கி = தடுத்து
ஏந்தி = மார்பிலே ஏற்று பட்டனன் = இறந்தான்
ஈண்டு = இவ்விடத்து அணியின் கூட்டிக்கொள்ளின்
புகழ் = வெற்றிபுகழ் (தரும் என்றான்).

15 அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே
இனியே
பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுது
மறுத்து
இன்னா வைகல் உண்ணும்
அல்லிப் படூஉம் புல் லாயின வே. 1418

[புறநானூறு]

குறிப்புரை :

அளிய = இரங்கத்தக்கன ஆம்பல் = ஆம்பற்பூ
தழை = உடுக்குந்தழை. மாய்ந்தென = இறந்து
விட்டானாகையால் பொழுதுமறுத்து = ஒருவேளைவிட்டு
ஒருவேளை அல்லி = அகஇதழ் (பொகுட்டு)
புல்லாயின = புல்லிய உணவாக ஆயின.

[அறுசீர்விருத்தம்]

16 வெள்ளெருக்கஞ் சடைமுடியான்
வெற்பெடுத்த திரள்தோளான் மேலுங்கீழும்
எள்ளிருக்கும் இடமின்றி
உயிரிருக் குமிடம் நாடி யிழைத்ததாலோ
கள்ளி ருக்கும் மலர்க் கூந்தல்
சானகியை வனச்சிறையில் வைந்த காதல்
உள்ளிருக்கும் எனக் கருதி
உடல்பிளந்து தடவியதோ ஒருவன்வாளி. 1419

[இராமாவதாரம்]

குறிப்புரை :

வெள்ளெருக்கஞ்சடைமுடியான் = சிவபெருமான்
வெற்பெடுத்த = கைலாய மலையைப் பெயர்த்தெடுத்த
தோளான் = தோள்களை உடைய இராவணன்
என் = எள் இருக்கும் அளவு இழைத்து = ஊடுருவிச்
சென்றது கள் = தேன் வனச்சிறை = அசோக
வனத்துச் சிறை ஒருவன் = இராமபிரான்
வாளி = அம்பு.

17 பல் சான்றீரே பல் சான்றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே
அணில் வரிக் கொடுங்காய் வாள் போழ்ந்திட்ட
காழ் போல் நல்விளர் நறுநெய் தீண்டாது
அடையிடக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தோடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பாற்பெய் பள்ளி பாயின்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல எமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே. 1420

[புறநானூறு]

**குறிப்புரை :**

சான்றீரே = சால்புடையீர் ! செல்க = கணவனொடு உடன் மடிந்து செல்வாய் ஒழிக = இறத்தலை தவிர்க சூழ்ச்சி = ஆராய்ச்சி, அணில்வரிக்கொடுங்காய் = வெள்ளரிக்காய், காழ் = விதை, விளர் = வெள்ளையான பிண்டம் = நீர்ச்சோறு, சாந்து = துவையல், வேளை = வேளைக்கீரை, வல்சி = உணவு, பரல் = சிறு கற்கள், பள்ளி = படுக்கை, வதியும் = படுக்கும், உயவல் பெண்டிர் = கைம்மைநோன்பிருந்து வருந்தும், பெண்டிர். பண்ணிய = உண்டாக்கிய, கருங்கோட்டீமம் = கரிய விறகுகளால் அடுக்கப்பட்ட பிணப் படுக்கை, அரும்பற = அரும்புகள் ஒன்றும், இல்லாதபடி அவிழ்ந்த = மலர்ந்த பொய்கை = தாமரைத் தடாகம், ஓரற்று = ஒத்ததன்மையுடையதாகும்.

[நேரிசை வெண்பா]

18 முன்புறம தான்காணும் இவ்வுலகை ; இல்வுலகிற்
றன்புறங் கண்டறிவார் தாமில்லை—அன்பின்
அழுதார்கண் ணீர்விடுத்த ஆருடிக் கூகை
கழுதார்ந் திரவழங்குங் காடு. 1421

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை:**

புறம் = முதுகுப்புறம் தன்புறம் = அதன் முதுகு
ஆறு = கண்ணீர் ஆறு ஆடி = மூழ்கி ஆடி
கூகை = கோட்டான் கழுது = பேய் ஆர்ந்து = நிறைந்து
இரவழங்கு = இராப்பொழுதில் உலாவும் காடு = சுடுகாடு.

[இன்னிசை வெண்பா]

19 உலகு பொதியுருவந் தன்னுருவ மாகப்
பலர்பரவத் தக்க பறந்தலைநன் காடு
புலவுங்கொல், என்போற் புலவுக்களத்தோ
டிகல்நெடுவே லானை இழந்து. 1422

**குறிப்புரை:**

பொதி = பொதிந்த பரவ = ஏத்திவணங்க
பறந்தலை நன்காடு = சுடுகாடு புலவுங்கொல் = புலம்பி
வருந்துங்கொல்லோ புலவுக்களம் = போர்க்களம்
இழந்து = பறிகொடுத்து.

[ஆசிரியப்பா]

20 நாய்ப்பிண வொடுங்கி ... ... நரியேற்றை
இளைக்கும் இறும்பிற் றெறுவரக் கடியக்
கூற்றுயிர் கொண்ட உடம்பு கரிபறந்தலைப்
பற்றிய சுடலைப் பஃ ... ... ரொழித்தே
ஆர்ப்பெழு பனிக் கடல் போல
ஆர்த்தர வறியா அஞ்சுவருகாடே. [?] 1423

**குறிப்புரை :**

நாய்ப்பிணவு = பெட்டைநாய் நரியேற்றை = ஆண்நரி
இறும்பின் = காட்டின்கண் பறந்தலை = போர்க்களம்
சுடலை = சுடுகாடு.

## அதிகாரம்—82

## வென்றி

வென்றியாவது : வெட்சி முதலாய போர்களில் பகைவரை வணக்கி மேற்பட்டு விளங்கும் வெற்றியாம். இதற்கு வாகை சூடுதல் மரபு. தத்தம் கடமைகளிற் சிறந்து விளங்குவதும் வென்றியாகும்.

[நேரிசை வெண்பா]

1 சூடினான் வாகைச் சுடர்த்தெரியல் சூடுதலும்
பாடினார் வெல்புகழைப் பல்புலவர்—கூடார்
உடல்வே லழுவத் தொளிதிழும் பைம்பூண்
அடல்வேந்தன் அட்டார்த் தரசு. 1424

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

சுடர்த்தெரியல் = ஒளி விடும் மாலை கூடார் = பகைவர்
வேலழுவம் = வேலாலாகிய காடு அட்டார்ந்து = கொன்று
வெற்றிபெற்று ஆரவாரம் செய்து.

2 கொடித்தலைத் தார்த் தென்னவன் தோற்றான் போல் நின்றான்
மடித்தவாய் சுட்டிய கையாற்—பிடித்த வேற்
கண்ணோரா ஓச்சிக் களிறணையாக் கண்படுத்த
மண்ணோரா மன்னரைக் கண்டு 1425

குறிப்புரை :

தென்னவன் = பாண்டியன் தேற்ருன் போல் = தெளிய முடியாதவனைப் போல் சுட்டிய சுட்டிக்காட்டிய கண்ணேராக = கண்ணிற்கு நேராக களிறணையா = வீழ்ந்து கிடக்கும் யானைகளே படுக்கையாக மண்ணேரா = மண்ணில் கிடக்காத மன்னர் = பகைமன்னர்

3 தொழில் தேற்ருப் பாலகனை முன்னிறீஇப் பின்னின்
றழலிலைவேல் காய்த்தினர் பெண்டிர்—கழலடைந்து
மண்ணிரத்தல் என்ப வயங்குதார் மாமாறன்
கண்ணிரத்தந் தீர்க்கும் மருந்து. 1426

[முத்தொள்ளாயிரம்]

தேற்ரு = தெளியாத பாலகன் = சிறுவன்
நிறீஇ = நிறுத்தி காய்த்தினர் = நெருப்பிலிட்டுக்காய்ச்சினர்
மண்ணிரத்தல் = மருதநிலம் வேண்டுதல்
மாறன் = பாண்டியன் கண்ணிரத்தம் = கோபத்தால் சிவந்த கண்கள்

[ஆசிரியப்பா]

4 நளிகடல் இருங் குட்டத்து
வளிபுடைத்த கலம் போல
களிறு சென்று களனகற்றவும்
களனகற்றிய வியலாங்கண்
ஒளிறிலைய எஃகேந்தி
அரைசுபட அமருழக்கி
உரைசெல முரசு வெளவி
முடித்தலை அடுப்பாக
புனற் குருதி உலைக்கொளீஇத்
தொடித்தோள் துடுப்பின் துழந்த வல்சியின்
அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய!
ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக

மன்னர் ஏவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே
தோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றார் என்னும் பெயர் பெற்று
ஆற்றாராயினும் ஆண்டுவாழ்வோரே. 1427

[புறநானூறு]

**குறிப்புரை :**

நளிகடல் = பெருங்கடல் குட்டம் = ஆழம்
வளியுடைத்த கலம்போல = காற்றால் மோதுண்டு செல்லும் கப்பலைப்போல களன் = போர்க்களம்
வியலாங்கண் = அகன்ற இடத்தில் எஃகு = வாள்முதலிய படைக்கலம் உழக்கி = கலக்கி உரைசெல = புகழ்பரவ
உலை = நீருலை துடுப்பு = உணவுகிளரும் துடுப்பு
துழந்து = துழாவிச் சமைத்த வல்சி = உணவு
வேட்ட = களவேள்வி செய்த செழிய = பாண்டிய மன்னனே ! சுற்றம் = அரசச்சுற்றம்
மன்னிய = நிலைபெற்ற நோற்றோர் = தவஞ்செய்தவராவர்
மாற்றார் = பகைவர் ஆற்றாராயினும் = போர்செய்ய மாட்டாராயினும் ஆண்டுவாழ்வோரே = துறக்கத்தில் வாழ்வாராயினர்

சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை
உருகெழு மதியின் நிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல் போர்ப்
பாசறையல்லது நீயொல் லாயே
நுதிமுகம் மழுங்க மண்டி, ஒன்னார்
கடிமதில் பாயும்நின் களிறடங்கலவே
போர்எனின் புகலும் புனைகழல் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேஎய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை ஆங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்னதாகக் குடகடல்

வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென்றல மந்து
நெஞ்சு நடுக் கவலம் பாயத்
துஞ்சாக்கண்ண வடபுலத்தரசே 1428

[புறநானூறு]

குறிப்புரை :

மரபு = முறைமை இருகுடை = சேரன், பாண்டியன் ஆகிய இருவரது குடை உருகெழுமதி = கலைநிறைந்த திங்கள் சிவந்து = ஓங்கி வேட்டம் = வேட்கை நிலொல்லாய் = நகரின்கண் இருத்தலை உடன்படமாட்டாய் நுதிமுகம் = கூரியமுனை ஒன்னார் = பகைவர் கடிமதில் = காவல்மிக்க அரண் புகலும் = மிகவிரும்பும் நனிசேய = மிகவும் தூரமுடையது என்னார் = கருத மாட்டார் குணகடல் = கீழ்கடல் குடகடல் = மேற்கடல் வெண்டலைப் புணரி = வெள்ளிய தலையை உடைய அலைகள் மான்குளம் பலைப்ப = குதிரைகளின் குளம்புகளை நனைத்து அலைப்ப வலமுறை = வலப்பக்கமாக அலமந்து = மனங்கலங்கி துஞ்சாக்கண்ண = கண் ணுறங்கார் வடபுலத்து அரசு = வடநாட்டு மன்னவர்

6 உமுதூர் காலை ஊழ்கோடன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்தி
புதுவரகரிகால் கருப்பை பார்க்கும்
புன்றலைச் சிருஅர் வில்லெடுத்தார்ப்பின்
பெருங்கட் குறுமுயல் கருங்கலன் உடைய
மன்றில்பாயும் வன்புலத்ததுவே
கரும்பின் எந்திரம் சிலைப்பின் அயலது
இருஞ் சுவல்வாளை பிறழும் ஆங்கண்
தண்பணை ஆளும் வேந்தர்க்குக்
கண்படை ஈயா வேலோன் ஊரே. 1429

[புறநானூறு]

**குறிப்புரை :**

உழுதூர் காளை = ஏரிற்பூட்டி உழப்பட்ட காளை
ஊழ்கோடன்ன = அழகழிந்த கொம்புகளைப்போல்.
கள்ளி = மரக்கள்ளி பொரியரை = பொரிந்த அடிப்பகுதி
வரகரிகால் = வரகரிந்ததாள் கருப்பை = எலி
ஆர்ப்பின் = ஆரவாரம் செய்யின் கருங்கலன் = மட்பாண்டங்கள் மன்றிற்பாயும் = வீட்டு முற்றங்களில் பாய்ந்தோடும் எந்திரம் = கரும்பாலை
சிலைப்பின் = ஒலிப்பின் வாளை = வாளை மீன்கள்
தண்பணை = குளிர்ந்த வயல்கள் கண்படை = உறக்கம்
ஊர் = வன்புலத்து ஊர்கள்.

7 மீன் திகழ் விசும்பின் பாயிருளகல
ஈண்டுசெலல் மரபின் தன்னியல் வழாஅது
உரவுச்சினந் திருகிய உருகெழுஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்கு
உடலருந்துப்பின் ஒன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை உணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்டகாலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்
சிதைதல் உய்ந்தன்றோ நின்வேல், செழிய!
முலைபொலி ஆகம் உருப்ப நூறி
மெய்ம்மறந்துபட்ட வரையாப் பூசல்
ஒண்ணுதல் மகளிர் கைம்மைகூர
அவிரறல் கடுக்கும் அம்மென்
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே. 1430

[புறநானூறு]

**குறிப்புரை :**

மீன் = நட்சத்திரம் பாயிருள் = பரந்த இருள்
வழாஅது = பிழையாமல் உரவுச்சினம் = வலியவெப்பம்
ஞாயிறு = கதிரவன் உடலருந்துப்பின் = பகைத்தற்கு அரிய வலிமையுடைய ஒன்றுமொழி = வஞ்சினம்
பறந்தலை = போர்க்களம் உணங்க = மாய
பண்ணி = போரிட்டு எறிய = எறிதலால்

மடை = பொருத்துவாய் உயந்தன்று = தப்பியது
ஆகம் = மார்பு உருப்ப = அழல நூறி = அறைந்து
கொண்டு பூசல் = அழுகை அறல் = கருமணல்
கடுக்கும் = ஒக்கும் கொய்தல் = களைதல்

8 ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை
இன்றின் ஊங்கோ கேளலம் திரள்அரை
மன்ற வேம்பின் மாச்சினை ஒண்டளிர்
நெடுங் கொடி உழிஞைப் பவரொடுமிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
ஒலியல் மாலையொடு பொலியச்சூடி
பாடின் தெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவின் பசும்பூட் செழியன்
பீடும் செல்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன் தலை வந்த
புனைகழல் எழுவர் நல்வல மடங்க
ஒருதா னாகிப் பொருதுகளத் தடலே. 1431

[புறநானூறு]

குறிப்புரை :

அடுதல் = கொல்லுதல் தொலைதல் = தோற்றல்
இன்றின் ஊங்கு = இந்நாள்வரை கேளலம் = கேட்டறி
யோம் உழிஞைப்பவர் = உழிஞைக்கொடி
ஒலியன் மாலை = வளையமாலை தெண்கிணை = தெளிவாக
ஒலிக்கும் போர்ப்பறை கறங்க = ஒலிக்க
பசும்பூண் செழியன் = பாண்டியன் நெடுஞ்செழியன்
பீடு = பெருமை செம்மல் = தலைமை
தலைவந்த = தன்னிடத்துப் போரிடவந்த எழுவர் = இரு
வேந்தரும் ஐம்பெரும் வேளிரும் வலம் அடங்க = வெற்றி
அடங்கிப்போக ஒருதானுகி = தான் ஒருவனேயாகப்
போரிட்டு அடல் = கொல்லுதல் எழுவரையும் ஒருவனே
வென்றான் என்பது இதுவரையான் கேள்விப்படாத ஒன்று
எனப்புலவர் பாராட்டுகிறுர்,

**குறிப்புரை :**

தலையாதல் = தலைவனாக உயர்தல்   தார் = கொடிப்படை   இன்னம் = இத்தகைய ஆற்றலுடையேம்   அமரின் = போர்க்களத்தின்கண்   அழல் = நெருப்பு   தொடுகழல் = கட்டிய வீரக்கழல்   மைந்தர் = படைமறவர்.

5 மறுமனத்தா னல்லாத மாநலத்த வேந்தன்
உறுமனந்தா னாகி ஒழுகின்—தெறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கால் என்செய்ப
ஆயிரங் காக்கைக்கோர் கல். 890

**குறிப்புரை :**

மறுமனம் = குற்றமுடைய நெஞ்சு   தெறுமனத்தார் = போர் கருதிய உள்ளமுடைய பகைவர்   பாயிரம் = வீரமொழிகள்   கல் = கவண்கல்.

[இன்னிசை வெண்பா]

6 மெய்கொண் டெழுந்த அமரகத்து மாற்றார்வாய்
பொய்கொண் டறைபோய்த் திரிபவர்க்
கென்கொலாம்
மையுண் டமர்ந்தகண் மாணிழாய்! சான்றவர்
கையுண்டுங் கூறுவர் மெய். 891

**குறிப்புரை :**

மொய் = திரட்சி, கூட்டம்   அறைபோய் = வஞ்சனையைச் செய்துபோய்   கையுண்டும் = கைவெட்டப்பட்ட நிலையிலும்   மெய் = மெய்ம்மொழி.

7 உருத்தெழு ஞாட்பினுள் ஒன்னார் தொலையச்
செருக்கினால் செய்கலார் செய்வாரே போலத்
தருக்கினால் தம்மிறைவன் கூழுண் பவரே
கருத்தினாற் கூறை கொள்வார், 892

**குறிப்புரை :**

உருத்து = சினந்து ஞாட்பினுள் = போர்க்களத்துள் ஒன்னார் = பகைவர் தொலைய = அழிய செய்கலார் = செய்யப்படாதவர் கூழ் = அரசன் அளிக்கும் உணவு கருக்கினல் கூறை கொள்வார் = பனை ஓலையாலாகிய ஆடையைக் கொள்பவரை ஒப்பார் என்றவாறு.

8 கொடையும் ஒழுக்கமும் கோளுள் உணர்வும்
உடையர் எனப்பட் டொழுகிப் பகைவர்
உடைய, மேற்செல் கிற்கும் ஊற்றமி லாதார்
படையின் படைத்தகைமை நன்று 893

**குறிப்புரை ;**

கொடை = வள்ளன்மை கோளுள் உணர்வு = பிறர் கொண்டுள்ள கருத்தையுணரும் அறிவு உடைய = தோற்று ஓட ஊற்றம் = வலிமை.

9 அமர்விலங்கி ஆற்ற அறியவும் பட்டார்
எமர்மேலை இன்னரால் யார்க்குரைத்தும் என்று
தமர் மறையாக் கூழுண்டுசேற லதுவே
மகன்மறையாத் தாய் வாழுமாறு. 894

**குறிப்புரை :**

விலங்கி = எதிர்நின்று வென்று எமர் = எம்முன்னோர் மறையா = பாதுகாப்பாக சேறல் = வாழ்வது.

10 தன்னின் வலியானைத் தானுடைய னல்லாக்கால்
என்ன குறையன் இளையரால்— மன்னும்
புலியின் பெருந்திறலா ஆயினும் பூசை
எலியில் வழிப்பெறு பால். 895

[பழமொழி]

9 கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்டளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம்பற்றி
நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவன் கண்ணி தார்பூண்டு
தாலி களைந்தன்று மிலனே, பால்விட்டு
அயினியும் இன்றயின் றனனே வயின்வயின்
உடன்று மேல்வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும் இழிந்தன்று மிலனே, அவரை
அழுந்தப் பற்றி அகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்து நிலஞ்சேர அட்டதை
மகிழ்ந்தன்றும் மலிந்தன்று
மதனினுமிலனே. 1432

[புறநானூறு]

**குறிப்புரை :**

களைந்த = அவிழ்க்கப்பட்ட கழல் = வீரக்கழல்
தொட்டு = புனைந்து கழித்தகை = நீக்கப்பட்டகையிடத்து
சாபம் = வில் கொடிஞ்சி = தேரில் உள்ள ஓர் உறுப்பு.
தார் = மாலை தாலி = சிறுவர்க்கு அணிவிக்கும்
ஐம்படைத்தாலி அயினி = சோற்றுணவு
வயின் வயின் = முறை முறையாக மேல்வந்த = தன்னை
எதிர்த்து வந்த வியந்தன்று மிழிந்தன்று மிலனே = மதித்
தலும் அவமதித்தலும் இலனாய் ஆர்ப்பெழ = ஓசை எழ
கவிழ்ந்து நிலம் சேர = குப்புற்று மண்ணிலே சேருமாறு
அட்டதை = கொன்றதை எண்ணி = மகிழவுமில்லை
மலிந்தன்று மிலனே = தன்னை மிகுத்து நினைக்கவுமில்லை

## அதிகாரம்—83

# புகழ்

**புகழாவது :** உலகம் பொன்றுமளவும் அழியாது நிற்கும் கீர்த்தியாம். அஃது அறனும் திறனும் காரவமாக வருணதாகும்.

[நேரிசை வெண்பா]

1 மடங்கா மயிலூர்தி மைந்தனை நாளும்
கடம்பம்பூக் கொண்டேத்தியற்றால்—தொடங்கமருள்
நின்றிலங்கு வென்றி நிரைகதிர்வேல் மாறனை
இன்றமிழால் யாம்பாடும் பாட்டு. 1433

**குறிப்புரை :**

மயிலூர்தி = மயில் வாகனம் மைந்தன் = முருகக்கடவுள்
ஏத்தியற்றால் = வழிபட்டதை ஒக்கும்
மாறனை = பாண்டியனை யாம் பாடும் பாட்டு = யாம் பாராட்டிப் பேசும் பாட்டு.

2 செங்கண் நெடியான்மேல் தேர்விசயன் ஏற்றியபூப்
பைங்கண்வெள் ளேற்றான்பால் கண்டற்றால்—
எங்கும்
முடிமன்னர் சூடியபூ மொய்ம்மலர்தார் மாறன்
அடிமிசையே காணப் படும். 1434

**குறிப்புரை :**

நெடியான் = திருமாலாகிய கண்ணன்
விசயன் = அருச்சுனன் ஏற்றிய பூ = பூசித்த மலர்கள்
வெள்ளேற்றான் = காளைவாகனனாகிய சிவபெருமான்
அடிமிசை = பாதங்களில்.

3 கூந்தல்மாக் கொன்று குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்லியநான் றுண்டால்—
யாங்கொளித்தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு. 1435

**குறிப்புரை :**

கூந்தல் மா = பிடரிமயிருடைய குதிரையாக வந்த கேசி என்னும் அரக்கன் குடமாடி = குடக்கூத்தாடி
கோவலனாய் = இடைக்குலத்தவனாய்
உண்டால் = உண்டாயிருந்தது கூடல் = மதுரை
மார்பின் மறு = மார்பிடத்தில் இருக்கும் மறு.
(பாண்டியனைத் திருமாலாகக் கொண்டு கூறியது.)

4 வானிற்கு வையகம் போன்றது வானத்து
மீனிற் கனையார் மறமன்னர்—வானத்து
மீன்சேர் மதியனையன் விண்ணுயர் கொல்லியர்
கோன்சேரன் கோதையென் பான். 1436

**குறிப்புரை :**

மீனிற்கு அனையார் = விண்மீன்களை ஒத்துள்ளனர் ஏனைய மன்னர்கள். மதியனையன் = நிறைந்த திங்களை ஒத்தவன். கொல்லியர் = கொல்லிமலை வாழ்வபர்
கோதை = சேரமன்னன்

5 மந்தரங் காம்பா மணிவிசும் போலையாத்
திங்கள் அதற்கோர் திலதமா—எங்கணும்
முற்றுநீர் வையம் முழுதும் நிழற்றுமே
கொற்றப் போர்க் கிள்ளி குடை. 1437

**குறிப்புரை :**

மந்தரம் = மந்தரமலை விசும்பு ஓலையா = ஆகாயமே குடையின் ஓலையாக. திலதமா = நடுவட்டமாக
வையம் = நிலவுலகம் நிழற்றும் = நிழல் செய்யும்
கிள்ளிகுடை = சோழமன்னது கொற்றக்குடை,

6 பார்படுப செய்பொன் பதிபடுப முத்தமிழ்நூல்
நீர்படுப வெண்சங்கும் நித்திலமும் — சாரல்
மலைபடுப யானை வயமாறன் கூர்வேல்
தலைபடுப தார்வேந்தர் மார்பு. 1438

குறிப்புரை :

பார்படுப = மண்ணில் தோன்றுவன பதி = நகரங்கள்
நித்திலம் = முத்து சாரல் = மலைச்சாரல்
மாறன் = பாண்டியன் தலை வேலின் தலை.
தார் வேந்தர் = பகைவேந்தர்.

7 அருமணி அந்தலை யாடரவம் வானத்து
உருமேற்றை அஞ்சி ஒளிக்கும் — செருமிகுதோள்
செங்கண்மா மாறன் சினவேல் கனவுமே
அங்கண்மா ஞாலத் தரசு. 1439

குறிப்புரை :

அருமணி = நாகரத்தினம் அரவம் = நாகப்பாம்பு
உருமேறு = இடி. செரு = போர்
சினவேல் = சினமுடையவேல் கனவுமே = கனவுகாணும்
ஞாலம் = உலகம்.

8 அரும்பவிழ்தார்க்கோதை அரசெறிந்த வெள்வேல்
பெரும்புலவும் செஞ்சாந்தும் நாறிச் — சுரும்பொடு
வண்டாடு பக்கமு முண்டு குறுநரி
கொண்டாடு பக்கமு முண்டு. 1440

குறிப்புரை :

கோதை = சேரவேந்தன் அரசெறிந்த = பகையரசர்
மேல்வீசிய. புலவு = புலால் நாற்றம் சுரும்பு = வண்டு
ஆடும் = மொய்க்கும் உண்டு = நிகழ்தல் உண்டு.

9 கண்ணார் கதவந் திறமின் களிறொடு தேர்
பண்ணார் நடைப்புரவி பண்விடுமின்—நண்ணார்தம்
தேர்வேந்தன் தென்னன் திருவுத்தி ராடநாள்
போர் வேந்தன் பூச லிலன், 1441

குறிப்புரை :

கண்ணார் கதவம் = பிணைக்கப்பட்ட கதவுகள் (சிறைக் கதவு)
பண்ணார் = போரிட ஒப்பனைசெய்த புரவி = குதிரை
நண்ணார் பகைவர் தென்னன் = பாண்டியன்
'உத்திராடம்' சோழமன்னன் பிறந்தநாள்
பூசலிலன் = போர்செய்யமாட்டான்.

10 அந்தணர் ஆவொடு பொன்பெற்றார் நாவலர்
மந்திரம்போல் மாண்ட களிறூர்ந்தார்—எந்தை
இளங்கிலைவேற் கிள்ளி இரேவதிநா ளென்னே
சிலம்பிதன் கூடிழந்த வாறு. 1442

[முத்தொள்ளாயிரம்]

குறிப்புரை :

ஆவொடு = பசுக்களொடு மந்தரம் = மந்தரமலை
மாண்ட = மாட்சிமையுடைய கிள்ளி = சோழமன்னன்
'இரேவதி' சோழமன்னன் பிறந்தநாள் சிலம்பி = சிலந்தி
கூடிழந்தவாறு (மனைகள் வெள்ளைபூசி அலங்காரம் செய்யப்படுவதால்) கூடிழந்தன என்றவாறு.

11 திறலொடு தீதுறுந்திப் பூழிய னல்லன்
மறமொடு மைந்து தருக்கிப்—பிறரொருவர்
தென்ன னிளங்கோத் திருமால் வழுதிமுன்
மன்னர்யார் மாறேற் பவர். [?] 1443

**குறிப்புரை :**

தீப்பூழியன் = நெருப்பினையுடைய சேரமன்னன்
மைந்து = வலிமை   தருக்கு  செருக்குற்று
வழுதி = பாண்டியன்   மாறேற்பவர் = பகையுற்றுப்
போர் செய்ய வருபவர்   யார் = வேறு யார் ?

[இன்னிசை வெண்பா]

12 கருங்கலி முந்நீரின் மூழ்காத முன்னம்
இருங்கடி மண்மகளை யேந்தினவே யாயின்
பெரும்பெயர் ஏனத் தெயிறனைய வன்றே
சுரும்பறை தொண்டையான் றோள். 1444

[இரும்பல் காஞ்சி]

**குறிப்புரை :**

கருங்கலி = கரிய ஆரவாரமுடைய   முந்நீர் - கடல்
மண்மகளை = பூமிதேவியை  பெரும்பெயர் ஏனம் = திருமால்
எடுத்த வராக அவதாரம்   எயிறு = பற்கள்
அனைய = அத்தகையன   தொண்டையான் = தொண்டை
மாலையணிந்த அரசன்.

[ஆசிரியப்பா]

13 எங்கோ னிருந்த கம்பலைமூதூர்
உடையோர் போல இடையின்று குறுகிச்
செம்மல் நாளவை அண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை இரவலர்க் கெளிதே
இரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து
வானம் நாண வரையாது சென்றோர்க்கு
ஆனாதீயும் கவிகை வண்மைக்
கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்குங் காலை

பாசிலைத் தொடுத்த உவலைக் கண்ணி
மாசுண் உடுக்கை மடிவாய் இடையன்
சிறுதலை ஆயமொடு குறுகல் செல்லாப்
புலி துஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை அவனுடை நாடே. 1445

[புறநானூறு]

குறிப்புரை :

கம்பலை மூதூர் = ஓசைமிக்க பழையதாகிய ஊர்
இடையின்று = காலம் பார்க்காமல் குறுகி = நெருங்கி
நாளவை = நாளோலக்கம் (அரசவை)
எம்மன = எம்போன்ற எண்மை = எளிமை
வானம் = வானமழை கவிகை = கொடுப்பதற்குக் கவிந்தகை கோதை = சேரமான் குட்டுவன் கோதை
துப்பு = வலிமை உவலைக்கண்ணி = தழைகளால் ஆனமாலை மடிவாய் = மடித்த வாயையுடைய
ஆயம் = ஆட்டுக்கூட்டம் துஞ்சும் = தங்கியிருக்கும்
வலிதுஞ்சு தடக்கை = வலிமையுடைய பெரியகைகள்

14 வையங்காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடஞ்சிறிதென்னும் ஊக்கந் துரப்ப
ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகை
கடந்தடு தானைச் சேரலாதனை
யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலல் மண்டிலம்
பொழுதென வரைதி புறங்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியால் பல்கதிர் விரிந்தே. 1446

[புறநானூறு]

வையம் = உலகம்      காவலர் = மன்னர்
போகம் வேண்டி = நல்ல இன்பங்களை நுகர்தல் வேண்டி
பொதுச்சொல் = உலகம் மன்னர்களுக்குப் பொது எனச் சொல்லும் சொல்.   இடம் = தன் ஆட்சிக்கு உட்பட்ட நாடு
ஊக்கம் துரப்ப = கொண்ட நினைவு பிறர் நாடுகளையும் தனதாக்கிக்கொள்ள வேண்டுமென்று தூண்டிச் செலுத்த
ஓம்பாது = பாதுகாத்துக்கொள்ளாமல்   ஈகை = வழங்கும் வள்ளன்மை   கடந்தடுதானை = வஞ்சிக்காமல் எதிர் நின்று பகைவரைக் கொன்று வெல்லும்தானை   சேரலாதனை = சேரமான் கடுங்கோ வாழியாதனை   யாங்கனம் ஒத்தி = எவ்வாறு ஒப்பாவாய் ?   மண்டிலம் = ஞாயிற்று மண்டிலம்
வரைதி = வரையறை செய்து கொண்டனை
புறங்கொடுத்து = திங்களுக்குப் புறமுதுகிட்டு
வருதி = வருகின்றாய்   பல்கதிர் விரித்து = பல கிரணங்களை விரித்து.   இதன் கருத்து சூரியன் கடுங்கோ வாழியாதனுக்கு ஒப்பாகாது எனப் புகழ்ந்து கூறியது. (பாடியவர் கபிலர்.)

15 நாடன் என்கோ ஊரன் என்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ
யாங்ஙனம் மொழிகோ ஓங்கு வாட்கோதையை
புனவர் தட்டை புடைப்பின் அயலது
இறங்குகதிர் அலமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங்
கெழுமே.   1447

[புறநானூறு]

**குறிப்புரை**

நாடன் = குறிஞ்சிநில மன்னன்   ஊரன் = மருதநில மன்னன்   சேர்ப்பன் = நெய்தல் நில அரசன்
யாங்கனம் மொழிகோ = எவ்வாறு சொல்லுவேன் ?
கோதையை = சேரமான் கோக்கோதை மார்பனை
புனவர் = கொல்லைப்புனம் காப்பவர்
தட்டை = கிளிகடியும் கருவி   கழனி = மருதநிலத்து வயல்
சேர்ப்பு = கடற்கரை   புள் = பறவையினங்கள்
எழும் = எழுந்து பறக்கும்.

16 ஆரந்தாழ்ந்த அணிகிளர் மார்பின்
தாள்தோய் தடக்கை தகைமாண் வழுதி
வல்லை மன்ற நீநயந்து அளித்தல்
தேற்றாய் பெரும! பொய்யே என்றும்
காய்சினந் தவிராது கடலூர் பெழுதரும்
ஞாயி றனையை நின்பகைவர்க்குத்
திங்கள் அனையை எம்ம னோர்க்கே. 1448

[புறநானூறு]

குறிப்புரை :

ஆரம் = மாலை தாழ்ந்த = தொங்குகின்ற தகை = அழகு
வழுதி = பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்
வல்லை = வழங்குதல் வன்மை உடைய தேற்றாய் = தெளிய
மட்டாய் காய்சினம் = மிக்ககோபம் ஊர்பு = ஊர்ந்து
அனையை = ஒப்பாய் எம்மனோர்க்கு = எம்போன்ற
இரவலர்க்கு.

17 பாணர் தாமரை மலையவும், புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது விறல்மாண் குடுமி
இன்னாவாகப் பிறர் மண் கொண்டு
இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே. 1449

[புறநானூறு

குறிப்புரை :

தாமரை = தலையில் சூடும் பொன்னாலான தாமரை மலர்
மலையவும் = சூடவும் பூநுதல் = பொலிவுண்ட மத்தகம்
பண்ணவும் = ஏறிச்செல்வதற்கேற்ப அலங்கரிக்கவும்
விறன்மாண் குடுமி = பாண்டியன் பல்யாகசாலை முதுகுடு
மிப்பெரு வழுதி ! இன்னாவாக = அவர்துன்புற
பிறர் = பகைவர் மண் = நாடு செய்தி = செய்கின்றாய்
ஆர்வலர் = பரிசிலர்,

18 வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீயே, மெய்கண்ட தீமை காணின்
ஒப்பநாடி அத்தகவொறுத்தி,
வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதி பண்டையிற் பெரிதே
அமிழ்தட் டானாக் கமழ்குய்யடிசில்
வருநர்க்குவரையா வசையில் வாழ்க்கை
மகளிர் மலைத்தல் அல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப
செய்திரங்கா வினை சேண்விளங் கும்புகழ்
நெய்தலங் கானல் நெடியோய்
எய்த வந்தனம்யாம் ஏத்துகம் பலவே. 1450

[புறநானூறு]

**குறிப்புரை :**

வல்லறிதீயே = விரைவாக அறிந்து கொள்கின்றாய்
தேறலை = தெளியமாட்டாய் (கேளாய்)
மெய்கண்டதீமை = உண்மையாகக் கண்டகொடுமை
நாடி = ஆராய்ந்து (விசாரிந்து) அத்தக ஒருத்தி = அதற்குத் தகத்தண்டனை செய்வாய் தணிதி = செய்யாது தவிர்ப்பாய் அட்டு = சமைத்து கமழ்குய்யடிசில் = தாளிப்பு மணங்கமழும் உணவு. வருநர்க்குவரையா = வந்தவர்க்கு எல்லையின்றி (அளிப்பாய்) மலைத்தல் = அவர் முயக்கத்தால் மாறுபடல் போகிய = ஒழித்த சிலைத்தார் = இந்திரவில்லைப்போலும் மாலை. சேண் = மிகதூரம் நெடியோய் = நெய்தலங் கானல் இளஞ்சேட் சென்னியே! ஏத்துகம் = நின்பல பல குணங்களையும் புகழ்வோமாக.

19 களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவல் பாணர் உய்த்தென
களிறில வாகிய புல்லரை நெடுவெளில்
கானமஞ்ஞை கணனொடு சேப்ப

ஈகை அரிய இழையணி மகளிரொடு
சாயின் றென்ப ஆஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தன்வயிற ருத்தி
உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய
முரைசுகெழு செல்வர் நகர் போலாதே. 1451

[புறநானூறு]

**குறிப்புரை :**

களங்கனி = களாப்பழம் பனுவல் = பாடல்
உய்த்தென = கொண்டுபோனார்களாக
நெடுவெளில் = யானைகளைக் கட்டும் நெடிய தறி
கணம் = கூட்டம் சேப்ப = தங்கியிருக்க
ஈகை = பொன் இழை = அணிகலம்
சாஅயின்று = பொலிவிழந்து கிடந்தது ஆய் = ஆய் அண்டிரன். கோயில் = அரண்மனை அடிசில் = உணவு
ஈவின்றி = வழங்காமல் ஒரீஇய = நீங்கிய
செல்வர் நகர் = பிற மன்னர்களின் அரண்மனை
போலாது = ஒவ்வாது.

20 மழைக்கணஞ் சேக்கும் மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே. 1452

[புறநானூறு]

**குறிப்புரை :**

மழைக்கணம் = மேகக்கூட்டம் சேக்கும் = தங்கும்
கிழவன் = தலைவன் வழைப்பூ = சுரபுன்னைமலர்
பாடின கொல்லோ = பாராட்டிப் பாடினவோ ?
கவின்பெறுகாடு = அழகிய காடு.

21 மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியின்
கேட்பின் அல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளர
கலவ மஞ்ஞையின் காண்வர வியலி
மாரி யன்ன வண்மைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே! 1453

[புறநானூறு]

**குறிப்புரை:**

நல்லிசை = நல்லபுகழ் காண்பறியலை = கண்டறியாய்
மாண்ட = மாட்சிமைப்பட்ட விரைவளர்கூந்தல் = மணம்
கமழும் கூந்தல் வளிஉளர = காற்று அசைப்ப
கலவமஞ்ஞை = பீலியை உடையமயில் இயலி = நடந்து
மாரி = மழை வண்மை = வள்ளன்மை
வேள் ஆய் = ஆய் அண்டிரன் என்னும் வள்ளல்.
காணிய சென்மே = காணச் செல்வாயாக.

22 இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்
பிறரும் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்றவன் கை வண்மையே. 1454

[புறநானூறு]

**குறிப்புரை:**

இம்மைச் செய்தது = இப்பிறப்பில் செய்த அறம்
மறுமை = மறுபிறப்பு ஆம் = உதவும்
அறவிலை = பொருளை விலையாகக் கொடுத்து அதற்கு
அறத்தைக் கொள்ளுதல் ஆய் = ஆய் அண்டிரன்
சென்ற நெறி = போகிய வழி ஆங்கு = அந்த நற் செயல்
களிலே பட்டன்று = அமைந்தது
வண்மை = வழங்கும் குணம்.

23 தடவுநிலைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர் !
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின்கண் ணுறையாக யாம் சில
அரிசி வேண்டினே மாகத் தான், பிற
வரிசை யறிதலின் தன்னுந் தூக்கி
இருங் கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கியோனே அன்னதோர்
தேற்றா ஈகையும் உளது கொல்
போற்றார் அம்ம பெரியோர்தங் கடனே. 1455

[புறநானூறு]

**குறிப்புரை:**

தடவுநிலை = பெரிய நிலை நாஞ்சில் = நாஞ்சில் மலை
மடவன் = மென்மைத் தன்மையினன்
படப்பை = தோட்டம் அடகு = இலைக்கீரை
உறையாக = தூவுவதற்காக சில = சிறிது
வரிசை = வழங்கும் முறை தன்னுந்தூக்கி = தனது
மேம்பாட்டைச் சீர்தூக்கி கடறு = சுரம்
வளைஇய = சூழ்ந்த நல்கியோனே = கொடுத்தான்
தேற்றா ஈகை = அளவு தெளியாத கொடை
தங்கடன் = தமது கடமை.

24 நீயே, அமர்காணின் அமர்கடந்தவர்
படைவிலக்கி எதிர் நிற்றலின்
வாள்வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக் கினியை கட்கின்னாயை
அவரே, நிற்காணின் புறங்கொடுத்தலின்
ஊறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக்கினியர் செவிக்கின்னாரே
அதனால், நீயுமொன்றினியை அவருமொன்றினியர்

ஒவ்வா யாவுள மற்றே வெல்போர்க்
கழல் புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி
நின்னை வியக்குமிவ் வுலகம் அஃது
என்னோ பெரும உரைத்திசின் எமக்கே. 1456

[புறநானூறு]

**குறிப்புரை :**

அமர் = போர்   கடந்து = வென்று
வாள்வாய்த்தவடு = வாளால் நேர்ந்த வடு
வாழ் = தங்கிய   யாக்கை = உடம்பு
கட்கின்னாய் = காண்பதற்கு அழகுடையனாயில்லை
அவர் = பகைவர்   புறங்கொடுத்தலின் = தோற்றோடுதலான்
ஒவ்வா = ஒவ்வாதன   கருமான் = விரைந்தோடும் குதிரை
கிள்ளி = ஏனாதி திருக்கிள்ளி என்னும் வீரன்
வியக்கும் = பாராட்டும்   உரைத்திசின் = கூறுவாயாக.

25 ஓரை ஆயத்து ஒண்டொடி மகளிர்
கேழல் உழுத இருஞ்சேறு கிளைப்பின்
யாமை ஈன்ற புலவு நாறு முட்டையைத்
தேன் நாறு ஆம்பற் கிழங்கொடு பெறூஉம்
இழுமென ஒலிக்கும் புனலம் புதவின்
பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ்
இல்லோர் சொல்மலை நல்லியக் கோடனை
உடையை வாழியெற் புணர்ந்த பாலே
பாரி பறம்பின் பனிச் சுனைத் தெண்ணீர்
ஓரூர் உண்மையின் இகழ்ந்தோர் போலக்
காணாது கழிந்த வைகல் காணா
வழிநாட் கிரங்கும் என் நெஞ்சம் அவன்
கழிமென் சாயல் காண்டொறும் நினைந்தே, 1457

[புறநானூறு]

குறிப்புரை :

ஒரையாயம் = விளையாட்டுக் கூட்டம் கேழல் = பன்றி
கிளைப்பின் = கிளறினால் புலவு = புலால் நாற்றம் 'இழும்'
என்பது ஓசைக் குறிப்பு. புனலம் புதவு = நீர்வழங்கும்
வாய்த்தலை. 'பெருமாவிலங்கை' ஓர் ஊர்.
சொன் மலை = புகழ்மாலை நல்லியக்கோடன் = ஓய்மான்
நல்லியக்கோடன் என்னும் வள்ளல் பால் = விதி
இகழ்ந்தோர் = சிறப்பாக எண்ணாமல் சோர்ந்திருப்பவர்
வைகல் = நாட்கள் வழி நாள் = இனிவரும் நாட்கள்
இரங்கும் = இரக்கத்தோடிருக்கும் சாயல் = மென்மைத்
தன்மை.

26 நிரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
இறையுறு விழுமம் தாங்கி அமரகத்து
இரும்புசுவைக் கொண்ட விழுப்புண் நோய்தீர்ந்து
மருந்து கொன்மரத்தின் வான்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்து
ஈர்த்தை யோனே பாண்பசிப் பகைஞன்
இன்மைதீர வேண்டின் எம்மொடு
நீயும் வம்மோ முதுவாய் இரவல
யாம்தன் இரக்குங் காலைத்தான் எம்
உண்ணா மருங்குல் காட்டித் தன்ஊர்க்
கருங்கைக் கொல்லனை இரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே. 1458

[புறநானூறு]

குறிப்புரை :

நிரப்பாது = முடிவுபடாது இறை = தன் அரசன்.
விழுமம் = இடையூறு இரும்பு = போர்க்கருவிகள்
சுவைகொண்ட = தன்னைத் தீண்டிச் சுவைத்த
மருந்துகொன்மரம் = மருந்திற்காக சிதைத்த மரம்
வடுவின்று = மாசின்றி வடிந்த = அழகுபெற்ற

‘ ஈர்ந்தை ’ ஓரூர். அவ்வூரில் வாழும் ஈர்ந்தூர்கிழான் தோயன் வம்மோ = வருவாயாக உண்ணமருங்குல் = உணவுண்ணாத வயிறு. கருங்கை = வலியகை வடித்திசின் = வடித்துத் தருவாயாக.

27 உடையனாயின் உண்ணவும் வல்லன்
கடவர் மீதும் இரப்போர்க் கீயும்
மடவர் மகிழ்துணை நெடுமானஞ்சி
இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றாதிருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்தான் தோன்றுங்காலே.

1459

[புறநானூறு]

குறிப்புரை :

கடவர் = படைவீரர் மீதும் = மேற்பட்டும்
மடவர் = பாணர் முதலியோர் நெடுமானஞ்சி = அதியமான் நெடுமானஞ்சி என்னும் வள்ளல் இறை = இறைப்பு
செரீஇய = செருகி வைத்த ஞெலிகோல் = தீக்கடைகோல்
கான்றுபடு = கக்கப்படும் கனையெரி = சுடர்நெருப்பு
தோன்றுங்கால் = பகைவரை வெல்லப் போர்க்குத் தோன்றுங்காலத்து.

28 பெருப்போர்க் ... ... ...னை
தமிழ்ச்சிறு கொண்டை இமயத் தமைத்து
வடதிசை யாண்ட தென்னவன், கடிகொள
முனிந்த கூற்றத்துப் புருவம் போல
வாங்கிருஞ் சிறுங்கடை வளைந்த
வேம்பின் இளையவன் சூடும் பூவே, 1460

**குறிப்புரை :**

தமிழ்ச்சிறுகெண்டை = தமிழ் நாட்டுக்கயற்கொடி
இமயம் = இமயமலை தென்னவன் = பாண்டியமன்னன்
முனிந்த = வெகுண்ட. வாங்கிருங்கொழுங்கடை வளைத்த
இருபக்கம் போல வேம்பின் இலை = வேப்பமாலை.

29 சிறுசெவியன்னே பெருங்கேள் வியனே
குறுங் கணியன்னே நெடுங் காட்சியனே
இளைய ஞயினும் அறிவின் மூத்தனனே
மகளிர் ஊடினும் பொய் யறியலனே
கீழோர் கீழ்மை செய்யினும்தான் றன்
வாய்மை வழக்கம் மறுத்தலஞ்சி
மேல்நெறி படரும் பேரா ளன்னே
ஈண்டுநலத் தருதல் வேண்டிப் பாண்டியர்
பாடுதமிழ் வளர்த்த கூடலின் வடாஅது
பல்குடி துன்றக் கன்னியம் பெரும்பதிச்
சால்பு மேன்மேற் றோன்றிய தாழி
காதலின் மேவலன் பிறர் பிறர்க்கீந்து
தானும் உண்ணும் விருந்துண்டு மிகினே. 1461
[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

குறுங்கணி = குறிய முடிமாலை காட்சி = தோற்றம்
கீழோர் = அறிவில்லாதவர் பேராளன் = பெருந்தகைமை
உடையவன். ஈண்டு = இவ்வுலகில்
வடாஅது = வடக்குப்பக்கத்தில்
கன்னியம் பெரும்பதி = கன்னியாகுமரி நாடு
தாழி = செல்வமிக்க சால், உணவுச்சாலுமாம்

## அதிகாரம்—83

# பரிசில்

பரிசிலாவது : தன்னால் மதிக்கப்படும் புலவர்கட்கும்புரக்கப் படும் பாணர் கூத்தர் முதலானோர்க்கும் ஈட்டிய பொருளை உவந்து அளித்தலாம்.

[ஆசிரியப்பா]

1 வளிநடந் தன்ன வாச்செலல் இவுளியொடு
கொடி நுடங்குமிசைய தேரினர் எனாஅ
கடல் கண்டன்ன ஒண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்கும் களிற்றினர் எனாஅ
உரும் உரற்றன்ன உட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றியர் எனாஅ
மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே
எம்மால் வியக்கப் படூஉ மோரே
இடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கண் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்
சீறூர் மன்னராயினும் எம்வயின்
பாடறிந் தொழுகும் பண்பினோரே
மிகப்பே ரெவ்வ முறினும் எனைத்தும்
உணர்ச்சி யில்லோர் உடைமை உள்ளேம்
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே. 1462

[புறநானூறு]

**குறிப்புரை :**

வளி = காற்று வாச்செலல் இவுளி = தாவிச்செல்லுத லுடைய குதிரை. மிசை = உச்சி என = எனவும்
மலைமாறு மலைக்கும் = மலையொடு முரணிப்போரிடும்
உருமுரறற்றன்ன = இடி முழங்கினாற் போல
உட்குவருமுரசு = அஞ்சத்தக்க முரசு செரு = போர்
மண்கெழுதானை = நிலத்தைப் பொருந்திய படையினையுடைய
வியத்தலோவிலம் = மதித்தல் இல்லோம்
படப்பை = தோட்டம் மறி = ஆடு முஞ்ஞை = ஒரு கீரைச்செடி குற்றடகு = சிறியஇலை
வரகின் சொன்றி = வரகுச்சோறு சீறூர் = சிறியவூர்
பாடறிந்து ஒழுகும் = முறையறிந்து நடக்கும்
எவ்வம் = துன்பம் உணர்ச்சி = நல்லறிவு
உடைமை = செல்வம் உள்ளேம் = பெறுதற்கு எண்ண மாட்டோம் நல்குரவு = வறுமை உவந்து = மகிழ்ந்து நினைப்போம்.

2 ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ
இழையணி யானை இயல்தேர் அஞ்சி
அதியமான் பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் களிறுதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய் யாகாதே
அருந்தே மாந்த நெஞ்சம்!
வருந்த வேண்டா வாழ்கவன் தாளே ! 1463

[புறநானூறு]

**குறிப்புரை :**

பயின்று = தொடர்ந்து தலைநாள் = முதன்முதற்கண்டநாள்
அஞ்சி = அதியமான் அஞ்சி நீட்டினும் = தாழ்ப்பினும்
கோட்டிடை = கொம்புகளுக்கிடையே
கவளம் = உணவுத்திரள் அது = அப்பரிசில் பொருள்
அருந்த ஏமாந்த நெஞ்சம் = உண்ண ஆசைப்பட்ட நெஞ்சே!
வருந்தவேண்டா = பரிசில் பெறக்காலம் நீட்டுதற்காக வருந்தவேண்டா,

3 கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருநல் உண்டனர் என்னாது பின்னும்
செலவா னாவே கலிகொள் புள்ளினம்
அனையர் வாழியோ இரவலர், அவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்
உடைமை யாகும் அவருடைமை
இன்மையாகும் அவரின் மையே. 1464

[புறநானூறு]

**குறிப்புரை :**

கடவுள் ஆலம் = தெய்வம் உறைபு ஆலமரம்
தடவுச்சினை = பெரிய கொம்பின் நெருநல் = நேற்று
என்னாது = என்று கருதாமல் லெவாஅ = போதலில்
தவிரமாட்டா. புள்ளினம் = பறவைக் கூட்டம்
அனையர் = (இரவலரும்) அத்தகையர் புரவு = காத்தற்கு
செய் ஆடவர் = செயல் உடை ஆண்மக்கள்
உடைமை = செல்வம் இன்மை = வறுமை.

4 ஈ என இரத்தல் இழிந்தன் றதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள் எனக் கொடுத்தல் உயர்ந் தன்றதனெதிர்
கொள்ளே னென்றல் அதனினு முயர்ந்தன்று
தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா ராகுப நீர் வேட்டோரே
ஆவும் மாவும் சென்றுணக் கலங்கிச்
சேற்றொடுபட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்
புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர் பழியலர் அதனால்
புலவேன் வாழியர் ஓரி! விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே! 1465

[புறநானூறு]

குறிப்புரை :

தன்னின் = தன்னைபோன்ற அல்லாதான் = பகைவனுகப் பெறுதவன் இளையர் = வீரர் புலியின் - புலிபோல பெருந்திறலா வாயினும் - பெருவலிமையில்லாதாயினும் பூசை = பூனை பால் = உணவுப் பொருள்.

11 உடையிட்டார் புல்மேய்ந்தார் ஓடுநீர்ப் புக்கார்
படையிட்டார் பற்றேனு மின்றி—நடைவிட்டார்
இவ்வகை ஐவரையும் என்றுய அணுகாரே
செவ்வகைச் சேவகர் சென்று. 896

[சிறுபஞ்ச மூலம்]

குறிப்புரை:

சிறந்த வீரர்கள் இவ்ஐவரையும் பகையாகக் கருதமாட்டார் என்பது.

உடையிட்டார் - ஆடை இழந்தவர் புல்மேய்தார் - நோன்புடையவர் நீர்ப்புக்கார் - நீராடுபவர் படையிட்டார் = போர்க்கருவியை இழந்தவர் நடைவிட்டார் = துறந்தவர் சேவகர் = வீரர்.

[கலித்துறை]

12 தறுக ணுண்மைய தாமரை நிறத்தன தகைசால்
மறுவில் வான்குளம் புடையன மாளவத் தகத்த
பறையினுலுவ படுசினை நாவலின் கனிபோல்
குறைவில் கோலத்த குளிர்புனற்
சிந்துவின் கரைய. 897

குறிப்புரை :

குதிரைப்படையின் சிறப்புக் கூறுகிறது.
மறுவில் = குற்றமில்லாத சினை - கிளை சிந்து - சிந்து நதி மாளவம் = மாளவதேசம்,

13 பார சூரவம் பல்லவமெனும் பதிப்பிறந்த
வீர ஆற்றல விளைகடுந்தேறனி றந்த
பாரிற் றேர்செலின் பழிபெரிதுடைத்தென நாணிச்
சோரும் வார்புயல்துளங்க விண்புகுவன துரகம். 898

**குறிப்புரை :**

இதுவும் குதிரைச் சிறப்புக் கூறுகின்றது.
பல்லவம் — பல்லவ தேசம் தேறல் = தேன்
வார்புயல் = நெடிய கார்மேகம் விண்புகுவன = விண்ணிற்
பரந்து செல்வன போல்வன துரகம் = குதிரைகள்.

14 அலங்கு வெண்மதி யைப்பசி யடையவப் பகலே
நிலங்கொண் டோங்கின திரம்பின புகர்சுழியுடைய
உலப்பி முன்னிற [illegible]ளுமுமிழ்வன போல்வ
விலங்கு பாய்வன வி[illegible]கணை விலக்குவ பாய்மா 899

**குறிப்புரை :**

இதுவும் அது ஐப்பசியடைய = அசுவ விண்மீனையடைய
ஓங்கின = அந்நாளிற் பிறந்தன உமிழ்வன = சிந்துவன
விலங்குபாய்வன = குறுக்கே பாய்வன கணை = அம்பு
பாய்மா = குதிரைகள்.

[ஏழுசீர்விருத்தம்]

15 அரும்பனைத் தடக்கை யபரகாத் திரம்வாய்
வாலெயி றைந்தி னுங்கொல்வ
கருங்கடற் சங்கும் கறந்த ஆன்பாலு
களற்றிய காலுகி ருடைய
பெரும்புலி முழக்கின் மாறெதிர் முழங்கிப்
பெருவரை நீண்டிகுந் திறல
திருந்தியே முறுப்பும் திண்ணிலந் தோய்வ
தீயுமிழ் தறுகணிற் சிறந்த. 900

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

இழிந்தன்று = இழிவுடையது உயர்ந்தன்று = உயர்வுடையது. தெண்ணீர் = தெளிந்தநீர்
இமிழ்திரை = ஒலிக்கும் அலை உண்ணாராகுப = உண்ண மாட்டாராவார் மாவும் = பிறவிலங்குகளும்
உண்ணீர் = அருந்துதற்குரிய நீர் அதர் = வழி
அல்லதை = அல்லாமல் உள்ளி = நினைந்து
பழியலர் = குறை கூறுர் புலவேன் = வெறுப்புறேன்
ஓரி = வல்வில்ஓரி என்னும் வள்ளல்.
கருவி வானம் = முகில் தொகுதியை உடைய மழை
வரையாது = அளவுஇல்லாமல் சுரக்கும் = வழங்கும்

5 நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ஆங்கு
மடவர் மெல்லியர் செலினும்
கடவன் பாரி கை வண்மையே. 1466

[புறநானூறு]

**குறிப்புரை :**

நல்லவும் = நல்லனவும் தீயவும் = தீயனவும்
அல்ல = அவையல்லன வாகிய எருக்கம் = எருக்கம்பூ
உடையவை = அன்பினாற் பூசித்தலுடையவை
பேணேம் என்னா = விரும்பமாட்டேம்
என்னா = என்று கூறமாட்டா
அதுபோல. செல்லினும் = பரிசில் வேண்டிச் செல்லினும்
கடவன் = வள்ளன்மை செய்தலைக் கடப்பாடாக உடையவன்
பாரி = வேள்பாரி என்னும் அரசன்.

6 நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குநர் அல்லர் நெறிகொளப்
பாடான்று இரங்கும் அருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே. 1467

[புறநானூறு]

குறிப்புரை :

நாளன்று = நல்ல நாளல்லாத நாளில்
புள்ளிடைதட்ப = புள்நிமித்தங்கள் போகா வேண்டா என்று தடைசெய்ய. பதனன்றுபுக்கு = செவ்வியில்லாத காலத்தில் சென்று. திறனன்று = திறமில்லாதவெறுக்கும் மொழிகளை அறியாமற் சொல்லினும் வறிது பெயர்குநர் அல்லர் = யாதும் பெருமல் மீள்வாரல்லர். பாடான்று இரங்கும் = ஓசை நிறைந்து ஒலிக்கும். பீடுகெழு = பெருமை பொருந்திய மலையன் = மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளல் பாடியோர் = அவனைப் பாடிச்சென்றவர்.

அதிகாரம்—84

## வாழ்த்து

வாழ்த்தாவது : மறுமைக்கும் இம்மைக்குந் துணையாய்க் கைம்மாறு கருதாது வாழ்வளிக்கும் இறைவனையும் மழையையும் ஐம்பெரும் பூதங்களையும் அரசனையும் தேவர் முனிவர் உள்ளிட்ட தெய்வத்தன்மையுடையோரையும் பரவிப் போற்றுதலாம்.

[நேரிசை வெண்பா]

1 கொடிபடு முத்தலைவேற் கூற்றக் கணிச்சிக்
கடிபடு கொன்றையான் காப்ப—நெடிதுலகிற்
பூமலி நாவற் பொழிலகத்துப் போய் நின்ற
மாமலைபோல் மன்னுக நீ. 1468

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

கொடிபடு = ஒழுங்குபட்ட முத்தலைவேல் = சூலாயுதம்
கணிச்சி = குந்தாலிப்படை கடி = நறுமணம்
கொன்றையான் = கொன்றைமாலையணியும் சிவபெருமான்
பூமலிநாவல் = பொலிவுமிக்க நாவலந்தீவிடத்து
போய்நின்ற = உயர்ந்து நின்ற மாமலை = மேருமலை
மன்னுக = நிலைபெற்று வாழ்க.

[மருட்பா]

2 கண்ணுதலோன் காப்பக் கடி நேமியோன் காப்ப
எண்ணிருதோ ளேந்திழையாள் தான்காப்பப் —
பண்ணியல் நூல்
சென்னியர்க் களிக்குந் தெய்வம் நீ
மன்னுக நாளு மிம் மண்மிசையானே. 1469

[பெரும்பொருள் விளக்கம்]

குறிப்புரை :

கண்ணுதலோன் = சிவபெருமான் நேமியோன் = திருமால்
எண்ணிருதோள் = பதினறுகைகள்
ஏந்திழையாள் = பரமேசுவரி. சென்னியர் = சோழர்
மன்னுக = நிலைபெறுக.

[ஆசிரியப்பா]

3 ஓங்குமலைப் பெருவிற் பாம்புநாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றிதந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல
வேந்து மேம்பட்ட பூந்தார் மாற!
கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்
மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும், மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமரெனக் கோல் கோடாது
பிறர் எனக் குணங் கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையும்
திங்களன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையும், மூன்றும்
உடையை யாகி இல்லோர் கையற

நீநீடு வாழிய நெடுந்தகை! தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறைக்
கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுவாழ் எக்கர் மணலினும் பலவே. 1470

[புறநானூறு]

குறிப்புரை:

ஓங்குமலை = மேருமலை பாம்பு நாண் = பாம்பாகிய கயிறு
கொளீ = பொருத்தி கணை = அம்பு மூவெயில் = முப்புரம்
உடற்றி = எய்து எரித்து அமரர்க்கு = தேவர்கட்கு
கறைமிடற்றண்ணல் = கரியகண்டத்தவனாகிய சிவபெருமான்
காமர்சென்னி = அழகியதிருமுடி ஒருகண் = நெற்றிக்கண்
மாற! = பாண்டிய மன்னனே! கதழ்பரிய = விரைந்த
செலவையுடைய கலிமா = குதிரை
புகல் மறவர் = போரை விரும்பும் வீரர் நான்கு = நால்
வகைப்படை. மாண்டதாயினும் = மாட்சிமைப்பட்ட
தாயினும். முதற்று = அடிப்படையாக உடையது.
கொற்றம் = வெற்றி நமர் = நம்மவர்.
கோடாது = வளையாமல் பிறர் = அயலார்
குணங் கொல்லாது = நற்குணங்களைக் கேடுசெய்யாமல்
ஆண்மை = வீரம் சாயல் = மென்மை வானம் = மழை
மூன்றும் = மூன்றையும் இல்லோர் = வறியவர்
கையற = இல்லையாக புணரி = கடல்
செந்தில் = திருச்செந்தூர் நெடுவேள் = முருகக்கடவுள்
கடுவளி = பெருங்காற்று எக்கர் = மேடுபட்ட
மணலினும் = மணலைக்காட்டிலும் நீ நீடுவாழிய!

4 நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே யாயினும் தம்மொடு செல்லா
வேற்றோர் ஆயினும் நோற்றோர்க் கொழியும்
ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல் மாந்தி மகிழ் சிறந்து
இரவலர்க் கருங்கலம் அருகாது வீசி

வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை யல்லது
ஆழுங்காலைப் புணை பிறிதில்லை
ஒன்று புரிந்தடங்கிய இருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக இருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்
யானறி அளவை யோ இதுவே வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும் இம்மெனப்
பரந்தியங்கு மாமழை உறையினும்
உயர்ந்து மேந்தோன்றிப் பொலிகநும்
நாளே. 1471

புறநானூறு]

குறிப்புரை :

நாகம் = நாகநாடு (தேவலோகம்) பாகார் = பாங்கமைந்த
மண்டிலம் தேசம் தம = தம்முடையன நோற்றோர்க்கு
ஒழியும் = தவஞ்செய்வார்க்கே சென்று சேரும்
ஏற்ற = இரந்த ஈர்ங்கை = குளிர்ந்த கைகள்.
சொரிந்து = வழங்கி பொலங்கலம் = பொற்கலம்
தேறல் = நறுங்கள் அருங்கலம் = அரிய செல்வங்கள்
அருகாது = குறையாமல் வீசி = வழங்கி
வரைந்த வைகல் = அளவிடப்பட்ட வாழ்நாள்
ஆழுங்காலை = மடியும் காலத்து ஒன்று = தவம்
இருபிறப்பாளர் = பார்ப்பார் வேந்திர் = வேந்தர்களே !
வயங்கி = விளங்கி உறை = மழைத்துளி உயர்ந்து = பல்கி
பொலிக நும் நாளே = நும் வாழ் நாள் பொலிவுறுக !

வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம்படக் கடந்த கழல் தொடித்தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவின் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி

நீல மணி மிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொல்நிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியது
ஆதல் நின் னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே. 1472

[புறநானூறு]

குறிப்புரை :

வலம் = வெற்றி வாய்வாள் = வெற்றி தப்பாதவாள்
கடந்த = வென்ற கழல் தொடி = வீரவளை
ஆர்கலி = ஆரவாரத்தையுடைய
அதியர்கோமான் = அதியமான் நெடுமானஞ்சி என்னும்
வள்ளல். பொலந்தார் = பொன்மாலை
சென்னி = சடைமுடி. நீலமணி மிடற்றொருவன் = சிவபெருமான்
மன்னுக ! = நிலைபெற்று வாழ்க ! விடர் = மலைப்பிளவு
அருமிசை = அரியஉச்சி தீங்கனி = இனியபழம்
குறியாது = பெருதற்கரியது என்று கருதாமல்
ஈத்தனையே = அளித்தாய் ஆதலின் வாழ்க.

ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்குப் பெருங்கடனிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறுஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின்என
அறத்தாறு நுவலும் பூட்கை, மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்

எங்கோ வாழிய குடுமித் தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே. 1473

[புறநானூறு]

**குறிப்புரை :**

ஆவும் = ஆனிரைகளும் ஆனியல் = பசுவினது இயல்பு
தென்புலவாழ்நர் = பிதிரர் இறுக்கும் = பண்ணும்
பெருஅதீரும் = பெருதவர்களும் கடிவிடுதும் = விரைந்து
செலுத்துவோம். அரண் = பாதுகாப்பான இடம்
நுவலும் = சொல்லும் பூட்கை = கொள்கை
எங்கோ = எம் அரசன் குடுமி = பல்யாகசாலை
முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய வேந்தன்
செந்நீர் = சிவந்த நீர்மையுடைய வயிரியர் = கூத்தர்
ஈத்த = வழங்கிய முந்நீர்விழவு கடல்தெய்வத்திற்குச்
செய்யும் விழா. நெடியோன் = வடிம்பலம்ப நின்ற
பாண்டியன். பஃறுளி = பஃறுளி என்னும் பேராறு.
பல = பலகாலம்.

7 பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா உள்ளமொடு அணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கமழ் அகலம்
மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினும்

கிளந்த சொல்நீ பொய்ப்பறி யலையே
சிறியிலை உழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்றுநிலை தளர்க்கும் உருமின் சீறி
ஒருமுற் றிருவர் ஓட்டிய ஒள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
ஆடுபெற் றழிந்த மள்ளர் மாறி
நீகண் டனையேம் என்றனர் நீயும்
நும்நுகம் கொண்டினும் வென்றோய் அதனால்
செல்வக் கோவே சேரலர் மருக!
கால்திரை எடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை உலகம் செய்தநன் றுண்டெனின்
அடையடுப் பறியா அருவி யாம்பல்
ஆயிர வெள்ள வூழி
வாழி யாத! வாழிய பலவே! 1474

[பதிற்றுப் பத்து]

**குறிப்புரை :**

பணிபு = பணிந்தொழுகுதல் அணிவரக்கெழிஇ = அழகு பொருந்த. கண்ணஞ்சலை = கண்ணோட்டத்தால் அஞ்சமாட்டாய். வணங்குசிலை = வளைந்த வில் அகலம் = மார்பு மலர்த்தல் = காணக்காட்டுதல் நிலம் - நிலவுலகம் பெயரும் காலை = ஊழிக்காலம் கிளந்த = சொல்லிய தெரியல் = மாலை கொண்டி = கொள்ளப்படும் பொருள் தமிழ் = தமிழ்ப்படை செறிந்து = நிறைத்து உருமின் சீறி = இடியைப் போலக் கோபித்தெழுந்து முற்று = முற்றுகை இருவர் = மற்றைய இருபெருவேந்தர் ஓட்டிய = வென்று துரத்திய. ஆடுபெற்று = முன்னர் வெற்றிபெற்று அழிந்த = இப்பொழுது தோற்ற மன்னர் = போர்வீரர்

மாறி = பகைமை நீங்கி  நுகம் = வலிமை

செல்வக்கோவே = செல்வக் கடுங்கோ வாழியாதன் என்னும் சேரமன்னன்.  கால் = காற்று  வேலி = கடலாகியவேலி

நன்று = நல்லறம்  அடையிடுபறியா = அடையிருத்தலை யறியாத  அருவி = மலரல்லாத  அம்பல் = ஆம்பல் என்னும் எண்  வெள்ளம் = வெள்ளம் என்னும் எண்

வாழி = வாழ்வாயாக.

---

நீதித்திரட்டுச் செய்யுட்களும்

குறிப்புரையும்

நிறைவுற்றன.

# அறத்துப்பால் பொருட்பால்களில் வரும் அதிகாரப் பெயர்களின் அகர நிரல்



F 80— — 138

# நீதித் திரட்டினுள் அமைந்துள்ள நூற்பெயர்களும் அவற்றினின்று எடுத்துக்கொள்ளப்பட்டுள்ள பாடல்களின் எண்ணிக்கையும்

| நூற்பெயர் | பாக்கள் |
|---|---|
| 1) அறநெறிச்சாரம் | 31 |
| 2) ஆசாரக்கோவை | 27 |
| 3) ஆசிரியமாலை | 16 |
| 4) இராமாவதாரம் (கம்பராமாயணம்) | 29 |
| 5) இரும்பல் காஞ்சி | 4 |
| 6) இன்னாநாற்பது | 5 |
| 7) இனியவை நாற்பது | 2 |
| 8) ஏலாதி | 20 |
| 9) களவழி நாற்பது | 10 |
| 10) குண்டலகேசி | 17 |
| 11) சாந்திபுராணம் | 10 |
| 12) சிறுபஞ்சமூலம் | 35 |
| 13) சீவகசிந்தாமணி | 141 |
| 14) சூளாமணி | 77 |
| 15) தகடூர் யாத்திரை | 46 |
| 16) திரிகடுகம் | 52 |
| 17) நந்தாசரிதை | 1 |
| 18) நளன் சரிதை | 1 |
| 19) நாரத சரிதை | 6 |
| 20) நாலடியார் | 214 |
| 21) நான்மணிக்கடிகை | 34 |
| 22) பதிற்றுப்பத்து | 4 |
| 23) பரிபாடல் திரட்டு | 6 |
| 24) பழமொழி நானூறு | 314 |
| 25) பாரதம் | 30 |
| 26) புறநானூறு | 109 |
| 27) புறப்பொருள் வெண்பாமாலை | 75 |
| 28) பெரும்பொருள் விளக்கம் | 36 |
| 29) முத்தொள்ளாயிரம் | 43 |
| 30) மேருமந்தாரபுராணம் | 1 |
| 31) யாப்பருங்கலக்காரிகைமேற்கோள் | 2 |
| 32) வளையாபதி | 55 |
| 33) நூற்பெயர் குறிக்கப் பெருதவை | 3 |

# செய்யுள் முதற்குறிப்பு அகராவரிசை

[ எண்கள் பக்க எண்கள் ]

குறிப்புரை :

யானைப்படையின் சிறப்புக் கூறுகின்றது.
பனைத்தடக்கை - பெரியகை அபரகாத்திரம் = கால்கள் வால், எயிறு = வாலும், தந்தங்களும் இவை ஐந்து உறுப்புக்களானும் யானை பகையைக் கொல்லும் காலுகிர் = கரல் நகங்கள் தறுகணிற்சிறந்த = அஞ்சாமை யுடையன யானைப் படைகள்.

அதிகாரம்—38

## நட்பு

நட்பாவது : ஆளும் அரசர்க்குப் படை போலத் துணைபுரியும் பாங்காயவரும் குறுநில மன்னரும் செறிந்து ஒழுகுந் தன்மை. அது பொதுவாக யாவர்க்கும் இன்றியமையாதது ஆதலின் அதன் இலக்கணமும் சிறப்பும் பற்றி இவ்வதிகாரத்திலும் நட்பிற்கு மாறு பட்ட பிற இயல்புகளை வரும் அதிகாரங்களிலும் காணலாம்.

[நேரிசை வெண்பா]

1 கோட்டுப் பூப்போல மலர்ந் துபின்கூம்பாது
வேட்டதே வேட்ட தாம் நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பின்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரு மில். 901

குறிப்புரை :

கோட்டுப்பூ - மரங்களிற் பூக்கும்மலர்
வேட்டது = விரும்பியது கயப்பூ = குளத்தில் தோன்றி மலரும் பூ கூம்புதல் - குவிதல் நயப்பார் - விரும்புவார்.

2 நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையும் செய்வதொன் றுண்டோ—இறுமளவும்
இன்புறுவ தின்புற் றெழீஇ இயவரொடு
துன்புறுவ துன்புறுக் கால். 902

குறிப்புரை :

நட்டார்க்கு = நட்புப்பூண்டார்க்கு இறுமளவும் = இறக்கும் வரை எழீஇ = எழுச்சி கொண்டு.

3 காதலார் சொல்லுங் கடுஞ்சொல் லுவந்துரைக்கும்
ஏதிலார் இன்சொலின் தீதாமோ—போதெலாம்
மாதர்வண் டார்க்கும் மலிகடல் தண்சேர்ப்ப
ஆவதறி வார்ப் பெறின். 903

குறிப்புரை:

காதலார் = நண்பினோர் ஏதிலார் = நட்பில்லாதவர் மாதர் வண்டு = இனிய வண்டுகள் ஆவதறிவார் = நன்மை தெரிபவர்.

[இன்னிசை வெண்பா]

4 குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை
நட்டபின் நாடித் திரிவனேல் நட்டான்
மறைகாவா விட்டவன் செல்வழிச் செல்க
அறைகடல்சூழ் வையம் நக. 904

குறிப்புரை :

நாடி = ஆராய்ந்து மறை = இரகசியம். அறைகடல் அலைகளால் ஆரவாரிக்குங் கடல் நக = எள்ளி நகைசெய்ய.

[நேரிசை வெண்பா]

5 பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. 905

[நாலடியார்]

குறிப்புரை :

பிறை = பிறை நிலா நந்தும் = பெருகிவளரும் மதி = முழு நிலா வைகலும் = நாள்தோறும் தேயும் = குறையும்.

பொ



போ



ம

மா



மி



மீ



மு

[இன்னிசை வெண்பா]

6 தாய்நட் டொழுகுதற்குத் தக்கார் எனவேண்டா
யார்நட்ப தாயினும் நட்புக் கொளல்வேண்டும்
கானட்டு நாறுங் கதுப்பினுய் தீற்ருதோ
நாய்நட்டால் நல்ல முயல். 906

**குறிப்புரை :**

கானட்டு — மணம்பொருந்தி கதுப்பு - கூந்தல். தீற்ருதோ வேட்டையாடித்தராதோ.

[நேரிசை வெண்பா]

7 தெற்றப் பரிந்தொருவர் தீர்ப்பர் எனப்பட்டார்க்கு
உற்ற குறையை உரைப்பத் தாம்—தெற்ற
அறையா ரணிவளையாய் தீர்த லுறுவார்
மறையார் மருத்துவர்க்கு நோய். 907

**குறிப்புரை :**

தெற்ற — தெளிவாக அறையார் = கூறுர்
மறையார் = மறைத்துக் கூறமாட்டார் நோய் - தாம் கொண்ட பிணியை.

8 நன்றே யொருவன் துணைக்கோடல் பாப்பிடுக்கண்
ஞெண்டேயும் பார்ப்பான்கண் தீர்த்தலான்
— விண்டோயும்
குன்றகல் நன்னுட கூறுங்கால் இல்லையே
ஒன்றக் குதவாத ஒன்று. 908

**குறிப்புரை :**

பாப்பிடுக்கண் — பாம்பினுல் வரும் துன்பத்தை. நண்டினைத் துணையாகக் கொண்டுசென்ற பார்ப்பனச் சிறுவனை அது பாம்பினைக் கொன்று காப்பாற்றியதொரு பழங்கதையைச் சுட்டிக் கூறியது இச்செய்யுள். அதனுன் ஒன்றுக்கும் உதவாதது என்பதொரு பொருள் இல்லை என்பதாம்.

9 உற்றால் இறைவற் குடம்பு கொடுக்கிற்பான்
மற்றவற் கொன்றுமோ ரொன்றுமோ—தெற்ற
முரண்கொண்டு மாறுய உண்ணுமோ உண்ணு
இரண்டே ருருதுறையில் நீர். 909

**குறிப்புரை :**

உற்றால் = தீது உற்றகாலத்து இறைவன் = தன் தலைவன் மற்றவர் = பகைவர் ஒன்றுமோ - நட்புச் செய்வானே (செய்யான்) பகையுற்ற இரு எருதுகள் ஒரு துறையுள் நீர் உண்ணுமை போல நல்ல நட்பினன் பகைவரொடு சேர மாட்டான் என்பது கருத்து.

[இன்னிசை வெண்பா]

10 தன்னை மறுத்துத் தமர்என்று கொண்டக்கால்
என்ன படினும் அவர்செய்வ செய்வதே
இன்னொலி வெற்ப இடரென்னை துன்னூசி
போம்வழிப் போகும் இழை. 910

**குறிப்புரை :**

என்னபடினும் = எத்துன்பம் அடைந்தாலும்
துன்னூசி = தைக்கும் ஊசி இழை = நூல்.

11 கருவினுட் கொண்டு கலந்தாரும் தார்முன்
ஒருவழி நீடி உறைதலோ துன்பம்
பொருகடற் றண்சேர்ப்ப! பூந்தாமரை மேல்
திருவோடும் இன்னாது துச்சு. 911

[பழமொழி]

**குறிப்புரை :**

ஒருவழி = மனம் ஒருவழிப்பட்டு. உறைதல் = கூடிவாழ்தல்
திரு - திருமகள் இன்னாது - துன்பமாகும்
துச்சு = ஒரு குடிலில் வாழ்வது.

12 பறைநன்று பண்ணமையா யாழின் நிறைநின்ற
பெண்நன்று பீடிலா மாந்தரின் பண்ணழித்து
ஆர்தலின் நன்று பசித்தல் பசைந்தாரின்
தீர்ந்தாரின் தீப்புகுதல் நன்று. 912

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை :

பண்ணமையாத யாழோசையினும் பறை ஓசை நல்லது. பெருமையில்லாத மாந்தரினும் நிறையுடைய பெண் நல்லள்; பண்ணையழித்து உண்ணுதலின் பசி தீர்த்தல் நல்லது. அன்பிலாருடன் வாழ்தலின் தீப்புகுதல் நன்று என்பதாம்.

[கலிவிருத்தம்]

13 கெட்டேம் இதுவெம் நிலையென்று சார்தற்கண்
நட்டவ ரல்லார் நனிமிகு பவர்சுற்றம்
பெட்டது சொல்லிப் பெரிதிகழ்ந் தாற்றவும்
எட்டவந் தோரிடத் தேகி நிற்பவே. 913

[வளையாபதி]

குறிப்புரை :

நனிமிகுபவர் — மிக நெருங்கியவர் பெட்டது — விரும்பியது
எட்டவந்து — சேய்த்தாக நீங்கி வந்து.

[ஆசிரியப்பா]

14 பலர்க்கு நிழலாகி உலகம் மீக்கூறி
தலைப் போகன்மையின் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்
இடங்கொடுத் தளிப்ப மன்ற உடம்பொடு
இன்னுயிர் விரும்புங் கிழமைத்
தொலைநட் புடையார் தம்முழைச் செலினே. 914

[புறநானூறு]

குறிப்புரை :

தலைப்போகன்மையின். — முடிவு போகாமையின்
அளிப்ப — அன்பு செய்வர்
தம்முழைச் செலினே — அவரிடத்துச் சென்றால்,

அதிகாரம்—39

# நட்பாராய்தல்

நட்பாராய்தலாவது : தாம் நட்புக் கொள்ள விரும்பியாரது யண்பு முதலியவற்றைப் பல்கால் தெரிந்து பின்னர்க் கொள்ளுதற்கு ஆராய்தலாகும்.

[இன்னிசை வெண்பா]

1 யானை யனையவர் நண்பொரீஇ நாய னையார்
கேண்மை கெழீஇக் கொளல் வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்த வேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய். 915

**குறிப்புரை :**

அனையவர் = தன்மையுடையவர் ஒரீஇ = நீக்கி
கேண்மை = நட்புறவு கெழீஇ = பொருந்தி
வால் குழைக்கும் என்பது அன்பு காட்டும் என்றபடி.

[நேரிசை வெண்பா]

2 பலநாளும் பக்கத்தா ராயினும் நெஞ்சில்
சிலநாளும் ஒட்டாரோ டொட்டார்—பலநாளும்
நீத்தா ரெனக்கை விடலுண்டோ தந்நெஞ்சத்து
யாத்தா ரோடியாத்த தொடர்பு. 916

**குறிப்புரை :**

ஒட்டார் = உள்ளத்தாற் கலவாதவர்
நீத்தார் = நீங்கி வேறிடத்துள்ளவர்
யாத்தார் = பிணிப்புற்றவர் தொடர்பு = நட்புறவு.

[இன்னிசை வெண்பா]

3 கடையாயார் நட்பிற் கமுகனையார், ஏனை
இடையாயார் தெங்கின் அனையார் தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன் றிட்ட ஞான்றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு 917

**குறிப்புரை :**

கடையானவர் நட்பு பாக்கினையும், இடையாயார் நட்பு தேங்காயையும் தலையாயார் நட்பு பனையினையும் ஒக்கும் என்பது.
கமுகு - பாக்கு மரம் பெண்ணை - பனைமரம்

4 நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கணிய ராயினும்
ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னும்
சேய்த்தானும் சென்று கொளல் வேண்டும்
செய்விளைக்கும்
வாய்க்கால் அனையார் தொடர்பு. 918

**குறிப்புரை :**

நாயினது கால் விரல் நெருங்கியிருப்பினும் ஈயினது கால்கள் போல உதவுவதில்லை.
சேய்த்து - நெடுந்தூரம் செய் = வயல்
தொடர்பு - நட்புறவு.

5 மரீஇப் பலரொடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருள் தக்கார்க் கோடலே வேண்டும்
பரீஇ உயிர்செகுக்கும் பாமபொடும் இன்னா
மரீஇப் பின்னைப் பிரிவு. 919

**குறிப்புரை :**

மரீஇ - கலந்து பொரீஇ - உளமொத்து
பரீஇ - அன்புற்று செகுக்கும் நீக்கும்
இன்னா துன்பமாம் மரீஇப் பின்னைப் பிரியும் - நட்புற்றுப் பின்னர் பிரியும் பிரிவுத் துன்பம்.

[நேரிசை வெண்பா]

6 கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
குருத்தின் கரும்புதின் றற்றே—குருத்திற்கு
எதிர்செலத் தின்றன்ன தகைத்தரோ என்றும்
மதுரமி லாளர் தொடர்பு. 920

**குறிப்புரை ;**

கேண்மை = நட்பு குருத்தின் கரும்பு தின்றற்று = குருத்து முதலாகக் கரும்பைத் தின்னுதல் ஒக்கும் எதிர் = வேரில் இருந்து தின்பதை ஒக்கும் மதுரம் = இனிமை.

7 கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்பு தின்றற்றே—நுனிநீக்கித்
தூரின் தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரமி லாளர் தொடர்பு. 921

[நாலடியார்]

**குறிப்புரை :**

இதுவும் அது.
தூர் = அடிப்பகுதி தகைத்து = தன்மையுடையது
ஈரமிலாளர் = அன்பில்லாதவர்.

[இன்னிசை வெண்பா]

8 மண்ணி யறிப மணிநலம் பண்ணமைத்து
ஏறிய பின்னறிப மாநலம்—மாசறச்
சுட்டறிப பொன்னின் நலம்காண்பார், கெட்டறிப
கேளிரான் ஆய பயன். 922

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை:**

மண்ணி = கழுவி மணி = இரத்தினம் மா = குதிரை
சுட்டறிப = புடமிட்டுத் தெரிந்து கொள்வார்
கெட்டறிப = தம்நிலை கெட்ட பின்பு அறிவர்
கேளிர் = நட்புடையவர்.

9 தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்
கோளாளன் என்பான் மறவாதான் இம்மூவர்
கேளாக வாழ்த லினிது. 923

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

தாளாளன் = ஊக்கமுடையவன் வேளாளன் = உழவன்
கோளாளன் = குறிக்கோளுடையவன்
கேளாக = நட்பினராக.

அதிகாரம்—40

## நட்பிற் பிழைபொறுத்தல்

நட்பிற் பிழைபொறுத்தலாவது : ஆய்ந்து கொண்ட நட்பினர் காரணங் கருதியோ உரிமை பற்றியோ செய்யும் குறைகளைப் பொறுத்துக் கொள்ளுதலாம்.

[இன்னிசை வெண்பா]

1 தண்பொன்றித் தம்மாலே நட்கப்பட் டார்களைக்
கண்கண்ட குற்றம் உளவெனினும் காய்ந்தீயார்
பண்கொண்ட தீஞ்சொற்பணைத் தோளாய்! யாருளரோ
தங்கன்று சாக்கறப் பார். 924

**குறிப்புரை :**

காய்ந்தீயார் = சினங்கொள்ளார் கன்று = பசுக்கன்று
கறப்பார் = பால் கறப்பவர்.

[நேரிசை வெண்பா]

2 விலங்கேயுந் தமமோ டுடன்உறைதல் மேவும்
கலந்தாரைக் கைவிடுதல் ஒல்லா—இலங்கருவி
தாஅய் இழியும் மலைநாட இன்னாதே
பேஎயொ டானும் பிரிவு. 925

**குறிப்புரை :**

ஒல்லா = புரியமாட்டா தாஅய் = பரந்து
இன்னாது = துன்பமுடையது
பிரிவு = நட்புற்றுப் பின்னர் பிரிதல்.

[இன்னிசை வெண்பா]

3 கொழித்துக் கொளப்பட்ட நண்பி னவரைப்
பழித்துப் பலர்நடுவண் சொல்லாடார் என்கொல்
விழித்தலரும் நெய்தற் றுறைவ! உரையார்
இழித்தக்க காணின் கனா. 926

**குறிப்புரை :**

சொல்லாடார் = பேசமாட்டார். இழிவான கனவைக் கண்டவர் அதைப் பிறரிடத்துச் சொல்லார் அதுபோல.
இழித்தக்க = பழிக்கத்தக்கவை கனா = கனவு.

4 ஆண்டென் டெனவொன்றோ வேண்டா அடைந்தாரை
மாண்டிலர் என்றே மறுப்பக் கிடந்தோர்
பூண்டாங் கிளமுலைப் பொற்றொடீ! பூண்ட
பறையறையாப் போயினா ரில். 927

**குறிப்புரை :**

மாண்டிலர் = மாட்சிமையுடையார் அல்லர்
பறை = சாப்பறை அறையா = ஒலிக்காமல்.

[நேரிசை வெண்பா]

5 தந்தீமை யில்லார் நட்டவர் தீமையையும்
எந்தீமை என்றே உணர்பதாம் — அந்தண்
பொருதிரை வந்துலாம் பொங்குநீர்ச் சேர்ப்ப
ஒருவர் பொறை யிருவர் நட்பு. 928

[பழமொழி]

**குறிப்புரை :**

பொருதிரை = கரையை மோதும் அலைகள்
பொங்குநீர் = கடல். நட்பு ஒருவர் பொறுத்தலால் நிலை பெறும் என்பது.

[இன்னிசை வெண்பா]

6 நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிக் கொளல் வேண்டும்
நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கும் உண்டு. 929

**குறிப்புரை :**

புல்லிதழ் = மணமில்லாத புற இதழ்.
எல்லாரிடத்தும் ஏதேனும் குறையிருக்கும் ஆதலின் நட்பிற் பிழை பொறுத்தல் வேண்டுமென்பது கருத்து.

[நேரிசை வெண்பா]

7 இன்னா செயினும் இனிய ஒழிகென்று
தன்னையே தானோவின் அல்லது—துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட!
விலங்கிற்கும் விள்ளல் அரிது. 930

**குறிப்புரை :**

தானோவினல்லது = தானே வருந்தலல்லது
துன்னி = நெருங்கி விள்ளல் = விட்டுவிடுதல்.

8 இன்னா செயினும் விடற்பாலர் அல்லாரைப்
பொன்னாகப் போற்றிக் கொளல்வேண்டும்
— பொன்னொடு
நல்லில் சிதைத்ததீ நாடொறும் நாடித்தம்
இல்லத்தி லாக்கு தலால். 931

**குறிப்புரை :**

தீயை மனையகத்தே கொள்வதுபோல நட்டாரின் பிழையினைக் கருதாது நன்மையைக் கருதி ஏற்கவேண்டும் என்பது.
இல் – வீடு நாடி – தேர்ந்து.

[இன்னிசை வெண்பா]

9 தமரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தா ராயின் அவரைத்
தமரினும் நன்கு மதித்துத் தமர்அன்மை
தம்முள அடக்கிக் கொளல். 932

**குறிப்புரை :**

தமர் – தம்மவர் அன்மை – அல்லாத தன்மை—குறை.

10 வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்றா ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்
ஆற்றுந் துணையும் பொறுக்க! பொறானாயின்
தூற்றாதே தூர விடல். 933

**குறிப்புரை :**

தேற்றா ஒழுக்கம் – தீய நடைமுறை
ஆற்றுந்துணை – பொறுக்கும் அளவு
தூற்றாதே – பழிகூறாமல் விடல் – விட்டுவிடுக.

**குறிப்புரை :**

அமையா இடத்து பொருந்தா இடத்து. ஆகா = காத்தல் இயலாது. இமையாரும் · தேவர்களும். ஓம்பி = பாதுகாத்தும் அமிழ்து கோட்பட்டமையின் = கருடனால் அமிழ்தம் கொண்டு போகப்பட்டமையான். காப்பில் = காவல் செய்வதை விட தீச்சிறை = வலிமை மிக்க அரண்.

[கலிவிருத்தம்]

3 அகழ்கிடங் கந்துகில் ஆர்ந்த பாம்புரி
புகழ்தகு மேகலை நாயில் பூண்முலை
திகழ் மணிக் கோபுரம் திங்கள் வாண்முகம்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே. 837

**குறிப்புரை :**

அரண் என்னும் நங்கைக்கு அகழியே ஆடை. பாம்புரிமேகலை ஞாயில் மார்பகம் கோபுரம் முகம் கொடி சிகழிகையாகும் என்கின்றது. சிகழிகை = முடி.

[அறுசீர்விருத்தம்]

4 இஞ்சி மாக நெஞ்சுபோழ்ந்
தெல்லைகாணவேகலின்
மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து
மாக நீண்ட நாகமும்
அஞ்சும் நின்னை என்றலின்
ஆண்டு நின்று நீண்டதன்
ஏஞ்சிமாண் கொடிக்கையாற்
கூவி விட்ட தொத்ததே. 838

**குறிப்புரை :**

இஞ்சி = மதிலரண் மாகநெஞ்சி = ஆகாயமாகிய மார்பு மஞ்சு = மேகம் மாகநீண்டனகம் = ஆகாயத்தே நீண்ட நாகம் கொடிக்கை = கொடியாகியகை.

[கலிவிருத்தம்]

5 மாற்றவர் மறப்படை மலிந்து மதில்பற்றி
நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கிஎறி பொறியும்
தோற்றமுறு பேய் களிறு துற்றுபெரும் பாம்பும்
கூற்றமன கழுகு தொடர் குந்தமொடு கோண்மா 839

**குறிப்புரை :**

மலைந்து = போரிட்டு நூற்றுவரைக் கொல்லி = நூறுபேரை ஒரேகாலத்தில் கொல்லும் மதிற்பொறி நூக்கி = தள்ளி எறிபொறி = அடிக்கும் பொறி களிறு = யானை துற்று = விழுங்கும் கூற்றம் - யமன், தொடர் = சங்கிலி குந்தம் ஒருவகைக் கோடரி கோண்மா = புலிப்பொறி

6 விற்பொறிகள் வெய்யவிடு குதிரை தொடர் அயில்
கற்பொறிகள் பாவையன மாடமடு செந்தீக் [வாள்
கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்
செய்கூகை
நற்றலைகடிருக்கும் வலி நெருக்கும்மர நிலையே. 840

**குறிப்புரை :**

விடுகுதிரை = குதிரைவடிவான பொறி தொடர்வாள் = தானே வந்து கொல்லும் வாட்பொறி மாடமடுசெந்தீ = மாடங்களை எரிக்கும் தீ கொற்புனை = கொல்லாரால் செய்யப்பட்ட திருக்கும் = திருகிக்கொல்லும் நெருக்குமரம் = நெருக்கி அழிக்கும் ஒருவகை மரப்பொறி.

7 செம்புருகு வெங்களிகள் உமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய் முகந்துமிழ்வ
அம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித்
தம்புலங்களால் யவனர் தாட்படுத்த பொறியே. 841

**குறிப்புரை :**

செம்புருகுவெங்களி = உருகிய செம்பினைக் கொட்டும் கருவி உருகுவட்டு = உருகிய தீக்கட்டி நெய் = கொதிக்கும் எண்ணெய் புலம் = அறிவு யவனர் = யவனநாட்டுக் கொல்லர்.

[நேரிசை வெண்பா]

11 பெரியார் பெருநட்புக் கோடல்தாம் செய்த
அரிய பொறுப்பரென் றன்றே—அரியரோ
ஒல்லென் அருவி உயர்வரை நன்னாட!
நல்லசெய் வார்க்குத் தமர். 934

[நாலடியார்]

**குறிப்புரை:**

அரிய = பொறுத்தற்கரிய செயல்களை தமர் = உறவினர்.

[இன்னிசை வெண்பா]

12 மலைப்பினும் வாரணம் தாங்கும் குழவி
அலைப்பினும் அன்னே என்றோடும் சிலைப்பினும்
நட்டார் நடுங்கும் வினைசெய்யார் ஒட்டார்
உடனுறையுங் காலமு மில். 935

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

வாரணம் = யானை குழவி = குழந்தை
அலைப்பினும் = அடிப்பினும் அன்னே = அன்னையே
ஒட்டார் = பகைவர்.

**அதிகாரம்—41**

# தீநட்பு

[தீநட்பாவது : சொல்லாலும் செயலாலும் அல்லன புரிந்தொழுகும் தீக்குணம் உடையாரது நட்பினைக் கொள்ளாதொழிய வேண்டுதலின் நட்புச் செய்வார் உணர்ந்து கொள்ளக் கூறும் அதன் தீமையையாம்.

[இன்னிசை வெண்பா]

1 பெரிய நட்டார்க்கும் பகைவர்க்கும் சென்று
திரிவின்றித் தீர்ந்தார்போற் சொல்லி அவருள்
ஒருவரோ டொன்றி ஒருப்படா தாரே
இருதலைக் கொள்ளி என்பார். 936

குறிப்புரை :

பெரிய நட்டார் = பெரிதும் நட்பு கொண்டவர்
தீர்ந்தார் போற்சொல்லி = ஒருவர்பால் சேர்ந்தவரைப் போலப் பேசி,

2 தமக்குற்ற தேயாகத் தம் மடைந்தார்க் குற்ற
தெமக்குற்ற தென் றுணரா விட்டக்கால் என்னும்
இமைத்தருவி பொன்வரன் றும் ஈர்ங்குன்ற நாட !
உமிக்குற்றுக் கைவருந்து மா று. 937

குறிப்புரை :

என்னும் = என்ன பயனும்? இமைத்தருவி = ஒளிவிட்டுப் பாயும் நீரருவி. ஈர்ங்குன்றம் = குளிர்ந்த மலை
வருந்துமாறு = வருந்துவது போன்றதாகும்.

3 திருந்தாய்நீ ஆர்வத்தை ! தீமை யுடையார்
வருந்தினர் என்றே வயப்படுவ துண்டோ
அரிந்தரிகால் பெய்தமையக் கட்டியக் கண்ணும்
பொருந்தாமண் ஆகா சுவர். 938

குறிப்புரை :

வயப்படுவது = அவர்பால் ஆட்படுவது
ஆர்வத்தை = அவர்பால் செலுத்தும் பரிவினை
அரிந்து = வகுத்து அரிகால் = பாத்திசெய்த இடம்
பொருந்தாமண் = நன்கு குழைக்கப்படாத மண்.

4 பாப்புக் கொடியாற்குப் பால்மேனி யான்போலத்
தாக்கி யமருள் தலைப்பெய்யார் போக்கி
வழியராய் நட்டார்க்கு மாதவம் செய்வாரே
கழிவிழாத் தோளேற்று வார். 939

குறிப்புரை :

பாப்புக் கொடியாற்கு = அரவக் கொடியை உடைய துரியோதனனுக்கு. பால் மேனியான் = பலராமன் அமரில் = போரில்
தலைப்பெய்யார் = கூடியிருந்து துணைபுரியாதவர்
மாதவம் செய்வார் என்பது பின்பு நீர்க்கடன் முதலியசெய்தலை
கழிவிழா = விழா நடந்து முடிந்தபின்
தோளேற்றுவார் = தோளில் தாங்கிக் காண்பிப்பார்.

5 எய்ப்புழி வைப்பாம் எனப்போற்றப் பட்டவர்
உற்றுழி ஒன்றுக் குதவலராய்ப் பைந்தொடீஇ!
அச்சிடை யிட்டுத் திரியின் அதுவன்றோ
மச்சேற்றி ஏணி களைவு. 940

குறிப்புரை :

எய்ப்புழி = தளர்ந்த காலத்து வைப்பாம் = செல்வம் போன்றனவாம் உற்றுழி = துன்புற்றபோது
அச்சு = அச்சம் மச்சேற்றி ஏணி களைவு = ஒருவரை மச்சின்மீது ஏறவிட்டுப் பின் ஏணியை நீக்கிவிடுதலை ஒக்கும்.

6 இடையீ டுடையார் இவரவ ரோடென்று
தலையாயார் ஆய்தந்துங் காணார் கடையாயார்
முன்னின்று கூறும் குறளை தெரிதலால்
பின்னின்ற பேதையார் நட்பு. 941

[பழமொழி]

குறிப்புரை :

தலையாயார் = உயர் குணத்தோர் ஆராய்ந்து காணார் = ஆராய மாட்டார் கடையாயார் = கீழோர்
குறளை = கோள்கூற்று பேதையார் = அறிவிலார்.

[நேரிசை வெண்பா]

7 பெருகுவது போலத் தோன்றி வைத்தீப்போல்
ஒருபொழுதும் செல்லாதே நந்தும் — அருகெல்லாம்
சந்தன நீள்சோலைச் சாரல் மலைநாட
பந்தம் இலாளர் தொடர்பு. 942

**குறிப்புரை :**

வைத்தீ = வைக்கோற் போரிலிட்ட நெருப்பு
நந்தும் = கெடும்   பந்தம் = நட்பு.

[இன்னிசை வெண்பா]

8 சான்றோர்என மதித்துச்சார்ந்தாய்மன் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்கண் இல்லாயின்
சார்ந்தாய் கேள் !
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்புகண் டன்ன துடைத்து. 943

[நாலடியார்]

**குறிப்புரை :**

சாந்து = மை   செப்பு = சிமிழ்   அன்னது = அத்தன்மை.

9 பகல்போலும் நெஞ்சத்தார் பண்பின்மை இன்னா
நகையாய நண்பினா நாரின்மை இன்னா
இகலின் எழுந்தவர் ஓட்டின்னா இன்னா
நயமில் மனந்தவர் நட்பு 944

[இன்னாநாற்பது]

**குறிப்புரை :**

பகல் = தராசுமுள்   நாரின்மை = அன்பின்மை
இகலின் = போரின் கண்   ஓட்டு = புறமுதுகிட்டு ஓடுதல்
நயமில் மனம் = அறமில்லாத நெஞ்சம்
இன்னா = துன்பந்தரும்.

அதிகாரம்—42

## கூடா நட்பு

கூடா நட்பாவது: எந்நிலையினும் கூடத்தகாத நட்பாகும்.

[நேரிசை வெண்பா]

1 நலிந்தொருவன் நாளும் அடுபாக்குப் புக்கால்
மெலிந்தவன் வீழாமை கண்டு—மலிந்தடைதல்
பூப்பிழைத்த வண்டு புடையாடுங் கண்ணாளாய்
ஏப்பிழைத்துக் காக்கொள்ளு மாறு. 945

[பழமொழி]

**குறிப்புரை:**

நலிந்து = துன்புறுத்தி அடுபாக்கு = அழிக்கும் பொருட்டு வீழாமை = தோற்று அழியாமை மலிந்து = தாழ்ந்து பூப்பிழைத்து = மலர் என்று மழையாகக் கருதி ஏ = அன்பு கா = காவுதடி.

[நேரிசை வெண்பா].

2 யாஅர் ஒருவர் ஒருவர்தம் உள்ளத்தை
தேருந் துணைமை யுடையவர்—சாரல்
கணமணி நின்றிமைக்கும் நாடகேள் மக்கள்
மனம்வேறு செய்கையும் வேறு. 946

**குறிப்புரை:**

தேரும் துணைமை = தெரியும் அறிவு இமைக்கும் = ஒளி வீசும் மனம் = எண்ணம்.

3 செறிப்பில் பழங்கூரைச் சேறணை யாக
இறைத்தும்நீர் ஏற்றும் கிடப்பர்—கறைக்குன்றும்
பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட!
தக்கருமம் முற்றுந் துணை. 947

**குறிப்புரை :**

செறிப்பு - நெருக்கம் இறைத்தும் = ஒழுகும் மழை நீரை இறைத்தும் தாழும் - ஒழுகும் தம்கருமம் = தமக்கு ஆக வேண்டிய செயல் துணை - அளவு.

4 உள்ளத்தால் நள்ளா துறுதித் தொழில ராய்க்
கள்ளத்தால் நட்டார் கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதுப்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட !
மனத்துக்கண் மாசாய் விடும். 948

[நாலடியார்]

**குறிப்புரை :**

கழிகேண்மை = மிக்கநட்பு செதும்பு = சேறு மாசாய் விடும் = குற்றமாக முடியும்.

### அதிகாரம்—43

## பேதைமை

**பேதைமையாவது :** யாதொரு பொருளையும் உள்ளவாறறியாமையாம்.

[இன்னிசை வெண்பா]

1 ஆயிரவ ரானும் அறிவிலார் தொக்கக்கால்
மாயிருஞாலத்து மாண் பொருவன் போல்கலார்
பாயிருள் நீக்கும் மதியம்போல் பல்மீனும்
காய்கலா வாகும் நிலா. 949

**குறிப்புரை :**

தொக்கக்கால் = குழுமிய போதும் மாண்பொருவன் - மாட்சிமைபட்ட ஒருவன் போல்கலார் = ஒப்பாகார் மீன் = விண்மீன்கள் காய்கலா = ஒளிவீசமாட்டா ஆகும் = ஒளிவீசும் நிலா = திங்கள்.

2 பெரியார்க்குச் செய்யும் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்து விடுதல் — பொறிவண்டு
பூமே லிசைமுரலும் ஊர அதுவன்றோ
நாய்மேற் றவிசிடு மாறு. 950

**குறிப்புரை :**

சிறப்பு = பாராட்டு பேணி = விரும்பி தவிசு = யானை மேல் அமைக்கும் இருக்கை.

[நேரிசை வெண்பா]

3 ஓர்த்த கருத்தும் உலகும் உணராத
மூர்க்கர்க் குறுதி மொழியற்க — மூர்க்கன்றான்
கொண்டதே கொண்டு விடானாகும் ஆகாதே
உண்டது நீலம் பிறிது. 951

**குறிப்புரை :**

உலகு = உழக வழக்கு மூர்க்கர் = பண்பாடில்லாதவர் விடான் = நெகிழவிடான் நீலம் = கருநிறம் பிறிது = பிற நிறங்கள்.

4 தெரியா தவர்தம் திறனில்சொல் கேட்டால்
பரியாதார் போல இருக்க — பரிவில்லா
வம்பலர் வாயை அவிப்பான் புகுவாரே
அம்பலந் தாழ்க்கூட்டு வார். 952

**குறிப்புரை :**

பரியாதார்போல் = துன்புறுதவரைப் போல்
பரிவில்லார் = அன்பிலாதவர் அவிப்பான் = அடக்குதற்கு அம்பலம் = பொதுமன்றம் தாழ்கூட்டல் = பூட்டி விடுதல்.

5 தங்குற்றம் நீக்கல ராகிப் பிறர்குற்றம்
எங்கெங்கும் நீக்கற் கிடைபுகுதல்—எங்கும்
வியனுலகில வெள்ளாடு தன்வளி தீராது
அயல்வளி தீர்த்து விடல். 953

**குறிப்புரை :**

இடைபுகுதல் = வலிந்து செல்லுதல் வளி = வாதநோய்
அயல் = பிற உயிர் தீர்த்துவிடல் தீர்ப்பதற்கு முயல்வதை
ஒக்கும்.

[இன்னிசை வெண்பா]

6 சொல்லெதிர்ந்து தம்மை வழிபட் டொழுகலராய்க்
கல்லெறிந்தாற் போலக் கலாந்தலைக் கொள்வாரை
இல்லிருந் தாற்ற முனிவித்தல் உள்ளிருந்து
அச்சாணி தாங்கழிக்கு மாறு. 954

**குறிப்புரை :**

கலாம் = பூசல் தலைக்கொள்வாரை = மேற்கொள்பவரை
ஆற்ற = மிகுதியாக முனிவித்தல் = சினமுறச் செய்தல்
உள்ளிருந்து = வண்டியிலிருந்து கொண்டு
கழிக்குமாறு = நீக்கலை ஒக்கும்.

[நேரிசை வெண்பா]

7 இல்வாழ்க்கை யானும் இலிங்கானும் மேற்கொள்ளார்
நல்வாழ்க்கை போக நடுவுநின்—றெல்லாம்
ஒருதலையாச் சென்று துணியா தவரே
இருதலையுங் காக்கழிப் பார். 955

[பழமொழி]

**குறிப்புரை :**

இல்வாழ்க்கை = இல்லறம் இலிங்கு = துறவறம் நடுவு
நின்று இசைப்பட்டு இருதலையும் காக்கழிப்
பார் = காவடியின் இரு பக்கத்தும் உள்ளபொருள்களை நீக்கி
விட்டுத் தண்டினைச் சுமப்பார் ஒப்பாவார்.

8 கல்லார்க் கினனு வொழுகலும் காழ்க்கொண்ட
இல்லாளைக் கோலாற் புடைத்தலும், இல்லம்
சிறியாரைக் கொண்டு புகலும் இம் மூன்றும்
அறியாமை யான்வருங் கேடு. 956

குறிப்புரை :

இன்னு = நட்பாக காழ்க்கொண்ட = உறுதிகொண்ட
சிறியார் = ஒழுக்கமில்லாதவர் கேடு = துன்பம்.

9 இருளாய்க் கழியும் உலகமுர், யாதும்
தெருளா துரைக்கும் வெகுள்வும்—பொருளல்ல
காதற் படுக்கும் விழைவும் இவைமூன்றும்
பேதைமை வாழும் உயிர்க்கு. 957

குறிப்புரை :

தெருளாது = அறிந்துணராமல்
பொருளல்ல = பயன்படாதவற்றை
காதற்படுக்கும் = விரும்பும் விழைவு = பேராசை
பேதைமை = அறியாமை உயிர் = மக்கள்.

[இன்னிசை வெண்பா]

10 கொலைநின்று தின்றெழுகு வானும் பெரியவர்
புல்லுங்கால் தான்புல்லும் பேதையும்
இல்லெனக்கொன்
றீகவென் பவனை நகுவானும் இம்மூவர்
யாதும் கடைப்பிடியா தார். 958

குறிப்புரை :

புல்லும் = தழுவிக்கொள்ளும் நகுவான் = எள்ளி இகழ்வான்
கடைப்பிடி = குறிக்கோள்,

11 பழியஞ்சான் வாழும் பசுவும் அழிவினால்
கொண்ட அருந்தவம் விட்டானும் கொண்டிருந்து
இல்லஞ்சி வாழும் எருதும் இம்மூவர்
நெல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய். 959

**குறிப்புரை:**

பசு = பசுப் போல்பவன் அழிவு = துன்பம்
இல் = மனைவி எருது = எருது போல்பவன்
நெல்லுண்டல் = உணவுண்டு வாழ்தல்
நோய் = தீராப் பிணி.

12 பெருமை யுடையார் இனத்தின் அகறல்
உரிமையில பெண்டிரைக் காமுற்று அகறல்
விழுமிய வல்ல துணிதல் இம்மூன்றும்
முழுமக்கள் காதலவை. 960

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

விழுமியவல்ல = மேன்மையில்லாதன
முழுமக்கள் = அறிவில்லாதவர் காதலவை = விரும்புபவை.

13 பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும்
வாலிதாம் பக்கம் இருந்தைக் கிருந்தன்று
கோலாற் கடாஅய்க் குறியினும் புகலொல்லா
நோலா உடம்பிற் கறிவு. 961

**குறிப்புரை :**

உணக்கினும் = உலர்த்தினாலும்
வாலிது = தூயது இருந்தை = கரி.
குறினும் = புடைத்தாலும் புகலொல்லா = புக முடியாது
நோலா = வருந்தாத.

[நேரிசை வெண்பா]

14 பெறுவதொன் றின்றியும் பெற்றானே போலக்
கறுவுகொண் டேலாதார் மாட்டும்—கறுவினால்
கோத்தின்னா கூறி உரையாக்கால் பேதைக்கு
நாத்தின்னும் நல்ல சுனைத்து. 962

**குறிப்புரை :**

கறுவுகொண்டு = சினங்கொண்டு
கோத்து = பொய்யாகக் கூட்டி. பேதைக்கு = அறிவில்லாத கயவர்க்கு நாத்தின்னும் நல்ல சுனைத்து = தினவு வந்து நாக்கை அரித்துவிடுவது போலிருக்கும்.

15 நல்லவை நாடொறும் எய்தார் அறஞ்செய்யார்
இல்லாதார்க் கியாதொன்றும் ஈகலார்—எல்லாம்
இனியார்தோள் சேரார் இசைபட வாழார்
முனியார்கொல் தாம்வாழும் நாள். 963

**குறிப்புரை :**

இத்தகையார் தாம் வாழ்வதனாற் பயன் என்ன? என்று தம்மை வெறுக்க மாட்டார்களோ என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

16 பன்றிக்கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க் கறத்தா றுரைக்குங்கால்
குன்றின்மேற் கொட்டுந் தறிபோல் தலைதகர்ந்து
சென்றிசையா வாகும் செவிக்கு. 964

**குறிப்புரை :**

பத்தர் = உணவுத் தொட்டி. தேமா = மாங்கனிச் சாறு.
குன்று = பாறை கொட்டும் = வைத்து அடித்து இறக்கும்
தறி = முளைக்குச்சி இசையா = சேரமாட்டா.

17 கொலைஞர் உலையேற்றித் தீயடுப்ப ஆமை
நிலையறியா தந்நீர்ப் படிந்தாடி யற்றே
கொலைவல் கொடுங்கூற்றம் கோள்பார்ப்ப ஈண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு. 965

[நாலடியார்]

**குறிப்புரை:**

உலை = உலைநீர் ஈண்டை = இவ்வுலக இன்பத்தில்
செம்மாப்பார் = தருக்கியிருப்பார்.

[கலிவிருத்தம்]

18 தெண்ணீர் பரந்து திசைதொறும் போய்க்கெட்ட
எண்ணெய்கொண் டீட்டற் கிவறுதல் என்னொக்கும்
பெண்மனம் பேதித் தொருப்படுப்பெ னென்னும்
எண்ணில் ஒருவன் இயல்பெண்ணு மாறே. 966

**குறிப்புரை:**

போய்க்கெட்ட = கவிழ்ந்து கெட்ட ஈட்டற்கு = அதனை
மீண்டும் சேமிப்பதற்கு பேதித்து = வேறுபடுத்தி
எண்ணில் = கருதுவானாயின்.

19 நீண்முகை கையாற் கிழித்தது மோக்குறும்
மாண்வினைப் பாவை மறைநின்று கேட்குறின்
பேணலும் அன்புற் பிறந்துழிப் பேதுசெய்து
ஆணைப் பெண்ணைய அணைக்குறு மாறே. 967

[வளையாபதி]

**குறிப்புரை:**

முகை = மலர்மொக்கு பேதுசெய்து = மாறுபடுத்தி
அணைக்குறுமாறு - அணைப்பது போல்வதாகும்.

**அதிகாரம்—44**

# புல்லறிவாண்மை

புல்லறிவாண்மையாவது : சிறுமைத் தன்மையுடைய அறிவினை மதித்துக் கொண்டொழுகும் இயல்பு. அஃதாவது தான் புல்லிய அறிவினனாக இருந்தும் பேரறிவினனாக மயங்கித் தன்னை மதித்துச் செருக்கிச் சான்றோர் கூறுவனவற்றை மதியாது ஒழுகுதலாகும்.

[நேரிசை வெண்பா]

1 மறுமையொன் றுண்டோ? மனப்பட்ட வெல்லாம்
பெறுமாறு செய்ம்மின் என்பாரே — நறுநெய்யுள்
கட்டியடையைக் களைவித்துக்கண் செரீஇ
இட்டிகை தீற்று பவர். 968

**குறிப்புரை :**

உண்டோ? = இல்லை என்று குறிப்பாற் சொல்லியது
கட்டியடை = சுட்ட அப்பம் களைவித்து = நீக்கி
இட்டிகை = செங்கல் தீற்றுபவர் = தின்னச் செய்பவர்.

[இன்னிசை வெண்பா]

2 நீர்த்தன் றொருவர் நெறியன்றிக் கொண்டக்கால்
பேர்த்துத் தெருட்டல் பெரியார்க்கும் ஆகாதே
கூர்த்த நுண்கேள்வி அறிவுடையார்க் காயினும்
ஓர்த்த திசைக்கும் பறை 969

**குறிப்புரை :**

நீர்த்தன்று = நற்பண்புடையதல்லாதது
பெரியார் = ஆற்றலுடையார் ஓர்த்தது = தாங்கருதியது.

[நேரிசை வெண்பா]

3 கல்லாதுங் கேளாதுங் கற்றார் அவை நடுவண்
சொல்லாடு வாரையும் அஞ்சற்பாற் - றெல்லருவி
பாய்வரை நாட பரிசழிந் தாரொடு
தேவரும் மாற்ற மிலர் 970

**குறிப்புரை :**

அஞ்சற்பாற்று = அச்சத்தக்கது எல்லருவி = ஒளிபொருந்திய அருவி பரிசு = நற்பண்பு மாற்றம் = உரையாடுதல்.

4 நல்லவை கண்டக்கால் நாச்சுருட்டி நன்றுணராப்
புல்லவையுள் தம்மைப் புகழ்ந்துரைத்தல் புல்லார்
புடைத்தறுகண் அஞ்சுவான் இல்லுள் வில்லேற்றி
இடைக்கலத் தெய்து விடல். 971

**குறிப்புரை :**

நாச்சுருட்டி = நாவை அடக்கி புல்லார் = பகைவர் புடை = பக்கம் இடைக்கலம் = இடையில் உள்ள பொருள்மீது விடல் = விடுதலை ஒக்கும்.

[இன்னிசை வெண்பா]

5 மானமும் நாணும் அறியார் மதிமயங்கி
ஞானமறிவாரிடைப்புக்குத் தாமிருந்து
ஞானம விஞஅய் உரைக்கின் நகையாகும்
யானைப்பல் காண்பான் புகல் 972

**குறிப்புரை :**

நகையாகும் = எள்ளப்படுவதாகும். அது யானையின் பற்களை காணப் புகுவதோடு ஒக்கும் என்றவாறு.

6 நற்கறி வில்லாரை நாட்டவும் ஆகாதே
சொற்குறி கொண்டுதடிபண் ணுறுத்தது போல்
வெற்பறைமேல் தாழும் விலங்கருவி நன்னாட!
கற்பறிவு போகாக் கடை. 973

[பழமொழி]

**குறிப்புரை :**

நற்கறிவு - நன்மையுடைய அறிவு
பண்ணறுத்தது போல - பண்ணமைத்தது போல
போகாக் கடை - முடிவு போகாது.

[நேரிசை வெண்பா]

7 சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்
— இறுகிறுகிப்
பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம். 974

**குறிப்புரை :**

சிறுகாலை - உரிய காலத்து வல்சி - உணவு
பொன்னும் புளிவிளங்காயம் என்றது, பொன்னளவையைக் காட்ட அது மற்றவர்க்குப் புளியுருண்டையைக் காட்டுவதாகப் படும் என்னும் கதை நிகழ்ச்சி.

8 தாமேயும் இன்புறார் தக்கார்க்கும் நன்றாற்றார்
ஏமஞ்சால் நன்னெறியும் சேர்கலார் — தாமயங்கி
ஆக்கத்துள் தூங்கி அவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறி வினர். 975

**குறிப்புரை :**

ஏமஞ்சால் நன்னெறி - தம் உயிருக்கு உறுதிபயக்கும் அறநெறி ஆக்கம் - முன்வினைப் பயனால் எய்திய செல்வம்
அவத்தம் - பயனின்றி.

9 வெறுமை யிடத்தும் விழுப்பிணிப் போழ்தும்
மறுமை மனத்தாரே யாகி—மறுமையை
ஐந்தை அனைத்தானும் ஆற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறி விஞர். 976

**குறிப்புரை :**

வெறுமை = வறுமை விழுப்பிணி = மிக்க நோய்
ஐந்தை = சிறுகடுகு அனைத்தானும் = அளவாயினும்
ஆற்றிய காலத்து = ஆற்றலிருந்த காலத்தில்
சிற்றறிவு = புல்லறிவு.

10 உளநாள் சிலவால் உயிர்க்கேமம் இன்ருல்
பலர்மன்னும் தூற்றும் பழியால்—பலருள்ளும்
கண்டாரோ டெல்லாம் நகாஅ தெவனொருவன்
தண்டி தனிப்பகை கோள். 977

**குறிப்புரை :**

நகாது = மகிழ்ந்து வாழாமல் தண்டி தனிப்பகை கோள் எவன் ? = எதிர்ப்பட்டவரொடெல்லாம் பகை கொள்வது எதற்காக என்றவாறு.

11 இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பரு பேய்ச்சுரையின் காய். 978

**குறிப்புரை :**

இடம்பட = விரிவாக அடினும் = சமைப்பினும்
கைப்பு = கசப்பு அரு = நீங்கா.

[இன்னிசை வெண்பா]

12 கற்றவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும் தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்தின் தணியாத
பித்தனென் றெள்ளப் படும். 979

[நாலடியார்]

**குறிப்புரை:**

கண்ணகன்ற = விரிந்த சாயல் = மென்மை
பாடெய்தும் = பெருமையடையும்
தானுரைப்பின் = தானே தன்னைப் பாராட்டிப் பேசப்புகின்
மைத்துனர் = நகையாடுவார் பல்கி = பெருகி.

13 வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கும் நோன்பியும்
இல்லது காமுற் றிருப்பானும் — கல்விச்
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிவ் மூவர்
உமிக்குற்றுக் கைவருந் துவார். 980

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

நோன்பி = தவ முனிவன் காமுற்று = விரும்பி
குற்று = குத்தி.

[நேரிசை வெண்பா]

14 அரும்பொனன் னார்கோட்டி ஆர்வுற்றக் கண்ணும்
கரும்பு தின்பார் முன்னர் நாய்போற் — கரும்பலவர்
கொண்டொழி ஒன்றே துயில்மடிப அல்லாக்கால்
விண்டுரைப்பர் வேறா யிருந்து. 981

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

கோட்டி = குழுவினர் ஆர்வுற்றக்கண்ணும் = அமர்ந்திருக்குங் காலத்தும் துயில்மடிப = உறங்குபவர்
விண்டு = வேறுபட.

[கலிவிருத்தம்]

15 அந்தக னந்தகற் காறு சொல் லொக்கும்
முந்துசெய் குற்றங் கெடுப்பான் முழுவதும்
நன்கறி வில்லான் அஃதறி யாதவற்
கின்புறு வீட்டின்நெறி சொல்லு மாறே. 982

[வளையாபதி]

**குறிப்புரை :**

அந்தகன் = குருடன் ஆறு = வழி
சொல்லுமாறு = சொல்லும் முறைமை.

**அதிகாரம்—45**

# பகைத்திறந் தெரிதல்

பகைத்திறந் தெரிதலாவது: சிறப்பில்லாத பகையை உண்டாக்கி வளர்த்தலான் ஆகும் குற்றத்தையும் முன்பு ஆகியுள்ள பகைவருள் நட்பாக்கிக் கொள்ளத்தக்காரையும், பகையும் நட்பும் இல்லாமல் பொதுமையாக ஆக்கிக் கொள்ளுதலையும் அவற்றிற் காவன செய்தலையும், நீக்க வேண்டியவற்றை நீக்குதற்குரியவற்றைச் செய்தலையும் பகைமேற்செல்லும் பருவத்தையும் பகையை அழிக்காத விடத்துவரும் குறைபாட்டினையும் அமைச்சராயிருப்போர் ஆராய்ந்து கொள்ளுதலாம்.

[நேரிசை வெண்பா]

1 எதிர்த்த பகையை இளைதாய போழ்தே
கதித்துக் களையின் முதிராது—எதிர்த்து
நனிநிற்பச் செய்தவர் நண்பெலாந் தீர்க்கத்
தனிமரங் காடாவ தில். 983

**குறிப்புரை :**

கதித்து = வெட்டிச் சிதைத்து களையின் = நீக்கிவிடின்
ஆவதில் = ஆகாது.

[இன்னிசை வெண்பா]

2 வன்பாட் டவர்பகை கொள்ளினும் மேலாயார்
புன்பாட் டவர்பகை கோடல் பயமின்றே
கண்பாட்ட பூங்காவிக் கானலந் தண்சேர்ப்ப
வெண்பாட்டம் வெள்ளந் தரும். 984

**குறிப்புரை :**

வன்பாட்டவர் - வலிமையுடையார்
புன்பட்டவர் = கீழானோர் பூங்காவி = நீலமலர்
வெண்பாட்டம் = மழை.

3 தழங்குரல் வானத்துத் தண்பெயல் பெற்றால்
கிழங்குடைய வெல்லாம் முளைக்கும் ஓராற்றான்
விழைந்தவரை வேறன்றிக் கொண்டொழுகல் வேண்டா
பழம்பகை நட்பாதலில். 985

**குறிப்புரை :**

தழங்குரல் = ஒலித்தல் விழைந்தவர் = பிறிதொன்றை விரும்பியவர்.

[நேரிசை வெண்பா]

4 அமர்நின்ற போதின்கண் ஆற்றுவ ரேனும்
நிகரன்றின் மேல்விடுதல் ஏதம்—நிகரின்றி
வில்லொடு நேரொத்த புருவத்தாய் அஃதன்றே
கல்லொடு கையெறியு மாறு. 986

**குறிப்புரை :**

அமர் = போர்க்களம் நிகரன்றி மேல் = ஒத்தவரல்லாத வலியார் ஏதம் = துன்பமாம். அது கல்லின்மேல் கையால் அறைவது போலாகும் என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

5 ஆற்றப் பெரியார் பகைவேண்டிக் கொள்ளற்க!
போற்றாது கொண்டரக்கன் போருளகப் பட்டானால்
தோற்ற பெருமை யுடையாரும் கூற்றம்
புறங்கொம்மை கொட்டினா ரில். 987

**குறிப்புரை :**

ஆற்றப் பெரியார் = மிக்க வலிமையுடையார்
அரக்கன் = இராவணன் நோற்ற தவம்புரிந்த
கூற்றம் = யமன் புறங்கொம்மை கொட்டினாரில் பின்னிருந்து
கைக்கொட்டி அழைத்தவரில்லை.

[நேரிசை வெண்பா]

6 முன்னலிந் தாற்ற முரண்கொண் டெழுந்தாரைப்
பின்னலிதல் என்றுரைத்தல் பேதைமையே
— பின்னின்று
காம்பன்ன தோளி! கலங்கக் கடித்தோடும்
பாம்புபல் கொள்வாரோ இல். 988

**குறிப்புரை :**

முரண்கொண்டு = பகை கொண்டு
பின்னலிதல் = பின்னர் தண்டித்தல் காம்பு மூங்கில்.

[இன்னிசை வெண்பா]

7 பொருந்தா தவரைப் பொருதட்டக் கண்ணும்
இருந்தமையா ராகி இறப்ப வெகுடல்
விரிந்தருவி வீழ்தரும் வெற்ப! அதுவே
அரிந்தரிகால் நீர்ப்படுக்கு மாறு. 989

**குறிப்புரை :**

பொருந்ாதவர் = பகைவர் பொருது = போரிட்டு
அட்ட = கொன்ற வெகுடல் = கோபித்தல்.
அது நெல்லரிந்தபின் நீர்ப்பாய்ச்சி வைத்தலை ஒக்கும்
என்றவாறு.

8 கரும்பொனியல் பன்றிகதநாகம் விடு சகடம்
குராங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல்
பரந்தபசும் பொற்கொடி பதாகையொடு கொழிக்கும்
திருந்துமதில் தெவ்வர்தலை பனிப்பத்
திருந்தன்றே. 842

குறிப்புரை :

பன்றி. கதநாகம் = சிறும்பாம்புகள் சகடம் = சக்கரம்
குரங்கு, தகர் இவை அவ்வடிவங்களால் அமைந்த மதிற்
பொறிகள் தெவ்வர் = பகைவர் பனிப்ப = நடுங்க.

9 வயிரவரை கண் விழிப்ப போன்று மழையுகளும்
வயிரமணித் தாழ்க்கதவு வாயில் முகமாக
வயிரமணி ஞாயில் முலை வான்பொற்கொடி கூந்தல்
வயிரக்கிடங் காடைமதிற் கன்னியது கவினே. 843

[சீவக சிந்தாமணி]

குறிப்புரை :

வயிரவரை = வயிரம்போன்றமலை மழை = மேகம்
கதவு = வாயிற்கதவுகள் ஞாயில் = அம்புசெலுத்தும்
துளையுள்ள மதில் உறுப்பு கிடங்கு = நீர் நிறைந்த அகழி.

[அறுசீர்விருத்தம்]

10 செஞ்சுடர்க் கடவுள் திண்டேர்
இவுளிகால் திவள வூன்றும்
மஞ்சுடை மகர நெற்றி
வானுழு வாயின் மாடத்து
அஞ்சுட ரிஞ்சி யாங்கோர்
அழகணிந் திருந்த தோற்றம்
வெஞ்சுடர் விரியு முந்நீர்
வேதிகை மீதிட்டன்றே. 844

**குறிப்புரை :**

செஞ்சுடர்க்கடவுள் = சூரியன்   இவுளி = குதிரைகள்
மஞ்சு மேகம்   இஞ்சி = மதில் உறுப்பு   வேதிகை = மேடை.

[ஏழுசீர் விருத்தம்]

11 நால்வகைச் சதுரம் விதிமுறைநாட்டி
நனிதவ உயர்ந்தன பனிதோய்
மால்வரைக் குலத்தின் யாவையு மில்லை
ஆதலால் உவமை மற்றில்லை
நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடும்பழகி
நுணங்கியநுவலரு முணர்வே
போல்வகைத் தல்லால் உயர்வினே டுயர்ந்த
தென்னலாம் பொன்மதில் நிலையே. 845

**குறிப்புரை :**

விதிமுறை = நூல்முறை   பனிதோய் = பனிபடியும்
மால்வரை = உயர்ந்தமலை   நுணங்கிய = நுண்ணிதாகிய.

12 கோலிடை உலகம் அளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
நூல்நெறி நடக்கும் செவ்வையின் யார்க்கும்
நோக்கருங் காவலின் வலிதின்
வேலொடு வாள்விற் பயிற்றலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு வலத்தின்
சால்புடையுயர்விற் சக்கரம் நடத்தும்
தன்மையிற்றலை வரொத் துளதே. 846

**குறிப்புரை :**

மதில் திருமாலை ஒந்துள்ளது என்கின்றது.
செவ்வை = செம்மை   நோக்கரும் = காணுதற்கரிதாகிய
வலத்தின் = வெற்றியினுல்   தலைவர் = திருமால்.

8 உற்றதற்கெல்லாம் உரஞ் செய்ய வேண்டுமோ
கற்றறிந்தார் தம்மை வெகுளாமைக் காப்பமையும்
நெல்செய்யப் புல்தேய்ந்தாற் போல நெடும்பகை
தற்செய்ய தானே கெடும். 990

குறிப்புரை :

நெல் செய்ய = நெல்லை விளைவுசெய்ய
புல்தேய்ந்தாற்போல = புல் தாமே முளையாமை போல
தற்செய்ய = தன்னை வலிமை செய்து கொள்ளின், பகை தானே கெடும்.

9 மிக்குடையா ராகி மிகமதிக்கப் பட்டாரை
ஒற்கப்பட முயலும் என்றல் இழுக்காகும்
நற்கெளிதாகி விடினும் நளிர் வரைமேல்
கற்கிள்ளி கையுய்ந்தா ரில். 991

குறிப்புரை :

ஒற்கப்பட = வருத்தமடைய. முயலுதல் = செய்யமுற்படுதல்
கற்கிள்ளி = பாறையை நகத்தாற் கிள்ளி.

10 இயற்பகை வெல்குறுவான் ஏமாப்ப முன்னே
அயற்பகை தூண்டி விடுத்தோர் நயத்தால்
கறுவழுங்கிக் கைக்கெளிதாச் செய்க அதுவே
சிறுகுரங்கின் கையாற் றுழா. 992

குறிப்புரை :

ஏமாப்ப முன்னே = பாதுகாத்துக் கொள்ளும் முன்னர்
நயத்தால் = உபாயத்தால். சிறுகுரங்கின் கையாற்றுழா என்பது குரங்கு தன் குட்டியின் கையைக் கொண்டு நெருப்பைப் பரிசோதித்துக் கொள்வது போன்றதாகும் என்றபடி.

11 நிரம்ப நிரையத்தைக் கண்டுந் நிரையம்
வரம்பில் பெரியானும் புக்கான் — இரங்கார்
கொடியார மார்ப குடிகெட வந்தால்
அடிகெட மன்றி விடல். 993

[பழமொழி]

**குறிப்புரை :**

வரம்பில் பெரியான் = எல்லையற்ற நற்குணங்களையுடைய தருமன். இரங்கார் — வருந்த மாட்டார்
குடிகெட வந்தால் = தம் சுற்றத்திற்குத் தீமை வருமாயின்
அடிகெட = வேர் அறும்படி மன்றிவிடல் = தண்டஞ் செய்து விடுக.

[கலிவிருத்தம்]

12 எரியுந் தீத்திறன் எட்டுணை யாயினுங்
கரியச் சுட்டிடுங் காந்திக் கனலுமே
தெரியின் தொல்பகை சிறிய தாயினும்
விரியப் பெற்றுடன் வென்றிடு கிற்குமே. 994

**குறிப்புரை :**

காந்தி = பெருகக்கனன்று விரியப்பெற்று = பெருகி வென்றிடுகிற்கும் = வென்றுவிடும்.

13 முட்கொள் நச்சு மரம்முளை யாகவே
உட்கிநீக்கின் உகிரின் நீக்கலாம்
வட்கி நீண்டதற் பின்மழுத் தன்னினும்
கட்குடாரமும் தாங்களை கிற்பவோ. 995

[சூளாமணி]

**குறிப்புரை :**

முளையாக = முளையாக இருக்கும்பொழுதே உட்கி = அஞ்சி
உகிர் = நகம் வட்கி = வளமுற்று மழு = கோடரி
குடாரம் = வாள்.

## அதிகாரம்—46

## உட்பகை

உட்பகையாவது: காலம் வந்தபின் வெளிப்படையாக வெல்லுதலைக் கருதிப் புறந்தோன்றாமல் உள்ளாக நிற்கும் பகையாகும்.

[நேரிசை வெண்பா]

1 தலைமை கருதும் தகையாரை வேந்தன்
நிலைமையால் நேர்செய் திருந்தல் மலைமிசைக்
காம்பனுக்கும் மென்றோளாய்! அஃதன்றோ ஓரறையுள்
பாப்பொ டுடனுறையு மாறு. 996

**குறிப்புரை :**

தகையாரை = தன்மையுடையவரை
நேர் செய்திருத்தல் = ஒப்பக் கருதியிருத்தல்
காம்பனுக்கும் = மூங்கிலைத் தன் அழகால் வருந்தச் செய்யும்
பாப்பு = பாம்பு ஆறு = போல்வதாகும்.

[இன்னிசை வெண்பா]

2 கண்ணின் மணியேபோல் காதலால் நட்டாரும்
உன்னுந் துணையும் உளரா பிறராவர்
எண்ணி உயிர்கொள்வான் ஏன்று திரியினும்
உண்ணுந் துணைக் காக்குங் கூற்று. 997

**குறிப்புரை :**

உன்னுந்துணையும் = தாம் கருதியதை முடிக்குமளவும்
உளரா பிறராவர் = நட்பினராக இருந்து பின்னர் வேறுபடுவர்
உண்ணுந்துணையும் = தான் அகப்படுத்த வேண்டிய அளவும்
கூற்று = யமன்.

3 வெள்ளம்பகை வரினும் வேறிடத்தார் செய்வதென்
கள்ளம் உடைத்தாகிச் சார்ந்த கழிநட்புப்
புள்ளொலிப் பொய்கைப் புனலூர அஃதன்றோ
உள்ளில்லத் துண்ட தனிசு. 998

**குறிப்புரை :**

வெள்ளம்பகை = வெள்ளம் போன்ற மிக்க பகைவர்
வேறிடத்தார் = சேய்த்தாய வேறு இடத்திலிருப்பவர்
கள்ளம் = கரவு உள்ளில்லத்துண்ட தனிசு = ஒரு மனையுள் உள்ளவரிடம் கொண்ட கடனை ஒக்கும்.

4 இம்மைப் பழியும் மறுமைக்குப் பாவமும்
தம்மைப் பிரியார் தமர்போல் அடைந்தாரின்
செம்மைப் பகைகொண் டு சேரா தார் தீயரோ
மைம்மைப்பின் நன்று குருடு. 999

[பழமொழி]

**குறிப்புரை :**

தமரா = நட்பினராக மைம்மைப்பின் = பார்வை மழுங்கிய கண்ணினும் நன்றுகுருடு = குருடு நன்றாகும்.

[அறுசீர்விருத்தம்]

5 தொழுததங் கையி னுள்ளும்
துறுமுடி யகத்துஞ் சோர
அழுதகண் ணீரி னுள்ளும்
அணிகலத் தகத்தும் ஆய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும்
படையுடன் ஒடுங்கும் பற்று
தொழிகயார் கண்ணுந் தேற்றந்
தெளிகுற்றார் விளிகுற் றாரே. 1000

**குறிப்புரை :**

துறுமுடி = நெருக்கி முடிந்த தலைமுடி பழுது = குற்றம்
அரிந்து = துணித்து படை = ஆயுதம்
அஃதறியாது எல்லோரையும் தெளிந்தோர் அழிவெய்துவர் என்றவாறு.

6 தோய்தகை மகளிர்த் தோயின்
மெய்யணி நீக்கித் தூய்நீர்
ஆய்முது மகளிர் தம்மால்
அரில்தபத் திமிரி யாட்டி
வேய்நிறத் தோளி னூர்க்கு
வெண்டுகில் மாலை சாந்தம்
தாளல கலங்கள் சேர்த்தித்
தடமுலை தோய்க வென்றான். 1001

**குறிப்புரை :**

தோயின் = கூடவேண்டின் மெய் அணி = ஆபரணங்கள்
அரில்தப = குற்றமில்லையாக ஆராய்ந்து நீராட்டி
தோய்க = அவரைக் கூடுக.

[கலிவிருத்தம்]

7 பகைவ ருள்ளமும் பாம்பின் படர்ச்சியும்
வகைகொள் மேகலை மங்கையர் நெஞ்சமும்
மிசைசெல் மேகத்து மின்னும்செந் நில்லலா
புகைசெய் வேலினீர் போற்றுபு சென்மினே. 1002

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

படர்ச்சி = செல்லும் செலவு சென்மேகம் = இடியொடு கூடிய மழை முகில் செந்நில்லலா = செவ்விதாக நில்லா போற்றுபு = பேணிப் பாதுகாத்து சென்மின் = ஒழுகுமின்

அதிகாரம்—47

# பெரியாரைப் பிழையாமை

பெரியாரைப் பிழையாமையாவது: ஆற்றலாற் பெரியராகிய வேந்தரையும் தவத்தாற் பெரியராகிய முனிவரையும் அவமதித்து ஒழுகாமையாம்.

[நேரிசை வெண்பா]

1 மன்னவ னாணைக்கீழ் மற்றையார் மீக்கூற்றம்
என்ன வகையாற் செயப்பெறுப—புன்னைப்
பரப்பில்நீர் தாஅம் படுகடல் தண்சேர்ப்ப
மரத்தின்கீழ் ஆகா மரம். 1003

**குறிப்புரை:**

மீக்கூற்றம் = ஆணையிடும் சொற்கள் தாஅம் = பரவும்
பெரிய மரத்தின்கீழ் அதன் நிழலில் வேறு மரம் முளைத்து வளராது. அதுபோல என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

2 வெஞ்சின மன்னவன் வேண்டாத செய்யினும்
நெஞ்சத்துக் கொள்வ சிறிதும் செயல்வேண்டா
என்செய் தகப்பட்டக் கண்ணும் எடுப்புபவோ
துஞ்சு புலியைத் துயில்?. 1004

**குறிப்புரை:**

என்செய்து = எதையாவது செய்து
எடுப்புபவோ = எழுப்பி விடுவாரோ
துஞ்சுபுலி = உறங்கும் வேங்கைப் புலியை துயில் = உறக்கம்

3 தாயையுந் தம்மைப் புறந்தர ஆற்றாதார்
வாமான்தேர் மன்னரைக் காய்வ தெவன்கொலோ?
ஆமா உகளுந் அணிவரை வெற்ப!கேள்
ஏமாரார் கோங்கேறி னார். 1005

குறிப்புரை :

புறந்தர = பேணிக் கொள்ள வாமான் = பாயும் குதிரை
காய்வது = வெகுள்வது ஆமா = காட்டுப் பசு
ஏமாரார் = பாதுகாவலையடையார் கோங்கு = கோங்கமரம்.

4 இடுகுடைத்தேர் மன்னர் எமக்கமையு மென்று
கடிதவர் காதலிப்பத் தாம்காதல் கொண்டு
முடிதல் எனைத்தும் உணரா முயறல்
கடிய கனைத்து விடல். 1006

குறிப்புரை :

இடுகுடை = நிழலிடும் குடை தாம் காதலிப்ப = அவர் விரும்பும் பொருள்களை உணரா முயறல் = அறியாமல் முயலுதல் கடிய = கொடிய விலங்குகளை
கனைத்துவிடல் = கூவி அழைத்தல்.

5 உரைத்தவர் நாவோ பருந்தெறியா தென்று
சிலைத்தெழுந்து செம்மாப் பவரே மலைத்தால்
இழைத்தத் திகவா தவரைக் கனற்றி
பலிப்புறத் துண்பர் உணு. 1007

குறிப்புரை :

உரைத்தவர் = வசவினைக் கூறியவர் எறியாது = கொத்திக் கவராது மலைத்தால் = ஒருவர் தம்மோடு மாறுபட்டெழுந்தால் பலிப்புறம் = பலிப்பீடம் உணு = உணவு அழிவார் என்பது கருத்து.

[இன்னிசை வெண்பா]

6 எல்லாத் திறத்தும் இறப்பப் பெரியாரை
கல்லாத் துணையார் கைப்பித்தல்—சொல்லின்
நிறைந்தார் வளையிறுய் அஃதால் எருக்கு
மறைந்தியானை பாய்ச்சி விடல். 1008

குறிப்புரை:

கைப்பித்தல் = வெறுக்கச் செய்தல் அஃது எருக்கம் புதிரில் மறைந்திருந்து யானையின் மேல் அம்பெய்தலை ஒக்கும் என்றவாறு.

7 தீயன அல்ல செயினும் திறல் வேந்தன்
காய்வன செய்தொழுகார் கற்றறிந்தார்—காயும்
புலிமுன்னர்ப் புல்வாய்க்குப் போக்கில் அதுவே
வலி முன்னர் வைப்பா மில். 1009

குறிப்புரை:

காய்வன = வெகுளுவன புல்வாய் = மான்

8 முன்னும் ஒருகாற் பிழைப் பாற்றார் ஆற்றவும்
பின்னும் பிழைப்பப் பொறுப்பவோ—இன்னிசை
யாழின்வண் டார்க்கும் புனலூர! ஈனுமோ
வாழை இருகாற் குலை. 1010

குறிப்புரை:

பிழைப்பு செய்த பிழையை ஆற்றவும் = பொறுத்திருப்பவும் இருகால் = இரண்டு முறை ஈனுமோ? ஈனாது என்றபடி.

9 உறாஅ வகையது செய்தாரை வேந்தன்
பொறாஅன் போலப் பொறுத்தால்—பொறாஅமை
மேன்மேலும் செய்து விடுதல் அதுவன்றே
கூன்மேல் எழுந்த குரு. 1011

குறிப்புரை:

உறாஅ = செய்யத்தகாத பொறாஅமை = பொறுத்துக் கொள்ள முடியாதவற்றை எழுந்த குரு = வீங்கிய கட்டி.

10 நெறியா லுணராது நீர்மையு மின்றிச்
சிறியார் எளியரா லென்று—பெரியாரைத்
தங்கள் நேர்வைத்துத் தகவல்ல கூறுதல்
திங்களை நாய்க்குரைத் தற்று. 1012

குறிப்புரை :

நீர்மை = பண்பு தகவல்ல = தகாத சொற்களை
அற்று = அத்தன்மையாகும்.

11 சீர்த்தகு மன்னர் சிறந்தனைத்துங் கெட்டாலும்
நேர்த்துரைத் தெள்ளார் நிலைநோக்கிச்—சீர்த்த
கிளையின்றிப் போஒய்த் தனித்தாயக் கண்ணும்
இளைதென்று பாம்பிகழ்வா ரில். 1013

குறிப்புரை :

கெட்டாலும் = இழந்த காலத்தும் எள்ளார் = பழிகூறார்
கிளை = சுற்றம் இளைது = சிறியது.

[இன்னிசை வெண்பா]

12 வென்றடு கிற்பாரை வேர்ப்பித்தவர் காய்வ
தொன்றோடு நின்று சிறியார் பலசெய்தல்
குன்றோடு தேன்கலாம் வெற்ப! அதுபெரிதும்
நன்றோடு வந்ததொன் றன்று. 1014

[பழமொழி]

குறிப்புரை :

அடுகிற்பார் = கொல்பவர் வேர்ப்பித்தவர் = சினங்கொள்ளச்
செய்தவர் தேன் = தேனிறால்.

[நேரிசை வெண்பா]

13 பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபின்
ஆர்க்கும் அருவி அணிமலை நன்னாட!
பேர்க்குதல் யார்க்கும் அரிது. 1015

குறிப்புரை :

புரைதீர்ந்தார் = சான்றோர் ஆர்க்கும் = ஆரவாரிக்கும்
பேர்க்குதல் = அவர் கருத்தை மாற்றுதல்.

[இன்னிசை வெண்பா]

14 விரிநிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினம் சேணின்றும் உட்கும்
அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்
பெருமை உடையார் செறின். 1016

குறிப்புரை :

விடர் = வளை உருமின் = இடியின்
சேணின்றும் = ஆகாயத்திலிருந்தும்
உட்கும் = அச்சமடையும் பெருமை = ஆற்றல்
செறின் = போரிடவரின்.

15 அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்
மிகைமக்க ளால்மதிக்கற் பால, நயமுணராக்
கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார். 1017

குறிப்புரை :

மிகைமக்கள் = கல்வி கேள்விகளான் உயர்ந்தோர்
கையறியா = ஒழுக்கமில்லாத எடுத்தேத்து = பாராட்டுரை
வையார் = ஒரு பொருளாகக் கருத மாட்டார்.

16 எம்மை யறிந்திலிர் எம்போல் வாரில்லென்று
தம்மைத்தாம் கொள்வது கோளன்று— தம்மை
அரியரா நோக்கி அறனறியும் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள். 1018

குறிப்புரை :

கோள் - கொள்கை அரியார் = அருமை வாய்ந்தவராக.

17 பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்— அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமில் அறிவி னவர். 1019

[நாலடியார்]

குறிப்புரை:

புணர்தற்கு = நட்பாக்கிக் கொள்ளுதற்கு
தலைக்கூட = உடன் இருக்க
நயமில்லறிவு = நலம் பயக்கும் அறிவு.

[ கலிவிருத்தம் ]

18 அருளு மேலர சாக்குங் காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தெனு மாதெய்வம்
மருளி மற்றவை வாழ்த்தினும் வையினும்
அருளி யாக்க லழித்தலங் காபவோ. 1020

குறிப்புரை :

அரசன் ஆற்றல் கூறுகின்றது.
காயுமேல் = சினங்கொண்டால் சுட்டிடும் = அழித்துவிடும்
மருளி = மனமயங்கி ஆபவவோ = ஆவார்களோ.

19 தன்னை யாக்கிய தார்ப்பொலி வேந்தனைப்
பின்னை வெளவிற் பிறழ்ந்திடும் பூமகள்
அன்ன வன்வழிச் செல்லினிம் மண்மிசைப்
பின்னைத் தன்குலம் பேர்க்குந ரில்லையே. 1021

குறிப்புரை ;

ஆக்கிய = மதிப்புடையவனுக்கிய
வெளவின் = அபகரித்தால்
பேர்க்குநர் = அழியாது காப்பவர்.

[அறுசீர்விருத்தம்]

20 பிறையது வளரத் தானும்
வளர்ந்துடன் பெருகிப் பின்னைக்
குறைபடு மதியந் தேயக்
குறுமுயல் தேய்வ தேபோல்
இறைவனைத் தன்னை யாக்கி
யவன்வழி ஒழுகின் என்று
நிறைமதி யிருளைப் போழும்
நெடும்புகழ் விளக்கு மென்றான். 1022

குறிப்புரை :

குறுமுயல் = திங்களில் உள்ள களங்கம் போழும் = போக்கும்.

[கலிவிருத்தம்]

21 யாவ ராயினும் நால்வரைப் பின்னிடிற்
றேவ ரென்றே தேறுமிவ் வையகம்
காவல் மன்னவர் காய்வன சிந்தியார்
தாவினும் உரையார் நவை யஞ்சுவார். 1023

குறிப்புரை :

நால்வரைப் பின்னிடின் = நாலு பேரைப் பின்பற்றி வரச் செய்தால் காய்வன் வெறுப்பன நவை = தீமை.

22 தீண்டி னார்தமைத் தீச்சுடும் மன்னர்தீ
ஈண்டு தங்கிளை யோடு மெரித்திடும்
வேண்டி னின்னமிர் தும்நஞ்சு மாதலான்
மாண்ட தன்றுநின் வாய்மொழித் தெய்வமே. 1024

[சீவகசிந்தாமணி]

குறிப்புரை :

மன்னர்தீ = மன்னனின் சினத்தீ ஈண்டு = நெருங்கிய கிளை = சுற்றம் விரும்பியார்க்கு அமிர்தம்; விரும்பாதவர்க்கு நஞ்சு என்றவாறு. மாண்டது = மாட்சிமையுடையது தெய்வம் இங்கே மன்னனைக் குறித்து நின்றது.

அதிகாரம்—48

## பொது மகளிர்

பொது மகளிராவார் : ஒருவற்குரியராய் வரைந்து கொண்டு கற்புக் கடம்பூண்டு இல்லறத்தை ஏற்றொழுகாது, பொருள் கொடுப்பார் பலர்க்கும் உரியராய்த் தம் நலத்தை விற்றுண்டு வாழும் பரத்தையராம்.

[நேரிசை வெண்பா]

1 அங்கண் விசும்பின் அமரர் தொழப்படும்
செங்கண்மால் ஆயினும் ஆகமன்—தங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்
விடுப்பர்தங் கையாற் றொழுது. 1025

குறிப்புரை :

பொது மகளிர் பொருளையே விரும்புவர் என்பது.

ஆகமன் = ஆகட்டும் ஒன்று = யாதானும் ஒரு பொருள்
விடுப்பர் = இகழ்ந்து நீக்கி விடுவர்.

2 உள்ளம் ஒருவன் உழையதா ஒண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம்—தெள்ளி
அறிந்த இடத்தும் அறியராம் பாவம்
செறிந்த உடம்பி னவர். 1026

குறிப்புரை :

தெள்ளி = தெளிவாக   செறிந்த = நிறைந்த.

[இன்னிசை வெண்பா]

3 ஏமாந்த போழ்தின் இனியார்போன் றின்னாராய்த்
தாமார்த்த போதே தகர்க்கோடாம் மான்நோக்கின்
தந்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்து மென்பார். 1027

குறிப்புரை :

இன்னாராய் = துன்பந்தருபவராய்  ஆர்த்தபோது = பொருளை யெல்லாம் கவர்ந்த பின்னர். தகர்க்கோடு = ஆட்டின் கொம்புபோல் திருக்கமாவார். செந்நெறி = அருள்நெறி.

4 ஊறுசெய் உள்ளந்தன் னுள்ளடக்கி ஒண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
எமரென்று கொள்வாரும் கொள்பவே யார்க்கும்
தமரல்லர் தம்முடம்பி னார். 1028

[நாலடியார்]

குறிப்புரை :

ஊறு = துன்பம். தேற மொழிந்த மொழி = தாம் கூறுவன வற்றை உண்மை போலச் சொல்லியவற்றை.
தேறி = மெய்யென எண்ணி   கொள்பவே = கொள்வர்.

[கலிவிருத்தம்]

5 தோளு மென்முலையும் அல்குற் பாரமும்
நாளும் நாளும நவின்று பருகிலாக்
கேள்வன் மார்க்கும் பகைஞர்க்கு மொத்தலால்
வாளும்போல் வரவ் வாணெடுங் கண்ணினர். 1029

**குறிப்புரை :**

பருகிலா - நுகராத கேள்வன் = உரியவன்.

[அறுசீர்விருத்தம்]

6 அன்புநூ லாக வின்சொல்
அலர்தொடுத் தமைந்த காதல்
இன்புசெய்.................
........... ...................
நன்புகழ் சூட்டி விள்ளா
தொழுகினும் நங்கை மார்க்குப்
பின்செலும் பிறாகண் உள்ளம்
பிணை யஞர்க்—— தொன்றே. 1030

**குறிப்புரை :**

இப்பாடல் சிதைந்துள்ளமையின் உள்ளவாறே பதிப்பிக்கப் பட்டது.

[வேறு]

7 ஆசை யல்குற் பெரியாரை
அருளும் இடையும் சிறியாரை
கூடும் மொழியும் புருவமும்
குடிலமாகி யிருப்பாரை
வாசக்குழலும் மலர்க் கண்ணும்
மனமுங் கரிய மடவாரைப்
பூசல் பெருக்க வல்லாரைப்
பொருந்தல்! வாழி மடநெஞ்சே. 1031

[சாந்தி புராணம்]

குறிப்புரை :

கூசும்மொழி = அறுவறுக்கத்தக்க சொற்கள். குழல் = கூந்தல்
பூசல் = பகை பொருந்தல் = சேராதிருப்பாயாக.

அதிகாரம்—49

## கள்ளுண்ணாமை

கள்ளுண்ணாமையாவது : சான்றோராலும் ஈன்ற தாயாலும் வெறுக்கப்படுவதாய் அறிவைத் திரித்துச் சோர்வைத் தருவதாய் எல்லாப் பாவங்களுக்கும் மூலமாய் உள்ள கள்ளினை உண்ணாதிருத்தலாம். கள் என்றது ஏனைய மயக்கப் பொருள்களையும் அடக்கி நின்றது.

[இன்னிசை வெண்பா]

1 மாணாப் பகைவரை மாறொறுக் கல்லாதார்
பேணாதுரைக்கும் உரைகேட் டுவந்தது போல்
ஊணார்ந்துதவுவ தொன்றில் லெனினும் கள்ளினைக்
காணாக் களிக்குங் களி. 1032

[பழமொழி]

குறிப்புரை :

மாறொறுக்கல்லார் = எதிர்த்து வெல்ல இயலாதவர்
காணா = கண்டு களிக்கும் = மகிழும்
களி = கள்ளுண்பவர்.

[நேரிசை வெண்பா]

2 கிளைஞர்க் குதவாதான் செல்வமும், பைங்கூழ்
விளைவின்கண் போற்றான் உழவும்—இளையனாய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையும் இம்மூன்றும்
உள்ளன போலக் கெடும். 1033

[திரிகடுகம்]

குறிப்புரை :

கிளைஞர் = சுற்றத்தார் போற்றான் = காவல் செய்யாதவன்
உழவு = வேளாண்மை கெடும் = அழியும்.

3 ஒளியும் ஒளிசான்ற செய்கையும் சான்றோர்
தெளிவுடையார் என்றுரைக்கும் தேசும் — களியென்னும்
கட்டுரையாற் கோதப் படுமே லிவையெல்லாம்
விட்டொழியும் வேறாய் விரைந்து. 1034

[அறநெறிச்சாரம்]

குறிப்புரை :

ஒளி = புகழ், விளக்கம் தேசு = புகழ் ஒளி
கோதம் = குற்றம் அழியும் = நீங்கும்.

4 உள்ளமொழி செய்கைகளி னொன்றி யுலகேத்தும்
தள்ளரிய தன்மைவழி நிற்றலுறும் நல்லீர்
என்னுநர்கள் தன்மையிது நிற்க இடர்செய்யும்
கள்ளுமுணல் குற்றங் கடைப்பிடிமின் என்றான்? 1035

குறிப்புரை :

என்னுநர்கள் = பழிப்பவர்கள். இடர் = துன்பம்.

[கலித்துறை]

5 மாலைப்பந்தும் மாலையும் ஏந்தி மதுவார்பூஞ்
சோலைமஞ்ஞைச் சூழ்வளை யார்தோள் விளையாடி
ஞாலங் காக்கும் மன்னவ ராவார் நறவுண்ணார்
சீலங் காக்குஞ்சிற்றுப காரம் உரையாரே. 1036

[சீவக சிந்தாமணி]

குறிப்புரை :

மஞ்ஞை = மயில் ஞாலம் = உலகம் நறவு = கள்
சீலம் = ஒழுக்கம் சிற்றுபகாரம் = வழங்கி வாழ்தல்.

[அறுசீர் விருத்தம்]

6 தன்னைத்தான் உணரத் தீரும்
தகையறு பிறவி யென்பது
என்னத்தான் மறையும் மற்றைத்
துறைகளும் இசைத்த வெல்லாம்
முன்னத்தான் தன்னை யோரா
முழுப்பிணி யழுக்கின் மேலே
பின்னைத்தான் பெறுவ தம்மா
நறவுண்டு திகைக்கும் பித்தே. 1037

குறிப்புரை :

இசைத்த = சொல்லிய முன்னம் = குறிப்பு
ஓரா = நினையாத திகைக்கும் = மயங்கும்

7 செற்றதும் பகைஞர் நட்டார்
செய்தபே ருதவி தானும்
கற்றதும் கண் கூடாகக்
கண்டதுங் கலைவ லாளர்
சொற்றதும் மானம் வந்து
தொடர்ந்தும் படர்ந்த துன்பம்
உற்றதும் உணர்வ ராயின்
உறுதிவே றிதனின் உண்டோ. 1038

குறிப்புரை :

செற்றது = வென்றது சொற்றது = சொல்லியது
உறுதி = திண்மை.

8 வஞ்சமும் களவும் பொய்யும்
மயக்கமும் மாயில் கொட்பும்
தஞ்சமென் றுரை நீக்கும்
தன்மையும் களிப்பும் தாக்கும்
கஞ்சமெல் லணங்குந் தீரும்
கள்ளினால், அருந்தி னாரை
நஞ்சமும் கொல்வ தல்லால்
நரகினை நல்கா தன்றே. 1039

[இராமாவதாரம்]

குறிப்புரை :

கொட்பு = திரிபு கஞ்சமெல்லணங்கு = திருமகள்
கள் நரகத்தைத் தரும் ஆதலால் நஞ்சினும் கொடியது.

அதிகாரம்—50

## சூது

சூதாவது : நல்லறிவினைக் கெடுத்துக் கடமையை அழித்து இருமையுந் துன்பந் தருவதும் ஆக்கங் கருதி முதல் இழக்கச் செய்வதுமாகிய கவருடலாம்.

[இன்னிசை வெண்பா]

1 பாரதத் துள்ளும் பணையந்தந் தாயமா
ஈரைம் பதின்மரும் போரெதிர்ந்து ஐவரொடு
ஏதி லராகி இடை விண்டார் ஆதலால்
காதலரொ டாடார் கவறு. 1040

[பழமொழி]

குறிப்புரை :

பணையம் = பந்தயப் பொருள் ஐவர் = பாண்டவர்
காதலர் = அன்புடையவர் கவறு = சூது.

2 நட்டா ரிடுக்கண்கள் காண்டல் நனிஇன்னு
ஒட்டார் பெருமிதம் காண்டல் பெரிதின்னு
கட்டிலா மூதூர் உறைவின்னு ஆங்கின்னு
நட்ட கவற்றினாற் சூது. 1041

[இன்னாநாற்பது]

குறிப்புரை :

ஒட்டார் = பகைவர் கட்டு = காவல்
உறைவு = தங்கியிருத்தல் கவற்றினாற் சூது = கருவிகளைக் கொண்டு நிகழ்த்தும் சூது தொழில்.

3 புலைமயக்கம் வேண்டிப் பொருட் பெண்டிர் தோய்தல்
கலம்மயக்கம் கள்ளுண்டு வாழ்தல் சொலைமுனிந்து
பொய்ம்மயக்கம் சூதின்கண் தங்குதல் இம்மூன்றும்
நன்மையி லாளர் தொழில். 1042

[திரிகடுகம்]

குறிப்புரை :

புலை = புலாலாகிய உடம்பு சொலைமுனிந்து = அறமொழிகளைத் துறந்து தங்குதல் = விளையாடுதல்.

[நேரிசை வெண்பா]

4 உருவழிக்கும் உண்மை நலனழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானஞ் சிதைக்கும்—ஒருவர்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றலாச் சூது
பொருவரோ தக்கார் புரிந்து. 1043

குறிப்புரை :

உரு = புகழ்த்தோற்றம் திரு = செல்வம்
ஒன்றலா = பொருந்தாத பொருவாரா = ஆடுவாரோ
தக்கார் = சான்றோர்.

13 மேவர வுணர்வு முடிவிலா மையினால்
வேதமும் ஒக்கும் விண்புகலால்
தேவரும் ஒக்கும் முனிவரும் ஒக்கும்
திண்பொறி யடக்கிய செயலால்
காவலிற் கலையூர் கன்னியை ஒக்கும்
சூலத்தாற் காளியை ஒக்கும்
யாவையும் ஒக்கும் பெருமையால் எய்தற்
கருமையா லீசனை யொக்கும். 847

**குறிப்புரை :**

மதில் சிவனை ஒத்துள்ளது என்கின்றது.
விண் = ஆகாயம் கலையூர் கன்னி = மானை ஊர்தியாக
உடைய உமை ஈசன் = சிவபிரான்.

14 சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு
சங்கரந் தோமரம் உலக்கை
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்கல்
என்றிவை கணிப்பில கொதுகின்
இனத்தையும் உவணத்திறையை மியங்குங்
காலையு மிதமல நினைவார்
மனத்தையும் எறியும் பொறியுள வென்றால்
மற்றினி யுணர்த்துவ தெவனோ. 848

[இராமாவதாரம்]

**குறிப்புரை :**

அயில் = வேல் சிலை = வில் மழு = மழுவாயுதம்
தண்டு = கதாயுதம் தோமரம் = ஈட்டி
உருமின் = இடியைப்போல கொதுகு = கொசு
உவணத்திறை = கருடன் கால் = காற்று.

15 மன்னன் மேவு கோயில் மேரு
மான மற்றிம் மண்ணெலாம்
என்னலாய ஊரி டத்தி
லங்கு மாளி கைக்குலம்
பொன்னின் மேரு வின்பு றப்பொ
ருப்பு நேர வப்புறம்
துன்னுநேமி வெற்பை யென்ப
சூழ்மதிற் பரப்பை யே. 849

[நாரத சரிதை]

குறிப்புரை :

மேவுகோயில் = வாழும் அரண்மனை மான = ஒப்ப
புறப்பொருப்பு = உலகைச் சூழ்ந்துள்ள புறமலை நேர = ஒப்ப
நேமிவேற்பு = சக்கரவாளமலை.

## அதிகாரம்—35

## நகர்

நகராவது : மதில் சூழ்ந்து நால்வகைப் படைகளும் நிறைந்து வணிகம் முதலிய வளத்தால் சிறந்து விளங்குவதாகும்.

[நேரிசை வெண்பா]

1 களிகள் களிகட்கு நீட்டத்தங் கையாற்
களிகள் விதிர்த்திட்ட வெங்கள்—துளிகலந்து
ஓங்கெழில் யானை மிதப்பச்சே றாகுமே
பூம்புனல் வஞ்சி யகம். 850

குறிப்புரை ;

களிகள் = கள்ளுண்பவர் பூம்புனல் வஞ்சியகம் = நீர் வளத்தால் நிறைந்த வஞ்சிமா நகர்.

5 முன்னர் விளையாடி மூட்டுவார் மூட்டினுவ்
தன்மை திரிந்து சலந்தோன்றும்—பின்னர்
மிகாஅ தொருவர் வெகுண்டாலச் சூது
தகாதோ தக்கதோ தான். 1044

குறிப்புரை :

மூட்டுவார் = ஆசையை உண்டாக்குவர் சலம் = குற்றம்
வெகுண்டால் = சினங்கொண்டால்.

6 பிறன்றாம் வேட்டல் பிழைப்பில்லார்ச் சீறல்
அறன்றெடா ராயமே சூழ்தல்—மறந்தேயும்
தீநிலத்தார் சொற்கேட்டல் தீச்சூ திவைகண்டாய்
மேனிலத்தார் கேட்டிற்கு வித்து. 1045

[பாரதம்]

குறிப்புரை :

வேட்டல் = விரும்புதல் பிழைப்பு = குற்றம்
சீறல் - சினத்தல் ஆயம் = குழு
மேனிலத்தார் = உயர்குடிப் பிறந்தார் வித்து - மூலமாம்.

7 ஓதலும் ஓதி யுணர்தலும் சான்றோரான்
மேதை எனப்படும் மேன்மையும்—சூது
பொருமென்னும் சொல்லினாற் புல்லப் படுமே
இருளாம் ஒருங்கே யிவை. 1046

[அறநெறிச்சாரம்]

குறிப்புரை :

மேதை = பேரறிஞன் புல்லப்படும் = கவரப்படும்.

[சிந்தியல் வெண்பா]

8 சூதர் கழகம் அரவம் அருக்களம்
பேதைகளல்லார் புகாஅர் புகுவரேல்
ஏதம் பலவுந் தரும். 1047

[ஆசாரக் கோவை]

**குறிப்புரை :**

அரவம் = நாகம் அருக்களம் = தூசு நீங்காதகளம்
பேதைகள் = அறிவில்லார் ஏதம் = துன்பம்.

[கலிவிருத்தம்]

9 பொய்யொடு மிடைந்தபொரு ளாசை யுருளாயம்
மைபடு வினைத்துகள் வழக்குநெறி மாயம்
செய்தபொருள் பெய்தகலன் செம்மைசுடு செந்தீக்
கைதவம் நுனித்த கவருடல் ஒழிகென்றான். 1048

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

உருளாயம் = சூது காயை உருட்டும் கூட்டம்
மாயம் = பொய் கலன் = பாத்திரம் கைதவம் = வஞ்சனை.

**அதிகாரம்—51**

## குடிப் பிறப்பு

குடிப் பிறப்பாவது : தொன்மையும் உயர்வும் சான்ற குடிப் பிறப்பினாலாய பண்புநலங்களின் சிறப்பாம்.

[இன்னிசை வெண்பா]

1 சென்றபுகழ் செல்வம் மீக்கூற்றம் சேவகம்
நின்றநிலை கல்வி வள்ளன்மை—என்றும்
அளிவந்தார் பூங்கோதாய் ஆறும் மறையின்
வழிவந்தார் கண்ணே வனப்பு. 1049

**குறிப்புரை :**

மீக்கூற்றம் = மேலாய உரை சேவகம் = தொண்டு
வள்ளன்மை = ஈகை மறை = வேதம் வனப்பு = அழகு.

[இன்னிசை வெண்பா]

2 ஈட்டிய ஒண்பொருள் இல்லெனினும் ஒப்புரவு
ஆற்றும் குடிப்பிறந்த சான்றவன் — ஆற்றலும்
போற்றப் படாதாகிப் புலவினறி யேயினும்
ஏற்றுக்கன் றேறாய் விடும். 1050

குறிப்புரை :

ஒப்புரவு = உலக வழக்கு  ஆற்றும் = செய்யும்
ஏற்றுக்கன்று = காளைக்கன்று.

[நேரிசை வெண்பா]

3 ஒருமொருவர் ஒருவர்தம் உள்ளத்தை
தேருந் திறமரிதால் தேமொழீஇ — ஆரும்
குலக்குல வண்ணத்த ராகுப ஆங்கே
புலப்புல வண்ணத்த புள். 1051

[பழமொழி]

குறிப்புரை :

ஒரும் = சிந்திக்கும்  தேரும் = தெரியும்  புலம் = இடம்
புள் = பறவை.

[இன்னிசை வெண்பா]

4 கழகத்தால் வந்த பொருள்காமுறுமை
பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் ஒழுகல்
உழவின்கண் காமுற்று வாழ்தல் இம்மூன்றும்
அழகென்ப வேளாண் குடிக்கு. 1052

குறிப்புரை :

கழகம் = சூதாடும் கூடம்  பார்ப்பார் = அந்தணர்
உழவு = உழுதொழில் முதலியவை.

5 கயவரைக் கையிகந்து வாழ்தல் நயவரை
நள்ளிருளும் கைவிடா நட்டொழுகல் தெள்ளி
வடுவான வாராமற் காத்தல் இம்மூன்றும்
குடிமா சிலார்க்கே யுள. 1053

குறிப்புரை:

கையிகந்து = கடந்து நீங்கி நயவரை = அறநெறியாளரை
நட்டொழுகல் = நட்புப்பூண்டு ஒழுகுதல் வடு = குற்றம்.

6 அலந்தார்க் கொன்றீந்த புகழும் துளங்கினும்
தன்குடிமை குன்றாத் தகைமையும் அன்போடி
நாள்நாளும் நட்டார்ப் பெருக்கலும் இம்மூன்றும்
கேள்வியுள் எல்லாந் தலை. 1054

[திரிகடுகம்]

குறிப்புரை:

அலந்தார் = வறுமையுற்றார்
துளங்கினும் = நிலைகலங்கினும் கேள்வி = நூற்கேள்வி.

7 இருக்கை எழலும் எதிர்செலவும் ஏனை
விடுப்ப ஒழிதலோ டின்ன குடிப்பிறந்தார்
குன்றா ஒழுக்கமாக் கொண்டார் கயவரொடு
ஒன்றா உணரற்பாற் றன்று. 1055

குறிப்புரை:

எதிர்செலவு = எதிர்சென்று வரவேற்றல் குன்றா = குறையாத.

[நேரிசை வெண்பா]

8 நல்லவை செய்யின் இயல்பாகும் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகும்—எல்லாம்
உணருங் குடிப்பிறப்பின் ஊதியம் என்னோ
புணரும் ஒருவர்க் கெனின். 1056

குறிப்புரை:

பல்லவர் பலர் ஊதியம் = பொருள்.

[இன்னிசை வெண்பா]

9 ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம் திங்கள்போல்
செல்லாமை செவ்வன்நேர் நிற்பினும் ஒப்புரவிற்
கொல்கார் குடிப் பிறந் தார். 1057

குறிப்புரை :

ஒருபுடை = ஒருபக்கம் பாம்பு = இராகு என்னும் கோள்
விளக்குறூஉம் - ஒளிபரப்பும் ஒல்கார் = தளரமாட்டார்

10 கல்லாமை யச்சம் கயவர் தொழிலச்சம்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம் எல்லாம்
இரப்பார்க் கொன்றீயாமை யச்சம் மரத்தாரிம்
மாணாக் குடிப்பிறந் தார். 1058

குறிப்புரை :

கயவர் = கீழ்மக்கள் சோர்வு = மறதி
மரத்தார் = மரக்கலத்தாரை ஒப்பவராவர்.

11 இனநன்மை இன்சொல் ஒன்றீதல் மற்றேனை
மனநன்மை என்றிவை யெல்லாம்—கனமணி
முத்தோடி மைக்கும் முழங்குவரித் தண்சேர்ப்ப
இற்பிறந்தார் கண்ணே யுள. 1059

குறிப்புரை ;

கனமணி = மாணிக்கம் முதலிய இரத்தினங்கள்
உவரி - கடல் இற்பிறந்தார் = உயர் குடியிற் பிறந்தவர்.

12 கடித்துக் கரும்பினை கண்டகர நூறி
இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்
கூறூர்தம் வாயிற் சிதைந்து. 1060

[நாலடியார்]

குறிப்புரை :

கண்தகர = கணுக்கள் சிதறும்படி நூறி = பொடிசெய்து
வடுப்பட = மனம் காயம்படும்படி
சிதைந்து = உள்ளம் அழிந்து.

அதிகாரம்—52

## மானம்

மானம் : எஞ்ஞான்றும் தம் நிலையிற்றாழ்வுறாமலும் விதிவயத்தால் தாழ்வு வருமாயின் உயிர்வாழாமல் ஒழிதலுமாம்.

[நேரிசை வெண்பா]

1 இம்மையும் நன்றாம் இயல்நெறியும் கைவிடா
தும்மையும் நல்ல பயத்தலால்—செம்மையின்
நானங் கமழுங் கதுப்பினாய் நன்றேகாண்
மானம் உடையார் மதிப்பு. 1061

குறிப்புரை:

இம்மை = இவ்வுலக வாழ்வு உம்மை = மேலுலக வாழ்வு
நானம் = மான்மதம் (கத்தூரி) கதுப்பு = கூந்தல்.

2 திருமதுகை யாகத் திறனில்லார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்தும்—எரிமண்டிக்
கானந் தலைப்பட்ட தீப்போல் கனலுமே
மானம் உடையர் மனம். 1062

குறிப்புரை :

திரு = செல்வம் மதுகை = வலிமை
பெருமிதம் = பெருங்குற்றம் கானம் = காடு
கனலும் = கொதிக்கும்.

[இன்னிசை வெண்பா]

3 யாமாயின் எம்மில்லங் காட்டுதம் தாமாயின்
காணவே கற்பழியும் என்பார்போல் நாணிப்
புறங் கடைவைத்தீவர் சோறும் அதனல்
மறந்திடுக செல்வர் தொடர்பு. 1063

**குறிப்புரை :**

புறங்கடை = இல்லத்தின் வெளிப்பக்கம்
மறந்திடுக = நினையாது நீங்குக.

[நேரிசை வெண்பா]

4 நல்லவர் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்றெள்ளிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்—கொல்லன்
உலையூதுத் தீயேபோல உள்கனலுங் கொல்லோ
தலையாய சான்ருேர் மனம். 1064

**குறிப்புரை :**

அளியர் கருணையுடையார் நல்கூர்ந்தார் - வறுமையுற்றார் சிறுநோக்கு = இகழ்ச்சிப் பார்வை

5 என்பாய் உகினும் இயல்பிலார் பின்சென்று
தப்பா டுரைப்பரோ தம்முடையார்—தப்பாடு
உரையாமை முன்னுணரும் ஒண்மையுடையார்க்கு
உரையாரோ தாமுற்ற நோய். 1065

**குறிப்புரை :**

உகினும் - உதிர்ந்துபோயினும் தம்பாடு தமது துன்பம்
ஒண்மை நல்லறிவு நோய் = துன்பம்.

[இன்னிசை வெண்பா]

6 இழித்தக்க செய்தொருவன் ஆர உணலின்
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ
விழித்திமைக்கும் மாத்திரை யன்றோ ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு. 1066

குறிப்புரை :

இழித்தக்க = இழிவுடையவற்றை ஆர = வயிறு நிறைய
அழித்து = இறந்து.

7 கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணா திறக்கும்—இடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின். 1067

குறிப்புரை :

கடமா = காட்டு யானை—மதம் பொருந்திய யானை
வேங்கை = புலி இடம் வீழ்ந்தது = இடப்பக்கமாக
வீழ்ந்த இரையை மானம் அழுங்க = மானம் அழிய.

8 தம்மை இகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க!
என்னை யவரொடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
உறற்பால யார்க்கும் உறும். 1068

[நாலடியார்]

குறிப்புரை :

பட்டது = உண்டான உறவு வீங்குநீர் = கடல்
சேர்ப்ப = தலைவனே உறும் = வந்தடையும்.

[நேரிசை வெண்பா]

9 பறைபட வாழா அசுணமா உள்ளம்
குறைபட வாழார் உரவோர்—நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே வெதிர்சாம் தனக்கொவ்வாச்
சொற்பட்டால் சாவதாம் சால்பு. 1069

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை:

அசுணமா = அசுணம் என்னும் விலங்கு
உரவோர் = மானமுடையார் நெல் = கதிர்
வெதிர் = மூங்கில் சால்பு = நிறைகுணம்.

[இன்னிசை வெண்பா]

10 கண்டறியார் போல்வர் கெழீஇயின்மை செய்வாரைப்
பண்டறிவார் போலாது தாமும்அவரேயாய்
விண்டொரீஇ மாற்றி விடுதல் அதுவன்றோ
விண்டற்கு விண்டல் மருந்து. 1070

[பழமொழி]

குறிப்புரை:

கெழீஇயின்மை = பொருந்தாதன விண்டொரீஇ = நீங்கி
விண்டல் = பிளத்தல்.

[நேரிசை வெண்பா]

11 நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்து
ஒல்லை உயிர்க் கூற்றங் கோலாகி—ஒல்லுமேல்
மாயம் பிறர்பொருட்கண் மாற்றிமா மானத்தான்
ஆயின் அழிதல் அறிவு. 1071

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை:

ஒல்லை = விரைந்து ஒல்லுமேல் = இயலுமானால்
மாயம் = வஞ்சித்தல் அறிவு = நல்லறிவாகும்.

## அதிகாரம்—53

# பெருமை

[பெருமையாவது : செய்தற்கரிய செயல்களைச் செய்தலோடு தருக்கின்மை பிறர் குற்றங் கூறுமை அடக்கம் முதலிய நற்குணங் களாற் பெரியராயினாரது தன்மையாம்]

[நேரிசை வெண்பா]

1 பாந்த திறலாரைப் பாசிமே லிட்டுக்
கரந்து மறைக்கலு மாமோ—நிரந்தெழுந்த
வேயிற்றிரண்டதோள் வேற்கண்ணாய்! விண்ணியங்கும்
ஞாயிற்றைக் கைம்மறைப்பா ரில். 1072

**குறிப்புரை :**

பாசி = நீர்ப்பாசி வேயின் = மூங்கிலைப் போல
ஞாயிற்றை = சூரியனை கை = கையால்.

2 பொற்பவும் பொல்லாதனவும் புணர்ந்திருந்தார்
சொற்பெய் துணர்த்துதல் வேண்டுமோ—விற்கீழ்
அரிதாய்ப் பரந்தகன்ற கண்ணாய் அறியும்
பெரிதாள் பவனே பெரிது! 1073

**குறிப்புரை :**

பொற்பவும் = பொலிவுற்ற பொருளும் அரி = செவ்வரி
பெரிது = பெருஞ் செயல்.

3 நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ—வாடி
வலித்திரங்கி மாழக் கிடந்தே விடினும்
புலித்தலை நாய் மோத்த லில். 1074

**குறிப்புரை :**

நல்கூர்ந்து = வறுமையுற்று வட்குபவோ = வணங்கி
வாழ்வாரோ புலித்தலை = புலியினது தலையை.

[இன்னிசை வெண்பா]

4 மாடம் இடிந்தக்கால் மற்றும் எடுப்பதோர்
கூடகா ரத்திற்குத் துப்பாகும் அஃதேபோல்
பீடிலாக் கண்ணும் பெரியார் பெருந்தகையர்
ஈடில் லதற்கில்லைப் பாடு 1075

**குறிப்புரை :**

மாடம் = பெருவீடு கூடகாரம் = சிறுவீடு பாடு = பெருமை.

5 வாட்டிற லானை வளைத்தார்கள் அஞ்ஞான்று
வீட்டிய சென்றார் விளங்கொளி காட்டப்
பொருவறு தன்மைகண் டஃதொழிந்தார் அஃதால்
உருவு திருவூட்டு மாறு, 1076

**குறிப்புரை :**

வாட்டிறலானை = வாளாற் போரிடும் திறமிக்கவனை (திருமாலை)
வீட்டிய சென்றார் = கொல்லும் பொருட்டுச் சென்றார் (மது, கைடபர்) ஒளிகாட்ட = தன் திருமேனியை வெளிப்படுத்த
பொருவறு தன்மை = ஒப்பில்லாத அவ்வடி வழகின் நிலையை
ஒழித்தார் = பகைமை தவிர்த்தார் உரு = வடிவழகு.

6 நீரார்த்தும் ஒட்டா நிகரில் மணியே போல்
வேறாகத் தோன்றும் விளக்கம் உடைத்தாகும்
தாறாப் படினும் தலைமகன் தன்னொளி
நூறா யிரவர்க்கு நேர். 1077

**குறிப்புரை :**

நீரார்த்தும் = நீரிலே மூழ்க வைத்தும் மணி = நீலமணி
தாறாப்படினும் = குழுவாகக் கூடி நின்றாலும்
தலைமகன் = வேந்தன் நேர் = ஒப்பாகும்.

[நேரிசை வெண்பா]

7 அமையப் பொருளிலார் ஆற்றுதா ரென்பது
இமையத் தனையார்கண் இல்லைச்—சிமைய
நகையே ரிலங்கருவி நல்வரை நாட
நகையே தானுற்றி விடும். 1078

**குறிப்புரை :**

அமைய = நிறைய இமையம் = இமயமலை
சிமையம் = மலையுச்சி நகை = புன்முறுவல்
ஆற்றிவிடும் செயல்படுத்திவிடும்.

[இன்னிசை வெண்பா]

8 விதிப்பட்ட நூலுணர்ந்து வேற்றுமை யில்லார்
கதிப்பவர் நூலினைக் கையிகந்தா ராகிப்
பதிப்பட வாழ்வார் பழியாய செய்தல்
மதிப்புறத்துப் பட்ட மறு. 1079

**குறிப்புரை :**

விதிப்பட்ட = நன்னெறிகளமைந்த
கதிப்பவர் = மாறுபட்டோர் கையிகந்தார் = கடந்தவர்
மதிப்புறம் = திங்களின்கண் பட்டமறு = விளங்கும் களங்கம்போல் தெரியும்.

9 நிரைதொடி தாங்கிய நீடோள் மாற்கேயும்
உரையொழியா வாகும் உயர்ந்தோர்கண் குற்றம்
மரையாகன் றூட்டும் மலைநாட மாயா
நரையான் புறத்திட்ட சூடு. 1080

[பழமொழி]

**குறிப்புரை :**

நிரைதொடி = நிரையாகப் பூட்டிய தோள் வளையம்
மாற்கேயும் = திருமாலேயாயினும் உரை = குற்றச்சொல்
மரையா = பெண் மான் நரையான் = வெண்ணிறப் பசு
புறம் = முதுகு.

[நேரிசை வெண்பா]

10 தொல்லவையுட் டோன்றுங் குடிமையும்தொக்கிருந்த
நல்லவையுள் மேம்பட்ட கல்வியும்—வெல்சமத்து
வேந்துவப்ப அட்டார்த்த வென்றியும் இம்மூன்றும்
தாந்தம்மைக் கூறுப் பொருள். 1081

குறிப்புரை :

தொக்கிருந்த = கூடியிருந்த   சமம் = போர்க்களம்
அட்டார்த்த = பகைவரை அழித்து முழக்கம் செய்த
வென்றி = வெற்றி.

[இன்னிசை வெண்பா]

11 வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தமை நாடாச் சிறப்புடைமை—எய்தப்
பலநாடி நல்லவை கற்றல் இம்மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள். 1082

[திரிகடுகம்]

குறிப்புரை :

செரு = போர்   நாடி = ஆராய்ந்து   கோள் = கொள்கை

12 ஊனுண் டுழுவை நிறம்பெறூஉம் நீர்நிலத்துப்
புல்லினான் இன்புறூஉம் காலேயம் நெல்லின்
அரிசியான் இன்புறூஉம் கீழெல்லாம் தத்தம்
வரிசையான் இன்புறூஉம் மேல். 1083

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை :

ஊன் = தசை   உழுவை = புலி   காலேயம் = பசு
கீழ் = கீழ்மக்கள்   மேல் = மேன்மக்கள்.

13 பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார்
தாமேயும் நாணித் தலைச்செல்லார்—காணாய்
இளம்பிறை ஆயக்கால் திங்களைச் சேராது
அணங்கருந் துப்பின் அரா. 1084

குறிப்புரை :

தகவு = சால்பு தலைச்செல்லார் = அவ்விடத்துச் செல்லார்
அணங்கரும் = வருத்துதற்குரிய துப்பின் = வலியுடைய
அரா = இராகு என்னும் பாம்பு.

[நேரிசை வெண்பா]

14 கடையெல்லாம் காய்பசி அஞ்சும் மற்றேனை
இடையெலாம் இன்னாமை யஞ்சும்—புடையுலாம்
விற்புருவ வேல்நெடுங் கண்ணாய் தலையெலாஞ்
சொற்பழி அஞ்சி விடும். 1085

[நாலடியார்]

குறிப்புரை :

கடை = கீழ்மக்கள் இடை = இடையாய மக்கள்
தலை = மேலானோர் சொற்பழி = பிறர் பழித்துரை.

[அறுசீர்விருதம்]

15 கருங்கடற் பிறப்ப தல்லால்
வலம்புரி காணுங்காலைப்
பெருங்குளத் தென்றும் தோன்றா,
புறைநூதற் பிறையனீரே
அருங்கொடைத் தானம் ஆய்ந்த
அருந்தவந் தெரியின்மண்மேல்
மருங்குடை யவர்கட் கல்லால்
மற்றையர்க் காவதுண்டோ. 1086

[சீவக சிந்தாமணி]

**குறிப்புரை :**

வலம்புரி = வலம்புரிச் சங்கு தெரியின் - ஆராய்ந்து காணின்
மேல்மருங்குடையார் = மேலாய பண்புடைய மக்கள்.

**அதிகாரம்—54**

## சான்றாண்மை

சான்றாண்மையாவது : உலகம் மதிக்கும் நல்லகுணங்களால் நிறைந்து அவற்றை ஆளுந் தன்மையாம்

[நேரிசை வெண்பா]

1 உறையார் விசும்பின் உலவி மதிபோல்
நிறையால் நிலவுத லன்றிக்—குறையாத
வங்கம்போழ் முந்நீர் வளம்பெறினும் வேறாமோ
சங்கம்போல் வாய்மையார் சால்பு. 1087

**குறிப்புரை :**

உறையார் = மழைமுகில் நிறைந்த வங்கம் = கப்பல்
முந்நீர் = கடல் சங்கம் போல் = சங்கு போலத் தூய்மை மிக்கவர்.

[இன்னிசை வெண்பா]

2 அடர்ந்து வறியராய் ஆற்றாத போழ்தும்
இடங்கண் டறிவாம் என்றெண்ணி இராஅர்
மடங்கொண்ட சாயல் மயிலன்னாய் சான்றோர்
கடங்கொண்டும் செய்வர் கடன். 1088

**குறிப்புரை :**

இராஅர் = வாளா இருக்கமாட்டார்
கடங்கொண்டும் = கடன் பெற்றாயினும்
கடன் = நற்செயல்கள்.

[நேரிசை வெண்பா]

3 பரியப் படுமவர் பண்பில ரேனும்
திரியப் பெறுபவோ சான்றோர்—விரிதிரைப்
பாறெறியும் முந்நீர்த் துறைவ கடனன்றோ
ஊரறிய நட்டார்க் குறு. 1089

குறிப்புரை :

பரியப்படுமவர் - இரங்கத்தக்கவர் பார் = கரை
உறு = உணவு கொடுத்தல்.

[இன்னிசை வெண்பா]

4 பூந்தண் புனல்புகார்ப் பூமிகுறி காண்டற்கு
வேந்தன் வினையினன் மாந்தரைச் சான்றவன்
கொண்டதனை நாணி மறைத்தலால் தன் கண்ணின்
கண்டதூஉம் எண்ணிச் சொலல். 1090

[பழமொழி]

குறிப்புரை :

புகார் = புகார் நகரம் மாந்தரை = மக்களை
கொண்டதனை = ஒருவன் களவாற் கொண்ட நிலத்தை
மறைத்தலான் = தீங்கு படுவான் எனக் கருதி மறைத்தலான்
எண்ணிச்சொலல் = நன்மையை எண்ணிச் சொல்லுக.

5 செல்வழிக்கண் ஒருநாள் காணினும் சான்றவர்
தொல்வழிக்கேண்மையின்தோன்றப்—புரிந்தியாப்பர்
நல்வரை நாட சிலநாள் அடிப்படின்
கல்வரையும் உண்டாம் நெறி. 1091

குறிப்புரை :

செல்வழி = இடைவழி கேண்மை = நட்புறவு
யாப்பர் = நட்புக்கொள்வர் கல்வரை = பாறை நெறி = வழி.

6 பிறர் மறையின் கண்செவிடாய்த் திறனறிந்து
ஏதிலார் இற்கண் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டா அவற்கு. 1092

**குறிப்புரை :**

மறை = இரகசியம் ஏதிலார் = பிறர்
இற்கண் = இல்லாளிடத்து மூங்கை = ஊமை.

7 பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர் செய்கலார்—சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம் அவைபோல்
அருநவை யாற்று தலின்று. 1093

[நாலடியார்]

**குறிப்புரை :**

படவருவ = படுமாறு வரும் செயல்களை
சாயினும் = இறப்பு நேரினும் அருநவை = பெருந்துன்பம்.

[நேரிசை வெண்பா]

8 ஒல்வ தறியும் விருந்தினனும் ஆருயிரைக்
கொல்வ திடைநீக்கி வாழ்வானும்—வல்லிதின்
சீலம் இனிதுடைய ஆசானும் இம்மூவர்
ஞாலம் எனப் படுவார். 1094

**குறிப்புரை:**

ஒல்வது = தன்னால் இயல்வது வல்லிதின் = உறுதியாக
சீலம் = ஒழுக்கம் ஞாலம் = உலகம்.

[இன்னிசை வெண்பா]

9 இல்லார்க்கொன் றீயும் உடைமையும் இவ்வுலகின்
நில்லாமை யுள்ளும் நெறிப்பாடும் எவ்வுயிர்க்கும்
துன்புறுவ செய்யாத தூய்மையும் இம்மூன்றும்
நன்றறியும் மாந்தர்க் குள, 1095

**குறிப்புரை :**

இல்லார் = வறியவர் நெறிப்பாடு = அறவழி அறிவு
நன்று = பெருமை.

10 சான்றுருட் சான்றான் எனப்படுதல் எஞ்ஞான்றும்
தோய்ந்தாருட் டோய்ந்தான் எனப்படுதல் பாய்ந்தெழுந்து
கொள்ளாருள் கொள்ளாத கூருமை இம்மூன்றும்
நல்லாள் வழங்கும் நெறி. 1096

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

நல்லாள் = பண்புடையவர் வழங்கும் = செல்லும்
நெறி = வழி.

[ஆசிரியப்பா]

11 பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினும் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றும் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலர் ஆகுபவே. 1097

**குறிப்புரை:**

துகிர் = பவளம் மன்னிய = நிலைபெற்ற காம்ரு = விரும்பத்தக்க இடைபட = ஒவ்வொன்றும் வேறு வேறு இடமாக தொடை = மாலை நன்கலம் = ஆபரணம் என்றும் = எக்காலத்தும் சாலார் = சால்பில்லாதார்.

12 நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே. 1098

[புறநானூறு]

**குறிப்புரை:**

நாடா கொன்றோ = நாடாயினும் ஆகுக. காடா கொன்றோ = காடாயினும் ஆகுக அவலா கொன்றோ = பள்ளமாயினும் ஆகுக மிசையா கொன்றோ = மேடாயினும் ஆகுக இவை நானிலத்தைக் குறித்து நின்றன ஆடவர் = ஆள்பவர் நல்லை = நலமுடையை.

**அதிகாரம்—௫௬**

## பண்புடைமை

பண்புடைமையாவது: பெருமையும் சான்றுண்மையுமுடைய நன்மக்கள் அக்குணங்களின் வழுவாது உலகத்தாரியல்புகளையும் அறிந்து ஒழுகும் தன்மையாம்.

[இன்னிசை வெண்பா]

1 பெரிய குடிப்பிறந் தாரும் தமக்குச்
சிறியார் இனமா ஒழுகல், வெறியிலை
வேலொடு நேரொக்குங் கண்ணாய் அஃதன்றே
பூவொடு நாரியைக்கு மாறு. 1099

**குறிப்புரை:**

வெறியிலை = வெற்றிலை இயைக்கும் = தொடுத்துக்கூட்டும்.

[நேரிசை வெண்பா]

2 நல்கூர்ந் தவர்க்கு நனிபெரிய ராயினுர்
செல்விருந்தாகிச் செலல் வேண்டா—ஒல்வது
இறந்தவர் செய்யும் வருத்தம் குருவி
குறங்கறுப்பச் சோரும் குடர். 1100

[பழமொழி]

**குறிப்புரை:**

நல்கூர்ந்தார் = வறியராஞேர் ஒல்வது = தம்மால் இயலவது இறந்தவர் = மிக்கவர் குறங்கு = துடை சோரும் = அழியும்.

3 சாக்காடு கேடுபகைத் துன்பம் இன்பமே
நாக்காடு நாட்டறை போக்குமென—நாக்காட்ட
நட்டார்க் கியையின் தமக்கியைந்த கூறுடப்பு
அட்டார்வாய்ப் பட்டது பண்பு. 1101

[ஏலாதி]

**குறிப்புரை :**

சாக்காடு = இறப்பு நாக்காடு = பேச்சு அட்டார் = கொன்ருர்.

[இன்னிசை வெண்பா]

4 புல்லா எழுத்தின் பொருளில் வறுங்கோட்டிக்
கல்லா ஒருவன் உரைப்பவும் கண்ஞேடி
நல்லார் வருந்தியும் கேட்பரே மற்றவன்
பல்லாருள் நாணல் பரிந்து. 1102

**குறிப்புரை:**

வறுங்கோட்டி = வெற்றுக் கூட்டம் கண்ஞேடி = கண்ஞேட்டம் செய்து பரிந்து = இரக்கங் கொண்டு.

2 மாலை விலைபகர்வார் கிள்ளிக் களைந்தபூச்
சால மருவியதோர் தன்மைத்தால்—காலையே
விற்பயில் வானகம் போலுமே வெல்வளவன்
பொற்பார் உறந்தை யகம். 851

குறிப்புரை :

களைந்தபூ = நீக்கிவிட்ட மலர்கள் சால = மிகுதியாக
விற்பயில் வானகம் = ஆகாயவில்லைப் பொருந்திய வானம்
உறந்தையகம் = உறையூர் மாநகரம்.

3 மைந்தரோ டூடி மகளிர் திமிர்ந்திட்ட
குங்கும ஈர்ஞ்சாந்தின் சேறுழக்கி—எங்கும்
தடுமாற லாகிய தன்மைத்தே தென்னன்
நெடுமாடக் கூட லகம். 852

[முத்தொள்ளாயிரம்]

குறிப்புரை:

திமிர்ந்திட்ட = வழித்திட்ட ஈர்ஞ்சாந்து = குளிர்ந்த
கலவை கூடலகம் = மதுரைமாநகர்.

[இன்னிசை வெண்பா]

4 மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும்—மலிதேரான்
கச்சி படுவகடல்படா கச்சி
கடல்படுவ வெல்லாம் படும். 853

[யாப்பருங்கல உரைமேற்கோள்]

குறிப்புரை :

கச்சி = காஞ்சிநகர் படுவ = உண்டாகியிருப்பவை
கடல்படா = கடலின்கண் பெறப்படா எல்லாம் = எல்லாப்
பொருளும்.

[நேரிசை வெண்பா]

5 உலகம் ஒருநிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலாற் றூக்க—உலகனைத்தும்
தான்வாட வாடாத் தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூடல் நகர். 854

[பரிபாடலுறுப்பு]

குறிப்புரை :

புலக்கோல் = அறிவாகிய துலாக்கோல் தூக்க = நிறுக்க
வாடாத = வறுமையுறாத கூடல் = மதுரை.

[கலிவிருத்தம்]

6 நிழலகந் தவழ்ந்துதேன் நிரந்து தாதூதுசேர்
பொழிலகம் பூவையும் கிளியும் பாடுமே
குழலகங் குடைந்து வண்டுறங்கு கோதையர்
மழலையும் யாழுமே மலிந்த மாடமே. 855

குறிப்புரை :

தேன் = வண்டு தாது = பூந்தாது பூவை = நாகண
வாய்ப்பறவை கோதையர் = மாலையணிந்த மகளிர்
மழலை = இனிய மொழி யாழ் = யாழொலி
மாடம் = பெரிய இல்லங்கள்.

[அறுசீர்விருத்தம்]

7 சங்கமேய் தரங்க வேலைத்
தடங்கடற் பொய்கை பூத்த
அங்கண்மா ஞால மென்னும்
தாமரை யகத்து ளாங்கே
செங்கண்மால் சுரபை என்னும்
தேம்பொருப் பகத்து வைகும்
நங்கையோர் படிவங் கொண்ட
நலத்தது நகர மன்றே. 856

[நேரிசை வெண்பா]

5 கல்லாது போகிய நாளும் பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும்—ஒல்வ
கொடாஅ தொழிந்த பகலும் உரைப்பின்
படாஅம் பண்புடையார் கண். 1103

**குறிப்புரை :**

வைகிய = இருந்த வைகல் = நாள் ஒல்வ = இயன்ற பொருளை பகல் = நாள் படாஅம் = தோன்றாதாகும்.

6 பன்னாளும் சென்றக்கால் பண்பிலார் தம்முழை
என்னானும் வேண்டுப என்றிகழ்ப—என்னானும்
வேண்டினும் நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறுஞ் செய்வர் சிறப்பு. 1104

[நாலடியார்]

**குறிப்புரை :**

இகழ்ப = இழிவாகப் பேசுவர் விழுமியோர் = பண்புடையாளர் காண்டோறும் = காணும் பொழுதெல்லாம்.

[கலிவிருத்தம்]

7 நகைநனி தீது துனிநன்று யார்க்கும்
பகைநனி தீது பணிந்தீ யாரொடும்
இவைமிகு பொருளென் றிறத்த லிலராம்
வகைமிகு வானுல கெய்திவாழ் பவரே. 1105

[வளையாபதி]

**குறிப்புரை :**

துனி = வெறுப்பு பணிந்தீயார் = பணிவில்லாதவர்.

[ஆசிரியப்பா]

8 உண்டா லம்மஇவ் உலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே. 1106

[புறநானூறு]

**குறிப்புரை:**

உண்டால் = நிலைபெற்றுள்ளது இயைவதாயினும் = பெற வந்தாலும் தமியர் = தனியராக முனிவிலர் = வெறுப்பிலர் துஞ்சலும் = சோம்பியிருத்தலும் உடன் பெறினும் = எல்லாம் பெறினும் அயர்விலர் = மறதியிலர் மாட்சி = மாண்புடைமை நோன்றாள் = நெஞ்சத்திண்மை உண்மையான் = வாழ்ந்து வருதலான்.

**அதிகாரம்—56**

## நன்றியில் செல்வம்

நன்றியில் செல்வமாவது: மெய்வருந்தித் தொகுத்த செல்வம் ஈட்டியவர்க்கும் பிறர்க்கும் பயன்படாததன்மை. (நன்றி = நன்மை)

[நேரிசை வெண்பா]

1 வழங்கலுந் துய்த்தலும் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப! அதுவன்றே
நாய்பெற்ற தெங்கம் பழம். 1107

**குறிப்புரை :**

தேற்றாதான் — செய்யும் தெளிவில்லாதவன்
தழங்கருவி ஒலிக்கும் நீர் அருவி வேய் — மூங்கில்
அச்செலவம் நாய்பெற்ற தேங்காய் நெற்றினை ஒக்கும் என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

2 முழவொலி முந்நீர் முழுதுடன் ஆண்டோர்
விழவூரிற் கூத்தேபோல் வீழ்ந்தவிதல் கண்டும்
இழவென் றொருபொருள் ஈயாதான் செல்வம்
அழகொடு கண்ணின் இழவு. 1108

**குறிப்புரை :**

முந்நீர் — கடல் சூழ்ந்த உலகம் விழவூர் — விழா நிகழ்ந்த ஊர் கூத்து — நாடகம் இழிவு — இழுக்குடையதாகும்.

[நேரிசை வெண்பா]

3 தொன்மையின் மாண்ட துணிவொன்று மில்லாதார்
நன்மையின் மாண்ட பொருள்பெறுதல்
—இன்னொலிநீர்
கன்மே லிலங்கு மலைநாட மாக்காய்த்துத்
தன்மேல் குணில் கொள்ளு மாறு. 1109

**குறிப்புரை :**

துணிவு — செயலாற்றும் திண்மை கன்மேல் — கற்பாறைகள் மீது மா — மாமரம் குணில் — குறுந்தடி.

4 அறியாமை யோடிளமை கூடுவது மாங்கே
செறியப் பெறுவதாஞ் செல்வம்—சிறிய
பிறை பெற்ற வாணுதலாய் தானேயா டும்பேய்
பறை பெற்றா லாடாதோ பாய்ந்து. 1110

**குறிப்புரை :**

பிறை — பிறைமதி பறை — பறைமுழக்கம்.

[இன்னிசை வெண்பா]

5 விரும்பி அடைந்தார்க்கும் சுற்றத் தவர்க்கும்
வருந்தும் பசிகளையார், வம்பர்க் குதவல்
இரும்பனைவில் வென்ற புருவத்தாய் ஆற்றக்
கரும்பனை யன்ன துடைத்து. 1111

[பழமொழி]

குறிப்புரை :

வம்பர் = உறவும் நட்பும் இல்லாத புதியோர் இரும் = வலிய
பனை = பருத்த கரும்பனை = மட்டைகளால் நிறைந்து
தன்னையாரும் அணுகமுடியாத பனைமரம்.

6 அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா
பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வம்
கருதும் கடப்பாட்ட தன்று. 1112

குறிப்புரை :

பொரிதாள் = பொரிந்த அடிமரம் விள = விளாமரம்
வாவல் = வௌவாற் பறவை குறுகா = நெருங்கமாட்டா
பீடிலார் = நற்பண்பிலாதவர் கடப்பாடு = தன்மை.

7 அள்ளிக் கொள்வன்ன குறுமுகிழ வாயினும்
கள்ளிமேல் கைந்நீட்டார் சூடும்பூ வன்மையால்
செல்வம் பெரிதுடையார் ஆயினும் கீழ்களை
நள்ளார் அறிவுடை யார். 1113

குறிப்புரை :

குறுமுகிழ் = சிறிய பூக்களை உடைய கள்ளி = கள்ளிச்செடி
கீழ் = கீழ்மக்கள் நள்ளார் = அணுகமாட்டார்.

8 புணர்கடல் சூழ்வையத்துப் புண்ணியமோ வேறே
உணர்வ துடையார் இருப்ப உணர்விலா
வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்பவே
பட்டும் துகிலும் உடுத்து. 1114

**குறிப்புரை :**

புணர்கடல் = பல ஆறுகள் வந்து கலக்கும் வட்டு = பல கறை வழுதுணை = ஒரு செடி துகில் = நூலாடை.

9 மல்குதிரைய கடற் கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரில் கிணற்றின்கண் சென்றுண்பார்
செல்வம் பெரிதுடைய ராயினும் சேண்சென்றும்
நல்குவார் கட்டே நசை. 1115

**குறிப்புரை :**

மல்குதிரைய = பெருகிய திரைகளையுடைய கோடு = கரை
உவரில் = உப்புக்கரிப்பில்லாத நல்குவார் = ஈவார்
நசை = விருப்பம்,

10 பொன்னிறச் செந்நெல் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானங் கடலுள்ளும் கான்றுகக்கும்
வெண்மை யுடையார்விழுச் செல்வம் எய்தியக்கால்
வண்மையும் அன்ன தகைத்து. 1116

**குறிப்புரை :**

பொதி = கற்றை பீள் = வித்து வானம் = மழை
உகுக்கும் = பெய்யும் வெண்மை = அறிவின்மை
வண்மை = வழங்குதல் தகைத்து = தன்மையாகும்.

11 ஓதியும் ஓதார் உணர்வில்லார் ஓதாதும்
ஓதிய னையார் உணர்வுடை யோர் தூய்தாக
நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார் செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயா ரெனின், 1117

**குறிப்புரை:**

உணர்வு = நல்லறிவு நல்காதவர் செல்வம் பெற்றிருப் பினும் அவரும் வறுமையுடையாரே யாவர் என்பது கருத்து.

12 ஈட்டலுந் துன்பம் மற்றீட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுத்துன்பம் — காத்த
குறைபடின் துன்பம் கெடின் துன்பம் துன்பக்கு
உறைபதி மற்றைப் பொருள் 1118

[நாலடியார்]

**குறிப்புரை :**

குறைபடின் = குறைவுற்றால் துன்பக்கு = துன்பத்திற்கு
உறைபதி = தங்குமிடம் மற்றைப் பொருள் = நன்றியில் செல்வம்.

13 தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வகையாலோ யாதாலோ
இப்பொருள் போகின்றதென்று பொருள் வைத்தார்க்
கெப்பொழுதும் நீங்கா திடர் 1119

**குறிப்புரை :**

மாயாத = கெடாத தெவ்வர் = பகைவர்
வைதார் - ஈயாமல் பொருதிந்து வைத்தார் இடர் = வருத்தம்.

## அதிகாரம்—57

# நாணுடைமை

நாணுடைமையாவது : சால்புடைமைக்கும் ஒவ்வாத செயல்களையும் சொற்களையும் புரிதற்கு நாணும் தன்மையாம் பிறர்தம்மைப் புகழுங்கால் நாணுதலுடைமையுமாம்.

[இன்னிசை வெண்பா]

1 தமரேயும் தம்மைப் புகழ்ந்துரைக்கும் யோழ்தின்
அமரா ததனை அகற்றலே வேண்டும்
அமையாரும் வெற்ப அணியாரே தம்மைத்
தமவேயுங் கொள்ளாக் கலன் 1120

[பழமொழி]

**குறிப்புரை :**

அமராது = விரும்பாமல் அமையாரும் = மூங்கில் நிறைந்திருக்கும் வெற்ப = மலைநாடனே கலன் = ஆபரணம்.

[நேரிசை வெண்பா]

2 நச்சியார்க் கீயாமை நாணன்று நாணும்
அச்சத்தால் நாணுதல் நாணன்றாம்—எச்சத்தின்
மெல்லிய ராகித்தம் மேலாயார் செய்தது
சொல்லா திருப்பது நாண் 1121

[நாலடியார்]

**குறிப்புரை :**

நச்சியார் = விரும்பினோர் எச்சத்தின் = முடிவின்கண் செய்தது = புரிந்த செயல்களை நாண் = நாணுடைமையாகும்.

அதிகாரம்—58

# குடிமரபு

குடிமரபாவது : அந்தணர் முதலிய நால்வகை நிலையினின்று ஒழுகுவார் அக்குடிப்பிறப்பிற்குரிய கடமைகளில் வழுவாது நின்று தத்தங் கடமைகளை ஆற்றுஞ் சிறப்பாகும்.

[நேரிசை வெண்பா]

1 ஓதங் கரைதவழ்நீர் வேலி யுலகினுள்
வேதங் கரைகண்டான் வீற்றிருக்கும்—ஏதம்
சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி யகத்து 1122

**குறிப்புரை ;**

ஓதம் கடலலைநீர் ஏதம் - குற்றம் சொல்ல யாவரும் போற்றிக்கூற வீழ்ந்த = விரும்பின. இஃது அந்தணர் குடிமரபு கூறியது.

2 செயிர்க்கண் நிகழா்து செங்கோ லுயரி
மயிர்க்கண் முரசம் முழங்க — உயிர்க்கெல்லாம்
நாவல கலிடத்து ஞாயி றனையனாய்க்
காவலன் சேறல் கடன் 1123

**குறிப்புரை :**

செயிர் = குற்றம் செங்கோல் = நீதி
நாவலகலிடம் = நாவலந்தீவாகிய இவ்வுலகிடத்து
ஞாயிறு = சூரியன் சேறல் = நடத்தல்
இஃது அரசர் குடி மரபு கூறியது.

3 உழுது பயன்கொண் டொலிநிரை ஓம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து — முழுதுணர
ஓதி யழல்வழிபட் டோம்பாத ஈகையான்
ஆதி வணிகர்க் கரசு 1124

**குறிப்புரை :**

ஒலிநிரை = ஆரவாரிக்கும் ஆனிரைகள் பண்டம் = நெல் முதலிய தானியங்கள் ஓதி = கற்றறிந்து
அழல் = நெருப்பு ஓம்பாத = சூர்தூக்காத
இஃது வணிகர் குடிமரபு கூறியது.

4 காடுங் கடுந்திரை நீர்ச்சுழியும் கண்ணஞ்சான்
சாடுங் கலனும் பலவியக்கி — நீடும்
பலிசையாற் பண்டம் பகர்வான் பரியான்
கலிகையால் நீக்கல் கடன் 1125

**குறிப்புரை :**

கடுந்திரைநீர் = கடல் சாடும் = வண்டிகளையும்
கலனும் = கப்பல்களையும் இயக்கி = செலுத்தி
பலிசை = இலாபம் பகர்வான் = விற்பவன் பரியான் பொருட்பற்றிலனாய் கலி = பிறர் வறுமை. கடன் = கடமையாளன். இதுவும் வணிகர் சிறப்பு.

5 மூவரும் நெஞ்சமர முற்றி யவரவர்
ஏவல் எதிர்கொண்டு மீண்டுரையான் — ஏவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலுள்
உழுவான் உலகுக் குயிர்

**குறிப்புரை :**

மூவரும் = அந்தணர் அரசர் வணிகர் என்னும் மற்றை மூவரும் அமர = விரும்ப ஏவல் = கட்டளை
மீண்டுரையான் = மறுத்துக் கூறான் உழுவான் = வேளாளன்.
இது வேளாளர் குடிமரபு கூறியது.

6 மண்பதம் நோக்கி மலிவயலும் புன்செய்யும்
கண்பட ஏர்பூட்டிக் காலத்தால் — எண்பதனும்
தத்துநீர் ஆர்க்குங் கடல்வேலித் தாயர்போல்
வித்தித் தருவான் விளைவு 1127

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

பதம் = செவ்வி கண்பட = இடம்பெற
எண்பதன் = நெல் முதலிய எட்டுவகைத் தானியங்கள்
கடல்வேலி = பூமி தருவான் = விளைவிப்பான்
விளைவு = பல்லுயிர்க்கும் ஆக்கமான உணவு
இதுவும் வேளாளர் சிறப்புக் கூறியது.

[இன்னிசை வெண்பா]

7 பொச்சாப்புக் கேடு, பொருட்செருக்குத் தான்கேடு
முற்றாமை கேடு முரண் கேடு தெற்றத்
தொழில் மகன் தன்னொடு மாறுயின் என்றும்
உழுமகற்குக் கேடென்றுரை 1128

குறிப்புரை :

பொச்சாப்பு = மறதி செருக்கு = இறுமாப்பு
முரண் = பகை தெற்ற = தெளிவாக மாறுயின் = பகையாயின் உழுமகற்கு = வேளாளற்கு.

[நேரிசை வெண்பா]

8 நன்புலத்து வையடக்கி நாளு ந ஏபோற்றிப்
புன்புலத்தைச் செய்தெருப் போற்றியபின —
நன்புலக்கண்
பண்கலப்பைப் பாற்படுப்பான் உழவன் என்பவே
நுண்கலப்பை நூலோது வார 1129

[சிறுபஞ்சமூலம்]

குறிப்புரை :

நன்புலம் = நன்செய்நிலம் புன்புலம் = புன்செய்நிலம்
கலப்பைநூல் = உழவுநூல்.

9 யானை நிரையுடைய ரேனும் எழில்சிறந்தார்
ஏனை நிரையுடை ஏர்வாழ்நர் — யானைப்
படையோர்க்கு வென்றி பயக்கும் பகட்டேர்
உடையோர்க் கரசரோ ஒப்பு 1130

குறிப்புரை :

நிரை = கூட்டம் ஏனைநிரை = ஆனிரை பகட்டேர் = காளையையுடைய ஏர் உழவர்க்கு அரசர் ஒவ்வார் என்பது.

10 நிலம்பொறை யாற்று நிதிபல கொண்டும்
குலம்பெறுதீங் கந்தணர் கொள்ளார் — நலங்கிளர்
தீவா யவிசொரியத் தீவிளங்கு மாறுபோல்
தாவா தொளி சிறந்தார் தாம் : 1131

குறிப்புரை :

தீவாய் = வேள்விக்குண்டத்து அவி = நெய்முதலியவை
தாவாது = கெடாது,

11 ஈட்டிய தெல்லாம் இதன்பொருட் டென்பது
காட்டிய கைவண்மை காட்டினார் — வேட்டொறுங்
காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையும் சங்கும்போற் றந்து 1132

[பெரும்பொருள் விளக்கம்]

குறிப்புரை :

ஈட்டியது = சேர்த்தபொருள் காட்டிய = காட்டுதற்காக
வேட்டொறும் = இரவலர் விரும்புந்தோறும் புகார் = புகார் நகரம் தாமரை = பதுமநிதி சங்கு = சங்கநிதி
தந்து = கொடைவழங்கி

அதிகாரம்—59

## நல்குரவு

நல்குரவாவது : பன்பு முதலாயவற்றை மெலிவித்து இம்மையில் துன்பத்தைத் தருவதாகிய வறுமையாம்.

1 கொண்டொழுகு மூன்றற் குதவாப் பசித்தோற்றம்
பண்டொழுகிவந்த வளமைத்தங் — குண்டது
கும்பியிலஉந் தீச்சென் றெறிதலால் தன்னுசை
அம்பாய்உள் புக்கு விடும் 1133

[பழமொழி]

குறிப்புரை:

மூன்று = அறம் பொருள் இன்பம் கும்பி = வயிறு
அம்பாய் = வில்லினின்று வந்த அம்புாக,

2 பேஎய்ப் பிறப்பில் பெரும்பசியும் பாஅய்
விலங்கின் பிறப்பின் வெரூஉம — புலந்தெரியா
மக்கட் பிறப்பின் நிரப்பிடும்பை இம்மூன்றும்
துக்கப் பிறப்பாய் விடும் 1134

[திரிகடுகம்]

குறிப்புரை :

பாஅய் = பரவி வெரூஉம் = அச்சந்தரும்
நிரப்பிடும்பை = வறுமை துக்கம் = துன்பம்.

3 கல்லோங் குயர்வரைமேல் காந்தன் மலராக்கால்
செல்லாவாம் செம்பொறி வண்டினம் — கொல்லைக்
கலாஅல் கிளிகடியும் கானக நாட
இலாஅஅர்க் கில்லைத் தமர் 1135

**குறிப்புரை:**

வரை = மலை கொல்லை = புனம் கலாஅல் = கவண் கற்களால் கடியும் = ஒப்பும் இலாஅர் = பொருள் இல்லாதவர் தமர் = உறவினர்.

4 பிறந்த குலம்மாயும் பேராண்மை மாயும்
சிறந்ததம் கல்வியும் மாயும் — கறங்கருவி
கன்மேற் கழூஉம் கணமலை நன்னாட !
இன்மை தழுவப்பட் டார்க்கு. 1136

**குறிப்புரை :**

குலம் = குலப்பண்பு. கறங்குஅருவி = சுழன்றொழுகும் அருவி இன்மை = வறுமை.

5 உள்கூர் பசியால் உழைநசைஇச் சென்றார்கட்
குளளூர் இருந்துமொன் றாற்றுதான் — உள்ளூர்
இருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தின னாதலே நன்று 1137

**குறிப்புரை :**

கூர்பசி = மிக்கபசி உழை = அவனிடம் ஆற்றுதான் வழங்க இயலாதான் கொன்னே = வீணே போய் = பிறரிடத்திற்குச் சென்று.

6 ஆர்ந்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூந்தொழி கொம்பின்மேற் செல்லாவாம்- நீர்த்தருவி
தாழா உயர்சிறப்பின் தண்குன்ற நன்னாட !
வாழா தார்க் கில்லைத் தமர் 1138

**குறிப்புரை :**

பொறிய = புள்ளிகளையுடைய. நீர்த்து = நீரையுடைய
வாழாதார் = செல்வத்தோடு வாழாதவர் தமர் = உறவினர்.

7 காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவர் — ஏலா
இடர்ஒருவ ருற்றக்கால் ஈர்ங்குன்ற நாட !
தொடர் புடையேம் என்பார் சிலர் 1139

**குறிப்புரை :**

காலாடுபோழ்தில் = செல்வத்தால் சிறப்புற்றிருந்த காலத்து
மீன் விண்மீன் ஏலா = பொறுத்தற்இயலாத
இடர் = வறுமை தொடர்பு = உறவு.

8 நல்லாவின் கன்றாயின் நாகும் விலைபெறூஉம்
கல்லாரே யாயினும் செல்வர்வாய்ச்—சொல்செல்லும்
புல்லீரப் போழ்தின் உழவேபோல்மீதாடிச்
செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல் 1140

[நாலடியார்]

**குறிப்புரை :**

ஆ = பசு நாகு = கன்று செல்லும் = சிறக்கும்
புல்லீரம் = புல்நனையுமளவுஈரம் மீதாடிச் செல்லா = மேலாக
வன்றி ஆழமாகச் செல்லா நல்கூர்ந்தார் = வறுமையுற்றார்.

[கலிவிருத்தம்]

9 பெண்டிர் மதியார் பெருங்கிளை தானது
கொண்ட விரகர் குறிப்பி னஃகுப
வெண்டறை நின்று வெறுக்கை யிலராயின்
மண்டினர் போவர்தம் மக்களும் ஒட்டார் 1141

குறிப்புரை :

பெண்டிர்மதியார் = மனைவி முதலிய மகளிர் மதிக்கமாட்டார்.
பெருங்கிளை = சுற்றத்தார் வீரகர் = தந்திரமாக நட்புப் பூண்டவர் அஃகுப = குறைந்து வேறுபடுவார்
வெண்டறை = வறியநிலம் வெறுக்கை = செல்வம்
இலராயின் = இல்லாமல் வறுமையுற்றாராயின்.

10 சொல்லவை சொல்லார் சுருங்குபு சூழ்ந்துணர்
நல்லவை யாரும் நனிமதிப் பாரல்லர்
கல்வியுங் கைப்பொருளும் இல்லார் பயிற்றிய
புல்லென்று போதலை மெய்யென்று கொண்ணீ 1142

குறிப்புரை :

சொல் = புகழ் சொல்லார் = பாராட்டமாட்டார்
சுருங்குபு = சுருங்கி நல்லவை = பெரியோர் கூடும் மன்றம்
பயிற்றிய = பயின்ற புல்லென்று = சிறவாமல் புன்மையுற்று கொண்ணீ = கொள்வாயாக.

11 தொழுமக ளுயினுந் துற்றுடை யானைப்
பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமிய ரேனும் வெறுக்கை யுலந்தாற்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப 1143

குறிப்புரை :

தொழுமகன் = அடிமை செய்பவன் துற்று = செல்வம்
பறவையிற் சூழ்ப = பறவைகளைப் போலச் சூழ்ந்து பாராட்டுவார் விழுமியர் = அறிவுடையோர் உலந்தால் = வற்றிப் போனால் போப = வீட்டுப் போய்விடுவார்.

12 பொருளில் குலனும் பொறுமையில் நோன்பும்
அருளில் அறனும் அமைச்சில் லரசும்
இருளில் இட்ட இருமைய ரென்றே
மருளில் புலவர் மனங்கொண் டுரைப்ப. 1144

[வளையாபதி]

**குறிப்புரை:**

பொருளில் குணனும் = பொருளில்லாதவருடைய நற்குணங்களும் பொறை = பொறுமை நோன்பு = தவம் அருளில்அறனும் = அருளில்லாதவனது அறச்செயலும் இருளினுள் இட்ட இருள் = இருளிற் குறித்த கரியமையைப் போல்வதாகும்
மருள் = மயக்கம்.

**அதிகாரம்—60**

## இரவு

இரவாவது நல்குரவான் எய்திய துன்பத்தைக் களைய எண்ணி உடையோர் பாற்சென்று வேண்டுதலாகிய செயலாம். அதன் இழிதகவு பற்றி இவ்வதிகாரம் கூறுகின்றது.

[நேரிசை வெண்பா]

1 இல்லாமை கந்தா இரவு துணிந்தொருவர்
செல்லாரும் அல்லர் சிறுநெறி — புல்லா
அகம் புகுமின் உண்ணுமின் என்பவர் மாட்டல்லால்
முகம்புகுதல் ஆற்றுமோ மேல். 1145

[நாலடியார்]

**குறிப்புரை:**

இல்லாமை = வறுமை கந்தா = பற்றுக்கோடாக இரவு = யாசித்தல் சிறுநெறி = தாழ்ந்தவழி புல்லா அகம் - வரவேற்றுத் தழுவிக்கொள்வார் இல்லம் முகம் புகுதல் = சென்று சேர்தல் மேல் = மேலானவர்.

2 மருஅ தவனும் பலர் ஒன்று இரந்தால்
பெருஅஅன் பேதுறல் எண்ணிப் — பொருஅன்
கரந்துள்ள தூஉம் மறைக்கும் அதனால்
இரந்தூட் குப் பன்மையோ தீது. 46

**குறிப்புரை :**

மருஅதவன் = இல்லை என்று கூறுதவன்
பெருஅஅன் = பொருளைப் பெற்றில்லாத ஏழையானவன்
பேதுறுதல் = மனக்கலக்கமுறுதல் பொருஅன் பொறுக்க மாட்டான் இரந்தூட்கு = இரந்து உண்ணுதலுக்கு
பன்மை = பலராகச் செல்லுதல்,

3 மரம்போல் வலிய மனத்தாரை முன்னின்று
இரந்தார் பெறுவதொன் றில்லை — குரங்கூசல்
வள்ளியின் ஆடும் மலைநாட அஃதன்றோ
பள்ளியுள் ஐயம் புகல். 1147

[பழமொழி]

**குறிப்புரை :**

வலியமனத்தார் = இரக்கமில்லாதவர் ஊசல் = ஊஞ்சல்
வள்ளி = வள்ளிக்கொடி பள்ளி = சமணமுனிவர் உறையும் இடம் ஐயம் = யாசித்தல் புகல் = புகுதலை ஒக்கும்
இரக்கும் பொருள் கிட்டாது என்பது கருத்து,

[இன்னிசை வெண்பா]

4 செருக்கினால் வாழும் சிறியவனும் பைத்தகன்ற
அல்குல் விலைபகரும் ஆய்தொடியும் நல்லவர்க்கு
வைத்த அறப்புறங் கொண்டானும் இம்மூவர்
கைத் துண்ணார் கற்றறிந்தார். 1148

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

செருக்கு - இறுமாப்பு  சிறியவன்  அறிவில்லாதவன்
ஆய்தொடியார் = விலைமாதர்  அறப்புறம்  அறத்திற்காக
அமைந்த மடங்கள் அறச்சாலைகள்  கொண்டான் அறத்
திற்குரிய பொருளை அகப்படுத்திக் கொண்டவன்
கைத்து = அவர்கள் கையாலிடுவதை  உண்ணார் = உண்ண
மாட்டார்.

[கலிவிருத்தம்]

5 விசையி னோடும் வெண்டேர் செலக் கண்டுநீர்
நசையி னோடிய நவ்வி யருங்குழாம்
இசையில கீழ்மகன் கண்ணிரந் தெய்திய
வசையில் மேன்மகன் போல வருந்துமே. 1149

**குறிப்புரை :**

விசை = விரைவு  வெண்டேர் = கானல்நீர், பேய்த்தேர்
நசை = விருப்பம்  நவ்வி = கலைமான்  குழாம் = கூட்டம்
இசை = புகழ்  எய்திய = அடைந்த
மேன்மகன் = நல்லவன்  வருந்தும் = துன்பப்படும்.

[ஆசிரியப்பா]

6 ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புசி உழவாப்
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்க ணென்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண!
என்நிலை அறிந்தனை யாயின் இந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலென் அடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே. 1150

[புறநானூறு]

**குறிப்புரை :**

ஆடுநனிமறந்த = சமைக்கும் செயலை மிகவும் மறந்த
அடுப்பின் = அடுப்பினிடத்து ஆம்பி = காளான்
தேம்புபசி = உடம்பை மெலிவிக்கும் பசித்துன்பம்
உழவா = வருந்தி திரங்கி = சுருங்கி இல்லி = துளை
பொல்லா = வற்றிய மகத்து = குழந்தையினது
ஈரிதழ் = கண்ணீரால் நனைந்த இமைகள் எவ்வம் = துன்பம்
நினைஇ = நினைந்து படர்ந்திசின் = நாடி வந்தேன்
குமண = குமணவள்ளலே! தொடுத்தும் = வளைத்துக்
கொண்டாயினும் அமையலென் = இருக்கமாட்டேன்
பச்சைநல்யாழ் = தோலாற் போர்த்துச் செய்யப்பட்ட நல்ல
யாழ் மண் = மார்ச்சனை வயிரியர் = கூத்தர்
இதனைப்பாடியவர் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர்.

**அதிகாரம்—61**

## இரவச்சம்

இரவச்சமாவது : நிரப்பிடும்பையால் துன்புறினும் கரவாது உவந்தீவாரைக் காணுதற் கருமையாதலின் ஈளன இரக்கும் இழிவு நோக்கி அஞ்சுதலாம்.

[ஆசிரியப்பா]

1 பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முளியும் கோடை யாயினும்
புழற்கால் ஆம்பல் அகலடை நீழல்
கதிர்க் கோட்டு நந்தின் சுரிமுக ஏற்றை
நாகிள வளையொடு பகல்மணம் புகூஉம்
நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
வான்றோய் நீள் குடை வயமான் சென்னி!
சான்றோ ரிருந்த அவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல்போல
வல்லே களைமதி அத்தை உள்ளிய
விருந்து கண் டொளிக்கும் திருந்தா வாழ்க்கை
பொறிப் புணர் உடம்பிற் றோன்றியென்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே. 1151

[புறநானூறு]

**குறிப்புரை :**

பயம் = பயன் கெழு = பொருந்திய கயம் - நீர்நிலைகள் களி = களிமண் முளியும் = காய்ந்து உதிரும் கோடை = கோடைக்காலம் புழற்கால் ஆம்பல் துளையை யுடைய கொடியாகிய ஆம்பல் அடை = இலை நந்து = நத்தை ஏற்றை = ஆண் வளை = சங்கு புகூஉம் = கூடும் கழனி = வயல் பெருவிறல் பெரிய வெற்றியையுடை அரசன் வயமான் = வெற்றிபொருந்திய குதிரை சென்னி = சோழ மன்னன் ஆசாகு என்னும் பூசல் = காப்பாற்றுங்கள் என்னும் கூக்குரல் வல்லே = விரைவாக களைமதி = நீக்குவாயாக உள்ளிய = கருதிவந்த பொறி = கண்வாய் முதலிய ஐம்பொறிகள். நல்கூர்மை = வறுமை இதனைப் பாடியவர் பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர்,

[நேரிசை வெண்பா]

2 கரவாத திண்ணன்பின் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை — இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ
கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு. 1152

**குறிப்புரை :**

கரவாத = வஞ்சிக்காத திண்ணன் பின் = செறிந்த அன்புடைய இரவாது = இரந்துநில்லாமல் உள்ளுங் கால் = நினைக்கும்போது என்கொலோ = எவ்வா றிருக்குமோ குறிப்பு = மனநிலை.

3 இன்னா இயைக இனிய ஒழி கென்று
தன்னையே தானிரப்பத் தீர்வதற் — கென்னைகொல
காதல் கவற்றும் மனத்தினாற் கண்பாழ்பட்
டேதி லவரை இரவு. 1153

**குறிப்புரை :**

சங்கம் = சங்குகள் தரங்கவேலை = அலைவீசும் கடல்
பொய்கை = தடாகம் ஞாலம் = உலகம்
சுரபை = காமதேனு நகரம் = போதனமாநகர்.

[கலிவிருத்தம்]

8 அகிலெழு கொழும்புகை மஞ்சின் ஆடவும்
முகிலிசை எனமுழா முரன்று விம்மவும்
துகிலிகைக் கொடியனார் மின்னிற் றோன்றவும்
இகலின மலையொடு மாடம் என்பவே. 857

**குறிப்புரை :**

மஞ்சின் ஆட = மேகங்களிற்சென்று படிய முகில் = மழை மேகம் முழா = முழவம் துகிலிகை = ஆடை
இகலின = மாறுபட்டன

9 மாடவாய் மணிமுழ விசையும் மங்கையர்
ஆடுவார் சிலம்பிணை யதிரு மோசையும்
பாடுவார் பாணியும் பயின்று பல்கல
மூடிமா நகரது முரல்வ தொத்ததே. 858

[சூளாமணி]

**குறிப்புரை :**

மாடவாய் = மணிமாடங்களிடத்து சிலம்பிணை = இணைச்சிலம்புகள் பாணி = பாட்டு முரல்வது = இசைப்பது

[வேறு]

10 திருவந் நீணகர்ச் செம்பொன் நீடிய
உருவ வொண்கொடி ஊழின் றுடங்குவ
பரவை வெங்கதிர்ச் செல்வன் பன்மயிர்ப்
புரவி பொங்கழ லாற்றுவ போன்றவே. 859

**குறிப்புரை :**

செம்பொன்நீடிய = மனைமதில்களில் ஓங்கியுள்ள கொடி = கட்டப்பட்ட கொடிகள் நுடங்குவ = அசைவன பரவை = பரந்த செல்வன் = சூரியன் புரவி = குதிரைகள் ஆற்றுவ = வெப்பத்தைத் தணியச்செல்வன போன்ற = போல அசைந்தன

11 எறிசுற விளையவர் ஏந்து பூங்கொடி
மறிதிரை வரைபுரை மாட மாக்கலம்
பெறலருந் திருவனார் அமுதம் பேரொலி
அறைகடல் வளநக ராய தென்னவே. 860

**குறிப்புரை :**

வளநகர்கடலை ஒத்துள்ளது என்கின்றது. இளையவர் = வீரர் சுறுமீன்கள் கொடிகள் அலைகள் மாடமாளிகைகள் = கப்பல். மகளிர் அமிழ்தம் பேரொலியால் கடல் போன்ற தாக உள்ளது என்பதாம்.

12 பாத்தரும் பசும்பொனின் மாடத்துச்சி மேல்
தூத்திரள் மணிக்குடம் நிரைத்துத் தோன்றுவ
பூத்தன வேங்கைமேற் பொலிந்து கார்நினைந்
தேத்தரும் மயிற்குழாம் இருந்த போன்றவே. 861

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

பராத்தரும் = மாற்றில்லாக மணிக்குடம் = கலசங்கள் வேங்கை = வேங்கைமரம். கார் நினைந்து = மழையை நினைந்து ஏத்தகு = மேல் நோக்கும் மயிற்குழாம் = மயில் கூட்டம்

**குறிப்புரை :**

இன்னு = வறுமைத் துன்பம்  இனிய = இனிய பொருள்கள்  தீர்வு = முடிவு  என்னை = என்ன ? கவற்றும் = கவலையுறச் செய்யும்  பாழ்பட்டு = கெட்டு ஏதிலவர் = அயலவர்  இரவு = இரத்தல்.

4 என்றும் புதியார் பிறப்பினும் இவ்வுலகத்
தென்றும் அவனே பிறக்கலான் குன்றின்
பரப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட
இரப்பாரை எள்ளா மகன். 1154

**குறிப்புரை :**

பிறப்பினும் பிறந்தாலும்  அவனே அவ்வொருவனே பிறக்கலான் = உண்மையாகப் பிறத்தலுடையான்  அவன் யார் எனின் ? இரப்பாரை எள்ளாமகன் = இரந்து வரும் எளியோரை இகழாமல் ஈந்தொழுகுமவனுவான் ஏனையோர் பிறந்தும் பிறவாதவரேயாவர் என்பது கருத்து.

[இன்னிசை வெண்பா]

5 ஒருவர் ஒருவரைச் சார்ந்தொழுக லாற்றி
வழிபடுதல் வல்லுத லல்லால் பரிசழிந்து
செய்யீரோ என்னும் என்னும் சொல் இன்னாதே
பையத்தாம் செல்லும் நெறி. 1155

**குறிப்புரை :**

வல்லுதல் = கூடுதல்  அல்லால் = அல்லாமல் பரிசழித்து = மானமழிந்து  செய்யீரோ = ஈயமாட்டீரா சொல் = இரப்புரை  பைய = அடக்கமாக  நெறி = வழி.

6 திருத்தன்னை நீப்பினும் தெய்வம் செறினும்
உருத்த மணத்தோ டுயர்வுள்ளின் அல்லால்
அருத்தம் செறிக்கும் அறிவிலார் பின்சென்று
எருத்திறைஞ்சி நில்லாதாம் மேல். 1156

**குறிப்புரை :**

திரு = திருமகள் (செல்வம்) நீப்பினும் = நீங்கினும்
தெய்வம் = ஊழ்வினை செறினும் = உருத்துவந்தாலும்
உருத்தமனம் = ஊக்கமுடைய உள்ளம் அருந்தம் = செல்வம்
எருத்திறைஞ்சி = தலைவணங்கி மேல் = மேன்மக்கள்.

7 **மல்லல்மா ஞாலத்து வாழ்பவருள் எல்லாம்**
**செல்வர் எனினும் கொடாதவர் நல்கூர்ந்தார்**
**நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே**
**செல்வரைச் சென்றிரவா தார்.** 1157

**குறிப்புரை :**

ஞாலத்து = உலகத்து கொடாதவர் = ஈயாதவர்
நல்கூர்ந்தார் = வறியராவர் நல்கூர்ந்தக்கண்ணும் = வறுமை யுற்றபோதும் இரவாதவர் பெருமுத்தரையர் போல்வராவார்.

[நேரிசை வெண்பா]

8 **மான அருங்கலம் நீக்கி இரவென்னும்**
**ஈன இளிவினால் வாழ்வேன் மன் — ஈனத்தால்**
**ஊட்டியக் கண்ணும் உறுதிசேர்ந் திவ்வுடம்பு**
**நீட்டித்து நிற்கு மெனின்** 1158

**குறிப்புரை :**

மானஅருங்கலம் = மானமென்னும் ஆபரணம்
இளிவு = இழிவு ஊட்டியக்கண்ணும் = உண்பித்த விடத்தும் நிற்குமெனின் = இருக்குமென்றால். இரந்து வாழுதலினும் இறந்துவிடுதல் மேல் என்பது கருத்து.

9 மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு
உறுமாறியைவ கொடுத்தல் — வறுமையால்
ஈதல் இசையா தெனினும் இரவாமை
ஈதல் இரட்டி யுறும் 1159

**குறிப்புரை :**

உறுமாறு = அடையும் வண்ணம் இயைவ = இயன்ற பொருள்களை இரவாமை = இரந்துநில்லாமை இரட்டியுறும் = ஈகையைப்போல இருமடங்கு பெருமையைத் தரும் என்றவாறும்.

10 வற்றிமற் றாற்றப் பசிப்பினும் பண்பிலார்க்
கற்றம் அறிய உரையற்க — அற்றம்
மறைக்கும் துணையார்க் குரைப்பவே தம்மைத்
துறக்குந் துணிவிலா தார். 1160

[நாலடியார்]

**குறிப்புரை :**

வற்றி = வறுமையுற்று ஆற்ற = மிகுதியாக
அற்றம் = இல்லாமை உரையற்க = கூறுதிருப்பாயாக
மறைக்கும் துணையார் = நீக்கும் பண்புடையார்
துறக்கும் = மடிவிக்கும் துணிவு = உறுதி.

## அதிகாரம்–62

## கயமை

கயமையாவது : மக்கட் பண்பாகச் சான்றோர் வகுத்துக்கூறியுள்ள குணங்கள் யாதுமின்றி அவற்றிற்கு முரணாக ஒழுகும் கீழ்மக்களது தன்மையாம்.

[இன்னிசை வெண்பா]

1 நிரந்து வழிவந்த நீசருள் எல்லாம்
பரந்தொருவர் நாடுங்கால் பண்புடையார் தோன்றார்
மரம்பயில் சோலை மலைநாட ! என்றும்
குரங்கினுள் நன்முகத்த இல் 1161

**குறிப்புரை :**

நீசர் = தாழ்ந்தோர். குரங்குகளுள் நல்லமுகம் உடைய தில்லாமை போலக் கயவருள் தேடினும் பண்புடையாரைக் காணுதல் அரிது என்பதாம்.

[நேரிசை வெண்பா]

2 பெருமலை நாட ! பிறரறிய லாகா
அருமறை யை ஆன்றோரே காப்பர் — அருமறையை
நெஞ்சிற் சிறியார்க் குரைத்தல் பனையின்மேல்
பஞ்சிவைத் தெஃகுவிட் டற்று 1162

**குறிப்புரை :**

அருமறை = இரகசியம் ஆன்றோர் = சான்றோர் சிறியோர் = கயவர் பனைமரத்தில் பஞ்சியை வைத்து அதன்மேல் அம்பு எய்தலை ஒக்கும் சிறியவரிடம் இரகசியத்தைச் சொல்லுதல்.

[இன்னிசை வெண்பா]

3 அல்லவை செய்குப அல்லாப்பின் அல்லாக்கால்
செல்வ தறிகிலராகிச் சிதைந்தெழுவார்
கல்லாக் கயவர் இ[illegible]கை நரியிற்கூண்
நல்யாண்டும் தீயாண் டு[illegible] 1163

**குறிப்புரை :**

அல்லாப்பின் = வறுமையுற்றால் அல்லாக்கால் = அவ்வாறன்றிச் செல்வமுற்றால் சிதைந்து = அறத்திற்கு மாறுபட்டு எழுவார் = ஒழுகுவார் ஊண் = உணவு நல்யாண்டு = நல்லபொழுது தீயாண்டு = கெட்டபொழுது.

[நேரிசை வெண்பா]

4 கருந்தொழிலர் ஆய கடையாயார் தம்மேல்
பெரும்பழி ஏறுவ பேணார் — இரும்புன்னை
புன்புலால் தீர்க்கும் துறைவ ! மற் றஞ்சாதே
தின்ப தழுவ தன்கண் 1164

**குறிப்புரை :**

கருந்தொழில் = கொடிய செய்கைகள்
கடையாயார் = கயவர் ஏறுவ = வந்துறுதலை
பேணார் = பொருட்படுத்தமாட்டார் தின்பதழுவதன்
கண் = உண்ணவிரும்புவது உண்ணப்படும் பொருள்
துன்புறுமிடத்து.

5 உரிஞ்சி நடப்பாரை உள்ளடி நோவ
நெருஞ்சியும் செய்வ தொன் றில்லை — செருந்தி
இருங்கழித் தாழும் எறிகடல் தண் சேர்ப்ப
பெரும்பழியும் பேணாதார்க் கில் 1165

**குறிப்புரை :**

அறத்தைப் பேணாதவர் பழியைப்பற்றி எண்ணமாட்டார்
என்பது.
உரிஞ்சி = தேய்த்து நெருஞ்சி = நெருஞ்சிமுள்
செருந்தி = செருந்தி மரம்.

[இன்னிசை வெண்பா]

6 மிக்குப்பெருகிப் பெரும் புனல் பாய்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா ஒலிகடல் போல் மிக்க
இனநலம் நன்குடைய வாயினும் என்றும்
மனநலம் ஆகாவாம் கீழ் 1166

குறிப்புரை :

கடல் பெருகினாலும் உப்புமாறாது அதுபோலக் கயவர் நல்லினத் தாரோடு சேரினும் மனநலம்பெறார் என்பது.
கீழ் = கயவர்

[நேரிசை வெண்பா]

7 தேர்ந்துகண் ணோடாது தீவினையும் அஞ்சலராய்ச்
சேர்ந்தாரை யெல்லாம் சிறிதுரைத்துத் — தீர்ந்த
விரகர்கட் கெல்லாம் வெறுப்பனவே செய்யும்
நரகர்கட் கில்லையோ நஞ்சு 1167

குறிப்புரை :

கண்ணோடாது = இரக்கங்காட்டாமல் சிறிதுரைத்து = இழிவாகப் பேசி விரகர் = மேலானவர் நரகர் = கயவர்.

8 யாம்தீய செய்த மலைமறைத்த தென்றெண்ணித்
தாம்தீயார் தந்தீமை தேற்றாரால் — ஆம்பல்
மணவிற் கமழும் மலிதிரைச் சேர்ப்ப!
கணையிலும் கூரியவாம் கண். 1168

[பழமொழி]

குறிப்புரை :

தீய = தீயசெயல்களை மறைத்தது = வெளிக்காட்டாமல் மறைத்தது அதுபோலத் தீயவர் தம் தீமையைத் தெளிய மாட்டார்.
கணை = அம்பு கூரிய = கூர்மையானது.

9 பெருநடை தாம்பெறினும் பெற்றி பிழையாது
ஒருநடையர் ஆகுவர் சான்றோர் — பெருநடை
பெற்றக் கடைத்தும் பிறங்கருவி நன்னாட
வற்றாம் ஒருநடைக் கீழ் 1169

குறிப்புரை :

பெருநடை = பெருஞ்சிறப்பு, பெருமிதம் பெற்றி = தன்மை
பெற்றக் கடைத்தும் = பெற்ற இடத்தும் வற்றாம் = வல்லமை
உடையதாம். கீழ் = கீழ்மக்கள்

10 சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச்சொல் — எக்காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேல் கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும் 1170

குறிப்புரை :

சக்கரச் செல்வம் = ஆணை செலுத்தும் அரசச் செல்வம்
விழுமியோர் = மேலானவர் மிகுதிச் சொல் = பழிச்சொல்
காணி = காணியளவு கீழ் = கீழ்மக்கள்
எண்ணிவிடும் = கருதிக்கொள்ளும்.

[இன்னிசை வெண்பா]

11 மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினும் செருப்புத்தன் காற்கேயாம்
எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும் 1171

குறிப்புரை:

மைதீர் = குற்றந்தீர்ந்த மாண்டமணி = மாட்சிமைப்பட்ட
இரத்தினங்கள் செருப்பு = காலணி கீழ்களை = கீழ்
மக்களை காணப்படும் = காணலாம்.

12 கடுக்கெனச் சொல்வற்றும் கண்ணோட்ட மின்றும்
இடுக்கண் பிறர்மாட் டுவக்கும் — அடுத்தடுத்து
வேகம் உடைத்தாம் விறன்மலை நன்னாட!
ஏகுமாம் எள்ளுமாங் கீழ் 1172

**குறிப்புரை :**

கடுக்கென = கடுமையாக சொல்வற்றும் = சொல்லவல்ல தாகும் பிறர்மாட்டுவக்கும் = பிறரிடம் நேருதலைக் கண்டு மகிழ்ச்சியுறும் எள்ளும் = பழித்துக் கூறும் கீழ் = கீழ் மகன்.

13 கணமலை நன்னாட! கண்ணின் றொருவர்
குணனேயுங் கூறற் கரிதால் — குணனழுங்கக்
குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்
கெற்றால் இயன்றதோ நா 1173

**குறிப்புரை :**

கண்ணின்று = கண்ணோட்டமின்றி அழுங்க = கெட
எற்றால் = எப்பொருளால் இயன்றது = அமைந்தது
நா = நாக்கு.

[நேரிசை வெண்பா]

14 தளிர்மேலே நிற்பினும் தட்டாமல் செல்லா
உளிநீரர் மாதோ கயவர் — அளிநீராக்
கென்னானும் செய்யார் எனைத்தானும் செய்பவே
இன்னாங்கு செய்வார்ப் பெறின் 1174

**குறிப்புரை :**

தளிர் = மெல்லிய இலைகள் தட்டாமல் = கிழிக்காமல்
உளிநீரர் = தச்சனது உளியை ஒப்பவர்
இன்னாங்கு = துன்பம் பெறின் = பெற்றால்.

15 ஒருநன்றி செய்தவர்க் கொன்றி எழுந்த
பிழை நூறும் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்கு
எழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்
எழுநூறுந் தீதாய் விடும். 1175

[நாலடியார்]

**குறிப்புரை ;**

ஒன்றிஎழுந்த ஒருசேர வந்த பிழை = குற்றம்
ஒன்று = ஒருசெயல்.

16 ஐங்குரவர் ஆணை மறுத்தலும் ஆர்வுற்ற
எஞ்சாத நட்பினுள் பொய்வழக்கும்—நெஞ்சமர்ந்த
கற்புடை யாளைத் துறத்தலும் இம்மூன்றும்
நற்புடையி லாளர் தொழில். 1176

**குறிப்புரை :**

ஐங்குரவர் = தாய், தந்தை, ஆசிரியன், அரசன், தெய்வம்.
ஆணை = கட்டளை துறத்தல் = நீக்கிவிடுதல்.
நற்புடை = நற்பண்பு தொழில் = செயல்கள்.

17 நன்றிப் பயன்தூக்கா நாணிலியும் சான்றோர்முன்
மன்றில் கொடும்பா டுரைப்பானும் நன்றின்றி
வைத்த அடைக்கலங் கொள்வானும் இம்மூவர்
எச்சம் இழந்து வாழ் வார். 1177

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

நாணிலி = நாணமில்லாதவர் கொடும்பாடு = கொடிய
செய்திகள் அடைக்கலம் = அடைக்கலப் பொருள்
எச்சம் = வழிமரபு.

18 மாசுபடினும் மணிதன்சீர் குன்றாதாம்
பூசிக்கொளினும் இரும்பின்கண்—மாசொட்டும்
பாசத்துள் இட்டுவிளக்கினும் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும். 1178

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

மாசு = தூசு. மணி = வயிரம் முதலிய மணிகள்
சீர் = சிறப்பு பூசிக்கொளினும் = கழுவி வைத்தாலும்
மாசு = துரு. பாசம் = அன்பு கீழ் = கீழ்மக்கள்
மாசுடைமை = குற்றமுடைமை.

19 பாற்புண்ட நீரெல்லாம் நஞ்சம் பசுவுண்ட
தேம்படு தெண்ணீர அமிர்தமாய்—ஓம்பும்
ஒளியாம் உயர்ந்தார்கண் ஞானம் அதுவே
களியாம் கடையாயார் மாட்டு. 1179

**குறிப்புரை :**

நஞ்சம் = விடம் அமிர்தம் = பாலாகிய அமிழ்தம்
ஞானம் = அறிவு களி = மயக்கம் மாட்டு = இடத்து.

## அதிகாரம்—63

## பல்பொருள்

சிறப்பாக வகுத்துக் கூறப்பட்ட பொருள்களல்லாமல் எஞ்சிய பல பொருள்களின் இயல்புகளைச் சுருங்க எடுத்துக்கூறுதலான் இவ் அதிகாரம் பல்பொருள் எனப்பட்டது.

[இன்னிசை வெண்பா]

1 கண்ணிற் சிறந்த உறுப்பில்லை, கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை—மக்களின்
ஒண்மைய வாய்சான்ற பொருளில்லை ஈன்றாளின்
என்ன கடவுளும் இல். 1180

குறிப்புரை:

கொண்டான் = கணவன் கேளிர் = உறவினர் மக்கள் = புதல்வர் சான்ற = சால்புடைய ஈன்றாள் = ஈன்றெடுத்த தாய். இல் = இல்லை.

2 நலனும் இளமையும் நல்குரவின் கீழ்ச்சாம்
குலனும் குடிமையும் இல்லாமைக்கீழ்ச்சாம்
வளமில் குளத்தின்கீழ் நெல்சாம், பரமல்லாப்
பண்டத்தின் கீழ்ச்சாம் பகடு. 1181

குறிப்புரை:

நல்குரவு = வறுமை சாம் = செத்துவிடும் நெல் = நெற்பயிர் பரமல்லாப் பண்டம் = தாங்குதற்கரிய பாரமாக வைத்த பண்டங்கள். பகடு = வண்டியை இழுத்துச் செல்லும் எருதுகள்.

3 நல்லார்க்கும் தம்மூரென் றூரில்லை நன்னெறிச்
செல்வார்க்கும் தம்மூரென் றூரில்லை அல்லாக்
கடைகட்கும் தம்மூரென் றூரில்லை தம்கைத்து
உடையார்க்கும் எவ் வூரும் ஊர். 1182

குறிப்புரை:

நல்லோர், நன்னெறியாளர் கயவர் இவர்கட்கு யாவும் தம் ஊர்களைப் போல்வதாகும். கைப்பொருள் உடையவர்க்கு எல்லாம் தம்மூர் போன்றனவாம்.

4 பெருக்குக நட்டாரை நன்றின்பால் வைத்து
திருக்குக ஒட்டாரைக் காலம் அறிந்தே,
அருக்குக யார்மாட்டும் உண்டி, சுருக்குக
செல்லா இடத்துச் சினம். 1183

**குறிப்புரை :**

பெருக்குக = மிகுதியாக்குக நட்டாரை = நட்புப்பூண்டாரை
தருக்குக = தேய்த்து விடுக ஒட்டாரை = பகைவரை
அருக்குக = குறைத்திடுக உண்டி = உண்ணுதலை
சுருக்குக = அடக்குக சினம் = வெகுளி.

5 **எள்ளற்க என்றும் எளியரென்று என்பெறினும்**
**கொள்ளற்க கொள்ளார்கை மேற்பட, உள்சுடினும்**
**சீறற்க சிற்றில் பிறந்தாரை, கூறற்க**
**கூறல்ல வற்றை விரைந்து.** 1184

**குறிப்புரை :**

எள்ளற்க = இகழாதொழிக கொள்ளார் = பகைவர்
சுடினும் = வெகுண்டாலும் சீறற்க = சினவாதிருக்க
கூறல்லவற்றை = கூறத்தகாதவற்றை.

6 **திருவொக்குந் தீதில் ஒழுக்கம், பெரிய**
**அறனொக்கும் ஆற்றின் ஒழுகல், பிறனைக்**
**கொலை ஒக்கும் கொண்டுகண்மாறல், புலைஒக்கும்**
**போற்றாதார் முன்னைச் செலவு.** 1185

**குறிப்புரை :**

திருவாக்கும் = செல்வத்தைப் பெருக்கும்
ஆற்றின் = அறநெறியின் கண்மாறல் = கண்ணோட்டஞ்
செய்யாது நீங்குதல் போற்றாதார் = விரும்பாதவர்.

7 **இன்னாமை வேண்டின் இரவெழுக தன்னொடு**
**மன்னுதல் வேண்டின்இசைநடுக தன்னொடு**
**செல்வது வேண்டின் அறஞ்செய்க வெல்வது**
**வேண்டின் வெகுளி விடல்.** 1186

**குறிப்புரை :**

இன்னாமை = துன்பம் இரவு இரத்தல் எழுக = முற்படுக
மன்னுதல் நிலைபெறுதல் இசை = புகழ் நடுக = நாட்டுக
வேண்டின் = விரும்பினால் விடல் = நீக்கிவிடுக.

8 மனைக்குப்பாழ் வாணுதலின்மை தான்செல் லும்
திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை, இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை, தனக்குப்பாழ்
கற்றறி வில்லா வுடம்பு. 1187

**குறிப்புரை :**

வாணுதல் = கற்புடைய மனைவி நட்டோர் = நண்பினர்
மூத்தோர் = அறிவான் முதிர்ந்தோர் பாழ் = பயன்படாது
ஒழிதல்.

9 அந்தணரின் மிக்க பிறப்பில்லை, என்செயினும்
தாயிற் சிறந்த தமரில்லை யாதும்
வளமையோ டொக்கும் வனப்பில்லை எண்ணின்
இளமையோ டொப்பதூஉ மில். 1188

**குறிப்புரை :**

பிறப்பு = குலம் தமர் = சுற்றம் வனப்பு = அழகு
இளமை = இளமைப் பருவம்.

10 கொடுப்பின் அசனங்கொடுக்க, விடுப்பின்
உயிரிடையிட்ட விடுக்க எடுப்பின்
கிளையுள் அழிந்தார் எடுக்க கெடுப்பின்
வெகுளி கெடுத்து விடல். 1189

**குறிப்புரை :**

அசனம் = நன்னீர் இடையிட்ட = துன்பந் தருபவை
எடுப்பின் = துணையாகிப் பேணின் அழிந்தார் = வறுமை
யுற்றார் வெகுளி = சினம்.

11 கல்லா ஒருவற்குத் தம்வாயின் சொல்கூற்றம்
மெல்லிலை வாழைக்குத் தானீன்ற காய் கூற்றம்
அல்லவை செய்வார்க்கு அறங்கூற்றம் கூற்றமே
இல்லிருந்து தீங்கொழுகு வாள். 1190

**குறிப்புரை :**

கூற்றம் = உயிரை மாய்க்கும் யமன் அல்லவை = அறத்திற்கு மாறானவை தீங்கு = தீய ஒழுக்கம்.

12 இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்
கிளைஞரில் போழ்தில சினங்குற்றம் குற்றம்
தமரல்லார் கையகத்து ஊண். 1191

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை:**

கல்லாமை = நல்ல நூல்களையும் கலைகளையும் பயிலாமை வள்ளன்மை = கொடை செய்தல் சினம் = வெகுளுதல் தமர் = தம்மவர் ஊண் = உணவுண்ணுதல்.

[நேரிசை வெண்பா]

13 கரப்பவர் நீர்மைத்தாய் நண்பகலிற் றோன்றல்
இரப்பவர்கண் தேய்வேபோல் தோன்றல்—
இரப்பவர்க்கொன்று
ஈவார் முகம்போல் ஒளிவிடுதல் இம்மூன்றும்
ஓவாதே திங்கட் குள. 1192

**குறிப்புரை:**

கரப்பவர் = மறைந்தொழுகுபவர் தேய்வு = மெலிவு திங்கள் = விண்ணிலவு உள = காணும் குணங்களாம்.

[இன்னிசை வெண்பா]

14 ஈதற்குச் செய்க பொருளை அறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை யாதும்
அருள்புரிந்து சொல்லுக சொல்லை இம்மூன்றும்
இருளுலகம் சேராத ஆறு. 1193

**குறிப்புரை :**

செய்க = ஈட்டுக செய்க = எழுதிஅருளுக புரிந்து = விரும்பி இருளுலகம் = நரகம் ஆறு = நெறி.

15 செந்தீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும்
வெஞ்சின வேந்தன் முறைநெறிபாற் சேர்தலும்
பெண்பால் கொழுநன் வழிச்செலவும் இம்மூன்றும்
திங்கள் மும் மாரிக்கு வித்து 1194

**குறிப்புரை :**

செந்தீ முதல்வர் = அந்தணர் நெறிமுறை = செங்கோல் முறை பெண்பால் = மனையாள் மாரிக்கு = மழைக்கு வித்து = காரணம்.

16 கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூவர்
வல்லே மழையறுக்கும் கோள். 1195

**குறிப்புரை :**

கொள்பொருள் = வரிப்பொருள் அலைக்கும் = இல்லாமற் செய்யும் கோள் = தீக்கோள்.

[நேரிசை வெண்பா]

17 பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும், பேணார்
திறன்வேறு கூறின் பொறையும் — அறவினையைக்
காராண்மை போல ஒழுகலும் இம் மூன்றும்
ஊராண்மை என்னும் செருக்கு. 1196

**குறிப்புரை :**

பேணுங்கால் = புகழுமிடத்து பேணார் = பகைவர் பொறை = பொறுத்தல் காராண்மை = பயிர்த்தொழில் செருக்கு = பெருமிதம்.

[இன்னிசை வெண்பா]

18 கணக்காய ரில்லாத ஊரும் பிணக்கறுக்கும்
மூத்தோரை இல்லா அவைக்களனும் பாத்துண்ணுத்
தன்மையிலாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்த லில. 1197

**குறிப்புரை :**

கணக்காயர் = நல்லாசிரியன்மார் மூத்தோர் = அறிவுடைய சான்றோர் பாத்துண்ணு = பகுத்தளித்து உண்ணாத அயலிருப்பு = பக்கத்தவராய் இருத்தல்.

[நேரிசை வெண்பா]

19 பொருளில் ஒருவற்கு இளமையும் போற்றும்
அருளில் ஒருவற் கறனும் — தெருளான்
திரிந்தாளும் நெஞ்சினாள் கலவியும் இம்மூன்றும்
பரிந்தாலும் செய்யா பயன். 1198

[திரிகடுகம்]

**குறிப்புரை :**

பொருள் = செல்வம் அறம் = தவம் திரிந்தாளும் = மாறான கருத்தினைக் கொள்ளும் பரிந்தாலும் = போற்றினாலும்.

20 மனைக்குவிளக்கம் மடவாள், மடவாள்
தனக்குத் தகைசால் புதல்வர் — மனக்கினிய
காதல் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்கும்
ஓதின் புகல்சா லுணர்வு 1199

[நான்மணிக்கடிகை]

**குறிப்புரை :**

விளக்கம் = ஒளி மனக்கு = மனத்திற்கு ஓதின் = சொல்லப் புகின் உணர்வு = அறிவு.

21 பெரியார் பெருமை சிறுதகைமை ஒன்றிற்கு
உரியார் உரிமை யடக்கம் — தெரியுங்கால்
செல்வம் உடையாரும் செல்வரே தற்சேர்ந்தார்
அல்லல் களைப வெனின் 1200

குறிப்புரை:

சிறுதகைமை = பணிவு தற்சேர்ந்தார் = தன்னை அடைந்தவர் அல்லல் = துன்பம், வறுமை களைப எனின் = நீக்குவாராயின்.

22 தெளிவிலார் நட்பின் பகைநன்று சாதல்
விளியா அருநோயின் நன்றால் — அளிய
இகழ்தலின் கோறல் இனிதே மற்றில்ல
புகழ்தலின் வைதலே நன்று. 1201

[நாலடியார்]

குறிப்புரை:

தெளிவு = உறுதி விளியா = நீங்காத அருநோய் கொடிய நோய் அளிய = வருந்த கோறல் = கொன்று விடுதல் இல்ல புகழ்தல் = செய்யாதனவற்றைச் சொல்லிப் பாராட்டுதல்.

[அறுசீர் விருத்தம்]

23 அற்றவர் வருத்தம் நீக்கி
ஆருயிர் கொண்டுநிற்கும்
துற்றவி ழீதல் செம்பொன்
துறக்கத்திற் கேணியாகும்
முற்றுயிர் ஓம்பித்தீந்தேன்
ஊனொடு துறப்பின்யார்க்கும்
மற்றுரை இல்லை மண்ணும்
விண்ணும் நும்மடிய வன்றே. 1202

[சீவகசிந்தாமணி]

**குறிப்புரை :**

அற்றவர் = இல்லாதவர் துற்றவிழ் = உண்ணும் உணவு ஏணி = வழி முற்றுயிர் = எல்லா உயிரையும் ஓம்பி = பாதுகாத்து தேனூனெடு துறப்பின் = தேனையும் புலாலையும் துறந்துவிடின் உரையில்லை = அறவுரை வேறில்லை அடிய = அடியிடத்தனவாகும்.

## அதிகாரம்—64

# நிரைகோடல்

நிரைகோடலாவது: கோல்கோடி அறத்தின் வழுவிய மன்னரைவென்று அந்நாட்டு மக்களைக்காத்தல் வேண்டிப் போர் மேற்செல்லும் வேந்தர் முதற்கண் அந்நாட்டின்கண் உள்ள ஆனிரைகளைக் காத்தல் வேண்டி அவைகளைக் கவர்ந்து கொள்ளுதலாம். போர்செய்து பகையை வென்று குடிகளைக்காத்தல் அரசியல் அறமாதலின் அப்போர் முறைகள்யாவும் பொருளாய் அடங்கும். அதனால் இவ் அதிகாரம் முதல் வெட்சிமுதலாகிய பொருள் மரபு கூறப்படுகின்றது.

[நேரிசை வெண்பா]

1 மண்டு மெரியுள் மரந்தடிந் திட்டற்றாற்
கொண்டகொடுஞ்சிலையன் கோல்தெரியக்—கண்டே
அடையார் முனையலற ஐயிலை வேற்களாய்
விடையாயங் கொள்கென்றான் வேந்து. 1203

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

மண்டும் எரி = மிக்கெரியும் நெருப்பு தடிந்து = வெட்டி கோல் = அம்பு தெரியக்கண்டு = ஆராய்ந்து கொள்ளுதலைப் பார்த்து அடையார் = பகைவர் முனை = போர்முனை இலைவேல் = இலை வடிவமைந்த வேல் விடை = ஆனிரை

2 வெவ்வாள் மறவர் மிலைச்சிய வெட்சியால்
செவ்வானம் செல்வதுபோற் செல்கின்றார்
—எவ்வாயும்
ஆர்க்குங் கழலொலி யாங்கட் படாலியரோ
போர்க்குந் துடியொடு புக்கு. 1204

**குறிப்புரை :**

மிலைச்சிய = சூடிய வெட்சி = வெட்சிப் பூ எவ்வாயும் = எல்லா இடங்களிலும் ஆர்க்கும் = ஒலிக்கும் துடி = துடிப்பறை புக்கு = புகுந்து.

3 வாள்வலம் பெற்ற வயவேந்த னேவலாற்
றாள்வல் இளையவர் தாஞ்செலின்—நாளைக்
கனைகுரல் நல்லாத்தன் கன்றுள்ளப் பாலால்
நனைவது போலும் நம் ஊர். 1205

**குறிப்புரை :**

வலம்பெற்ற = வெற்றிபெற்ற வய = வெற்றி தாள்வல் = முயற்சியால் வலிய இளையவர் = வீரர் நல்லா = நல்ல பசுக்கூட்டம் உள்ள = நினைக்க.

4 வந்தநிரையின் இருப்பும் மணியுடன்
எந்தலை நின்றலை யாந்தருதும்—முந்து நீ
மற்றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக்
கொற்றவை! கொற்றங் கொடு. 1206

[பெரும்பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

வந்தநிரை = வென்று கவர்ந்து கொண்டு வந்த பசுக்கள் நிரை = ஆனிரைகள் எந்தலை = எம் தலைகளை நின்றலை = உன்னிடத்து கொற்றவை = காளிதேவி.

[ஆசிரியப்பா]

5 நாளும் புள்ளும் கேளா ஊக்கமோ
டெங்கோன் எயினன் ஆதலின் யாமத்துச்
செங்கால் வெட்சியும் தீனையும் தூஉய்
மறிக்குரல் குருதி மன்றுதுகள் அவிப்ப
விரிச்சி ஓர்தல் வேண்டா
எயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே. 1207

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

நாளும் = நன்ளுளும் புள்ளும் = பறவை நிமித்தமும்
எயினன் = அம்பெய்யும் வீரன் தூஉய் = தூவி. மறி = ஆடு
துகள் = புழுதி விரிச்சி = நற்சொல் எயில் = மதில்
தருதும் = கொண்டுவந்து தருவேம் நிரை = பசுக்கூட்டம்.

[நேரிசை வெண்பா]

6 திரைகவுள் வெள்வாய் திரிந்துவீழ் தாடி
நரைமுதியோன் நின்றுரைத்த நற்சொல் -நிரையன்றி
எல்லைநீர் வையம் இறையோற் களிக்குமால்
வல்லையே சென்மின் வழி. 1208

**குறிப்புரை :**

திரைகவுள் = திரைந்தகபோலம்
நரைமுதியோன் = பெரியோன் நீர் = கடல்
வையம் = உலகம் வல்லை = விரைவாக.

7 பிறர்புல மென்னர் தமர்புல மென்னர்
விறலவெய்யோர் வீங்கிருட்கண் சென்றார்-நிறையும்
கடாஅஞ் செருக்கும் கடுங்களி யானை
படாஅம முகம்படுத் தாங்கு. 1209

[பெரும்பொருள்விளக்கம்]

[பரிபாடல்]

13 மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர், பூவின்
இதழகத் தனைய தெருவம் இதழகத்து
அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண்பறவை யனையர் பரிசில் வாழ்நர்
பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப
ஏமஇன் றுயில் எழுதல் அல்லதை
வாழிய வஞ்சியும் கோழியும் போலக்
கோழியின் எழாதுஎம் பேரூர் துயிலே. 862

குறிப்புரை :

மாயோன் = திருமால் கொப்பூழ் = உந்தி புரையும் = ஒக்கும் தெருவம் = தெருக்கள் பொகுட்டு = தாமரை மகரந்த மொக்கு தாது = மகரந்தம் பறவை = புரு பூவினுட் பிறந்தோன் நான்முகன். கேள்வி = சுருதிகள் ஏம - இனிய கோழி = உறையூர்

[பரிபாடல் உறுப்பு வெண்பா]

14 தண்டமிழ் வேலித் தமிழ்நாட் டகமெல்லாம்
நின்று நிலைஇப் புகழ்பூத்த லல்லது
குன்றுதல் உண்டோ மதுரைகொடித் தேரான்
குன்ற முண்டாகும் அளவு. 863

குறிப்புரை :

குன்றுதல் = பெருமை குறைதல் கொடித்தேரான் = பாண்டிய மன்னன் குன்றம் = திருப்பரங்குன்றம்

15 ஈவாரைக் கொண்டாடி ஏற்பாரைப் பார்த்துவக்கும்
சேய்மாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றும்
வாழ்வாரே வாழ்வார் எனப்படுவார் மற்றையார்
போவாரார் புத்தே ளுலகு. 864

குறிப்புரை:

உவக்கும் = மகிழும் சேய் = உயர்ந்து நீண்ட
புத்தேளுலகு = தேவருலகம்

16 செய்யாட் கிழைத்த திலகம்போல் சீர்க்கொப்ப
வையம் விளங்கிப் புகழ்பூத்த லல்லது
பொய்யாதல் உண்டோ மதுரை புனைதேரான்
வையையுண் டாகு மளவு 865

குறிப்புரை :

செய்யாள் = திருமகள் இழைத்த = அணிசெய்த
வையை = வையைநதி. உண்டாகுமளவு = இருக்கும்
கால அளவு

17 கார்த்திகை காதில் கனமகர குண்டலம்போல்
சீர்த்து விளங்கித் திருப்பூத்த லல்லது
கோத்தை உண்டாமோ மதுரை கொடித் தேரான்
வார்த்தை யுண்டாகு மளவு. 866

[பரிபாடலுறுப்பு]

குறிப்புரை :

கார்த்திகை = கார்த்திகைப் பூ கோத்தை = குற்றம்
வார்த்தை = வாய்மொழி - நீதிமொழி

குறிப்புரை :

பிறர்புலம் = பகைவரது ஊர் என்னூர் = என்று கருதார்
விறல் = வெற்றி வெய்யோர் = விரும்புபவர்
கடாஅம் = மதநீர் படாஅம் = முகபடாம்.

8 சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலைகொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார், விடக்குணியத்—தாழ்ந்த
குலவுக் கொடுஞ்சிலைக்கைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழிபோய்ப் புள். 1210

குறிப்புரை :

வீழ்ந்தார் = இறந்துபட்டோர் விடக்கு = உடம்பின் தசை
உணிய = உண்ணுதற்காக கொடுஞ்சிலை = வில்
கணை = அம்பு புள் = கழுகு முதலிய பறவைகள்.

9 புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்
வின்மே லசைஇயகைவெல்கழலான் — தன்மேற்
கடுவரை நீரிற்கடுத்து வரகண்டும்
நெடுவரை நீழல் நிரை. 1211

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

அசைஇ = இளைப்பாறி அசைஇயகை = வைத்த கை
கடுவரை நீர் = மலையினின்று விரைந்து வரும் வெள்ளம்
கடுத்து = சினந்து நிரை = பசுக்கூட்டம்.

[ஆசிரியப்பா]

10 சிறுபுனம் சில்லென் நெடுவளியாற
மரம்பயில் தானத்துப் பரற்புறங்கொண்ட
அடியர் நெடுநெறிச் செல்வா யுடையது
முல்லை வருந்திற் போகிப் புல்லருந்திக்
கானியாற்றுத் தெண்ணீர் பருகாமுற்
கன்று பாலருந்துபுக் கென்றன மாதோ
முன்பல் லரும்பிய பால்நாறு செவ்வாய்ப்
புன்றலை மகாஅர்த் தந்த
கன்றுசூழ் கடிமனை கவைஇய நிரையே. 1212

[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

புனம் - கொல்லைக்காடு நெடுவளி = நீண்ட காற்று
ஆற = குறைவு படாமல். பரல் = சிறு கற்கள்
நெறி = வழி புல்லருந்தி = புல்லை மேய்ந்து பருகாமுன் =
அருந்தா முன்னர் அரும்பிய = முளைத்த
மகாஅர் = சிறுவர்கள் கவைஇய = கட்டப்பெற்றன.

[நேரிசை வெண்பா]

11 அங்கட் கிணையன் துடியன் விறலி பாண்
வெங்கட்கு வீசும் விலையாகும் — செங்கட்
செருச்சிலையா மன்னர்செருமுனையிற்சீறி
வரிச்சிலையாற் றந்த வளம். 1213

[புறப்பொருள்வெண்பாமாலை]

**குறிப்புரை :**

அங்கண் = அழகியகண் கிணையன் = பறைகொட்டுபவன்
பாண் = பாணன் வீசும் = கொடுக்கும் செரு = போர்
வரிச்சிலை = வரிந்து கட்டப்பெற்ற வில் வளம் = ஆனிரை
செல்வங்கள்.

## அதிகாரம்—65

# நிரைமீட்சி

நிரைமீட்சியாவது : வெட்சிமறவர் கவர்ந்து சென்ற ஆனிரைகளைக் கரந்தை மறவர் மீட்டுவருதலாம்.

[நேரிசை வெண்பா]

1 அழுங்கல்நீர் வையகத்து ஆருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடு கொண்டற்றால்—செழுங்குடிகள்
தாரார் கரந்தை தலைமலைந்து தாங்கோடல்
நேரார்கைக் கொண்ட நிரை 1214

**குறிப்புரை :**

அழுங்கல் = ஆரவாரம் கூற்றம் = யமன்
வீடுகொண்டற்றல் = விட்டுவிட்டதை ஒக்கும் தார் = மாலை
கரந்தை = கரந்தைப் பூ மலைந்து = போரிட்டு
நேரார் = பகைவர்.

2 அடியதி ரார்ப்பினர் ஆபெயர்த்தற் கன்றாய்
கடிய மறவர் கதழ்ந்தார் — மடிநிரை
மீளாது மீளார் விறல் வெய்யோர் யாவாங்கொல்
வாளார் துடியர் வளம் 1215

**குறிப்புரை:**

கடிய = மிக்க கதழ்ந்தார் = விரைந்து சென்றார்
மடி = பால்மடி மீளார் = திரும்பமாட்டார்
வாளார் = வாட்படையாளர் வளம் = ஆனிரை.

3 கங்கை பரந்தாங்குக் கானப் பெருங்கவலை
எங்கும் மறவர் இரைத் தெழுந்தார் — தங்கிளை கண்
மன்றுகாண் வேட்கை மடிசுரப்பத்தோன் றுவ
கன்றுகாண மெய்குளிர்விற் கண்டு 1216

[பெரும்பொருள்விளக்கம்]

குறிப்புரை :

பரந்தாங்கு = பெருக்கெடுத்துப் பாய்ந்தது போல
கவலை = கவர்த்தவழிகள் இரைத்து = ஆரவாரித்து
மன்று = கொட்டில் மெய்குளிர்விற்கண்டு = உடம்பு குளிர்ச்சியடையும் வண்ணம் பார்த்து.

[ஆசிரியப்பா]

4 இருநில மருங்கின் எப்பிறப் பாயினும்
மருவின் மாலையோ இனிதே இரவின்
ஆகோள் மள்ளரும் அளவாக் கானத்து
நாம்புறத் திறுந்தன மாகத் தாம்தம்
கன்று குரல் கேட்டன போல
நின்று செவி யேற்றன சென்றுபடுநிரையே 1217

[தகடூர்யாத்திரை]

குறிப்புரை:

இருநிலம் = உலகம் மாலை = தன்மை மள்ளர் = வீரர்
அளவா = உலவாத கானம் = காடு புறத்து = வெளியே.
இறுந்தனமாக = தங்கியிருந்தேமாக ஏற்றன = கேட்டன.

[நேரிசை வெண்பா]

5 உரைப்பினது வியப்போ ஒன்னார்கைக் கொண்ட
நிரைப்பின் நெடுந்தகை சென்றான்—புரைப்பின்
றுளப்பட்டவ ரெல்லாம் ஒன்வாள் கவரக்
களப்பட்டான் தோன்றான் கரந்து 1218

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

உரைப்பின் = கூறினல் ஒன்னர் = பகைவர்
புரைப்பின்று = ஒப்பின்றி வாள்கவர = வாட்படை கவர்ந்து கொள்ள களம் = போர்க்களம் கரந்து = மறைந்து

6 கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின்
மிடல்பெரி தெய்தின பாதோ — தொடலைக்
கரந்தை மறவர் கருதார் குழாஅம்
துரந்து நிரை மீட்ட தோள் 1219

**குறிப்புரை :**

காரேனம் = கரும்பன்றி கோட்டின் = கொம்புபோல
மிடல் = வலிமை தொடலை = மாலை கருதார் - பகைவர்
குழாஅம் = கூட்டம் துரந்து = வென்றோடச்செய்து

[இன்னிசை வெண்பா]

7 கல்கெழு சீறூர்க் கடைகாண விரும்பினேன்
மெல்ல நடவா விரையும் நிரையென்னே
தெள்ளறல் கானியாற்றுத் தீநீர் பருகவும்
மள்ளர் நடவா வகை. 1220

**குறிப்புரை :**

கல் = மலைப்பாறைகள் கடை = முடிவு நடவா =
நடந்து தெள்ளறல் = தெளிந்து ஓடும் நீர் தீநீர் =
இனிய நீர்

[நேரிசை வெண்பா]

8 காட்டகஞ் சென்றுயிர் போற்றுன் கடுஞ்சுரையான்
மீட்டமகனை விளவுறுன் — ஓட்டந்து
தன்னெதிர் தோன்றும் புனிற்றுத் தழீஇக்கலுழும்
என்னதுயர் பட்டாயோ என்று 1221

**குறிப்புரை :**

போற்றுன் = பாதுகாவான் சுரை = சுரப்பு ஆன் =
பசு ஓட்டந்து ஓடிச்சென்று புனிற்று - ஈன்றபசு
தழீஇ - தழுவிக்கொண்டு கலுழும் = கண்ணீர்விடும்

9 யாமே பகுத்திட வேண்டா இனநிரை
தாமே தமரை யறிந்தன கொள — ஏமுற
அன்றீன்ற தாயமை அறிந்துகொள கன்றேய்ப்பச்
சென்றீண்டும் ஆங்கவரை பாற்சேர்ந்து 1222

[பெரும்பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

பகுத்திட = பங்கிட்டுத்தர தமரை = தமக்குரியவரை ஏமுற - இன்பமுற ஏய்ப்ப ஒப்ப ஈண்டும் = நெருங்கும்

## அதிகாரம்—66

# பகைவயிற்சேறல்

பகைவயிற் சேறலாவது ; வெட்சிப்போர் நிகழ்த்திய மன்னன் பகைவர் நாட்டைக் கொள்ளக் கருதி வஞ்சி சூடிப்போர் மேற் செல்லுதலாகும். இவ்வதிகாரத்துள் வஞ்சித்திணை பற்றிய மரபுகள் கூறப்படுகின்றன.

[நேரிசை வெண்பா]

1 செங்கண் மழவிடையிற் றண்டிச் சிலைமறவர்
வெங்கள் மகிழ்ந்து விழவயர — அங்குழைய
வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக்
குஞ்சி மலைந்தானெங் கோ 1223

**குறிப்புரை :**

மழவிடை = இளங்காளை சிலைமறவர் = வில்லேந்திய மறவர்கள் விழவயர = விழாக்கொண்டாட வணங்கார் = பகைவர் வணக்கிய வென்று வணங்கச் செய்த குஞ்சி = தலைமுடி கோ = அரசன், தலைவன்

2 முன்னர் முரசிரங்க மூரிக் கடற்றானைத்
துன்னருந் துப்பிற் றொழு தெழா — மன்னர்
உடைநா ளுலந்தனவால் ஓதநீர் வேலிக்
குடைநாளா இறைவன் கொள. 1224

[தகடூர்யாத்திரை]

குறிப்புரை :

இரங்க = ஒலிக்க  மூரி = வலிமை  தானை = படை
துன்னரும் = நெருங்குதற்கரிய  துப்பு = வலிமை
உடைநாள் வாழ்நாள்  உலந்தன = வற்றிப்போயின
ஓதநீர் = கடல்நீர்  வேலி = வேலியாக உடைய உலகம்
இறைவன் = மன்னன்.

3 அறிந்தவர் ஆய்ந்தநாள் ஆழித்தேர் மன்னன்
ஏறிந்தில கொள்வாள் இயக்கம் — எறிந்திகலிப்
பின்பகலே யன்றியும் பேணார் அகநாட்டு
நண்பகலுங் கூகை நகும் 1225

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை:

ஆழி = சக்கரம்  இலகு = விளங்குகின்ற  இகலி = மாறுபட்டு  பேணார் = பகைவர்  கூகை = கோட்டான்.

4 விண்ணசைஇச் செல்கின்ற வேலிளையர்
ஆர்ப்பெடுப்ப
மண்ணசைஇச் செல்கின்றான் வாள்வேந்தன்
— என்னாம்
ஒருபாற் படர்தரக்கண்டு ஒன்னார்தம் உள்ளம்
இருபாற் படுவ தெவன். 1226

குறிப்புரை :

அசைஇ = அசைத்து  ஆர்ப்பு = ஆரவாரம்  நசைஇ = விரும்பி  படர்தர = செல்ல  ஒன்னார் = பகைவர்
எவன் = என்ன காரணம்.

5 போர்ப்படை ஆர்பப் பொடியா எழுமரோ
பார்ப்புர வெண்ணுஞன் கொல பார்வேந்தன்—
ஊர்ப்புறத்து
நில்லாத தானை நிலன் நெளிய நீளிடைப்
புல்லார்மேற் செலலும் பொழுது. 1227
[பெரும்பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

பொடியா = அழிப்பதற்கு. அரோ அசை பார் = உலகம்
புரவு = பாதுகாத்தல் தானை = சேனை நெளிய =
வளைய புல்லார் = பகைவர்.

6 வேத்தமர் செய்தற்கு மேற்செலவான் மீண்டுவந்
தேத்தினர்க் கீந்ததூஉமென் றெண்ணுமோ — பாத்திப்
புடைக்கல மான்தேர் உடனீத்தான் ஈத்த
படைக்கலத்திற் சாலப் பல 1228

**குறிப்புரை :**

வேத்தமர் = வேந்தன் போர் ஏத்தினர் = புகழ்ந்து பாடிய
பாணர் முதலியோர் ஈத்தும் வழங்குவோம் பாத்தி =
பகுந்து மான்தேர் குதிரை பூட்டப்பட்டதேர்
ஈத்தான் = அளித்தான் சால = மிகுதியாக

7 உண்டியின் முந்தான் உடனுண்டான் தண்டேறல்
மண்டி வழங்கி வழீஇயற்கோ — கொண்டி
மறவர் மறலி உயிர் நேர்ந்தார் மன்னர்க்
குறவிலார் கண்ணோடார் ஓர்ந்து 1229
[தகடூர்யாத்திரை]

**குறிப்புரை:**

உண்டியின் முந்தான் = வீரர்கள் உணவுண்ணுமுன் தான்
உண்ணுன் தேறல் = கள் வழீஇயற்கோ =
வழுவியதன் பொருட்டோ கொண்டிமறவர் = பகைவர்
பொருளைக் கொள்ளும் மறவர் மறலி = கூற்றுவன்
நேர்ந்தார் = கொடுத்தார் இது பழிப்பதுபோலப் புகழ்ந்தது.

[ஆசிரியப்பா]

8 அணங்குடை நெடுங்கோட் டளையகம்முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்தல்
ஊன்நசை உள்ளந்துரப்ப இரைகுறித்துத்
தான்வேண்டு மருங்கின் வேட்டெழுந் தாங்கு
வடபுலமன்னர் வாட அடல் குறித்து
இன்னாவெம்போர இயல்தேர் வழுதி
இதுநீ கண்ணியதாயின் இருநிலத்து
யார்கொல் அளியர் தாமே ஊர்தொறும்
மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி
வயலுழை மருதின் வாங்குசினை வழங்கும்
பெருநல் யாணரின் ஒரீஇ, இனியே
கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படுபொதியில்
நரைமுதாளர் நாயிடக் குழிந்த
வல்லின் நலகம் நிறையப் பலபொறிக்
கான வாரணம் ஈனும்
காடாகி விளியும் நாடுடையோரே

[புறநானூறு]

குறிப்புரை :

அணங்கு = தெய்வம் அளை = மலைபிடத்துள்ள முழை முணங்கி நிமிர்வயமான் = முறுக்கி எழும் வேங்கைப் புலி ஒருத்தல் = ஆண்புலி ஊண்நசை = உணவை விரும்பி இரை = உணவு வேட்டெழுந்து = வேட்டையாட எழுந்து வாட = வருந்த அடல் குறித்து = கொன்றுவெல்லக் கருதி வெம்போர் = வெம்போர் வழுதி = பாண்டியன் கண்ணியது = கருதியது அளியர் = இரங்கத்தக்கவர் புலவு = புலால் வாங்குசினை = வளைந்த கிளை யாணர் = புது வருவாய் ஒரீ - நீங்கி கலி = முழக்கம் கந்தம் = தூண்கள் பலி = பூசை பொதியில் = அம்பலம் நாயிட = சூதாடுங் காய்களை இட்டு ஆடியதால் குழிந்த = குழிபட்ட இடங்களில் கானவாரணம் = காட்டுக்கோழிகள் ஈனும் = முட்டையிடும் நாடுடையோர் = கெடும்படியான ஊர்களை உடையோர் ஆவார்.

**அதிகாரம்—67**

## எதிருன்றல்

எதிருன்றலாவது : நாடு கருதி வஞ்சி சூடிப் போரிடவந்த மன்னனைத் தடுத்தற்கு எதிர்த்து நிற்றலாம். எதிர் ஊன்றும் மன்னர் காஞ்சி சூடிப் போரிடுவர் என்பார் புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர்.

[நேரிசை வெண்பா]

1 அருவரை பாய்ந்திறுது மென்பார்பண் டின்றிப்
பெருவரைச் சீறூர் கருதிச்—செருவெய்யோன்
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ
தோஞ்செய் மறவர் தொழில். 1231

**குறிப்புரை :**

அருவரை = அரிய மலை இறுதும் = உயிர் விடுவோம்
பண்டு = முன்னர் கருதி = வெல்ல எண்ணி
செருவெய்யோன் = போரை விரும்பிய தலைவன் காஞ்சி = காஞ்சிப் பூ தோம் = பகைவரை அழிக்கும்செயல்.

2 ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றாலிப்ப
ஐயிலை எஃகம் அலைபலவும்—மொய்யிடை
ஆட்கடி வெல்களிற் றண்ணல் கொடுந்தளித்தான்
வாட்குடி வன்கண் ணவர்க்கு. 1232

**குறிப்புரை :**

களைந்திட்டு = நீக்கி ஆலிப்ப = கூத்தாட எஃகம் = வேற்படை மொய் = போர்க்களம் வாள் = வாட்படை
வன்கண்ணவர் = அஞ்சாத வீரமுடைய மறவர்.

3 உணங்கு புலவறா ஒன்னார் குரம்பை
நுணங்கரில் வெம்முனை நோக்கி—அணங்கிய
குந்தம் மலியும் புரவியான் கூடாதார்
வந்தபின் செல்கென்றான் வாள். 1223

**குறிப்புரை :**

உணங்குபுலவு = உலர்ந்த புலால் உணவு ஒன்னர் = பகைவர் குரம்பை = குடியிருப்பு நுணங்கரில் = புதர் நிறைந்த காடு வெம்முனை = போர்முனை அணங்கிய = வருத்துதற்கு குந்தம் = வேல் கூடாதார் = பகைவர்.

4 பருதிசெல் வானம் பரந்துருகி யன்ன
குருதியா றுவதுகொல் குன்றூர் — கருதி
மறத்திறத்தின் மாறா மறவருங் கொண்டார்
புறத்திறத்த வேந்திரியப் பூ. 1234

**குறிப்புரை :**

பருதி = சூரியன் உருகியன்ன = உருகினால் ஒப்ப குருதி = இரத்தம் மறத்திறம் = சினம் மாறா = நீங்காத புறத்திறத்த = புறத்தே தங்கியிருந்த வேந்து = வஞ்சி மன்னன் இரிய = தோற்றோட பூ = காஞ்சிப்பூ.

5 ஒன்ரு முனைபோர்க் கொழிக இனித்துயில்
மன்னன் மறவர் மகிழ்தூங்கா — முன்னே
படலைக் குரம்பை பழங்கள் முதியாள்
விடலைக்கு வெங்கள் விடும். 1235

**குறிப்புரை :**

ஒன்ரு = இயலாத துயில் = உறக்கம் மகிழ்தூங்கா முன்னே = கள்ளுண்டு களித்து ஆடுவதற்கு முன்னர் குரம்பை = குடில் விடலை = வீரன் விடும் = உண்ணுதற்காக வார்க்கும்.

6 கடிகமழ் வேரிக் கடைதோறும் செல்லக்
கொடிமலி கொல்களி றேவித்—துடிமகிழ
ஆர்த்திட் டமருள் அடையாரை அம்முனையிற்
பேர்த்திட்டான் பெய்கழலி னான். 1236

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

கடிகமழ் வேரி = மணம் வீசும் கள் கடை = மதிலரண்
கொடி = வெற்றிக்கொடி ஏவி = பாயவிட்டு
துடிமகிழ = பறை முழங்க அமருள் = போர்க் களத்தில்
அடையாரை = பகைவரை பேர்த்திட்டான் = போகச்
செய்தான்.

[ஆசிரியப்பா]

7 கார்மழை முன்பின் கைபரிந் தெழுதரும்
வான்பறைக் குருகின் நெடுவரி பொற்ப
கொல்களிறு மிடைந்த பஃறோல் தொழுதியொடு
நெடுந்தேர் நுடங்குகொடி அவிர்வரப் பொலிந்து
செலவுபெரி தினிதுநிற் காணு மோர்க்கே
இன்னு தம்ம அது தானே பன்மா
நாடுகெட எருக்கி நன்கலந் தரூஉம்நின்
போருறுங் கடுஞ்சினம் எதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே. 1237

[பதிற்றுப்பத்து]

குறிப்புரை :

முன்பின் = வலிமையால் குருகின் = நாரையின்
பொற்ப = பொலிவுபெற பஃறோல் = பல கேடகங்கள்
தொழுதி = தொகுதி நுடங்குகொடி = அசைகின்ற கொடி
அவிர்வர = விளங்க பன்மா = பல பெரிய. எருக்கி = சிதைத்து
கலம் = அணிகலம்.

## அதிகாரம்—68

# பாசறை

**பாசறையாவது :—** வேற்று நாட்டின்மேற் படையெடுத்துச் சென்ற வேந்தன் போர் முடியும்வரைத் தங்குவதற்காக அமைத்துக் கொள்ளும் பாடி வீடு. அது காட்டகத்துள்ள மரஞ்செடிகொடிகளான் பசுமையாகச் செய்து கொள்ளப்படுதலின் பாசறை எனப் பட்டது. இதன்கண் தங்கியியிருக்கும் மன்னனைப் பற்றிக் கூறப் பெறுவதாகும்.

[நேரிசை வெண்பா]

1 அவிழ்மலர்க் கோதையர் ஆட ஒருபால்
இமிழ்முழவம் யாழோ டியம்பக்—கவிழ்மணிய
காய்கடா யானை யொருபாற் களித்ததிரும்
ஆய்கழலான் கட்டூ ரகத்து. 1238

**குறிப்புரை :**

கோதையர் = நடன மாதர் இயம்ப = இசைக்க காய் = சினம் ஆய்கழலான் = வேந்தன் கட்டூர் = பாசறை.

2 கனைக்கொடுகாய் நெற்கனை யெரி யூட்டிப்
பெரும்புனல் வாய்திறந்த பின்னும்—சுரும்பின்
தொகைமலிந்த தண்குவளைத் தூமலர்த் தாரான்
பகைமெலியப் பாசறை யுளான். 1239

**குறிப்புரை :**

கனையெரி = சுடர்ந்தெறியும் நெருப்பு ஊட்டி = கொளுத்தி புனல் = நீர் நிலை வாய்திறந்த பின்னும் = அணை உடைந்த பின்னரும் பகை மெலிய = பகைவேந்தர் வாடி மெலிய.

3 மடங்கலிற் சீறி மலைத்தெழுந்தார் மண்மேல்
இடங்கெடச் சென்றிறுத்தபின்னும் - நுடங்கெரிபோல்
வெல்லப் பெருகும் படையாற்கு வேந்தர்மேல்
செல்லப் பெருகும் சினம். 1240

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

மடங்கல் = அரியேறு (சிங்கம்) மலைத்து = போர்கொண்டு
இடம் = ஊர் நுடங்கெரி = அசைந்தெழும் தழல்
படையாற்கு = படையை உடைய அரசற்கு.

4 மூதில்வாய் தங்கிய முல்லைசால் கற்புடைய
மாதர்பாற் பெற்ற வலியளவோ—கூதிரின்
வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலான்
ஐங்கணை தோற்ற அழிவு. 1241

**குறிப்புரை :**

மூதில் = பழையவீரமிக்கமனை மாதர் = பெண்டிர்
கூதிர் = மழைக்காலம் வெங்கண் = சினம்
வேனிலான் = மன்மதன் ஐங்கணை = ஐந்து வகை
மலரம்புகள் அழிவு = தோற்றுப் போயின.

5 மாற்றுப் புலந்தொறும் போர்மண்டி மாக்களங்கொள்
வேற்றுப் புலவேந்தர் வெல்வேந்தர்க் = கேற்ற
படையொலியிற் பாணொலி பல்கின்றால் ஒன்னார்
உடையன தாம்பெற் றுவந்து. 1242
[பெரும்பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

மாற்றுப்புலம் = பகைவர் ஊர் மாக்களம் = பெரிய
போர்க்களம் பாணொளி = பாணர்களின் யாழ் இசை
ஒன்னார் = பகைவர் உடையன = உடையபொருள்கள்
உவந்து = மகிழ்ந்து.

[ ஆசிரியப்பா ]

6 [குழிபல ஆயினும் சால்பா ஞாதே
முழைபடு முதுமரம் போலெவ் வாயும்
மடைநுழைந் தறுத்த இடனுடை விழுப்புண்
நெய்யிடை] நிற்றல் ஆனது பையென
மெழுகுசெய் பாவையின் கிழிபல் கொண்டு
முழுவதும் பொதியல் வேண்டும் பழிதீர்
கொடைக் கடனாற்றிய வேந்தர்க்குப்
படைகடனாற்றிய புகழோன் புண்ணே. 1243

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

குழி = போரிட்ட புண்ணால் நேர்ந்த வடு சால்பு = நிறை
முழை = பொந்து எவ்வாயும் = எவ்விடத்தும்
படை = படைக்கலம் நெய் = மருந்துஎண்ணெய்
கிழி = துணி பொதியல் வேண்டும் = போர்த்து வைத்தல்
வேண்டும் கொடை = பொருட்கொடை புகழோன் = வீரன்

[நேரிசை வெண்பா]

7 தழிச்சிய வாட்புண்ணோர் தம்மில்லந் தோறும்
பழிச்சியசீர் பாசறை வேந்தன் — விழுச்சிறப்பிற்
சொல்லிய சொல்லே மருந்தாகத் தூர்ந்தன
புல்லணலார் வெய்துயிர்க்கும் புண். 1244

[பெரும் பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

தழிச்சிய = தழுவிய பழிச்சிய = பாராட்டிவாழ்த்திய
விழுச்சிறப்பு = மேலாகச் செய்த சிறப்பு தூர்ந்தன =
ஆறச்செய்தன வெய்து = வெம்மை.

[ஆசிரியப்பா]

8 வந்தனென் பெரும கண்டனென் செலற்கே
களிறு கலிமான் தேரொடு சுரந்து
நன்கலன் ஈயும் நகைசால் இருக்கை
மாரி என்னுய் பனியென மடியாய்
பகைவெம் மையின் அசையா ஊக்கலை
வேறுபுலத்திறுத்த விறல் வெந்தானையொடு
மாருமைந்தர் மாறுநிலை தேய
மைந்து மலி ஊக்கத்துக் கந்துகால் கீழ்ந்து
கடாயானை முழங்கும்
இடாஅ ஏணிநின் பாசறையானே. 1245

[பதிற்றுப்பத்து]

**குறிப்புரை :**

கண்டனென் = பார்த்து  களிறு = யானை  கலிமான் = குதிரை  இருக்கை = ஆசனம்  மாரி = மழை  அசையா = மாறுபடாத  ஊக்கலை = ஊக்கமுடையை  புலம் = ஊர்  மைந்தர் = மறவர்  மைந்து = வலிமை  கந்து = தூண்  கீழ்ந்து = பெயர்த்து  இடாஅஏணி = அளவிடப்படாத எல்லை.

## அதிகாரம்—69

# பகைப்புலம் பழித்தல்

[பகைப்புலப்பழித்தலாவது: வெற்றிவாய்ப்புற்ற வேந்தன் படைமறவர், பாணர், பரிசிலர் முதலானோர் பகைவரைப் பழித்துக் கூறலாம்.]

[நேரிசை வெண்பா]

1 குரையழல் மண்டிய கோடுயர் மாடம்
சுரையொடுபேய்ப் பீர்க்குஞ் சுமந்த—நிரைதிண்டேர்ப்
பல்லிசை வென்றிப் படைக்கடலான் சென்றிறுப்ப
நல்லிசை கொண்டடையார் நாடு. 1246

**குறிப்புரை :**

குரையழல் = சுடர்விட்டெரியும் நெருப்பு  மாடம் = பெரிய மனைகள்  சுரை, பீர் இவை கொடிகள்  இசை = புகழ்  அடையார் = பகைவர்.

2 தாழார மார்பினன் தாமரைக்கண் சேந்தனவாற்
பாழாய்ப் பரிய விளிவதுகொல்—யாழாய்ப்
புடைத்தே னிமிர்கண்ணிப் பூங்கட்புதல்வர்
நடைத்தேர் ஒலிகறங்கும் நாடு. 1247

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

ஆரம் = முத்துமாலை சேந்தன = சிவந்தன
விளிவதுகொல் = அழியுமோ தேன் = வண்டு இமிர் = இசைக்கும் நடைதேர் = சிறுவர் இழுத்துச் செல்லும் விளையாட்டுத் தேர்.

3 கரிபரந்தெங்குங் கடுமுள்ளி பம்பி
நரிபரந்து நாற்றிசையும்கூடி—எரிபரந்த
பைங்கண்மால் யானைப் பகையடுதோட் கோதையைச்
செங்கண் சிவப்பித்தார் நாடு. 1248

**குறிப்புரை :**

கரி = புகை முள்ளி = முள்ளிச்செடி பம்பி = முளைத்து
பரந்து = பரவி மால் = பெரிய அடுதோள் = கொல்லும் வலிமையுடையதோள் கோதை = சேரவேந்தன்
சிவப்பித்தார் = கோபமடையச் செய்தவர்.

4 வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத்
தூரறியலாகாக் கிடந்தனவே—போரின்
முனையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமான்
நனையிலைவேல் காய்த்தினார் நாடு. 1249

**குறிப்புரை :**

அறுகை = அறுகம்புல் சுரை = சுரைக்கொடி வேளை = வேளைச்செடி போரின் = போரிடத்து முசிறி = சேரன் தலைநகர் காய்த்தினர் = சினமடையச் செய்தவர்.

5 இரியல் மகளிர் இலைஞெமலுள் ஈன்ற
வரியிளஞ் செங்காற் குழவி—அரையிரவில்
ஊமன் தாராட்ட உறங்கிற்றே செம்பியன்தன்
நாமம்பா ராட்டாதார் நாடு. 1250

**குறிப்புரை:**

இரியல் மகளிர் = அஞ்சி ஓடிய பெண்டிர் ஞெமல் = நெருக்கமான புதர் குழவி = குழந்தை ஊமன் = கோட்டான் செம்பியன் = சோழமன்னன் நாமம் = புகழ்.

6 வாகை வனமாலை சூடி அரசுறையும்
ஓகை உயர்மாடத் துள்ளிருந்து—கூகை
படுபேய்க்குப் பாட்டயரும் பண்பிற்றே தென்னன்
விடுமாற்றங் கொள்ளாதார் நாடு. 1251

**குறிப்புரை :**

வனமாலை = வனப்பு மிகுந்த மாலை ஓகை = மகிழ்ச்சி கூகை = ஆந்தை பாட்டயரும் = பாடும் தென்னன் = பாண்டிய மன்னன் விடுமாற்றம் = ஆணை

7 பறைநிறை கொல்யானைப் பஞ்சவர்க்குப் பாங்காய்த்
திறைமுறையின் உய்யாதார் தேயம்—முறை
முறையின்
ஆண்போய் அரிவையர் போய் ஆடவர்போய்
ஆயிற்றே
ஈன்பேய் உறையும் இடம். 1252

[முத்தொள்ளாயிரம்]

**குறிப்புரை:**

பஞ்சவர் = பாண்டியர் திறைமுறை = திறைசெலுத்தும்முறை உய்யாதார் = பிழைக்காத பகைவர் ஆன் = பசுக்கூட்டம் அரிவையர் = மகளிர் ஈன்பேய் = மகவை ஈன்று உறையும் பேய்கள்.

[ஆசிரியப்பா]

8 தேஎர் பரந்தபுலம் ஏஎர் பரவா
களிறூடிய புலம் நாஞ்சி லாடா
மத்துரறியமனை இன்னியம் இமிழா
ஆங்கு, பண்டுநற் கறியுநர் செழுவளம் நினைப்பின்
நோகோ யானே நோதக வருமே
பெயல் மழை புரவின்றாகி வெய்துற்று
வலமின்றம்ம காலையது பண்பெனக்
கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்
பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்
காடுறு கடுநெறியாக, மன்னிய
முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்
உரும்பில் கூற்றத்து அன்னநின்
திருந்து தொழில் வயவர் சீறிய நாடே. 1253

[பதிற்றுப் பத்து]

**குறிப்புரை :**

புலம் = ஊர்களில் உள்ள வயல்கள் ஏஎர் = கலப்பை
நாஞ்சில் = கலப்பை மத்து = தயிர் கடையும் மத்து
உரறிய = ஒழிந்த இன்னியம் = இசைக் கருவிகள்
இமிழா = ஒலிக்கமாட்டா அறியநர் = அறிந்தவர்
நோகோ = வந்துகின்றேன் புரவின்றாகி = பெய்து
காத்தலின்றாகி வலம் = வெற்றிப்பயன் மலிர்நிறை =
பனிக்கின்றநீர் கைபுடையூ = கைகளைப் புடைத்து
மெலிவு = துன்பம் பீரிவர் = பீர்க்கங்கொடிபடர்ந்த
கடுநெறி = கடுமையான வழி கறுத்த = கோபித்த
கலி = மகிழ்ச்சி உரும்பில் கூற்றம் = பிறிதொன்றால்
கொடுமையில்லாத யமன் வயவர் = வீரர்

9 வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்த லுற்றோர்க்கு மாயோனன்ன
உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற!
நின்னொன்று கூறுவதுடையேன் என்னெனின்
நீயே, பிறர்நாடு கொள்ளுங்காலை அவர் நாட்டு
இறங்கு கதிர்க்கழனிநின் இளையரும் கவர்க
நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க
மின்னு றிமிர்ந் தன்னநின் ஒளிநிலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினும் செகுக்க; என்னதூஉம்
கடிமரம்தடிதல் ஓம்புநின்
நெடுநல் யானைக்குக் கந்தாற்றாவே. 1254

[புறநானூறு]

குறிப்புரை :

வல்லார் = வலியில்லாதவர் மாயோன் = திருமால்
மாற = பாண்டிய மன்னனே கழனி = வயல் வளம்
நனந்தலை = இடமகன்ற நைக்க = சுடுக செகுப்பினும் = அழிக்கினும் என்னதூஉம் = யாவதும் கடிமரம் = காவல் மரம் தடிதல் = வெட்டி வீழ்த்தல் கந்து = நடுதறி
ஆற்று = போத மாட்டா ஆதலின்

[இன்னிசை வெண்பா]

10 பல்யானை மன்னர் படுதிறை தந்துய்மின்
மல்லல் நெடுமதில் வாங்கிவிற் பூட்டுமின்—
வள்ளிதழ் வாடாத வானோரும் வானவன்
வில்லெழுதி வாழ்வர் விசும்பு. 1255

குறிப்புரை :

திறை = கப்பம் உய்மின் = பிழைத்துக்கொண்மின்
வில் = விற்கொடி இதழ் = கண்ணிமை வானவன் = சேரமன்னன் விசும்பு = மேலுலகம்,

அதிகாரம்—36

# பொருள் செயல்வகை

பொருள் செயல்வகையாவது: அறமும் இன்பமும் பயத்தற்குத் துணையாய் ஆளுவோர்க்கு இன்றியமையாத செல்வத்தை ஆக்கிக் கொள்ளும் முறைமையாம்.

[இன்னிசை வெண்பா]

1 வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்
நடுவணது எய்தாதான் எய்தும் உலைப்பெய்து
அடுவது போலுந் துயர். 867

[நாலடியார்]

குறிப்புரை :

வடுவிலா = குற்றமில்லாத மன்னிய = நிலைபேறுடைய
மூன்று = அறம் பொருள் இன்பம். நடுவணது = பொருள்
இருதலை = பக்கமுள்ள அறம் இன்பம் உலை = தீயடுப்பு
அடுவது = சுடுவது

[நேரிசை வெண்பா]

2 கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கும் உயர்மதம் — மெல்லென்
அருளிற் பிறக்கும் அறநெறி எல்லாம்
பொருளிற் பிறந்து விடும். 868

[நான்மணிக்கடிகை]

குறிப்புரை :

கல் = மலைப்பாறை. மதம் = நற்காம வேட்கை
எல்லாம் = வேண்டும் பொருள் யாவும் பொருள் = செல்வம்

3 அல்லாதொன் றின்றி யுடையார்க்கு மங்களம்
நல்லவாய் நாடி நடக்குமாம்--இல்லார்க்
கிடராயியலும் இலங்குநீர்ச் சேர்ப்ப
கடலுளுங் காண்பவே நன்கு. 869

**குறிப்புரை :**

மங்களம் = நற்செயல்கள்   இல்லார் = வறியவர் (ஏழை)
இடர் = துன்பம்

4 சிறியபொருள் கொடுத்துச் செய்த வினையால்
பெரிய பொருள்கருது வாரே—விரிபூ
விராஅம் புனலூர வேண்டயிரை யிட்டு
வராஅல் வாங்கு பவர். 870

**குறிப்புரை :**

கருதுவார் = பெற நினைப்பார்   விராஅம் = பரவி மணக்கும்
அயிரை = அயிரைமீன்   இட்டு = தூண்டிலில் இரையாகக் கொடுத்து   வரால் = வரால்மீன்

5 பொருத்த மழியாத பூந்தண்டார் மன்னர்
அருத்தம் அடிநிழ லாரை—வருத்தாது
கொண்டாரும் போலாதே கோடல்அது வன்றே
வண்டுதா துண்டு விடல். 871

**குறிப்புரை :**

அருத்தம் = பொருள்,   அடிநிழலார் = நெருங்கிவாழ்பவர்
தாது = தேன்

[இன்னிசை வெண்பா]

6 பாற்பட்டு வாழ்வர் எனினும் குடிகள்மேல்
மேற்பட்ட கூட்டு மிகைநிற்றல் வேண்டாவே
கோற்றலையே யாயினும் கொண்டீக காணுங்கால்
பாற்றலைப் பாலூற லில். 872

11 நேமிநிமிர்தோள் நிலவுத் தார்த் தென்னவன்
காமர் நெடுங்குடைக் காவலன் ஆணையால்
ஏம மணிப்பூண் இமையார் திருந்தடி
பூமி மிதியாப் பொருள். 1256

**குறிப்புரை :**

நேமி = ஆணைச்சக்கரம் நிலவு = ஒளி தென்னவன் = பாண்டியன் காமர் = விருப்பமமைந்த ஏமம் = பாதுகாப்பு திருந்தடி = பாதங்கள்.

12 நிறைமதிபோல், யானைமேல் நீலத்தார் மாறன்
குடைதோன்ற ஞாலத்தரசர்—திறைகொள்
இறையோ எனவந்திடம் பெறுதல் இன்றி
முறையோ எனநிற்றார் மொய்த்து. 1257

**குறிப்புரை :**

மாறன் = பாண்டியன் திறை = திறைப்பொருள் இறையோ = இறைவனே மொய்த்து = நெருங்கி.

13 நின்றீமின் மன்னீர்! நெருநல் திறைகொணர்ந்து
முன்தந்த மன்னர் முடிதாக்க—இன்னும்
திருந்தடி புண்ணாகிச் செவ்வியிலனே
பெருந்தண் உறந்தையார் கோ. 1258

[முத்தொள்ளாயிரம்]

**குறிப்புரை:**

நின்றீமின் = நில்லுமின் மன்னீர் = மன்னர்களே! முடி = கிரீடம் செவ்வி = நலம் உறந்தை = உறையூர் கோ = சோழ மன்னன்.

[நேரிசை வெண்ப]

14 தாட்டாழ் தடக்கைத் தணிமதி வெண்குடையான்
வாட்டானை வெள்ளம் வரவஞ்சி—மீட்டான்
மலையா மறமன்னன் மால்வரையே போலும்
கொலையானை பாய்மாக் கொடுத்து. 1259

**குறிப்புரை:**

தட்டாழ் = காலளவும் தாழ்கின்ற, வாட்டானை = வாளேந்திய படைவீரர், வெள்ளம் = கூட்டம், மலையா = போரிடாத, மால்வரை = பெரியமலை, பாய்மா = குதிரை.

15 கூடிமுரசிரங்கக் கொய்யு ளைமாமுன் னுகளப்
பாடி பெயர்ந்திட்டான் பல்வேலான்—கோடி
நிதியந் திறையளந்தார் நேராருந் தன்கீழ்
முதியமென் றூறி முரண். 1260

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

இரங்க = முழங்க, கொய்யுளைமா = குதிரைகள், பாடி = பாசறை, நேரார் = பகை மன்னர், முதியம் = பழைய நண்பினேம், முரண் = மாறுபாடு,

[ஆசிரியப்பா]

16 நீர்மிகிற் சிறையுமில்லைத் தீமிகின்
மன்னுயிர் நிழற்றும் நிழலுமில்லை
வளிமிகின் வலியும்இல்லை ஒளிமிக்கு
அவற்றோ ரன்ன சினப் போர்வழுதி
தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவ னாயின் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற்றனரே
அளியரோ அளியர் அவன் அளியிழந்தோரே
நுண்பல சிதலை அரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக் குலமருவோரே. 1261

[புறநானூறு]

**குறிப்புரை :**

நீர் = வெள்ளம், சிறை = அணை, வளி = புயல், ஒளி = புகழ், வழுதி = பாண்டியன், தண்டமிழ் = தண்ணிய தமிழகம், பொருன் = பொறுக்கமாட்டான், கொண்டி = கொள்ளைப் பொருள், நடுக்கற்றனர் = துன்பம் நீங்கினர், அளி = இரக்கம், சிதலை = கரையான், ஈயல் = ஈசல். ஒருபகல் = சிறுபொழுது, உலமருவோர் = திரிவோர்.

17 போர்க்குரைஇப் புகன்று கழித்தவாள்
உடன்றவர் காப்புடை மதில் அழித்தலின்
ஊனுற மூழ்கி உருவிழந்தனவே
வேலே; குறும் படைந்த அரண்கடந்தவர்
நறுங்கள்ளின் நாடுநைத்தலின்
சுரைதழீஇய இருங்காழொடு
மடைகலங்கி நிலைதிரிந்தனவே
களிறே; எழுஉத் தாங்கிய கதவம் மலைத்தவர்
குழூஉக் களிற்றுக் குறும்புடைத்தலின்
பருஉப் பிணிய தொடி கழிந்தனவே
மாவே! பரந்தொருங்கு மலைந்த மறவர்
பொலம் பைந்தார் கெடப் பரிதலின்
களனுழந் தசைஇய மறுக்குளம்பினவே
அவன்றானும்; நிலந்திரைக்குங் கடற்றானைப்
பொலந்தும்பைக் கழல் பாண்டில்
கணை பொருத துளைத்தோலன்னே
ஆயிடை, உடன்றோர் உய்தல் யாவது, தடந்தாள்
பிணிக்கதிர் நெல்லின் செம்மல்மூதூர்
நுமக்குரித்தாகல் வேண்டின், சென்றவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே மறுப்பின்
ஒல்வானல்லன் வெல்போ ரானெனச்
சொல்லவுந் தேறீர் ஆயின் மெல்லியல்
கழற்கனி வகுத்த துணைச்சில் லோதி
குறுந்தொடி மகளிர் தோள்விடல்
இறும்பூதன் றஃதறிந்தாடுமினே. 1262

[புறநானூறு]

குறிப்புரை:

உரைஇ = புடைபெயர்ந்து உலாவி. புகன்று = விரும்பி உடன்றவர் = பகைத்தவர், ஊனுற = உடம்பின்கண் புகுந்து, குறும்பு = சிறிய அரண், நைத்தலின் = அழித்தலால், சுவரை = பூண், காழ் = காம்பு, மடை = ஆணி, எழுஉ = கணையமரம், கதவம் = கதவுகள், உடைத்தலின் = அழித்தலால், தொடி = கிம்புரி (கொம்பினது பூண்) பரந்து = பரவி, பொலம் = பொன், தார் = மாலை, பரிதலின் = விரைந்தோடலால், மறுக் குளம்பின = மறுப்பட்ட குளம்புடைய வாயின, பாண்டில் = கிண்ணி, கணை = அம்பு, தோல் = கேடகம், செம்மல்மூதூர் தலைமையான பழைய ஊர், இறுக்கல் வேண்டும் = கொடுத்தல் வேண்டும், திறை = திறைப் பொருள், தோள்விடல் = தோளைப் பிரிந்துகிடத்தல் இறும்பூதன்று = வியப்பில்லை, ஆடுமின் = போர் செய்மின்.

[கலிவிருத்தம்]

18 உழுதுதங் கடன்கழித் துண்டு வேந்தரை
வழிமொழிந் தின்னணம் வாழும் மாந்தர்போல்
எழுதிய திறையிறுத் திருந்து வாழ்வதேல்
அழகிது பெரிதுநம் அரச வாழ்க்கையே. 1263

குறிப்புரை :

கடன்கழித்து = கடமையைச்செய்து இன்னணம் = இவ்வாறு திறை = கப்பப்பொருள் இறுத்து = செலுத்தி.

19 நாளினும் திறைநுமக் குவப்பத் தந்துநா
டாளுதும் அன்றெனின் ஒழிதுமேலெம
தோளினும் தொடுகழல் வலியினுமிவ்
வாளினும் பயனென மயரி மாந்தர்காள்! 1264

[சூளாமணி]

குறிப்புரை :

நாளினும் = நாள்தொறும் எம = எம்முடைய மயரிமாந்தர்காள்! = மயக்கமுடைய மாந்தரே.

## அதிகாரம்—70
## மகள் மறுத்தல்

[மகள் மறுத்தலாவது : போர் மேற்சென்ற மன்னவன் மறவர், பகையரசர் மகளைத் தம் மன்னற்கு மணம் செய்துதரக் கேட்டலும் மானங்கருதிய பகையரசர் மறுத்துத் தம் குடிமரபும் வீறும் தோன்ற மறுத்து மொழிதலாம்]

[நேரிசை வெண்பா]

1 அளியகழல் வேந்தர் அம்மா அரிவை
எளியள் என்றெள்ளி உரைப்பின்—குளியாவோ
பண்போற் கிளவியிப் பல்வளையாள் வாண்முகத்த
கண்போற் பகழி கடிது. 1265

**குறிப்புரை :**

அளிய = இரங்கத்தக்க அரிவை = எம்முடைய மகள்
குளியாவோ = பாயாவோ பகழி = அம்பு கடிது = விரைந்து

2 ஒள்வாள் மறவர் உருத்தெழுந் தும்பர்நாட்
கள்வார் நறுங்கோதை காரணமாக்—கொள்வான்
மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்
கருங்கண்ணி வெண்கட்டிற் கால். 1266

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

உருத்தெழுந்து = சினந்தெழுந்து. உம்பர்நாள் = முன்னாளில் மருங்கு = பக்கம். கோடு = கொம்பு
கண்ணி = கண்ணுடைய பெண்

[ஆசிரியப்பா]

3 ஏர்பரந்த வயல் நீர்பரந்த செறுவின்
நெல்மலிந்த மனை பொன்மலிந்த மறுகின்
படுவண் டார்க்கும் பன்மலர்க் காவின்
நெடுவே ளாதன் போந்தை யன்ன
பெருஞ்சீர் அருங்கொண்டியளே கருஞ்சினை
வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும்
மலைந்த சென்னியர் அணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினும் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன் வண் டோட்டுப்
பிணங்குகதிர்க் கழனிநாப்பண் ஏமுற்று
உணங்குகலன் ஆழியின் தோன்றும
ஓர் எயில் மன்னன ஒருமட மகளே. 1267

[புறநானூறு]

குறிப்புரை :

பரந்த = உழுத செறு = வயல் மறுகின் = தெருவில்
ஆர்க்கும் = ஒலிக்கும் கா = சோலை ஆதன் = ஒரு
சிற்றரசன் போந்தை = ஓர் ஊர் கொண்டி = செல்வம்
ஆர் = ஆத்திமாலை போந்தை = பனம்பூமாலை
சென்னி = தலை வணங்கார் = பகைவர் நாப்பண் =
நடுவே ஆழியின் = கடல்போல எயில் = மதில்

4 வேந்து குறையுறவும் கொடாஅன் ஏந்துகோட்
டம்பூந் தொடலை அணித் தழை யல்குல்
செம்பொறிச் சிலம்பின் இளையோள் தந்தை
எழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவின்
அரைமண் இஞ்சி நாட்கொடி நுடங்கும்
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
புலிக் கணத்தன்ன கடுங்கண் சுற்றமொடு
மாற்றம் மாறான் மறலிய சினத்தன்
பூக்கோள் எனஏஎய்க் கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியல்
சுணங்கணி வனமுலை அவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ
ஆரமர் உழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை எஃகம் மறுத்த உடம்பொடு
வாரா உலகம் புகுதல் ஒன்றோ எனப்
படைதொட்டனனே குருசில் ஆயிடைக்
களிறு பொரக் கலங்கிய தண்கயம்போல
பெருங்கவின் இழப்பது கொல்லோ
மென்புனல் வைப்பினித் தண்பணையூரே. 1268

[புறநானூறு]

குறிப்புரை :

குறையுறவும் = இரந்து வேண்டவும் தொடலை = மலர்மாலை
எழு = கணையமரம் இஞ்சி = மதில் கொடி =
துகிற்கொடி கடுங்கண் சுற்றம் = வீரமறவர்குழாம்
மாற்றம் = உரை ஏஎய் = ஏவி வேளா = மணவினை
முடியாத வைகல் = நாள் முன்பின் = வலிமையுடைய
வாரா உலகம் = மேலுலகம் படை = போர்க்கருவி
கயம் = சிறுகுளம் பணையூரே = பண்ணைகளை
உடைய ஊர்

5 நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையா
கடிய கூறும் வேந்தே தந்தையு
நெடியவல்லது பணிந்து மொழியலனே
இஃதிவர் படிவமாயின் வையெயிற்று
அரிமதர் மழைக் கண் அம்மா அரிவை
மரம்படு சிறு தீப் போல
அணங்கா யினள் தான் பிறந்த ஊர்க்கே. 1269

[புறநானூறு]

குறிப்புரை :

நுதிவேல் = கூரியவேல் நுதல்வியர் = நெற்றிவேர்வை
கடியகூறும் = கடுமொழிகளைப்பேசும் நெடிய = சூள்மொழி
படிவம் = தன்மை வை = கூர்மை எயிறு = பல்
அணங்காயினள் = வருத்தும் தெய்வமாயினுள்.

அதிகாரம்—71

## வஞ்சினம்

வஞ்சினமாவது : போர்க்களத்தின் கண் வீரமறவர்தாம் இன்னது செய்யேமாயின் இவ்வாறுவேம் எனச் சூளுற்று வீறுமிக்க மொழிகளைக் கூறுதலாம்.

[நேரிசை வெண்பா]

1 இன்று பகலோன் இறவாமுன் ஒன்னுரை
வென்று களங்கொள்ளா வேலுயர்ப்பின்—என்றும்
அரணவியப் பாயும் அடையார் முன்நிற்பேன்
முரணவிய முன்முன் மொழிந்து 1270

குறிப்புரை:

பகலோன் = சூரியன் ஒன்னுரை = பகைவரை
அரணவிய = மதில் அழிய அடையார் = பகைவர்
முன்மொழிந்து = பணிவுடைய சொற்களைக்கூறி.

[ கலிவிருத்தம் ]

2 இளையருட் பெரியவன் சொல்லும் எம்மிறைக்
குளைவன செய்தவர் உயிரை மற்றவர்
கிளையொடுங் கீண்டர சாடும் அன்றெனில்
வளையொடுந் தலைமுடித் திரிந்து வாழ்துமே 1271

**குறிப்புரை :**

எம்மிறைக்கு = எம்முடைய அரசனுக்கு உளைவன = வருத்தஞ் செய்வன கிளையொடும் = சுற்றத்தோடும் கீண்டு = அழித்து வளை = கை வளையல் வாழ்தும் = பெண்ணாக வாழ்வேம்.

[ சூளாமணி ]

[ கலித்துறை ]

3 தன்பான் மனையாள் அயலான்றலைக் கண்டு பின்னும்
இன்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலாம்
நன்பால் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பார்
என்பாரை யோம்பே னெனின் யான் அவனாக
என்றான் 1272
[ சீவகசிந்தாமணி ]

**குறிப்புரை :**

இவர்கின்ற = செல்லுகின்ற. பசு முதலிய ஐவரையும் பேணாதவர் போலப் பழியை அடைவேன் என்றான்.

[ ஆசிரியப்பா ]

4 கலிமா னோயே கலிமா னோயே
நாகத் தன்ன நன்னெடுந் தடக்கைக்
காய்சினயானைக் கலிமா னோயே
வெள்ளத் தானைநும் வேந்தொப் பான்முன்
உள்ளழித் துப்புகேன் ஆயின் உள்ள
திரப்போன் இன்மை கண்டும்
கரப்போன் சிறுமை யானுறு கவ்வே 1273
[ தகடூர்யாத்திரை ]

**குறிப்புரை :**

கலிமானோயே ! = குதிரை வீரனே  தடக்கை = நீண்ட கை
வெள்ளத்தானை = வெள்ளம் போன்ற படை உள்ளழித்து = மனத்தை வஞ்சித்து.  உள்ளது = உள்ள பொருளை
காப்போன் = கெடாமல் அதை வைத்துக் கொள்பவன்
உறுக = அடைக.

நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்று
உறுதுப் பஞ்சாது உடல்சினஞ் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழுவேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசொடு
ஒருங்கு அகப்படே னாயின் பொருந்திய
என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது
கொடியன் எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாக !
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின்
புலவர் பாடா தொழிகஎன் நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையான் உறவே 1274

[ புறநானூறு ]

**குறிப்புரை :**

நகுதக்கனர் = சிரிக்கத்தக்கவர்  மீக்கூறுநர் = புகழ்ந்து
கூறுபவர்  உளைய = மனம் நோவ  பாவடி = பரந்த அடி
தாள் = கால்  உறுதுப்பு = மிக்க வலிமை  உடல்சினம் =
மாறுபடுகின்ற வெகுளி  செருக்கி = பெருகி  சிதைய = சிதற
அகப்படேனாயின்  கைக்கொள்ளாதவனாக இருப்பேனாயின்
செல்நிழல் = சென்றடையும் நிழல்  இறை = அரசன்
கோல் = கொடுங்கோல்  சிறப்பு = தலைமை
மாங்குடிமருதன் = ஒரு புலவர்  நிலைஇய = நிலைபெற்ற
நிலவரை = நில எல்லை (நாட்டினை)
புரப்போர் = பாதுகாக்காக்கப்படும் சுற்றம்  புன்கண் = துன்பம்
இன்மை = வறுமை  உற = அடைய

6 மெல்லவந்தென் நல்லடி பொருந்தி
ஈ என இரக்குவ ராயின் சீருடை
முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்
இன்னுயி ராயினுங் கொடுக்குவென் இந்நிலத்து
ஆற்ற லுடையோர் ஆற்றல் போற்றுதென்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே, மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப்பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎனாயின், பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே 1275

[புறநானூறு]

**குறிப்புரை :**

ஈஎன = ஈவாயாக என தாயம் = உரிமை தஞ்சம் = எளியது ஆற்றல் = வலிமை உள்ளம் = தாளாண்மை எள்ளிய = இகழ்ந்த துஞ்சுபுலி = உறங்குகின்ற புலி இடறிய = காலால் இடறிக் கொண்ட சிதடன் = குருடன் உய்ந்தனன் = தப்பிப்பவனாய் மைந்து = வலிமை கழை = மூங்கில் பொரேனாயின் = போரிட்டு அழியேனாயின் காதல்கொள்ளா = அன்பில்லாத ஒல்லா = பொருந்தாத முயக்கு = கூட்டம் தார் = மாலை.

**அதிகாரம்—72**

## படைச் செருக்கு

படைச்செருக்காவது : படை வீரர்தம் தறுகண்மையும் நால்வகைப் படையின் பெருமிதமுமாம்—படைவீரர் தாம் தம் பேராற்றல் தோன்றப் பேசுதல் செருக்காகும்.

[நேரிசை வெண்பா]

1 உறுசுடர் வாளோ டொருகால் விலங்கின்
சிறுசுடர்முன் பேரிருளாம் கண்டாய்—எறிசுடர்வேல்
தேங்குலாம் பூந்தெரியல் தேர் வேந்தே நின்னொடு
பாங்கலா மன்னர் படை 1276

குறிப்புரை :

உறுசுடர் = மிக்க ஒளி விலங்கின் = வேறுபடின்
எறி = எறியப்படும் தேங்குலாம் = வண்டுகள் மொய்க்கும்
தெரியல் = மாலை பாங்கலா மன்னர் = பகை மன்னர்.

2 துன்னருந் துப்பிற் றெருகழலார் சூழ்ந்திருப்பத்
தன்னமர் ஒள்வாளென் கைதந்தான்—மன்னற்கு
மண்ணகமோ வைகின்று மாலை நெடுக்குடைக் கீழ்
விண்ணகமும் வேண்டுங் கொல் வேந்து 1277

குறிப்புரை:

துன்னரும் = நெருங்குதற்கரிய துப்பு = வலிமை
தன்னமர் = தான் விரும்பும் வைகின்று = உரிமையுடைய
தாகியது. விண்ணகம் = தேவர் உலகம்.

3 இன்னர் எனவேண்டா என்னோ டெதிர்சீறி
முன்னர் வருக முரணகலும்—மன்னர்
பருந்தார் படைய மருட் பல்லார் புகழ
விருந்தாய் அடைகுறுவார் விண் 1278

குறிப்புரை :

இன்னர் = இத்தகையவர், முரணகலும் = பகைமைவிரிந்த,
பருந்தார் = கழுகுகள் நிறைந்த அமருள் = போர்க்களத்துள்
அடைகுறுவார் = அடைவார்.

4 காண்படு தீயிற் கலவார்தன் மேல் வரினும்
தான்படை தீண்டாத் தறுகண்ணன்—வான்படர்தல்
கண்ணியபின் னன்றிக் கறுத்தார் மறந்தொலைதல்
எண்ணியபின் போக்குமோ எஃகு 1279

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

கான் = காடு, சலவார் = பகைவர், தீண்டா = தொடாத வான் = தேவலோகம், படர்தல் = செல்லுதல் கண்ணியபின் = கருதியபின், கறுத்தார் = சினந்தவழும் வீரர், எஃகு = வேல்.

5 நல் ......................... ........................................ ....................
செல்வான் விரும்பிய வேல்வேந்தைக்—கொல்வான்
உடனக்கொப் புரிமை உளதெனினு மிப்போர்
எனக்கே தருவா னிறை 1280

[பாரதம்]

குறிப்புரை :

ஒப்புரிமை = ஒத்தஉரிமை, இறை = மன்னன்,
இப்பாடலின் முதலடி சிதைந்து போயிற்று.

[இன்னிசை வெண்பா]

6 தாரேற்ற நீள்மார்பிற் றம்மிறைவன் நோக்கியக்கால்
போரேற்றும் என்பார் பொதுவாக்கல் வேண்டுமோ
யார்மேற்றுக் கொள்ளினும் கொண்டீக காணுங்கால்
ஊர்மேற் றமணர்க்கும் ஒடு 1281

குறிப்புரை :

தார் = மாலை, போரேற்றும் = போர் செய்தலை ஏற்றுக் கொள்வேம், கொண்டீக = கொள்க, ஊர்மேற்று = ஊரார் மேற்று. அமணர் = சமணத்துறவியர் ஒடு = உணவுப் பாத்திரம்.

7 வரைபுரை வேழத்தை வண்பகை என்றஞ்சி
உரையுடை மன்னருள் புக்கு ஆங்கவையுள்
நிரையுரைத்துப் போகாது ஒன்றுற்றத் துணிக
திரையவித் தாடார் கடல் 1282

[பழமொழி]

குறிப்புரை :

வரைபுரை = மலையை ஒக்கும், வேழத்தை = யானையை
உரை = புகழ், போகாது = போகாமல், ஆற்ற = செய்ய
திரை = அலை, அவித்து = நீக்கி, ஆடார் = குளிக்க
மாட்டார்.

[பஃறொடை வெண்பா]

8 கூற்றுறழ் முன்பின் இறைதலை வைத்தபின்
ஆற்றி அவனை அடுதல் அடாக்காலை
ஏற்றுக் களத்தே விளிதல் விளியாக்கால்
மாற்ற மளவும் கொடுப்பவோ சான்றோர்தம்
தோற்றமும் தேசும் இழந்து. 1283

குறிப்புரை :

கூற்று = யமன் உறழ் = ஒத்த முன்பின் = ஆற்றலுடன்
இறை தலைவைத்தபின் = வேந்தன் தலையளி செய்தபின்
அடுதல் = கொல்லுதல் அடாக்காலை = அழிக்க இயலாத
போது விளிதல் = இறத்தல் மாற்றம் = சொல்
தோற்றம் = பெருமிதம் தேசு = ஒளி.

9 தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தாமவற்கு
ஒற்கத் துதவினன் ஆகுமால் பிற்பிற்
பலரேத்தும் செம்மல் உடைத்தாற் பலர் தொழ
வானுறை வாழ்க்கை இயையுமால் அன்னதோர்
மேன்மையிழப்பப் பழிவருவ செய்பவோ
தா'மேயும் போகும் உயிர்க்கு. 1284

குறிப்புரை :

பெருவிறல் = பெருவீரம் அதற்கு = அவ்வேந்தனுக்கு
ஒற்கம் = தளர்ச்சி பிற்பிற் = பின்னரும் செம்மல் =
தலைமை வானுறை வாழ்க்கை = அமரவாழ்வு
இயையும் = வந்தடையும்.

10 நகையுள்ளும் நல்லவை எய்தார் பகைநலிய
[ஞாட்புள்ளும் நல்லவை எய்தார் விழைவொடு]
வேற்றுக் களத்தில் ஒருவர் தமராகச்
சென்றார் ஒருவர்மேற் செம்மாந் தடர்த் தாற்றிப்
புண்ணும் படுக்கலார் தாம்படார் போந்தாரக்
கண்ணும் படுங்கொல் கவன்று. 1285

**குறிப்புரை :**

நகை = மகிழ்ச்சி நலிய = வருந்திக்கெட ஞாட்பு = போர்க்களம் விழைவொடு = விருப்பத்தொடு களம் = போர்க்களம் தமராக = துணையாக அடர்த்து ஆற்றி = தாக்கிப் போரிட்டு புண் = விழுப்புண் படுக்கலார் = செய்யாதவர் படுங்கொல் = உறங்குமோ கவன்று = கவலையுற்று.

11 வேற்றானை வெள்ளம் நெறிதர ஆற்றுக்
கடும்புனற் கற்சிறை போல நடுக்காது
நிற்பவற் கல்லால் எளியவோ பொற்பார்
முறியிலைக் கண்ணி முழவுத்தோள் மன்னர்
அறியுநர் என்னும் செருக்கு. 1286

**குறிப்புரை :**

வேற்றானை = வேல்படைவீரர் நெறிதர = நெருங்கிவர கற்சிறை = கல்லணை நடுக்காது = நிலை குலையாமல் முறியிலைக் கண்ணி = தளிரும் இலையும் மிடைந்த மாலை அறியுநர் = அறிந்து பாராட்டப் பெறுபவர் செருக்கு = பெருமிதம்

[இன்னிசை வெண்பா]

12 பிறந்த பொழுதேயும் பெய்தண்டார் மன்னர்க்
குடம்பு கொடுத்தாரே மூத்தார் உடம்பொடு
முற்றுழிக் கண்ணும் இளையரே தம்கோமாற்
குற்றுழிச் சாவா தவர். 1287

குறிப்புரை :

தண்டார் = குளிர்ந்த பூமாலை கொடுத்தார் = போரின் கண் இழந்தார் முற்றுழி = முதுமை உற்றவழி கோமான் = தன் வேந்தன் உற்றுழி = இடுக்கண் வந்த விடத்து

[நேரிசை வெண்பா]

13 பரவைவேற் றானைப் யகலஞ்சு வேனு
இரவே எறியென்றாய் என்னை—விரைவிரைந்து
வேந்தன் நீ ஆயினாய் அன்றிப் புகுவதோ
போந்தென்னைச் சொல்லிய நா. 1288

குறிப்புரை:

பரவை = கடல் தானை = சேனை எறிஎன்றாய் = அழிக்க என்று கூறினாய் புகுவதோ = உட்புகுமோ சொல்லிய = அவ்வாறு சொல்லிய நா = நாக்கு.

14 வான்வணக்கி யன்ன வலிதரு நீள் தடக்கை
யானைக்கீ தென்கையில் எஃகமால்—தானும்
விலங்கால் ஒருகைத்தரல் வெல்கைநன் றென்னும்
நலங் காணேன் நாணுத்தரும். 1289

குறிப்புரை :

வான் வணக்கி = வானத்தை வளைப்பதற்கு எடுத்து. எஃகமால் = வேல்படைதகும், தானும் = அவ்யானையும், ஒருகைத்தால் = ஒருகையினையே உடையது, வெல்கை = போரிட்டு வெல்லுதல், நலம் = பெருமை.

15 காலாளாய்க் காலான் எறியான் களிற்றெருத்தின்
மேலான் எறியான் மிகநாணக்—காளை
கருத்தினதே என்று களிறெறியான் அம்ம
தருக்கினனே சான்றோன் மகன். 1290

[தகடூர் யாத்திரை]

**குறிப்புரை :**

காலாள் = அடியவன், காலாள் = காலாட்படைவீரன், எறியான் = படைக்கலத்தை வீசான், காளை = பெருவீரன், கருத்தினது = கட்டளைக்குட்பட்டது, களிறு = யானை, சான்றோர் = வீரர்.

### அதிகாரம்—73

## எயில் கோடல்

எயில்கோடலாவது : போர்மேற் சென்று முற்றுகையிட்டிருந்த வேந்தன் பகைமன்னனுடைய காவல் அரணத்தைக் கைப்பற்றிக் கொள்ளுதல். எயில் = மதில்

[நேரிசை வெண்பா]

1 உழிஞை முடிபுனைந்து ஒன்னுப்போர் மன்னன்
விழுமதில் வெல்களிறு பாயக்—கழிமகிழ்
வெய்தாரும் எய்தி இசைநுவலும் சீர்த்தியனே
பெய்தார மார்பின்எங் கோ. 1291

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

உழிஞை = உழிஞைப்பூங்கொடி, ஒன்னு = பகையாய, விழுமதில் = வலிய அரண், கழி = மிக்க, இசை = கீர்த்தி, நுவலும் = கூறும், பெய் = சூடிய, கோ = அரசன்.

2 பகலெறிப்ப தென்கொலோ பான்மதி யென்றஞ்சி
இகலணரத் துள்ளவ ரெல்லாம்—அகதலிய
விண்தஞ்சமென்ன விரிந்தகுடை நாட்கொள்ளக்
கண்டஞ்சிச் சிம்புளித்தார் கண். 1292

**குறிப்புரை :**

பகல் = சூரியன், பான்மதி = வெள்ளியநிலா, இகலரணம் = மாறுபட்டமதில், விண் = விண்ணுலகம் சிம்புளித்தார் = சுருக்கினர்,

3 தொழுது விழாக்குறைக்குத் தொல்கடவுட் பேணி
அழுது விழாக்கொள்வர் அன்றே—முழுதளிப்போன்
வாணாட்கோள் கேட்டமடந்தையர் தம் மகிழ்ந்தார்
நீணாட்கோ ளென்று நினைத்து. 1293

[பெரும்பொருள் விளக்கம்]

குறிப்புரை :

விழாக்குறை = விழுந்து வணங்காத குற்றத்திற்காக
பேணி = போற்றி, வாணாட்கோள் = வாளை நல்லநாளில்,
புறப்படச் செய்வது, நீணாள் = நீண்டநாள்.

4 கற்பொறியும் பாம்பும் கனலும் கடிகுரங்கும்
விற்பொறியும் வேலும் விலக்கவும்—பொற்புடைய
பாணி நடைப்புரவி பல் களிற்றார் சாத்தினார்
ஏணி பலவும் எயில். 1294

குறிப்புரை :

கற்பொறி = கல்லால் செய்த எந்திரம், கனல் = நெருப்பு,
பாணி = தாளம், சாத்தினார் = மதிலின்கண் சாத்தினார்,
ஏணி = கண்ணேணி, எயில் மதில்.

5 கதிரோடை வெல்களிறு பாயக் கலங்கி
உதிரா மதிலும் உளகொல்—அதிருமால்
பூக்கண்மலிதார் புகழ் வெய்யோன் கோயிலுள்
மாக்கண் முரச மறை- 1295

[புறப்பொருள் வெண்பாமாலை]

குறிப்புரை :

கதிர்ஓடை = ஒளிவீசும் நெற்றிப்பட்டம், உதிரா = இடியாத,
கள் = தேறல், வெய்யோன் = விரும்பினவன்,
கோயில் = அரண்மனை, முரசமறை = முரசு கொட்டுதல்.

6 செருவெங் கதிர்வேற் சினவெம்போர் மாறன்
உருமின் இடிமுர சார்ப்ப—அரவுறழ்ந்து
ஆமா உகளும் அணிவரையின் அப்புறம் போய்
வேமால் வயிறெரிய வேந்து. 1296

[முத்தொள்ளாயிரம்]

**குறிப்புரை :**

செரு = போர், மாறன் = பாண்டிய மன்னன்,
உருமின் = வானத்து இடிமுழக்கம், ஆர்ப்ப = ஒலிக்க,
அரவுறழ்ந்து = பாம்பினை ஒத்து, ஆமா = காட்டுப்பசு,
வேம் = சினக்கும், வேமால் = வேகும்.

7 இற்றைப் பகலுள் எயிலகம் புக்கன்றிப்
பொற்றேரான் போனகங்கைக் கொள்ளானால் —
[எற்றாங்கொல்
ஆருத வெம்பசித்தீ ஆற உயிர்பருகி
மாரு மறலி வயிறு. 1297

**குறிப்புரை :**

எயிலகம் = மதிலின் உட்பக்கம், புக்கன்றி = புகாமல்
போனகம் = உணவு, எற்றாங்கொல் = எவ்வாறாகுமோ?
ஆற = நீங்க, மாறுமறலி = மாறுபடாத கூற்றுவன்.

8 தாய்வாங்குகின்ற மகனைத் தனக்கென்று
பேய்வாங்கி யன்னதோர் பெற்றித்தே—வாய்வாங்கு
வெல்படை வேந்தன் விரும்பாதார் ஊர்முற்றிக்
கொல்படை வீட்டுங் குறிப்பு. 1298

**குறிப்புரை :**

வாங்குகின்ற = ஏந்துகின்ற, அன்னதோர் பெற்றித்தே =
அது போன்றதொரு தன்மைத்து, விரும்பாதார் = பகைவர்,
வீட்டும் = அழிக்கும், குறிப்பு = நோக்கம்.

9 வெஞ்சின வேந்தன் எயில்கோள்விரும்பியக்கால்
அஞ்சி ஒதுங்காதார் யார்யாவர்—மஞ்சு சூழ்
வான்றோய் புரிசை பொறியு மடங்கின
ஆன்றோர் அடக்கம்போலாங்கு. 1299

**குறிப்புரை :**

எயில்கோள் = மதிலை வென்று கைக்கொள்ளுதல், மஞ்சு = மேகம், புரிசை = மதில், பொறி = எந்திரங்கள் ஆன்றோர் = சால்பினால் நிறைந்தவர்.

10 பொருவரு மூதூரிற் போர்வேட் டொருவர்க்
கொருவர் உடன்றெழுந்தகாலை—யிருவரும்
மண்ணோடு சார்த்தி மதில்சார்த் தியவேணி
விண்ணோடு சார்த்தி விடும். 1300

**குறிப்புரை :**

பொருவரும் = போரிட்டு வெல்லுதற்குரிய, உடன்று = கோபித்து, மதில் சார்த்திய = மதிலின் கண் சாத்தப்பட்ட, விண் = மேலுலகம்.

[ஆசிரியப்பா]

11 மாமுது தாதை ஏவலின் ஊர் துறந்து
கானுறை வாழ்க்கையிற் கலந்த இராமன்
மாஅ இரலை வேட்டம் போகித்
தலைமகட் பிரிந்த தனிமையன் தனாஅது
சுற்றமும் சேணிடை யதுவே முற்றியது
நஞ்சுகறைப் படுத்த புன்மிடற் றிறைவன்
உலகுபொதி யுருவமொடு கோதையைத் தலைநாள்
வெண்கோட்டுக் குன்றம் எடுத்த மீளி

வன்றேளாண்ட கை ஊரே யன்றோர்
சொன்முறை மறந்தனம் வாழி ... ...
விஃலும் உண்டவற் கந்நா ளாங்கே
மாதர்க் கெண்டை வரிப்புறத் தோற்றமும்
நீலக்குவளை நிறமும் பாழ்பட
இலங்கை யகழி முற்று மாக்கிய
கருங்கால் நெடுங்கழைக் கண்ணும் விளிப்பழிந்து
பெருநீர் உருகுதல் மாதோ ... ...
குரங்கு தொழில் ஆண்ட இராமன்
அலங்கு தடற்றெள்வா ளுற்ற ஞான்றே. 1301

**குறிப்புரை :**

தாதை = தந்தை, துறந்து = நீங்கி, கான் = கானகம்,
இரலை = புள்ளிமான், தலைமகள் = சீதை,
தனது = தன்னுடைய, இறைவன் = சிவபெருமான்,
பொதி = பொதிந்தடக்கிய, குற்றம் எடுத்தமீளி =
இராவணன், மாதர் = அழகிய, கழை = மூங்கில்,
அலங்கு = விளங்குகின்ற, ஞான்று = நாளில்.

12 இருசுடர் வழங்காப் பெருமீதிலங்கை
நெடுந்தோளிராமன் கடந்த ஞான்றை
எண்கிடை மிடைந்த பைங்கட் சேனையிற்
பச்சை போர்த்த பல்புறத் தண்ணடை
எச்சார் மருங்கினும் எயிற்புறத்திறுத்தலின்
கடல்சூழ் அரணம் போன்றது
உடல்சின வேந்தன் முற்றிய ஊரே 1302
[ஆசிரியமாலை]

**குறிப்புரை:**

வழங்கா = படர்ந்து செல்லாத, கடந்த = வெற்றிகொண்ட,
எண்கு = கரடி, பைங்கட் சேனை = வானரப்படை,
பச்சை = பசியபயிர், தண்ணடை = மருதநிலம்,
அரணம் = மதில், முற்றிய = முற்றுகையிட்ட.

குறிப்புரை :

பரற்பட்டு = அரசன் பக்கத்தவராகி கூட்டு = இறைப் பொருள் (வரிப்பொருள்) கொண்டீக - தண்டிக்கொள்க பாற்றலைப் பாலுறலில் = ஒரு சேரக்கலந்து கொள்ளலாமென்று கருதாமல் அவ்வப்பொழுது பாலைக்கறந்துகொள்க. பின்னர் மிகுதியாகப்பால் ஊறுதல் இல்லை என்றவாறு

7 எனைப்பலவே யாயினும் சேய்த்தாப் பெறலின்
தினைத்துணையே யானும் அணிக்கொண்டல் நன்றே
இனக்கலை தேன்கிழிக்கும் ஏகல்சூழ் வெற்ப
பனைப்பதித்து ண்ணார் பழம். 873

குறிப்புரை :

மிகுதியான பொருளைக் கால நெடுமையான் பெறலாம் என நினையாமல் சிறிய அளவாயினும் அவ்வப்பொழுது ஈட்டிக் கொள்க என்கின்றது.

சேய்த்தாய் = பிற்காலத்து அணிக்கொண்டல் = அண்மை யாகக் கொள்ளுதல் பனைப்பதித்துண்ணார்பழம் என்றது பனையைவிதைத்து அது வளர்ந்து பழுத்தபின் உண்போம் என்று எவரும் இரார் என்றவாறு

8 தத்தம் பொருளும் தமர்தம் வளமையும்
முந்துற நாடிப் புறந்தரல் ஓம்புக
அந்தண் அருவி மலைநாட சேண்நோக்கி
நந்துநீர் கொண்டதே போன்று. 874

குறிப்புரை :

முந்துற = காலம் முற்பட ஓம்புக = பொருளைச் சேமித்துப் பாதுகாத்துக்கொள்க சேண் நோக்கி = எதிர்காலத்தைக் கருதி. நந்து = நத்தை கொண்டது = முதுகிற் சேமித்துக்கொண்டது

9 உடையதனைக் காப்பான் உடையான் அதுவே
உடையானைக் காப்பதூஉ மாகும்—அடையின்
புதற்குப் புலியும் வலியே புலிக்குப்
புதலும் வலியாய் விடும். 875

**குறிப்புரை :**

செல்வத்தைக் காப்பவனைச் செல்வம் கரக்கும் என்பது
புதல் = புற்காடு வலி = காப்பு

10 ஊக்கி யுழந்தொருவர் ஈட்டிய ஒண்பொருளை
நோக்குமின் என்றிகழ்ந்து நொவ்வியார்கை விடுதல்
போக்கில்நீர் தூஉம் பொருகழிந் தண்சேர்ப்ப
காக்கையைக் காப்பிட்ட சோறு. 876

**குறிப்புரை :**

உழந்து - வருந்தி ஒண்பொருளை பெருஞ்செல்வத்தை
நோக்குமின் பாதுகாத்துத்தருமின் நொவ்வியார் =
வலிமையில்லாதவர் கைவிடுதல் = ஒப்படைத்தல்
அது சோற்றுக்குக் காக்கையைக் காவல் வைத்தது போன்ற
தாகும்.

11 முன்னை யுடையது சாவா திகழ்ந்திருந்து
பின்னையஃ தாராய்ந்து கொண்குறுதல்
— இன்னியற்கைப்
பைத்தகன்ற வல்குலாய் அஃதால்
அவ்வெண்ணெய்மேல்
வைத்து மயில்கொள்ளு மாறு. 877

**குறிப்புரை :**

தன் பொருளைப் பிறரிடத்து ஒப்பித்துவிட்டுப் பின்னை அவரி
டந்துப் பெற்றுக் கொள்ளலாம் என்றிருப்பது மயில் தலையில்
வெண்ணெயை வைத்துப் பிடித்துக் கொள்ளலாம் என்று
கருதுவது போலாகும்.

## அதிகாரம்—74
# எயில் காத்தல்

எயில்காத்தலாவது: மதிலைமுற்றிய பகைவேந்தரதுபடை மறவர் தமது மதிலைக் கைக்கொள்ளாதவாறு போரிட்டுக் காத்துக் கொள்ளுதல். இம்மறவர் நொச்சிமாலைசூடிப் போரிடுவர்.

[நேரிசை வெண்பா]

1 ஆடரவம் பூண்டான் அழலுணச் சீறிய
கூரரணங் காப்போர் குழாம்புரையச் — சூடினர்
உச்சி மதிவழங்கும் ஓங்குமதில் காப்ப
நொச்சி நுதிவே லவர். 1303

**குறிப்புரை:**

அரவம் = நாகம், பூண்டான் = அணிந்த சிவபெருமான், சீறிய வெகுண்ட, அரணம் மதில், குழாம் = கூட்டம், புரைய = ஒப்ப, மதி = திங்கள், நொச்சி = நொச்சிப்பூ, நுதிவேலவர் = கூரிய வேற்படையையுடைய வீரர்.

2 அகத்தன வார்கழல் நோன்றாள் அரணின்
புறத்தன போரெழிற் றிண்டோள் — உறத்தழீஇத்
தோட்குரிமை பெற்ற துணைவளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகினான். 1304

[புறப்பொருள் வெண்பா மாலை]

**குறிப்புரை:**

அகத்தன = மதிலின் உட்பக்கத்தன, நோன்றாள் = வலிய கால்கள், புறத்தன = மதிலின் வெளிப்பக்கத்தன, திண்டோள் = திண்ணிய தோள்கள், துணைவளையார் = பெண்டிர், வாட்குரிசில் = வாள்வீரன்.

3 குன்றுயர் திங்கள்போற் கொற்றக் குடையொன்று
நின்றுயர் வாயிற் புறம்நிவப்ப—ஒன்றார்
விளங்குருவப் பல்குடை விண்மீன்போற் றோன்றித்
துளங்கினவே தோற்றந் தொலைந்து. 1305

**குறிப்புரை :**

குன்று = மலை, கொற்றக்குடை, நிவப்ப = ஓங்கிநிற்க, ஒன்றார் = பகைவர், துளங்கின = நடுங்கின, தோற்றம் = உருவம், தொலைந்து = அழிந்து.

4 முற்றரண மென்னும் முகிலுருமுப் போற்றோன்றக்
கொற்றவன் கொற்றவாள் நாட்கொண்டான்—
புற்றிழிந்த
நாகக் குழாம்போல் நடுங்கின என்னுங்கொல்
வேகக் குழாக்களிற்று வேந்து. 1306

**குறிப்புரை :**

முகில் = மேகம், உருமு = இடி, கொற்றவாள் = வெற்றி வாள், நாட்கொண்டான் = புறப்படச் செய்தான், நாகம் = பாம்பு, வேகம் = சினம், வேந்து = மன்னன்.

5 பொருசின மாறாப் புலிப்போத் துறையும்
அருவரை கண்டார்போ லஞ்சி—ஒருவரும்
செல்லா மதிலகத்து வீற்றிருந்தான் தேர்வேந்தன்
எல்லார்க்கும் எல்லாங் கொடுத்து. 1307

**குறிப்புரை:**

ஆறா = நீங்காத, போத்து = ஆண், அருவரை = அரியமலை, எல்லார்க்கும் = பரிசிலர் யாவர்க்கும், எல்லாம் = எல்லாப் பொருளும்.

6 மழுவான் மிளைபோய் மதிலா னகழ்தூர்த்
தெழுவாளான் ஏற்றுண்ட தெல்லாம்—இழுமென
மட்டவிழ் கண்ணி மறவேந்தன் சீற்றத்தீ
விட்டெரிய விட்ட மிகை. 1308

**குறிப்புரை :**

மிளை = காவற்காடு, போய் = அழிந்து, அகழ் = அகழி, ஏற்றுண்டது = வெட்டுப்பட்டது, மட்டு = தேன், விட்ட = விடப்பட்டன.

7 தாக்கற்குப் பெருந் தகர்போல் மதிலகத்
தூக்கமுடையோர் ஒதுங்கியும்—கார்க்கண்
இடிபுறப் பட்டாங் கெதிரேற்றார் மாற்றார்
அடிபிறக் கீடு மரிது. 1309

[பெரும் பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

தாக்கற்கு = போரிட்டு மோதுதற்கு, தகர் = ஆடு, ஒதுங்கியும் = நடந்தும், கார் = மழை, இடி = வானத்தில் முழங்கும் இடி, மாற்றார் = பகைவர், பிறக்கீடு = பின்னிடுதல்.

[ஆசிரியப்பா]

8 பல்சான் றீரே பல் சான்றீரே
விழ்ந்த புரிசை சோர்ந்த ஞாயில்
கணையில் தூர்ந்த கன்றுமேய் கிடங்கின்
மல்லல் மூதூர்ப் பல்சான்றீரே !
பல நாள் வருந்தி இளையரும் முதியரும்
நன்னுதல் மகளிரும் இன்னுங்கண் டுவப்ப
யாமங் கொள்பவரும் ஒழிய மேஞள்
கொல்படை மொய்த்த குன்றுயிர் விழுப்புண்
நெய்யிடைப் பஞ்சி சேர்த்திப் பையெனக்
கருங்குரல் நொச்சி மிலைந்த
திருந்துவேல் விடலை காப்பமைந் தனனே. 1310

**குறிப்புரை :**

விழ்ந்தபுரிசை = மதில்கள் அழிந்தன, ஞாயில் = மதில் உறுப்பு, கணை = அம்புகள், மல்லல் = வளம், யாமங்கொள்பவர் = காவலர், மொய்த்த = குவிந்த, பையென = மெல்ல, குரல் = கதிர், விடலை = வீரன்.

9 இவனே, பொறிவரியன்ன பொங்குகளை வயமான்
மேலோன். யாரென வினவின் தோலா
உரனுடை உள்ளத்து ஒன்னார் உட்கும்
சுரையமை நெடுவேற் சுடர்ப்பூ ணோனே

அவனே எம்மிறை ஈதவன் மாவே
கறுவுகொள் நெஞ்சம் கதுவவந் தனனே
யாவரும், குறுகல் ஓம்புமின் குறைநாள் மறவீர்!
தெருநல் எல்லி நிரைவரு கடுந்திறற்
பருமத யானை பதைக்க நூறி
அடுகளத் தொழிந்தோன் தம்பி தொடுகழல்
நொச்சித் தெரியல் நெடுந்தகை
அச்சம் அறியான் ஆரணங்கினனே. 1311

[தகடூர்யாத்திரை]

குறிப்புரை:

உளைவயமான் = பிடரிமயிருடைய வெற்றிபொருந்திய குதிரை, தோலா = தோற்காத, உரன் = வலிமை, உட்கும் = அஞ்சும், சுரை = பூண்குழல், எம்மிறை = எம் அரசன், மா = குதிரை, கறுவு = சினம், கதுவ = பற்ற, குறுகல் = நெருங்குதல், எல்லி = பகல், நிரை = பசுக் கூட்டம், நூறி = அழித்து, தெரியல் = மாலை.

10 மேலது வானத்து மூவா நகரும்
கீழது நாகர் நாடும் புடையன
திசைகாப் பாளர் தேயக் குறும்பும்
கொள்ளை சாற்றிக் கவர்ந்துமுன் தந்த
பல்வேறு விழுநிதி யெல்லாம் அவ்வழிக்
கண்ணுதல் வானவன் காதலின் இருந்த
குன்றேந்து தடக்கை அனைத்துந் தொழிலுறத்
தோலாத் துப்பிற் றுணிழல் வாழ்க்கை
வலம்படு மன்னர்க்கு வீசி இலங்கையில்
வாடா நொச்சி வகுத்தனன்
மாலை வெண்குடை அரக்கர் கோவே. 1312

[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

மேலது = மேலுள்ள மூவா நகர் = அழிவில்லாத நகரம் நாகர் நாடு = பாதாள உலகம் புடையன = பக்கத்துள்ளன. கொள்ளைசாற்றி = அகப்படுத்திக்கொண்டு விழுநிதி = மேலான செல்வம். கண்ணுதல் = சிவபெருமான். குன்று = கயிலாயமலை துப்பு = வலிமை மள்ளர் = வீரர் அரக்கர்கோ = இராவணன்.

**அதிகாரம்—75**

## அமர்

அமராவது: போர்களத்து இருதிறத்துப் பகை மன்னர்தம் தம்படையோடு போர் நிகழ்த்துதலாம்.

[நேரிசை வெண்பா]

1 **கார்கருதி நின்றதிரும் கௌவை விழுப்பணையான்**
**சோர்குருதி சூழா நிலம் நனைப்பப்—போர்கருதித்**
**துப்புடைத் தும்பை மலைந்தான் துகளறுசீர்**
**வெப்புடைத் தானையெம் வேந்து.** 1313

**குறிப்புரை :**

கார்கருதி = மேகத்தைப்போல பணை = முரசம் சூழா = சூழ்ந்து தும்பைமலைந்தான் = தும்பைப்பூவைச்சூடினான் துகளது = குற்றமற்ற வெப்பு = கோபம்.

2 **வாளை பிறழுங் கயங்கடுப்ப வந்தடையார்**
**ஆளமர் வென்றி யடுகளத்துத்—தோள்பெயராக்**
**காய்ந்தடு துப்பிற் கழன்மறவர் ஆடினார்**
**வேந்தொடு வெள்வாள் விதிர்த்து.** 1314

[புறப்பொருள் வெண்பாமாலை]

**குறிப்புரை :**

கயம் = நீர்நிலை கடுப்ப = ஒப்ப அடையார் = பகைவர் தோள்பெயரா = தோள்பெயர்த்து வாள்விதிர்த்து = வாட்படையைச் சுழற்றி.

3 கலிவர லூழியின் வாட்கை கடிந்து
மலிபுகழ வேண்டும் மனத்தர்—ஒலிகடல் சூழ்
மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி யீண்டினார்
புண்ணியமாம் போர்க்களத்துப் போந்து. 1315

[பாரதம்]

**குறிப்புரை :**

ஊழி = யுகம் மண்ணகலம் வேண்டாது = உலக வாழ்வு விரும்பாமல். ஈண்டினார் = திரண்டார் போந்து = புகுந்து.

4 இடியா ளிருண் முகிலும் ஏறுண்ணும் என்னும்
படியாற் பகடொன்று மீட்டு—வடிவேல்
எறிந்தார்த்தார் மன்னர் இமையாத கண்கொண்
டறிந்தார்த்தார் வானோரு மாங்கு. 1316

**குறிப்புரை :**

முகில் = மேகக்கூட்டம் ஏறுண்ணும் = தாக்குறும்
பகடு = யானை ஆர்த்தார் = முழக்கமிட்டனர்
வானோர் = தேவர்.

5 ஆளுங்குரிசில் உவகைக் களவென்னும்
கேளன்றிக் கொன்றதே கேளாகி—வாள்வீசி
ஆடினார் ஆர்த்தார் அடிதோய்ந்த மண்வாங்கிச்
சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து. 1317

**குறிப்புரை :**

கேளன்றி = உறவின்றி அடி = காலடி மண் வாங்கி = மண்ணை எடுத்து சூடினார் = அணிந்துகொண்டார்.

6 வான்றுறக்கம் வேட்டெழுந்தர் வாள்மறவர்
என்பதற்குச்
சான்றுரைப்ப போன்றன தங்குறை—மான்றேர்மேல்
வேந்து தலைபனிப்ப விட்ட வுயிர்விடாப்
பாய்ந்தன மேண்மேற் பல. 1318

[பெரும்பொருள் விளக்கம்]

**குறிப்புரை :**

வேட்டெழுந்தார் = விரும்பிப்புறப்பட்டார் குறை = உடற்குறை. மான்தேர் = குதிரை பூட்டிய தேர் பனிப்ப = நடுங்க பாய்ந்த = மேல் எழுந்து குதித்தன.

[கலிவிருத்தம்]

7 முடிமன ரெழுதரு பருதி மொய்களிறு
உடைதிரை மாக்கலம் ஒளிறு வாட்படை
அடுதிறல் எறிசுறு வாகக் காய்த்தன
கடலிரண் டெதிர்ந்ததோர் காலமொத்ததே. 1319

**குறிப்புரை :**

முடிமனர் = முடி சூடிய வேந்தர் பருதி = சூரியன் களிறு = யானை திரை = கடலலை கலம் = கப்பல் காய்ந்தன = கோபித்தன.

[சீவகசிந்தாமணி]

8 நிணம் பிறந் தகலமும் நைந்தெழு நெற்றியும்
அணங்குறு கரங்களின் அழுந்தி யையென
மணங்கமழ் லருபுனன் மறலும் மாந்தரிற்
பிணங்கமர் மலைந்தனர் பெற்றி யின்னதே 1320

**குறிப்புரை :**

நிணம் = கொழுப்பு ஊன் அகலம் = மார்பு அணங்கு = துன்பம் மறலும் = கோபிக்கும் அமர்மலைந்தனர் = போரிட்டனர்.

9 கடலிரண் டுளவெனிற் கடுக்கும் அக்கடல்
இடைநில முடைமையின் என்னும் ஒப்பில
அடலரும் படையவை இரண்டும் அவ்வழி
அடலரும் படையவை இரண்டு மொக்குமே. 1321

**குறிப்புரை :**

கடுக்கும் = ஒக்கும் என்னும் = சிறிதும் அடலரும்படை = அழித்தற்கு அரியபடை.

[வேறு]

10 ஓவிலயில் வீசுமொரு வன்னது விலக்கும்
காவலொடு மீளுமொரு வன்னவர் கருத்தின்
ஆவதது வன்றியயல் நின்றவர்கள் காணும்
பாவனையர் அல்லர்பல பாடியினி யென்றே. 1322

[சூளாமணி]

**குறிப்புரை :**

ஓவில் = நீங்காமல் அயில் = வேற்படை அன்னதும் = அதுபோன்றவேல் பலபாடி = பலவாகப்பாராட்டிப்பாடி.

[ஆசிரியப்பா]

11 குழாக் களிற்றரசர் குறித்தெழு கொலைக்களம்
விழாக்களம் போல மெய்ம்மலி உவகையர்
ஆண்மை யுள்ளங் கேண்மையிற் றூரத்தலின்
அழுந்துபடப் புல்லி விழுந்துகளம் படுநரும்
நீர்ப்பெயற் பிறந்த மொக்குள் போலத்
தாக்கிய விசையிற் சிதர்ந்து நிலம் படுநரும்
தகருந் தகருந் தாக்கிய தாக்கின்
முகமுகஞ் சிதர மூட்டுவோரும்
முட்டியின் முறைமுறை குத்துவோரும்
கட்டிய கையொடு கால்தட் குநரும்
கிட்டினர் கையற் றெட்டி நிற்போரும்
சுட்டிய பெயரை விட்டழிப் போரும்
சக்கரம் போலச் சங்கு விட்டெறிநரும்

சிலைப்புடை முரசிற் றலைப்படைக் குநரும்
மல்விற் பிடித்தும் விசலின் எற்றியும்
ஊக்கியும் உரப்பியும் நோக்கியும் நுவன்றும்
போக்கியும் புழுங்கியும் நாக்கடை கவ்வியும்
எயிறுடன் திருகியும் கயிறுபல வீசியும்
இனைய செய்தியின் முனைமயங் குநரும்
பிறப்பும் பெருமையும் சிறப்பும் செய்கையும்
அரைசறி பெருமையும் உரைசெல் லாண்மையும்
உடையோராகிய படைகொள் மாக்கள்
சென்றுபுகும் உலகம் மூன்றே யாகலின்
ஒன்றுபடு மனத்தோடு கொன்று கொன்றுவப்பச்
செஞ்சோற்று விலையும் தீர்ந்துதம் மனைவியர்
தம்பிணந் தழீஇ நொந்து கலுழ்ந் திரங்கவும்
புதுவது வந்த மகளிர்க்கு
வதுவை சூட்டிய வான்படர்ந் தோரே. 1323

[தொல்-பொருள்—72. நச்சினார்க்கினியர் மேற்கோள்]

குறிப்புரை :

மெய்ம்மலி உவகையர் = பொருள் நிறைந்த மகிழ்ச்சியுடையார்
துரத்தலின் = விரையச் செலுத்துதலான். புல்லி = பற்றி
படுநரும் = மடிவோரும் மொக்குள் = குமிழி விசையின் =
வேகத்தால் தகர் = ஆடு முட்டுவோர் = மோதிக்
கொள்வோர் முட்டி = விரல் மடக்கிக்குவிந்தகை
தட்குநர் = தடுக்கி விழச்செய்பவர் கையற்று = செயலற்று
பெயரை = வீரர்களை சிலைப்பு = முழக்கம் புடைக்குநர் =
அறைவோர் மல் = மற்போர் புழுங்கி = கோபித்தும்
செய்தியின் = தொழில்களான் முனை = போர்க்களம்
உரை = சூளுரை கொன்று = ஒருவர்ஒருவரைக் கொன்று
கலுழ்ந்து கண்ணீர்விட்டழுது மகளிர் = தேவமகளிர்
வதுவை = மணமாலை சூட்டிய = சூட்டுதற்கு
படர்ந்தோர் = சென்றனர்

12 அரிநறுங் கள்ளின் நாண்மகிழ் நெருக்கி
நெருநல் எல்லை நம் பெருமகன் முன்னர்த்
திருமலி முற்றத் ....
கச்சை நின்ற கதழெரி தோன்றாட்
புட்டி லார்க்கும் புனைதார் மாவொடு
செருக்கிச் செய்து, சிறுசட் பெரும்பூண்
முருக்கிதழ் மடந்தையர் முயங்கிய மார்பே
ஆர்கெழு சுறாமீன் அடங்குங் கிடங்கு
நீர்மலி பழனத்து ....
ஒளிறு வேல் விடலை உவப்பக்
களிறு கெழுவேந்தன் பாசறை யதுவே. 1324

13 ஆட்புலங் கொண்டு வாடல் போக்கி
எஃகம் வித்திய வைகலுழ வமைத்து
மலைப்புற மலைந்த தோழனைப் பலகையோடு
போர்க்களத் தொழிந்த புகழோனீர்மை
கயமூசு கயலிற்றோன் றியவணி
றழித நின்ற வெஃகமிகப் பலவே, 1325

14 உண்மையு முறுதியு முயக்கொளல் பொருளென
எண்ணிநீ மொழிதலெவன் கொலோ விவன்கைப்
பண்ணமை கூர்ம்படை படவுயிரிழந் தோர்
எண்ணிலர் நனிமிக்கனரே நமரென
விண்ணும் எழக் கொடுத் துளங்கழியப்
பொடிப் பரப்பின வரிக்குடர் துயல் வரத்
தம் மிறைக் கொத்த செம் மலொடு
நெடு நவிலாளன் சேர்ந்தன னிவனே. 1326

குறிப்பு :

இம் மூன்று செய்யுளும் எழுத்துக்கள் சிதைந்து சொற்கள் தெளிவின்றியுள்ளமையால் கருத்துத் தெளிவுபடுமாறில்லை. ஏட்டில் உள்ளவாறு பதிக்கப்பட்டுள்ளன.

[ஆசிரியப்பா]

மூதூர் வாயில் பனிக்கயம் மண்ணி
மன்ற வேம்பின் ஒண்குழை மிலைந்து
தெண்கிணை முன்னர்க் களிற்றின் இயலி
வெம்போர்ச் செழியனும் வந்தனன் எதிர்ந்த
வம்ப மள்ளரோ பலரே
எஞ்சுவர் கொல்லோ பகல் தவச்சிறிதே. 1327

[புறநானூறு]

**குறிப்புரை :**

பனிக்கயம் = குளிர்ந்த நீர்நிலை (குளம்) மண்ணி = நீராடி
ஒண்குழை = ஒளியமைந்த தளிர்கள் மிலைந்து = சூடி
தெண்கிணை = தெளிந்தபறை இயலி = நடந்து
செழியன் = பாண்டியமன்னன் வம்பமள்ளர் = புதியராய் வந்த படைவீரர் எஞ்சுவர்கொல்லோ = உயிரோடு எஞ்சியிருப்பாரோ ? தவச்சிறிது = மிகச்சிறிதாகஉள்ளது.

## அதிகாரம்—78

# தானைமறம்

**தானைமறமாவது :** போர் மறவரின் தறுகணாண்மையாம்

[நேரிசை வெண்பா]

1 கடுங்கண் மறவன் கனல் விழிப்பச் சீறி
நெடுங்கைப் பிணத்திடை நின்றான்—நடுங்கமருள்
ஆள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
வாள்வெள்ளந் தன்மேல் வர. 1328

**குறிப்புரை :**

கடுங்கண் = சினமுடையகண். கனல் = நெருப்பு.
சீறி = சீற்றங்கொண்டு. நெடுங்கை = யானை
ஆள் = வீரர்கள். வாள்வெள்ளம் = வாளேந்திய வீரர்கூட்டம்

2 மொய்யகத்து மன்னர் முரணினி என்னுங்கொல்
கையகத்துக் கொண்டான் கழல்விடலை—வெய்ய
விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த
படுசுடர் எஃகம் பறித்து. 1329

**குறிப்புரை :**

மொய்யகம் = போர்க்களம். முரண் = மாறுபாடு.
கழல் விடலை = வீரக்கழல் அணிந்த மறவன்.
அகலம் = மார்பு போழ்ந்த = பிளந்த.
எஃகம் = வேல்.

3 கான்படுதீயிற் கலவார்தன் மேல்வரினும்
தான்படை தீண்டாத் தறுகண்ணன்—வான்படர்தல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறந்தொலைதல்
எண்ணியபின் போக்குமோ எஃகு, 1330

[புறப்பொருள் வெண்பா மாலை]

**குறிப்புரை :**

காண்படுதீ = காட்டுத்தீ. காவலர் = பகைவர்.
தறுகண்ணன் = அஞ்சாத மறவன்
கண்ணியபின் = கருதியபின்
கறுத்தார் = கோபித்து எதிர்த்தார். மறம் = மாறுபாடு.
போக்குமோ = செலுத்துமோ ?.

4 வெய்யோ னெழாமுன்னம் வீங்கிருள் கையகலச்
செய்யோன் ஒளிவழங்கும் செம்மற்றே—கையகன்று
போர்தாங்கும் மன்னன்முன் புக்குப் புகழ்வெய் யோன்
தார்தாங்கி நின்ற தகை. (?) 1331

**குறிப்புரை:**

வெய்யோன் = கதிரவன். கையகல = நீங்க.
புகழ்வெய்யோன் = புகழை விரும்பினவன்.
தகை = தகுதிப்பாடு.

[பஃறொடை வெண்பா]

5 கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன்
தார்ப்பற்றி ஏர்தரும் தோள்நோக்கித் தார்ப்பின்னை
ஞாட்பினுள் யானைக் கணம்நோக்கி யானைப்பின்
தேர்க்குழாம் நோக்கித்தன் மாநோக்கிக் கூர்த்த
கணைவரவு நோக்கித்தன் வேல்நோக்கிப் பின்னைக்
கிணைவனை நோக்கி நகும். 1332

[தகடூர்யாத்திரை]

**குறிப்புரை :**

கார் = கருமை. அணல் = தாடி. காளை = வீரன்.
தார் = மாலை. தார் = சேனை.
ஞாட்பினுள் = போர்க்களத்துள். கணம் — கூட்டம்.
குழாம் = கூட்டம். மா = குதிரை.
கிணைவன் = பறை கொட்டுபவன்.

[ஆசிரியப்பா]

6 களம்புகல் ஓம்புமின் தெவ்விர்! போரெதிர்ந்து
எம்முளும் உளனொரு பொருநன் வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே. 1333

[புறநானூறு]

**குறிப்புரை :**

ஓம்புமின் = பாதுகாத்துக்கொள்ளுமின்.
தெவ்விர் = பகையோரே. பொருநன் = போர்மறவன்.
வைகல் = ஒருநாள். எண்தேர் = எட்டுத்தேர்.
திங்கள் = ஒருமாதம். வலித்த = வன்மையாகச் செய்த.
கால் = சக்கரம்,

7 நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்
இரங்காழ் அன்ன திரங்குகண் வறுமுலை
செம்முது பெண்டின் காதலம் சிறு அன்
மடப்பால் ஆய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
குடப்பால் சில்லுறை போல
படைக்கு நோ யெல்லாந் தானாயினனே 1334

[புறநானூறு]

**குறிப்புரை:**

நறு விரை = நறுமணப் பொருள்.
இரங்காள் = இராமரத்தின் விதை.
திரங்குகண் = சுருங்கிய கண். காதலஞ்சிறு அன் = அன்புடைய புதல்வன். வள்ளுகிர் = கூரிய நகம்.
சில்லுறை = உறைக்குத்துதல். படைக்கு = பகைப்படையாளர்க்கு.

8 வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூது ஆங்காங் கிசைப்ப
நூலரி மாலை சூடிக் காலின்
தமியன் வந்த மூதிலாளன்
அருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
ஒருகை இருப்பிணத்து எயிறு மிறையாகத்
திரிந்த வாய்வாள் திருத்தாத்
தனக்கிரிந் தானைப் பெயர்புறம் நகுமே. 1335

[புறநானூறு]

**குறிப்புரை:**

வல்லே = விரைவாக விழுத்தூது = மேலான தூதுமொழி
காலின் = காற்றைப்போல அருஞ்சமம் = அரியபோர்
ஒருகை இரும்பிணம் = யானைப்பிணம் எயிறு = கொம்பு
திரிந்த = வளைந்த திருத்தா = செம்மை செய்ய
இரிந்தானை = அஞ்சியோடுபவனை புறம் = முதுகுகண்டு
நகும் = எள்ளிநகும்.

9 கோட்டங் கண்ணியும் கொடுந்திரை ஆடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொகுத்தலும்
ஒத்தன்று மாதோ இவற்கே செற்றிய
திணிநிலை அலறக் கூவை போழ்ந்துதன்
வடிமாண் எஃகம் கடிமுகத் தேந்தி
ஓம்புமின் ஓம்புமின் இவண் என ஓம்பாது
தொடர்கொள் யானையின் குடர்கால் தட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தெதிர்ந்ததன் தோழற்கு வருமே. 1336

[புறநானூறு]

**குறிப்புரை :**

கண்ணி = மாலை கொடுந்திரை = வளைந்த கோடுகளை
யுடைய. ஆடை = உடை வேட்டது = விரும்பியது
ஒத்தன்று = ஒத்தது. செற்றிய = வெகுண்ட
கூவை = ஒரு பூண்டுச்செடி. வடிமாண் = கூர்மையால்
மாட்சிமைபட்ட. கடிமுகத்து = போர்முகத்து
தொடர் = சங்கிலி தட்ப = தடுக்க
கன்றமர் கறவை = கன்றினை விரும்பிச் செல்லும் பசு
மான = ஒப்ப சமத்து = போர்களத்து
எதிர்ந்த = போரிட்டுக்கொண்டுள்ள.

10 நிறப்புடைக் கொல்கா யானை மேலோன்
குறும்பர்க் கெறியும் ஏவல் தண்ணுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்
எம்மினும் பேரெழில் இழந்து வினையெனப்
பிறர் மனை புகுவள் கொல்லோ
அளியள் தானே பூவிலைப் பெண்டே. 1337

[புறநானூறு]

**குறிப்புரை :**

குறும்பர் = புறத்திலைச் சூழ்ந்த சிற்றரசர்
தண்ணுமை = பறை இரங்குமாயின் = ஒலிக்குமாயின்
அளியள் = இரக்கத்தக்காள் பூவிலைப்பெண்டு
பூவிற்கும் பெண்.

11 இருபாற் சேனையும் நனிமருண்டு நோக்க
முடுகியாற் பெருவிசை உரவுக்கருங் கொட்பின்
எண்டிசை மருங்கினும் எண்ணிறைந்து
தோன்றினும்
ஒருதனி யனுமன் கையகன்று பரப்பிய
வன்மரந்துணிபட வேறுபல நோன் படை
வழங்கி யகமபன் தோள் படையாக
ஓச்சியாங் கவனும் முன்கையி னழுத்தலின்
தனது வன்றலை உடல்புக்குக் குளிப்பக்
கரிந்துயிர் போகும் செந்நெறி பெருமையிற்
பொருகளத்து நின்றன நெடுஞ்சேட் பொழுதே. 1338

[ஆசிரியமாலை]

**குறிப்புரை :**

நனிமருண்டு = மிகவும் மருட்சியுற்று விசை = வேகம்
கொட்பின் = சுழலின் கையகன்று = எல்லை கடந்து
நோன்படை = வலியபடை தோள்படையாக =
தோள்களே படைக்கருவியாக. ஓச்சி = செலுத்தி
வன்தலை = வலியதலை குளிப்ப = மூழ்க.

12 இகழ்தல் ஓம்புமின் புகழ்சால் மறவீர்
கண்ணிமைப் பளவில் கணைசெல் கடுவிசைப்
பண்ணமை புரவி பண்புபா ராட்டி
எல்லிடைப் படர்தந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்லது
ஏந்துவன் போலான்றன் இலங்கிலை வேலே 1339

**குறிப்புரை :**

பண் = சேணமுதலிய விட்டுப் பண்ணுறுதல், எல் = பகல்,
ஏந்துவன் போலான் = ஏந்தமாட்டான் போலும்.

13 அதிராது அற்றம் நோக்கும் ஞாயிலுள்
கதிர்விடு சுடரின் விளங்கும் வெள்வேல்
எதிரிய திருவின் இளையோன் இன்றுந்தன்
குருதிரை தோன்ற வந்து நின்றனனே
அவன்கை ஒண்படை இகழ்தல் ஓம்புமின்
விழுச்சீர் விண்பொரு நெடுங்குடை வேந்தன்
கண்படை பெருஅன் வைகினன் இவன்கைத்
திண் கூர் எஃகந் திறந்த
புண்கூர் யானை நவில் குரல் கேட்டே. 1340

**குறிப்புரை :**

அற்றம் = வாய்த்தபொழுது. ஞாயில் = மதில் உறுப்பு
எதிரிய = எதிர்த்த படை = போர்க்கருவி
வைகினன் = இருந்தனன் நவில் குரல் = அரற்றும் ஒலி.

14 கட்டி யன்ன காரி மேலோன்
தொட்டது கழலே கையது வேலே
கிட்டி யதுவும் களிறே ஒட்டிய
தானை முழுதுடன் விடுத்து நம்
யானை காமினவன் பிறிதெறியலனே 1341

**குறிப்புரை :**

கட்டி = கரும்புள் காரி = கரியகுதிரை தொட்டது =
காலிற் கட்டியது சுட்டியது = வெல்லக் கருதியது
காமின் = காத்துக் கொள்ளுமின்.

15 அஞ்சுதக் கனளே அஞ்சுதக்கனளே
பயறு காவலர் பந்தர் அன்ன
அலறுதலை முதியாள் அஞ்சுதக்கனளே
வெஞ்சமத்து
என் செய்கென்றுர் வேந்தற்கு
அஞ்சல் என்பதோர் களிறீன்றனளே. 1342

குறிப்புரை :

தக்கனளே = தகையவளே பந்தர் = பந்தல்
அலறுதலை = அலந்துபோன தலை சமத்து = போரிடத்து
களிறு = யானை போன்ற வீரன்.

16 வல்லோன் செய்த வகையமை வனப்பின்
கொல்வினைமுடியக் குருதிக் கூரிலை
வெல்வேல் கைவலன் ஏந்திக் கொள்ளெனின்
கொள்ளுங்காலும் மாவேண் டானே
மேலோன்; அறிவொடுபுணர்ந்த நெறியிற் புரவிக்
கழற்கால் இளையோன் அழற்றிகழ் வெகுளி
இகழ்தல் ஓம்புமின் புகழ்சால் மன்னிர்
தொல்லை ஞான்றைச் செருவினுள் இவன்கை
வேல்வாய் வீழ்ந்தோர் பெண்டிர் கைம்மையின்
அறுத்த கூந்தற் பிறக்கம் சகடம்
பொறுத்தல் செல்லா பல முரிந்தனவே
அதனால்: வல்லோர் பூழை நின்மின் கல்லென
வெஞ்சமம் குரைப்பக் கூர்தலின்
அஞ்சுதக வுடைத்திவ் வாற்றலோன் நிலையே. 1343

குறிப்புரை :

கூரிலை = கூரிய இலை வடிவம் கைவலன் = கையின்கண்
மா = களிறு மா = குதிரை இளையோன் = வீரன்
அழற்றிகழ் வெகுளி = நெருப்போன்று விளங்கும் சினம்.
இகழ்தல் = எள்ளுதல் மன்னிர் = மன்னர்களே !
தொல்லை ஞான்றை = முன்னைய நாளில் செருவினுள் =
போரின்கண் பிறக்கம் = பெருக்கம் சகடம் = வண்டி
செல்லா = தாங்க இயலாமல் பூழை = மதிலின் புறவாயில்
குரைப்ப = ஒலிக்க அஞ்சுதக உடைத்து = அஞ்சத்தக்க
தன்மையுடையது.

17 உண்டது, கள்ளுமன்று களிப்பட்டனனே
ஊர்ந்தது, புள்ளுமன்று புறத்தியங்கும்மே
மேலோர், தெய்வம் அல்லன் மகனே நொய்தாங்குத்
தெரியலர் எடுத்த பாசிலைக் கண்ணி

வெருவத் தக்க வேலி னோனே
வேலே, பைய நிமிர்ந்து பருந்தின் ஓடிக்
கழிந்தார்த் தன்றவன் எறிந்தவைக் கழல் தொட்டு
ஏந்துவரை இவரும் புலிபோல்
வேந்துவந் தூரும் வெஞ்சினக் களிறே. 1344

**குறிப்புரை :**

களிப்பட்டனன் = கள்ளுண்டாற்போல களிப்புற்றுள்ளான்.
புள்ளுமன்று = பறவையுமன்று ஊர்ந்தது = ஏறிச்
செலுத்தும் குதிரை நொய்தாங்கு = எளிமையாக
தெரியலர் = பகைவர் பருந்தின்ஓடி = பருந்துபோல
விரைந்து சென்று ஏந்துவரை = உயர்ந்த மலை
இவரும் = ஏறிவரும் ஊரும் = ஏறிவரும்
களிறு = யானை.

18 நிலையமை நெடுந்திணை ஏறி நல்லோன்
இலைபொலி புதுப்பூண் கணவனொடு ஊடிச்
சிந்தியன்ன சேடுபடு வனப்பின்
புள்ளிக் காரி மேலோன் தெள்ளிதின்
உள்ளினும் பனிக்கும் ஒருவேலோனே
குண்டுநீர்க் கிடங்கின் கெண்டை பார்க்கும்
மணிநிறச் சிறு சிரல் போல நம்
அணிநல் யானைக் கூறளக் கும்மே. 1345

**குறிப்புரை :**

நெடுந்திணை = பழங்குடி ஏறி = சிறந்து புதுப்பூண் =
புதிய அணிகலம். சிந்தியன்ன = சிதறி எறிந்தாற்போல
சேடுபடு = சிறந்தமைந்த வனப்பு = அழகு
காரி = கரியகுதிரை உள்ளினும் பனிக்கும் = நினைத்தாலும்
நெஞ்சம் நடுங்கச்செய்யும் குண்டுநீர் = ஆழ்ந்த நீரகழி
கெண்டை = மீன் சிரல் = மீன்கொத்திக்குருவி.
கூறு அளக்கும் = கூறுபடுதலை எண்ணும் யானைப் படை
அழிதல் உறுதி என்பது கருத்து.

19 வருக வருக! தாங்கன்மின் தாங்கன்மின்!
உருவக் குதிரை ஒருவே லோனே
இருகை மாக்களை யானஞ் சலனே
நாற்கை மாக்களிந் நாட் டகத்தில்லை
அவனும், தாரொடுதுயல்வரும் தயங்குமணிக்
கொடும்பூண்
மார்புடைக் கருந்தலை எற்குறித்தனனே
யானும்,
கடிகமழ் உவகைக் கைவல் காட்சியென்
துடியவற் கவனரை அறுவையீந் தனனே
அதனால், என்னதாகினும் ஆக முந்நீர்
நீர்கொள் பெருங்குளம் தயங்க நாளை
நோய்பொதி நெஞ்சம் குளிப்ப அவன்தாய்
மூழ்குவள் ஒன்றோ, அன்றேல் என்யாய்
மூழ்குவள் ஒன்றோ அன்றியவள்
தாயும் யாயும் உடன் மூழ்குபவே. 1346

[தகடூர்யாத்திரை]

**குறிப்புரை :**

தாங்கன்மின் = தடைசெய்யாதீர்! உருவக்குதிரை = அச்சந்தரும் குதிரை. மாக்களை = வீரர்களை அவனும் = எதிரிட்டுவரும் அவ்வீரனும் துயல்வரும் = அசையும் பூண் = அணிகலன் கருந்தலை = வலியபெரியதலை கடி = மிக்க கைவல் காட்சி = கைதேர்ந்த அறிவு துடியவன் = துடிகொட்டுபவன் அரை அறுவை = இடையிற் கட்டிய உடை. முந்நீர் = கடல். தயக்க = விளக்குமுற பொதி = பொதிந்த மூழ்குதல் என்றது மகனை இழந்ததாய் வருந்தி முழுகுதலை